# பின்னிணைப்பு - I

# அகநூல் கல்வெட்டுச் சான்றுகளின் புள்ளிவிவரம்

**(ஔவை சு. துரைசாமிப்பிள்ளையின் உரைகளில்)**



# நற்றிணை -1

| வ.எண் | பாடல் எண் | புலவர் பெயர் | கல்வெட்டுச் சான்று | பக்க எண் |
|---|---|---|---|---|
| 1. | 1 | கபிலர் | தென்பாண்டி நாட்டுத் திருவாதவூர் என்று (A.R.No. 30 of 1916) கல்வெட்டு குறிக்கிறது. | 35 |
| 2. | 5 | பெருங்குன்றூர் கிழார் | இருப்பைக்குடிக் கல்வெட்டு (A.R.No. 334 of 1929-30) ஒன்றும், கல்வெட்டுத்துறை ஆண்டறிக்கையும் (Annual Report of the Madras Epigraphy 1936-37) எடுத்துரைக்கிறது. இந்த இருப்பைக்குடிக்கிழார் வரிசையிலேயே பெருங்குன்றூர் கிழாரையும் அணுகலாம். | 53 |
| 3. | 18 | பொய்கையார் | வடகரைப் பொய்கை நாட்டுப் பொய்கை என்று திருச்சோற்றுத்துறைக் கல்வெட்டுகளும் (A.R. 200 of 1930-31). தொண்டை நாட்டில் பொய்கை என்றோர் ஊரும் (S.I.I.Vol.I.No. 61) உள்ளது. பொய்கைக் குடியைத் திருக்கருகாவூர் (A.R.No. 426 of 1918) கல்வெட்டுகளும் குறிக்கின்றன. | 115 |
| 4. | 19 | நக்கண்ணையார் | முதற்பராந்தக சோழனுடைய திருக்கண்டியூர்க் கல்வெட்டொன்று "பிராமணி மதிசூதன் கண்ணை" (S.I.I.Vol.NO. 571) என்ற ஒருத்தியைக் குறிப்பது போதிய சான்றாகும். | 121 |

| | | | | |
|---|---|---|---|---|
| 5. | 22 | நல்வேட்டனார் | பெருமிளை இடைக்காலத்தேயே பெருமுளையென மருவிச் சயங்கொண்ட சோழவளநாட்டு மிளை நாட்டுப் பிரமதேயமான பெருமுளை (A.R.No. 210-14 of 1917) என வழங்கியது அவ்வூர்க் கல்வெட்டுகளால் தெரிகிறது. | 140 |
| 6. | 24 | குன்றூர் கிழார் மகனார் கண்ணத்தனார் | போந்தை மிறைக்கூற்றத்துப் போந்தை (A.R.No. 1495 of 1920) என்று கல்வெட்டுகள் குறிக்கின்றன. | 149 |
| 7. | 25 | வடவண்ணக்கன் பேரிசாத்தனார் | திருவையாற்று முதல் இராசாதிராசன் கல்வெட்டில் (S.I.I.Vol.V.No. 520) அணுக்கன் எனக்ிகிறது. நூல்கள் வடவண்ணக்கன் என கூறுகின்றன. | 153 |
| 8. | 28 | முதுகூத்தனார் | திருப்பழனத்துக் கல்வெட்டு (A.R.No. 134,182, 165 of 1927-28) வீரைக்கூற்றம் என்கிறது. பிறிதொரு கல்வெட்டு (A.R.No. 143 of 1927-28) சோழன் இனத்தைக் குறிக்கிறது. | 165 |
| 9. | 31 | நக்கீரனார் | திட்டாந்தான புரத்துக் கல்வெட்டு (A.R.No. 597- 603 of 1926) மருங்கூர்ப்பட்டினம் என்றும் (P.S.Ins.No.) கல்வெட்டும் மருங்கூர் என்றும், பவத்திரிக் கோட்டம் என (Nel.Ins.Gudalur. No. 87) கூறுகிறது. திருமருதந்துறை (A.R.No.278 of 1928-29) திருமருந்துறைக் கல்வெட்டுகள் வையைத் துறை திருமருந்துறை என இயம்புகிறது. | 179-180 |

| | | | | |
|---|---|---|---|---|
| 10. | 33 | இளவேட்டனார் | மன்றம், மன்று எனப் பொது மன்றம் பற்றி (Imperial 190 Gazetter Mysore and Goorg P.300) இக்கல்வெட்டு கூறுகிறது. | 190 |
| 11. | 34 | பிரமன்காரி | பிரமன்காரியைச் சில ஏடுகள் பிரமசாரி என்று கூறுவதைக் களைய இக்கல்வெட்டு (S.I.I.Vol.V.No. 640) பயன்படுகிறது. | 191 |
| 12. | 36 | மதுரை சீத்தலைச் சாத்தனார் | குடகு நாட்டுக் கல்வெட்டுகள் (Coorg.Ins.Vol.V.No.10) சீத்தலை மாளிகை என்று குறிக்கின்றன. | 201 |
| 13. | 40 | கோமால் நெடுங்கோடனார் | கோமான், கோடன் என்பதின் தெளிவை அடைய (A.R.No.40 of 1925) இக்கல்வெட்டு பயன்படுகிறது. | 215 |
| 14. | 40 | கோமால் நெடுங்கோடனார் | மகப்பேறு நிலைப்பாட்டில் ஆண்களின் நிலை பற்றி (P.S.Ins.No.672) இக்கல்வெட்டு கூறுகிறது. | 217 |
| 15. | 44 | பெருங்கோசிகனார் | திருவண்ணாமலைக் கல்வெட்டு (S.I.Vol.VIII.No.69) நல்லிசை கடாம்புனை நன்னன் வெற்பு என்று குறிக்கின்றன. முட்டம், கீழ் இரணியமுட்டம், மேல் இரணிய முட்டம் என்ற இரு பிரிவைப் புலப்படுத்துகிறது. | 233 |

| | | | | |
|---|---|---|---|---|
| 16. | 61 | சிறுமேலாதனார் | காவிதி ஈதன் (P.S.Ins.No.1) இக்கல்வெட்டு சிறுமேலிதனார் என்று கூறுகிறது. ஏடுகள் சிறுமோலிகனார் என்றும் கூறுகிறது. | 299 |
| 17. | 64 | உரோடகத்தனார் | உரோடகத்தனார் தொண்டை நாட்டுச் சான்றோர் என (S.I.I.Vol.V.No.881)இக்கல்வெட்டு கூறுகிறது. | 311 |
| 18. | 68 | விரான் சாத்தனார் | விராது ஆனது மலை, விராலி மலை, விரான்குடி, விரையான் குடி என (P.S.Ins.No.89) கல்வெட்டு கூறுகிறது. சமகாலத் திருவிளாங்குடி என அழைக்கப்படுகிறது. | 325 |
| 19. | 69 | சேந்தம் பூதனார் | சேந்தம் பூதன் என்ற பெயர் கழுகுமலைப் பகுதியிலுள்ள கல்வெட்டால் (S.I.I.Vol.V.710, 307) அறியமுடிகிறது. | 329 |
| 20. | 77 | கபிலர் | கோவலூர்ப் பகுதி கல்வெட்டுகள் (A.R.No.223 of 1936-37) கிளியூர் மலையமான் எனக் குறிக்கின்றன. மலாடு என்பதே மணியன் நாடு, மலையமான் என மருவியதாகும். | 365 |
| 21. | 81 | அகம்பன் மாலாதனார் | சிதம்பரம் பகுதியிலுள்ள உடையார் குடி கல்வெட்டில் (EP.A.R.No.561 of 1920) இளைநாட்டு அகம்பன் என்ற பெயரும் அறியப்படுகிறது. | 382 |

| | | | | |
|---|---|---|---|---|
| 22. | 87 | நக்கண்ணையார் | உடையார் பாளையப் புத்தூர் சிவன் கோவில் கல்வெட்டால் (A.R.No.182 of 1928-29) அரிக்காடு என்ற பெயரை அறிகிறோம். | 407 |
| 23. | 89 | இளம்புல்லூர்க் காவிதியார் | இக்கல்வெட்டால் (A.R.No.130 of 1908) இளம்புல்லூர் என்ற பெயரை அறிகிறோம். | 414 |
| 24. | 90 | அஞ்சில் அஞ்சியார் | இக்கல்வெட்டு (A.R.No.171 of 1932-33) அஞ்சிலூர் என்றும், மற்றொரு கல்வெட்டு (Do.No.174 of 1932-33) அஞ்சூர் என்றும், (Do.No.149 of 1937-38) பிறிதொரு கல்வெட்டு அன்பில் என்றும் குறிக்கின்றன. | 420 |
| 25. | 94 | இளந்திரையனார் | திரையனூர் என்றே (A.R.No.280 of 1922) கூறுகிறது. பிறிதொரு கல்வெட்டு (A.R.No.541 of 1908, Nel.Ins.No.87-105) பவத்திரிக் கோட்டத்துக் காகந்தி மாநகர் என்றும் கூறுகிறது. | 438 |
| 26. | 100 | பரணர் | சேதி நாடு, மகாதை நாடெனவும், முள்ளூர் நங்கையார் எனக் கல்வெட்டு (A.R.No.1070 of 1930-31) கூறுகிறது. | 466 |
| 27. | 102 | செம்பியனார் | தஞ்சை மாவட்டத்தில் செம்பியன் காட்டூர் (A.R.No.140 of 1929) எனவும், செம்பியன் நல்லூர் (A.R.No.31 of 1938) எனவும், செம்பியன் மணலி (A.R.No.126 of 1938) எனவும் மூன்று கல்வெட்டும் செம்பியன் பெயரை உறுதிப்படுத்துகின்றன. | 471 |

| | | | | |
|---|---|---|---|---|
| 28. | 105 | முட்டத்திருமாறன் | வள்ளுவ நாட்டில் முட்டம் என்ற பெயரைக் (T.A.S.Vol.I.P.292) கூறுகிறது. முடம் என்பதை விட முட்டம் என்பதே சரி என இக்கல்வெட்டுச் சான்றால் உணரப்படுகிறது. | 483 |
| 29. | 109 | மீளிப் பெரும்பதுமனார் | மகதநாடு மகத மண்டலம் எனவும் (A.R.No.403 of 1937-38) மீளிக்குன்று எனவும் அழைக்கப்படுகிறது. | 498 |
| 30. | 125 | கச்சிப் பேட்டுக் கதக்கண்ணனார் | கச்சிப்பேடு என்பது இன்றைய கச்சி மாநகரம் என்பதை இக்கல்வெட்டுகள் (A.R.No.474 of 1925, 239 of 1931; 82 of S.I.I.Vol.1) கூறுகின்றன. | 569 |
| 31. | 127 | சீத்தலைச் சாத்தனார் | குடநாட்டுக் கல்வெட்டுகள் (Coorg.Ins.Vol.IX.No.1-10) சீத்தலை மாளிகை என்று குறிக்கின்றன. | 577 |
| 32. | 128 | நற்சேந்தனார் | குடுமியான் மலைக் கல்வெட்டு (P.S.Ins.No.135) குன்றன் எனவும், பிறிதொரு கல்வெட்டு குன்றமுடையானான நம்பிப்பிள்ளை எனவும் கூறுகிறது. | 580 |
| 33. | 130 | நெய்தல் தத்தனார் | நெய்தற்றலை (S.I.I.Vol.V.No.791) எனவும், இடைக்காலக் கல்வெட்டு நெடுங்குன்றம் (A.R.No.113 of 1924) எனவும், கொடியூரும், கொடூவும் (A.R.No.127 of 1932-33) திருக்கழுக்குன்றத்திற்கு அண்மையில் உள்ளனவாகும். | 591-592 |

| | | | | |
|---|---|---|---|---|
| 34. | 133 | நற்றாமனார் | ஏடு பிழைபட நல்விளக்கனார், நல்வேட்டனார் எனக் குறிப்பதைத் தெளிவுடன் இக்கல்வெட்டு (A.R.No.141 of 1923) நற்றாமனார் என்பதைப் புலப்படுத்துகிறது. | 604 |
| 35. | 141 | அரிசிலங்குமரனார் | காவிரியின் கிளையான அரிசிலாறு காவிரியினின்று பிரியுமிடத்தே மறைந்துபோன ஊர் எனக் கல்வெட்டு (A.R.No.255 of 1911) கூறுகிறது. | 639 |
| 36. | 142 | இடைக்காடனார் | இடைக்குடி (A.R.No.84 of 1931) எனவும், இடையூர் (A.R.No.202, 205 of 1932) எனவும் இடைக்காட்டூர் எனவும் இக்கல்வெட்டுகளால் இடைக்காடனார் என்பது தெளிவாகிறது. | 645 |
| 37. | 154 | நல்லாவூர் கிழார் | கிழார் என்ற பெயர் மக்களுக்கு நற்பணி செய்பவருக்கு இடைக்காலச் சோழபாண்டியர் காலத்தில் (A.R.No.334 of 1930) வழங்கப்பட்டதை இக்கல்வெட்டு கூறுகிறது. | 708 |
| 38. | 155 | பாரதாயனார் | பாரதாயன் செல்வன் அரங்கன் (S.I.I.Vol.V.No.520) எனவும், பற்பநாபன் (Ibd.No. 702) எனவும், பாரதாயக்குடி (S.I.I.Vol.VIII.No.684) எனவும் கல்வெட்டுகள் குறிக்கின்றன. | 713 |
| 39. | 161 | பெருந்தலை சாத்தனார் | குடநாட்டு ஊர்களுள் சீத்தலையூர், என்பது சீத்தலை எனக் குறுகிக் கல்வெட்டுகளில் (Coorg.Ins.Vol.I.No.10) காணப்படுவது போல, இப்பெருந்தலையூரும் பெருந்தலை எனக் குறுகியதெனலாம். | 742 |

| | | | | |
|---|---|---|---|---|
| 40. | 167 | உலோச்சனார் | தலைக்கோல்பட்டம் வழங்கும் வழக்கை (A.R.No.231 of 1932-33) இக்கல்வெட்டு உணர்த்துகிறது. | 773 |
| 41. | 170 | பரணர் | பரத்தையர் ஆடல்பாடல் இசையில் சிறந்து விளங்கினர். இவர்கள் பாணர் மகளிர், பாடினியர், விறலியர் என வழங்கபட்டனர். இவர்களுக்குப் பாணர் துணையாக இருந்ததை இக்கல்வெட்டு (S.I.I.Vol.V.No.705) அறிவுறுத்துகிறது. | 791 |
| 42. | 170 | பரணர் | முள்ளூர்க் கோட்டை கோயம்புத்தூர் மாவட்டத்தில் உள்ளதென இக்கல்வெட்டு (A.R.No.629-32 of 1912)கூறுகிறது. சேரநாட்டின் வடபுலமே ஆரியநாடு என்ற கருத்து சிந்தனைக்குரியதாகும். | 793 |
| 43. | 176 | மதுரை இளம்பாலாசிரியன் சேந்தங் கூத்தனார் | கருந்திட்டைக்குடிக் கல்வெட்டு (S.I.I.Vol.V.No.1407) பாலாசிரியனைக் கூறுகிறது. பிறிதொரு கல்வெட்டு (190 of 1894 of Tiru vallam) பிராமணன் பாலாசிரியன் என்றும் குறிக்கிறது. | 816 |
| 44. | 180 | கயமனார் | திதியன் சீமை (a.r.nO.316 OF 1927-28) எனவும், திருமுனைப்பாடி நாட்டுக் குறுக்கை (A.R.No.136 of 1933-4) எனவும், திருநாரையூர் நாட்டுக்குறுக்கை (A.R.No.265 of 1926) எனவும் திருபிடவூர் நாட்டுக் குறுக்கை (A.R.No.265 of 1926) எனவும், குறுக்கை | (837-838) |

| | | | | |
|---|---|---|---|---|
| | | | நாட்டுக் குறுக்கை (A.R.No.215 of 1917) எனவும் ஒரே பெயரில் பல ஊர்கள் இருந்துள்ளதைக் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன. | |
| 45. | 182 | அதியன் வண்ணத்தனார் | கல்வெட்டுப் பிழை, அரசியற் கல்வெட்டுத் துறையினர் அதியர் சேரர் குடியைச் சேர்ந்தவரல்லர் (Madras Epigraphy Annual Report for 1906 para.34) என்று கூறுகிறது. புறநானூற்றுவழி அதியன் சேரர் குடியைச் சேர்ந்தவன் என்பது தெரிகிறது. | 845 |
| 46. | 185 | பரணர் | பொறை நாடு – குறும்பொறை, நெடும்பொறை எனப் பிரிந்தது, குறும்பொறை குறும்பர் நாடாகவும், நெடும்பொறை கொச்சி நாட்டின் வடபகுதியாகவும் இருப்பதைக் கல்வெட்டு (A.R.No.321 of 1924) கூறுகிறது. | 862 |
| 47. | 190 | நக்கண்ணையார் | அழிசியூர் என்பது பல இருத்தலால், இப்புலவரை இளம்காள சதுர்வேதி மங்கலமான அழிசியூர் (A.R.No.399 of 1923) என்று தெளிவுபடுகிறது. | 883 |
| 48. | 195 | பெருங்குன்றூர் கிழார் | பொறைநாட்டுப் பிரிவு – குறும்பொறை, குறும்பர் நாடெனவும், நெடும்பொறை நாடு (A.R.No.213 of 1924) எனவும் கல்வெட்டு குறிக்கப்பிடுகிறது. | 903 |

| | | | | |
|---|---|---|---|---|
| 49. | 200 | கூடலூர் பல்கண்ணனார் | செங்கற்பட்டுக் குன்னத்தூர்க் கல்வெட்டு (A.R.No.229 of 1929-30) பல்கண்ணன் என்றும், திண்டிவனம் முன்னூர்க் கல்வெட்டு இறையூர்ப் பல்கண்ணன் (A.R.No. 65 of 1919) என்றும் கூறுகின்றன. | 920 |
| 50. | 209 | கச்சிப்பேட்டு நண்ணாகையார் | நொச்சிநியமங்கிழார் என்று ஏடுகளின் பிழையைத் திருத்தி காஞ்சி நாடுகளின் ஒரு பகுதி கச்சிப்பேடு எனத் தெளிய இக்கல்வெட்டு (A.R.No.474 of 1925; 239 of 1931) பயன்படுகிறது. | 62 |
| 51. | 226 | கணியன் பூங்குன்றனார் | தற்கால இராமநாதபுர மாவட்டத்து மகிபாலன் பட்டியே பழங்காலப் பூங்குன்றமென இக்கல்வெட்டு (A.R.No.162 of 1936; P.S.Ins.No.1027,1032) கூறுகிறது. | 134 |
| 52. | 227 | பூதன் தேவனார் | அழகர் கோயில் கல்வெட்டு (A.R.No.290 of 1930) சோழர் ஆர்க்காடு என்றும், திருப்பாசூர்க் கல்வெட்டு (A.R.No.190 of 1930) ஈக்காட்டுக் கோட்டத்து ஆர்க்காடு எனவும், திருக்கோயிலூர் கல்வெட்டு (A.R.No.49 of 1936) விலையூர் நாட்டு ஆர்க்காடு என்றும் கூறுகின்றன. முகமதியராட்சி நடத்திய ஆர்க்காடே வேலூர் ஆர்க்காடாகும். | 142 |

| | | | | |
|---|---|---|---|---|
| 53. | 228 | முட்டத் திருமாறனார் | சோழ மன்னர் கல்வெட்டு (A.R.No.230 of 1916) இருங்கோளப்பாடி நாட்டு விளந்தைக் கூற்றத்துத் திருமுட்டம் என்றும், திருமால் கோயில் விளைவாகவும், வடமொழியாலும் முடிகொண்ட சோழ நல்லூர் அதிவராகநல்லூர்க் கல்வெட்டு (A.R.No.283 OF 1916) திருமுட்டம் திருமுஷ்ணம் எனவும், மானக்கஞ்சாறன் உருவம் கோயிலில் அமைக்கப்பட்டதாக இக்கல்வெட்டுகள் (A.R.No.255 OF 1916) கூறுகின்றன. திருமுட்டத்தை விருதராச பயங்கர வளநாட்டு மேற்கா நாட்டு இருங்கோளப் பாண்டி நாடு என்று இக்கல்வெட்டு (A.R.No.211 of 1928-29) கூறுகிறது. | 145 |
| 54. | 230 | ஆலங்குடி வங்கனார் | திருஞானசம்பந்தர் காலத்தில் திருவிரும்பூளை என வழங்கியது ஆலங்குடிச் சோழர் காலக் கல்வெட்டு. சோழர் காலத்தில் சனநாத சதுர்வேதமங்கலம் (A.R.No.496 of 1920) என்று கூறுகிறது. இரணியூர்க் கல்வெட்டு (Ibid.No.6 of 1926) வேதமங்கலம் என்றே குறிக்கிறது. பிறிதொரு கல்வெட்டு (Ibid.No.222 of 1925) ஆலங்குடியை வேளநாட்டு ஆலங்குடி என்று குறிப்பிடுகிறது. | 154-155 |

| | | | | |
|---|---|---|---|---|
| 55. | 233 | அஞ்சில் ஆந்தையார் | அஞ்சில் என்பதைத் திருக்கழுக்குன்றத்துக் கல்வெட்டு (A.R.No.171 of 1933) களத்தூர் நாட்டு அஞ்சூர் என்று குறிக்கிறது. | 167 |
| 56. | 243 | காமக்காணி நப்பசலையார் | திருக்காண்டியூர்க் கல்வெட்டு (S.I.I.Vol.V.No.572) காமக்காணி சலாகன் திருமழுவாடி என்றும், பிறிதொரு கல்வெட்டு (Ibid.Vol.VI.No.33) காமக்காணி இளைய சீராமன் வடுகன் என்றும், வேள்விக்குடிச் செப்பேடு (EP.Indi.Vol.XVII.No.16) கொற்கைக் கிழான்(Ibid.No.660) காமக்காணி நற்சிங்கன் என்றும் குறிக்கிறது. காமக்கணி என்பது பிழையாகிக் காமக்காணி என்றானது என்பது மெய்ப்படுகிறது. | 207 |
| 57. | 264 | காப்பியஞ் சேந்தனார் | திருமழபாடிக் கல்வெட்டில் (S.I.I.Vol.V.No.660) காப்பியன் ஆதித்தன் கம்டத்தடிகள் என்று கூறப்படுகிறது. | 220 |
| 58. | 248 | காப்பன் கீரனார் | முதல் இராசராசன் காலத்துக் கல்வெட்டில் (Nell.Ins.Gud.No.30) காப்பனான இலக்குமணதாசன் என்றும், உணவுக் காப்பு, ஊர்க் காப்பு என்றும் தொண்டை நாட்டுக் கல்வெட்டு (Ibid.ATM.No.25) கூறுகிறது. | 228-229 |

| | | | | |
|---|---|---|---|---|
| 59. | 257 | வண்ணக்கன் சேரி குமரங்குமரனார் | முதற்குலோத்துங்கன் கல்வெட்டில் (A.R.No.272 of 1907) வண்ணக்கண்குடி என்றும், தியாகச் சமுத்திரச் சதுர்வேதி மங்கலம் என்றும், பிறிதொரு கல்வெட்டில் (Ibid.No.273 of 1907) வண்ணக்குடியான தியாகச் சமுத்திரச் சதுர்வேதி மங்கலம் என்றும், தஞ்சை மாவட்டத் திருநல்லூர் மயானத்துக் கல்வெட்டு (Ibid.No.308 of 1910) பிரமதேயமான நூலும் மகாசடையன் வண்ணக்கன் என்றும் கூறுகிறது. | 271 |
| 60. | 258 | நக்கீரர் | திருச்செங்காட்டங்குடிக் கல்வெட்டில் (A.R.No.63 of 1913) மருங்கூரான இராசநாராயணச் சதுர்வேதி மங்கலம் என்றும் உரைக்கிறது. | 278 |
| 61. | 264 | ஆவூர் காவிதி மாதேவனார் | ஆவூர் என்ற பெயர் பிற்காலத்தே மறைந்ததை இக்கல்வெட்டு (A.R.No.81 of 1911) கூறுகிறது. காவிதிக்காணி இடைக்காலத்தும் இருந்தமை இக்கல்வெட்டுகளால் (A.R.No.229 of 1927) அறியப்படுகின்றன. | 300 |
| 62. | 260 | கச்சிப்பேட்டு இளந்தச்சனார் | தச்சக்காணி என நிலம் தந்தமை இக்கல்வெட்டுகளால் (S.I.I.Vol.V.No.990) அறியமுடிகின்றன. | 310 |
| 63. | 272 | முக்கில் ஆசான் நல்வெண்ணையார் | இராசாதிராச தேவர் காலத்தில் இப்பெரு முக்கில் கங்கை கொண்ட சோழனல்லூர் (A.R.No.39 of 1905) என்றும், எதிரிலி சோழனல்லூர் (A.R.No.46 of 1905) என்றும் வழங்கப்பட்டதை இக்கல்வெட்டுகளால் அறியலாம். | 335 |

| | | | | |
|---|---|---|---|---|
| 64. | 274 | காவன் முல்லை பூதனார் | தடவூர் கோயில் கல்வெட்டு (A.R.No.461 of 1913) கங்கபாடி நாட்டுத் தடவூர் என்றும், வணிகன் காவன் கூத்தாண்டான் (A.R.No.464 of 1913) தண்டலம் என்றும் கூறுகிறது. | 349 |
| 65. | 277 | தும்பைச் சொகினனார் | திருப்பதிக்கு அருகில் இப்பொழுது திருச்சானூர் என வழங்கும் ஊரின் பழம்பெயர் திருச்சொகினூர் என (A.R.No.452 of 1924) இக்கல்வெட்டில் காணப்படுகிறது. | 355 |
| 66. | 281 | கழார்க் கீரன் எயிற்றியார் | உலகுடை முக்கோ கிழானடி வளநாட்டுக் களார்க்கூற்றம் (A.R.243 of 1929-30) எனவும், வடகரை இராஜராஜ வடநாட்டு களார்க்கூற்றம் (245 of 1929-30) எனவும், இராசாசியெ வளநாட்டுக் கழார்க் கூற்றம் (246 of 1929-30) எனவும், வடகரை மழநாட்டுக் களார்க் கூற்றம் (251 of 1929-30) எனவும், திரிபுவன முழுதுடை வளநாட்டுக் களார் கூற்றம் (254 of 1929-30) எனவும் குறித்துள்ளனர். | 370 |
| 67. | 285 | மதுரை பொற்கொல்லன் வெண்ணாகனார் | தண்கால், திருத்தங்கால் எனக் கல்வெட்டுகள் (A.R.No.564 of 1922) மதுராந்த வளநாட்டுக் கருநீலக்குடி நாட்டுத் திருத்தங்கால் என்று கூறுகிறது. | 385 |

| | | | | |
|---|---|---|---|---|
| 68. | 288 | குளம்பனார் | சிவப்பிராமணன் பாலாசிரியன் சாத்தன் சிவப்பிரியனான குழம்பன் நாயக்கன் (S.I.I.Vol.VIII.No.330) எனக் கல்வெட்டு கூறுகிறது. குழம்பன், குளம்பன் என்ற வேறுபாட்டில் குளம்பன் தெரிவு செய்யப்படுகிறது. | 396 |
| 69. | 303 | மதுரை ஆர்வலநாட்டு ஆலம்பேரி சாத்தனார் | ஆரளநாடு, ஏட்டுக் குறிப்பின் தவறைக் கூறி இக்கல்வெட்டு (A.R.No.137 of 1919) வழி ஆர்வநாடு என்பது உறுதி செய்யப்படுகிறது. | 451 |
| 70. | 304 | மாறோக்கத்து நப்பசலையார் | மாறமங்கலம், மாறவன்மன் மங்கலம், மானமங்கலம் எனக் கல்வெட்டுகளில் (S.I.I.Vol.VIII.No.445-59) கூறப்படுவன, சங்கக் கால மாறோக்கமாகும். | 454 |
| 71. | 306 | உரோடகத்துக் கந்தரத்தனார் | கல்வெட்டு (S.I.I.Vol.V.No.881) சயங்கொண்ட சோழ மண்டலத்துப் புரிசைநாட்டு உரோடகம் என்கிறார். | 464 |
| 72. | 313 | தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார் | தங்கால் என்பது (A.R.No.564 of 1922) மதுராந்தக கருநீலக்குடி நாட்டுத் திருத்தங்கால் எனப்படுகிறது. | 495 |
| 73. | 364 | கிடங்கில் காவிதிப் பெருங் கொற்றனார் | கிடங்கில் என்பது ஓய்மா நாட்டின் தலைநகரமென இக்கல்வெட்டு (A.R.No.134 of 1925) கூறுகிறது. | 694 |

| | | | | |
|---|---|---|---|---|
| 74. | 389 | காவிரிப்பூம் பட்டினத்தூர் செங்கண்ணனார் | அவியன் என்ற குறுநில மன்னனால் ஆவியனூர் (A.R.No.419 of 1921) என வழங்கப்பட்டது. பிறகு அவியனூர் தலைமை நகரமாயிற்று. அவியன் குடியினர் அவியன் பெரிய நாயனான விசயாலய தேவன் (A.R.No.119 of 1905) என்றும் அவியன் மாளவச் சக்கரவர்த்தி (A.R.No.122 of 1908) எனவும் குறிக்கிறது. | 787 |
| 75. | 390 | ஔவையார் | முடியன் ஒரு வள்ளல். முடியனூர்க் கல்வெட்டுகள் (A.R.No.403 of 1938) மலாடான சனநாத வளநாட்டு மகதை மண்டலத்துக் குறுக்கைக் கூற்றத்து முடியனூர் (A.R.No.388 of 1938) எனக் குறிக்கின்றன. இடைக்காலப் பாண்டியர் காலத்தில், இவ்வூர் இரவிகுல மாணிக்கச் சதுர்வேதி மங்கலமாகியது. (A.R.No.401 of 1938) இம்முடியனூர்க் கல்வெட்டு எல்லப்ப நயினார் உலா நூல் பாடியதைக் குறிக்கிறது. பிறிதொரு கல்வெட்டு (A.R.No.409 of 1938) பெண்ணைத் தென்கரை மகதை மண்டலத்துக் கீழ்துண்ட நாட்டு முடியனூர் என்று கூறுகிறது. | 794 |

| ஐங்குறுநூறு - 1 | | | | |
|---|---|---|---|---|
| 76. | மருதம் | ஓரம்போகியார் | ஆதன் அவினி என்றும் சேரமன்னனால் அவினியாறு (A.R.No.96 of 1906) வெட்டப்பட்டதை இக்கலவெட்டின்வழி அறிகிறோம். | 37 |
| 77. | ,, | ,, | பொய்கை நாடு கிழவன், ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்த வேளாண் (S.I.I.Vol.II.No.38) என இக்கல்வெட்டு கூறுகிறது. | 138 |
| 78. | ,, | ,, | தேனூர் என்ற ஊர்கள் பல இருந்துள்ளன. அதனை வேறுபடுத்திப் பிரித்தறிய கல்வெட்டுத் தரவுகள் பயன்படுகின்றன. மகதை நாட்டுப் பழங்கூர் தேனூர் (A.R.No.409 of 1938) எனவும் திருமாவுகந்த நல்லூர் (A.R..No.43 of 1931-32) எனவும் அளற்றுநாட்டுத் தேனூர் (A.R.No.56 of 1931-32) எனவும் பாகனூர்க் கூற்றத்துப் பெருந்தேனூர் (A.R.No.604 of 1926) எனவும் இக்கல்வெட்டுகள் கூறுகின்றன. | 175 |

| ஐங்குறுநூறு - 2 | | | | |
|---|---|---|---|---|
| 79. | நெய்தல் | அம்மூவனார் | கடலுண்டி என வழங்கும் பகுதியே தொண்டி என்ற கருத்தும் உண்டு. இது தவறெனவும் இதன் பெயர் மண்ணுர் எனவும் இக்கல்வெட்டு (S.I.I.Vol.V.No.782) கூறுகிறது. | 388 |
| 80. | ” | ” | களப்பிரராட்சியில் சீரழிந்து மீண்டும் கடுங்கோ என்ற பாண்டியர் ஆட்சியில் தலை தூக்கியதாக இக்கல்வெட்டு கூறுகிறது. குடநாட்டுக் கொற்கை (Annual Report of the Madras Epigraphy No.391 of 1929-30) எனவும், சோழர் (A.R.No.464 of 1929-30) கல்வெட்டுகள் குடநாட்டுக் கொற்கை எனவும், பிறிதொரு கல்வெட்டு (A.R.No.408 of 1929-30) மதுராந்தக நல்லூர் எனவும், பிறிதொரு கல்வெட்டில் மதுரோதய நல்லூர் (A.R.No.425 of 1929-30) என்றும் பெயர் பெற்றமை தெரிகிறது. | 422-423 |
| 81. | ” | ” | ஆற்றூர் கல்வெட்டு (A.R.No.432 of 1929-30) முத்துக்குளிப்பதற்குச் சலாபத் தேவைவரி செலுத்தியதை உணர்த்துகிறது. | 424 |
| 82. | ” | ” | பாண்டி வேந்தர்குரிய சிறப்புப் பெயருள் “கொற்கை வேந்தன்” (T.A.S.Vol.Part.VI.P.97) என்று இக்கல்வெட்டு கூறுகிறது. | 428 |

| | | | | |
|---|---|---|---|---|
| 83. | குறிஞ்சி | கபிலர் | குறிஞ்சிநில ஊர்கள் குறிஞ்சிப் பெயரைத் தாங்கி வருவதை (A.R.No.90 of 1907) இக்கல்வெட்டின் வழி, கல்லடை குறிச்சி எனவும், வேள்குறிச்சி எனவும், (A.R.No.124 of 1907) குறிப்பதை அறியலாம். ஊர்ப்பெயரைக் கொண்டு எத்திணை சார்ந்தது என்பதை அறியலாம். | 2 |
| 84. | ,, | ,, | திருக்கோவலூர்க் கல்வெட்டு (S.I.I.Vol.VII.No.863) கபிலக் கற்பாறை வரலாற்றை உணர்த்துகிறது. | 4 |
| 85. | ,, | ,, | வள்ளிமலை, வள்ளியங்கானம் என்பது 'சயங்கொண்ட சோழமண்டலத்துப் பெரும்பாணப்பாடி நாட்டுத் துய்யநாட்டு வள்ளிமலைப் பற்று' (A.R.No.96 of 1921) என்றும் கல்வெட்டுகள் வழங்கி வந்துள்ளன. | 85 |
| 86. | முல்லை | பேயனார் | உழான் என்ற பெயருடையார் தொண்டை நாட்டிலும், மன்றாடி என்ற பெயருடையார் கொங்கு நாட்டிலும் பெருகியிருப்பது போலப் பேயன் என்ற பெயருடையார் சேரநாட்டில் காணப்படுகின்றனர். திருநெல்வேலியிலுள்ள நெல்லையப்பர் கோயில் கல்வெட்டுகளில் சேந்தப்பிரான் பேயனான யாதவராயன் (S.I.I.Vol.V.No.416; A.R.No.127 of 1890) என்று காணப்படுகிறது. | 360 |

| | | | | |
|---|---|---|---|---|
| 87. | ” | பேயனார் | இடைக்காலப் பல்லவ பாண்டியச் சோழர் கல்வெட்டுகளில், பாணரும் கூத்தரும் ஆங்காங்கே மிகச் சிலராய் வாழ்ந்து வந்த குறிப்புகள் (A.R.No.90 of 1931-2) இக்கல்வெட்டில் காணப்படுகிறது. | 455 |
| 88. | ’’ | ’’ | இயல், இசை, கூத்துகளில் சிறந்தவர் பாணர். ஒரு பாண்டியன் ‘பொன்னிவள நாடு பாணன் பெறப் புரிந்தான்’ (P.S.Ins.No.652) என்று இக்கல்வெட்டு கூறுகிறது. பாணன் மதுரைப் பதியாளவைத்த பிரான்’ எனப் பிற்காலக் கல்வெட்டுகள் கூறுகின்றன. | 457 |

# பின்னிணைப்பு - II

## புறநூல் கல்வெட்டு சான்றுகளின் புள்ளிவிவரம்

**(ஔவை சு. துரைசாமிப்பிள்ளையின் உரைகளில்)**



| பதிற்றுப்பத்து | | | | |
|---|---|---|---|---|
| **வ. எண்** | **பாடல் எண்** | **புலவர் பெயர்** | **கல்வெட்டு சான்று** | **பக்க எண்** |
| 1. | மூன்றாம் பத்து, 1. அடுநெய்யாவுதி | பாலைக் கௌதமனார் | விக்கிரம (A.R.No. 297 of 1916) சிங்கபுரக் கல்வெட்டு சொல்லாராய்ச்சி 'பாகுடி' என்ற சொல் மக்கள் செலுத்திய வரியைப் பற்றி கூறுவதாகும். | 73 |
| 2. | நான்காம் பத்து, 8. பரிசிலர் வெறுக்கை | காப்பியாற்றுக் காப்பியனார் | ஆனைமலைக் கல்வெட்டு (A.R.No.214 of 1927-28) ஊர் பெயராய்வு: ஊர்+பெயர் ஆய்வாகவும் கொள்ளலாம். நன்னன் என்ற மன்னன் வாழ்ந்த பகுதி நன்னனூர் என்றழைக்கப்பட்டது. தற்போது ஆனைமலை என்று அழைக்கப்படுகிறது. | 162 |
| 3. | ஐந்தாம் பத்து, 3. ஏறா வேணி | பரணர் | கல்வெட்டு பெயர் குறிக்கப்பெறவில்லை. (S.I.I.Vol.V.No.645) செய்தி கூற்று: 12-ஆம் நூற்றாண்டின் மூன்றாம் குலோத்துங்கன் கூற்றாகச் சொல்லப்படுகிறது. புரவலர், புலவர்களுக்குக் கொடை வழங்கிய செய்தி அறியப்படுகிறது. | 198 |

| | | | | |
|---|---|---|---|---|
| 4. | ஏழாம் பத்து, 3. அருவி யாம்பல் | கபிலர் | திருக்கோயிலூர் வட்ட எலவானாசூர் கல்வெட்டு (A.R.No.500 of 1937-38) வீரர் சூளுரைத்தல் செய்தி கூறப்படுகிறது. | 300 |
| 5. | எட்டாம் பத்து, 4. நலம்பெறு 6.திருமணி | அரிசில் கிழார் | இடைக்காலக் கல்வெட்டு (A.R.No.321 of 1924) நாடு பெயர் ஆய்வு கொச்சி நாட்டை நெடும்பொறை, குறும்பொறை என்று கூறுவதை அறிய முடிகிறது. | 357 |
| 6. | இரண்டாம் பத்து | குமட்டூர் கண்ணனார் | குண்டூர், சித்தன்னவாசல் கல்வெட்டு ஊர்ப்பெயர் ஆய்வு குண்டூர் கல்வெட்டு (A.R.No.83 of 1971) குமட்டூரு என்றும், சித்தன்ன வாசல் கல்வெட்டு (P.S.Ins.No.1) குமட்டூர் என்றும் குறிப்பிடுகிறது. இக்கல்வெட்டு குறிப்புகள் வழி இவர் அந்தணர் என்பதை உறுதிசெய்ய முடிகிறது. | 30 |
| 7. | நான்காம் பத்து | காப்பியாற்றுக காப்பியனார் | இடைக்காலத்துக் கல்வெட்டு (S.I.I.Vol.V.No.660) பெயர்+ஊர் ஆய்வாகும். காப்பியனூர், காப்பியனார் என்ற பெயர்களைக் கல்வெட்டுவழி அறியமுடிகிறது. | 34 |

| | | | | |
|---|---|---|---|---|
| 8. | ஏழாம் பத்து | கபிலர் | திருக்கோயிலூர் கல்வெட்டு (S.I.I.Vol.VII.No.863) பெயர்+ஊர் பெயர் ஆய்வு. கபிலக்கல்லு – ஊராய்வு அந்தணர் மரபைச் சார்ந்தவர். | 38 |
| 9 | எட்டாம் பத்து | அரிசில் கிழார் | இடைக்காலக் கல்வெட்டு (சோழர் காலம்) (A.R.No.256 of 1926) ஊர்ப்பெயர் ஆய்வு அரிசில் அரிசிலூர் அரியிலூர் அரிசிக்கரை இவைகளை இணைத்துப் பார்க்கிறது. | 40 |

| | | | | |
|---|---|---|---|---|
| **புறநானூறு – I** | | | | |
| 1. | 43 | தாமற்பல் கண்ணனார் | தாமல் கோயில் கல்வெட்டு (S.I.Vol.V.1004.A.R.139 of 1896) தாமல்பல் + தாமற்பல் = தாமர்பல் என்பது தெளிவு. பெயர்+ஊர்= பெயராய்வு. பெயராய்வை இக்கல்வெட்டு புலப்படுத்துகிறது | 151 |
| **புறநானூறு – II** | | | | |
| 1. | 201 | கபிலர் | ஹோய்சள தேவர் கல்வெட்டு (EP.Car.Vol.B1:171) வீரவல்லாள தேவர் கல்வெட்டு (Ibid.AK.71), (Ibid.Hn.65) பெயர் + ஊர் பெயராய்வைச் சுட்டுகிறது. | 4-5 |
| 2. | 224 | கருங்குளவதனார் | கருங்குளம்-சிகண்டி (A.R.No.277 of 1928) சோழநல்லூர் கருங்குளம் (Annual Report of epigraphy, Madras, No.269 of 1928) திருவாங்கூர் (A.R.No.287 of 1928) சடங்கவிக் குறிச்சி (A.R.453 of 1930) இக்கல்வெட்டுகள் ஊர்ப்பெயராய்வைத் தெளிவுபடுத்துகின்றன. | 73-74 |

| | | | | |
|---|---|---|---|---|
| 3. | 225 | ஆலத்தூர் கிழார் | பேராலத்தூர் (A.R.No.481 of 1922) ஆலத்தூர் (A.R.No.360 of 1929) திருச்சிவபுரத்து கல்வெட்டு ஆலத்தூர் கிழார் (A.R.No.270 of 1927) ஊர் + பெயர் = ஊர்பெயராய்வைத் தெளிவு படுத்துகிறது. | 77 |
| 4. | 230 | அரிசில்கிழார் | கி.பி. 8 ஆம் நூற்றாண்டு, ஒட்டப்பட்டிக் கல்வெட்டு (A.R.No.211 of 1910) ஊர்ப்பெயரான அதமன்கோட்டை-தகடூர் என்பதைப் புலப்படுத்துகிறது. | 90-91 |
| 5. | 239 | பேரெயில் முறுவலார் | பேரெயில் என்பது (A.R.No.96 of 1894) ஊர்ப்பெயராய்வை வெளிக்காட்டுவதாகும். | 112 |
| 6. | 242 | குடவாயிற் கீரத்தனார் | கோயம்புத்தூர் இடிகரைக் கல்வெட்டு (A.R.No.6 of 1923) குடவாயில் என்ற ஊர்ப்பெயரைப் புலப்படுத்துகிறது. | 122 |
| 7. | 245 | தெரியவில்லை | கூத்தம்பலம் இருந்ததைக் கூறும் கல்வெட்டு (T.A.S.Vol.VI.of 1927,p.35). | 127 |

| | | | | |
|---|---|---|---|---|
| 8. | 249 | தும்பச் சொகினனார் | தும்பையூர் (Nell.Ins.Sulur.15) திருச்சொகினூர் (A.R.No.452 of 1924) ஊர்ப்பெயராய்வு | 136 |
| 9. | 253 | கயமனார் | குளம்பன், குழம்பன் (S.I.I.Vol.VIII.No.330) பெயராய்வினை இக்கல்வெட்டு உணர்த்துகிறது. | |
| 10. | 258 | உலோச்சனார் | கந்தார நாடு (M.E.R.No.31 of 1936-37) புதுக்கோட்டையில் பெருநற்கிள்ளி என்ற பெயருடையோன் வாழ்ந்ததை இக்கல்வெட்டு (A.R.No.297 of 1974) அறிவுறுத்துகிறது. | 159 |
| 11. | 261 | ஆவூர் மூலங்கிழார் | நடுகல்லிற் பீடு எழுதுவதை இக்கல்வெட்டு (A.R. for 1935-6.p.72) கூறுவதை அறிய முடிகிறது. | 168 |
| 12. | 265 | சிறுகருத்தும்பியார் | முகையூர் – முகலாறு (M.E.P.A.R.No.214 of 1936-7) செங்கைமா – செங்கம் போன்ற ஊர்ப்பெயர்களை இக்கல்வெட்டு (S.I.I.Vol.VIII.No.117) புலப்படுத்துகிறது. | 174-180 |

| | | | | |
|---|---|---|---|---|
| 13. | 271 | வெறிபாடிய காமக்காணியார் | வேள்விக்குடிச் செப்பேடு (Journal of the Annamalai university, Vol. XV) காமக்காணி வேதியரைக் குறிப்பதை அறிவுறுத்துகிறது. | 189 |
| 14. | 273 | எருமை வெளியனார் | கன்னடக் கல்வெட்டு (Eq.Car.Vol.XIV.20) தமிழ்க் கல்வெட்டு (A.R. for 1907 para.1) எருமை நக்கன் – நடுகல் கூற்றினை இக்கலவெட்டு (A.R.No.211 of 1910) உணர்த்துகிறது. | 193-194 |
| 15. | 277 | பூங்கண் உத்திரையார் | பிறந்த நாளால் பெயர் பெறுதல் (M.E.R.No.153 of 1932) பிறந்தநாள் பெயராய்வு – உத்திரையார் என்பதைத் தெளிவுபடுத்துகிறது. | 202 |
| 16. | 281 | அரிசில்கிழார் | குடந்தைக் கல்வெட்டு அரிசிலூர் (A.R.255 of 1911) பற்றிக் கூறுகிறது. | 214 |
| 17. | 283 | அண்டர் நடங்கல்லினார் | புதுக்கோட்டை அம்புக்கோயில் கல்வெட்டு அழும்பில் (P.S.Ins.458) ஊர்ப்பெயராய்வைத் தெளிவுபடுத்துகிறது. | 219 |

| | | | | |
|---|---|---|---|---|
| 18. | 306 | அள்ளூர் நன்முல்லையார் | அள்ளூர் கல்வெட்டு (A.R.No.79 of 1926) திருநெல்வேலிக் கோயில் இக்கல்வெட்டு (S.I.I.Vol.V.No.438) இருபெயர்களின் வேறுபாட்டைப் புலப்படுத்துகிறது. | 279-280 |
| 19. | 312 | பொன்முடியார் | திருவனைக் கல்வெட்டு (A.R.No.205 OF 1919) கொல்லர் அயலூர் செல்லுதல் கூடாது என்னும் கட்டுப்பாட்டை இக்கல்வெட்டு உணர்த்துகிறது. | 295 |
| 20. | 317 | வேம்பற்றூர்க் குமரனார் | திருமங்கலம்- வேம்பற்றூர் (A.R.No.224 of 1927) என்ற ஊர்ப்பெயராய்வைப் புலப்படுத்துகிறது. | 307 |
| 21. | 324 | ஆலத்தூர் கிழார் | ஆலத்தூர் காவிரி தென்கரையில் உள்ளதாக இக்கல்வெட்டு (A.R.No.273 of 1927) ஊர்ப்பெயரைத் தெளிவுபடுத்துகிறது. | 324-325 |
| 22. | 325 | உறையூர் முதுகண்ணன் சாத்தனார் | இளையர் ஒருவனின் மூத்தவன் பெயரைக் குறிப்பதே முதுகண்ணனார் | 328 |

| | | | | |
|---|---|---|---|---|
| | | | என்ற பெயர்த்தெளிவை இக்கல்வெட்டு ஏற்படுத்துகிறது. (S.I.Ins.Vol.IV.No.227) | |
| 23. | 326 | தங்காற் பொற்கொல்லனார் | மதுராந்த வளநாட்டுக் கல்வெட்டு (A.R.No.564 of 1922) பாரதம், இராமாயணம் போன்றவற்றை சங்க காலத்தினரும் அறிந்திருந்தனர் என்ற செய்தியை இக்கல்வெட்டின்வழி (A.R.No.564 of 1922) அறியமுடிகிறது. | 332 |
| 24. | 331 | உறையூர் முதுகூத்தனார் | ஸ்ரீரங்கம் கல்வெட்டின்வழி (A.R.No.16 of 1936-7) பங்குனி விழா பற்றிய கருத்தினை அறிய முடிகிறது. | 345 |
| 25. | 332 | விரியூர் நக்கனார் | 12-ஆம் நூற்றாண்டு கல்வெட்டு (Nell.IN.No.108) விரியூர் என்ற ஊர்ப்பெயரினைத் தெளிவுபடுத்துகிறது. | 350 |

| | | | | |
|---|---|---|---|---|
| 26. | 334 | மதுரை தமிழ்க்கூத்தனார் | நாகன்பாடி (மானம்பாடி) என்ற ஊர்கள் (A.R.No. of 1931) கூத்தாடிகளுக்கு நிலங்களைக் 'காணி'யாகக் கொடுத்ததை அறிய இக்கல்வெட்டு உதவுகிறது. | 335 |
| 27. | 338 | குன்றூர் கிழார் மகனார் | போந்தை (A.R.No.5 of 1920), பொற்போந்தை (S.I.I.Vol.XII.No.97), அரும்போந்தை (A.R.No.33 of 1919), என்னும் ஊர்களில் ஆதமங்கலம் அருகில் உள்ள போந்தையே சரியானது. (A.R.No.193 of 1927-28) என்பதை இக்கல்வெட்டுச் சான்றின்வழி உறுதிப்படுகிறது. | 368-369 |
| 28. | 347 | கபிலர் | அகுதை மேற்கா நாட்டுக் கூடல் (A.R.No.62 of 1918) கூடன்மங்கலம், கூடலூர் (S.I.I.Vol.VII.No.757) என்னும் ஊர்ப்பெயர் தற்காலத்தில் கடலூர் என்று மாறியுள்ளதை இக்கல்வெட்டு உணர்த்துகிறது. | 395 |

| | | | | |
|---|---|---|---|---|
| 29. | 350 | மதுரை கண்ணம் புகுத்தாராயத்தனார் | கோனாட்டு நல்லூர் கடையம் – கடை (A.R.No.522 of 1916) கோனாட்டுக் கடையம் (A.R.No.183 of 1935-36) என்னும் ஊர்ப்பெயர்த் தொடர்ச்சிகள் மதுரைப் பகுதியைச் சார்ந்தவை என்பதை இக்கல்வெட்டின்வழி அறியலாம். | 400 |
| 30. | 356 | கதையங் கண்ணனார் | கதையன் என்பது கதவங்குடி என்றும் கதவங்குடி தற்காலத்தில் கதவணி என்றும் ஊர்ப்பெயர்த் தொடர்ச்சி இருப்பதை இக்கல்வெட்டின்வழி (A.R.No.183 of 1935-36) அறியமுடிகிறது. | 415 |
| 31. | 357 | பிரமனார் | திருமழபாடிக் கல்வெட்டு (S.I.Ins.Vol.V.No.648) பிராமணர் என்ற பெயர்த்தெளிவை ஏற்படுத்துகிறது. | 417 |
| 32. | 359 | அந்துவன் கீரன் காவிட்டனார் | தென்கரை கல்வெட்டு (S.I.I.Vol.V.No.294) காவிட்டர்கள் கோயில் பட்டர்கள்- வரலாற்றாய்வு, பெயராய்வைத் தெளிவுபடுத்திகிறது. | 423 |

| | | | | |
|---|---|---|---|---|
| 33. | 363 | ஐயாதிச் சிறுவெண்டேரையார் | ஆதியூர் (A.R.No.778 of 1933) ஆதிகுடி (A.R.No.105 of 1920) என்னும் ஊர்களுள் ஆதி என்பது பல ஊர்களுக்கு ஆகி வருவதை இக்கல்வெட்டின்வழி அறிய முடிகிறது. | 439 |
| 34. | 368 | கழாத்தலையார் | போர் நடந்த இடம் திருப்போர்ப்புறம் (S.I.I.Vol.VII.No.497) எனவும் திருப்போர்திருபுறம் - திருப்போரூர், திருப்பூர் என ஊர்ப்பெயர் மருவி உள்ளதை இக்கல்வெட்டின்வழி அறியமுடிகிறது. | 457 |
| 35. | 369 | பாணர் | பரணர் பள்ளி, பரணச்சேரி (A.R.No.560 of 1908) என்ற ஊர்ப்பெயர்களை இக்கல்வெட்டின்வழி காண முடிகிறது. | 466 |
| 36. | 370 | ஊன்பொதி பசுங்குடையார் | நெடுங்குன்றம் கல்வெட்டு (A.R.No.26 of 1934-5) பாழி - திருவாஞ்சேரி என்னும் ஊர்ப்பெயர் மருவி உள்ளதை இக்கல்வெட்டு அறியத் தருகிறது. | 467 |

| | | | | |
|---|---|---|---|---|
| 37. | 373 | கோவூர் கிழார் | குடபுலத்து வஞ்சி, திருவஞ்சைக்களம் (S.I.I.Vol.V.No.789) வஞ்சி கருவூர் (A.R.No.335 of 1927-28) தாராபுரம் கொங்குவஞ்சி (A.R.No.146 of 1920) ஊர்ப்பெயராய்வு மருவி விடுதல் குராப்பள்ளி திருவிடைக்கழி (A.R.No.269 of 1925). | 480-87 |
| 38. | 376 | நன்னாகனார் | தொண்டை நாட்டூர் கோடன் கோடன்பாக்கம் (A.R.No.20 of 1932-33) என்னும் பெயர், ஊர்ப்பெயராய்வினைத் தெளிவுபடுத்துகிறது. | 500-501 |
| 39. | 380 | கருவூர்க்கதப்பிள்ளை | நாஞ்சில், நாஞ்சிலாமலை, வள்ளுவர் ஊர் வள்ளியூர் (A.R.No.254 of 1927-28) என்பதைச் சுகபுரத்துக் கல்வெட்டு (S.I.Ins.Vol.V.No.772) வெளிப்படுத்துகிறது. | 518-520 |
| 40. | 381 | நன்னாகனார் | திருக்கழுக்குன்ற கல்வெட்டு (A.R.No.76 of 1932-3) கருபனூர் என்றும் ஊர்ப்பெயரினைத் தெளிவுபடுத்துகிறது. | 52 |

| | | | | |
|---|---|---|---|---|
| 41. | 383 | மாறோக்கத்து நப்பசலையார் | திருவதிகைக் கல்வெட்டு (A.R.No.419 of 1921) திருப்பத்தூர் திருத்தளியாண்டர்கோயில் கல்வெட்டு (A.R.122 of 1908) மாவிள சக்ரவர்த்தி விசயாலய தேவன் கல்வெட்டு (A.R.No.119 of 1906) அவியன் + அவியனூர் . பெயர், ஊர்ப்பெயராய்வினைத் தெளிவுபடுத்துகிறது. | 530 |
| 42. | 385 | கல்லாடனார் | திருப்பழனத்துக் கல்வெட்டு – அம்பர் நாடு (a.r.No.175 of 1927-8)அருவந்தை, வந்தவாசி பொன்னூர் – அருவந்தை (S.I.Ins.Vol.VII.No.220) மீஞ்சூர் சிவன் கோயில் கல்வெட்டு (A.R.No.133 of 1916) அருவந்தை போன்ற பெயர், ஊர்ப்பெயராய்வினைப் புலப்படுத்துகிறது. | 540-41 |
| 43. | 387 | குன்றுகட் பாலியாதனார் | கருவூர்க் கல்வெட்டு (A.R.No.166 of 1936-7) வஞ்சி – ஆன்பொருநை ஊர்ப்பெயராய்வினைப் புலப்படுத்துவதை அறியலாம். | 553 |

| | | | | |
|---|---|---|---|---|
| 44. | 389 | கள்ளில் ஆத்திரையனார் | கள்ளில் – திருகள்ளில் (A.R.486 of 1926) கள்ளூர் (A.R.No.490 of 1926) வேதியர்க்கு நிலம் வழங்குதல் (Nell.Ins.O.55pp.988.90) அன்னவேமன் - வேமசானிக்கு நிலம் கொடுத்தது. (EP.Ind.Vol.III.P.286-92) ஊர்ப்பெயராய்வு - வேதியர்க்கு நிலம் வழங்குதலுடன், பெண்ணுக்கு நிலம் கொடுத்ததை இக்கல்வெட்டு கூறுகிறது. ஊர்ப்பெயராய்வு – வேதியர்க்கு நிலம் வழங்கல், பெண்ணுக்கு நிலம் வழங்கும் உரிமை சங்க காலத்தில் இருந்துள்ளதை இக்கல்வெட்டின்வழி அறியமுடிகிறது. | 560-63 |
| 45. | 391 | கல்லாடனார் | பொறையாறு - குறும்பூர் - திருவிடைக்கழி (.R.No.267 of 1925) பிடாகையா (A.R.No.234 of 1925) வடமொழி வேதாந்தக் கல்லூரி நிறுவப்பட்டது (A.R.No.276 of 1925). இத்தகைய வரலாற்றுத் | 564-570 |

| | | | | |
|---|---|---|---|---|
| | | | தகவல்களுடன் ஊர்ப்பெயராய்வினையும் புலப்படுத்துவதை அறியலாம். | |
| 46. | 392 | ஔவையார் | மைசூர் – கங்கநாடு (Mysore Gazetteer Vol.I.P.3,4 ) நிகாலி சோழ மண்டலம் (Bom. Gazetteer Vol.II.P.495) அதியமான் சேரர் குடியினர் (M.EP.R. for 906 para.34) அரங்கநாதர் கோயில் கல்வெட்டுகளின்வழி (A.R.No.7 of 1906) ஊர்ப்பெயராய்வு – அதியமான்குடி வரலாறு பற்றிய தெளிவை ஏற்படுத்துகிறது. | 578-579 |
| 47. | 394 | மாடலன் மதுரை குமரனார் | புதுக்கோட்டை கல்வெட்டு (P.S.Ins.285) கோனாட்டுப் பரப்பை இருபத்து நாற்காத வட்டகை இரட்டபாடி கோனாடு (P.S.Ins.129) கோனா (P.S.Ins.86) சோழ வளநாடு (P.S.Ins.167) கோனாடு வடகோனாடு (P.S.Ins.286) தென்கோனாடு (P.S.Ins.221) கீழ்கோனாடு (P.S.Ins.728) இளங்கோனா. மறச்சக்ரவர்த்திக்கு விளைநிலம் காணியாகக் | 585-590 |

| | | | | |
|---|---|---|---|---|
| | | | கொடுத்தல் (P.S.Ins.278) இருப்பைக் குடி கிழான் – சிறப்பு பெற்றது. (A.R.No.334 of 1929-30) (A.R. for 7p.73-4) கோனாடு பல பெயராய்வு வரலாற்றைத் தருகிறது. கோனாடு என்ற ஊர் இறையிலியாக வழங்கப்பட்டதையும் இக்கல்வெட்டின்வழி அறியமுடிகிறது. | |
| 48. | 395 | மதுரை நக்கீரர் | பிடவூர் (A.R.No.68 of 1923) பிடவூர் நாட்டுப் பிடவூர் (A.R.No.139 of 1930-31) பிடவூர் நாட்டுப் பிடவூர்வேள் (A.R.No.139 of 1930-31) பிடவூர், பிடவூர் வேள் என்றும் பெயர், ஊர்ப்பெயராய்வினை உணர்த்துவதை அறியமுடிகிறது. | 590 |
| 49. | 396 | மாங்குடி கிழார் | வட்டாறு (A.R.No.139 of 1930-31) கல்குளம் என்றும் பறளியாறு-திருவட்டாறு (K.P.P.menon’s Hist.of Kerala P.Vol.II.gi.59) என்றும் ஊர்ப்பெயராய்வினை இக்கல்வெட்டு உணர்த்துகிறது. | 598 |

| | | | | |
|---|---|---|---|---|
| 50. | 397 | தாயங் கண்ணனார் | திருக்கடவூர்க் கல்வெட்டு (A.R.No.139 of 1930-31) எருக்காட்டூர் சேரிக்குப் பீடாகை என்ற ஊர்ப்பெயர் இருப்பதை இக்கல்வெட்டு உணர்த்துகிறது. | 604 |
| 51. | 398 | திருத்தாமனார் | வஞ்சனது நாடு – பாயல் நாடு – வயனநாடு, இப்பொழுது வைநாடு – மருவி வருதல் (Introduction of B.L.Rice of Coorg Inscriptions Vol.I.p3) ஊர்ப்பெயர் மருவுதல் பற்றி நிகழ்தல் குடகுநாட்டுக் கல்வெட்டின்வழி (Coorg:Ins.Vol.I.co.10) அறியமுடிகிறது. | 610 |
| 52. | | | பாயல்நாடு, வயனாடு, நீலகிரி எனவும் (Malabar Series. Whynad.p.5) அஞ்சன் - அஞ்சனகிரி - நீலகிரி எனவும் ஊர்ப்பெயர் மருவுதலை அறியமுடிகிறது. | 615 |

## முதன்மையாதாரம்:


- ❖ சோமசுந்தரனார், பொ.வே., 2009, ஐங்குறுநூறு, கழக வெளியீடு, சென்னை.
- ❖ துரைசாமிப்பிள்ளை, சு, ஔவை., அ., 2007, ஐங்குறுநூறு (புத்தகம்-1), தமிழ்மண் பதிப்பகம், சென்னை.
- ❖ ……….. 2007, ஐங்குறுநூறு (புத்தகம்-2), தமிழ்மண் பதிப்பகம், சென்னை.
- ❖ ............. 1958, சைவ இலக்கிய வரலாறு (கி.பி. 7-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி 10-ஆம் நூற்றாண்டு வரை), அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, சிதம்பரம்.
- ❖ ……….. 1971, புறநானூறு (1-200 பாட்டுக்கள்), கழக வெளியீடு, சென்னை.
- ❖ ……….. 1972, புறநானூறு (201-400 பாட்டுக்கள்), கழக வெளியீடு, சென்னை.
- ❖ ……….. 2007, பதிற்றுப்பத்து, கழக வெளியீடு, சென்னை.
- ❖ ……….. 2007, பதிற்றுப்பத்து மூலமும் உரையும், கழக வெளியீடு, சென்னை.
- ❖ ……….. 2010, நற்றிணை (பாகம்-1), பூம்புகார் பதிப்பகம், சென்னை.
- ❖ ……….. 2011, நற்றிணை (பாகம்-2), பூம்புகார் பதிப்பகம், சென்னை.
- ❖ பாலசுப்பிரமணியன், கு.வெ., 2007, புறநானூறு (புத்தகம்-1), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை.
- ❖ ……….. 2007, புறநானூறு (புத்தகம்-2), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை.
- ❖ ……….. 2007, நற்றிணை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை.
- ❖ ……….. 2007, பதிற்றுப்பத்து, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை.

பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், அ., 2007, நற்றிணை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

- ❖ புலியூர்க்கேசிகன், 2005, பதிற்றுப்பத்து, பாரிநிலையம், சென்னை.

## துணைமையாதாரம்:


- அரவிந்தன், மு.வை., 2008, உரையாசிரியர்கள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை.
- அருணாசலம், மு., 1981, இளம்பூரணர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.
- அறிவொளி, தி.நா., 1982, உரை வேந்தர் ஔவை, சென்னை.
- அன்னிதாமசு., 1999, இலக்கியவியல் கோட்பாடும் அணுகுமுறையும், அமுத நிலையம், சென்னை.
- ஆலிஸ், அ., கு.வெ.பா., 2007, பதிற்றுப்பத்து, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை.
- ஆளவந்தார், ஆர்., 1983, கல்வெட்டில் ஊர்ப்பெயர்கள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.
- இராசமாணிக்கனார், மா., 1966, இருபதாம் நூற்றாண்டில் தமிழ் உரைநடை வளர்ச்சி, பாரிநிலையம், சென்னை.
- ……….. 1979, இலக்கிய ஓவியங்கள், பாரி நிலையம், சென்னை.
- ……….. 2008, கல்வெட்டுக்களும் தமிழ்ச்சமூக வரலாறும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை.
- இராமமூர்த்தி, எல்., 2005, தமிழ் இலக்கியங்கள் கட்டவிழ்ப்பும் கட்டமைப்பும், காவ்யா, சென்னை.
- இராமலிங்கம், மா., 1978, புதிய உரைநடை, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை.
- இலட்சுமணன், சி., 2004, பேரா.மு.சண்முகம் பிள்ளையின் பதிப்புப் பணி, ஐந்திணைப் பதிப்பகம், சென்னை.
- இளங்குமரன், இரா., 1990, சுவடிப்பதிப்பு வரலாறு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.
- இன்னாசி, சூ., 1989, சதுரகராதி, மாதா பதிப்பகம், சென்னை.
- காந்திமதி லட்சுமி, ந., 1996, தொல்காப்பியர் இலக்கியக் கோட்பாடுகளும் ஐங்குறுநூறும், நீதா பதிப்பகம், தூத்துக்குடி.

❖ காமல், எஸ்.எம்., சேதுபதி மன்னர் சேப்பேடுகள்; 1992

❖ கிரி, பி.வி., 2003, உரைவேந்தருக்கு ஒரு நூற்றாண்டு, மணிவாசகர் பதிப்பகம், சென்னை.

❖ கிருஷ்ணமூர்த்தி, வெ., (தொ.ஆ), 1995, சோழர் கால உற்பத்தி முறை முதலிய கட்டுரைகள், ஆய்வு வட்ட வெளியீடு, சென்னை.

❖ கிருட்டிணமூர்த்தி, சா., சிவகாமி, ச., 2004, பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

❖ ……….. 2004, நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

❖ கிருட்டிணன், அ., 1991, கல்வெட்டில் வாழ்வியல், மணிவாசகர் நூலகம், சென்னை.

❖ குணசுந்தரி, கோ., 2008, சங்க இலக்கியம் காட்டும் ஊர்கள், சக்தி பதிப்பகம், சென்னை.

❖ குமரவேலன், இரா., 2010, இலக்கிய நுட்பம், மணிவாசகர் பதிப்பகம், சென்னை.

❖ ……….. 2012, உரை மாண்புகள், விழிகள் பதிப்பகம், சென்னை.

❖ குளோறியா சுந்தரமதி., 1984, உ.வே.சா சங்க இலக்கியப் பதிப்புகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

❖ கேசவன், கோ., 1984, இலக்கிய விமர்சனம் ஒரு மார்க்சியப் பார்வை, அன்னம் (பி) லிட், சிவகங்கை.

❖ கைலாசபதி, க., 2006, தமிழ் வீரநிலைக் கவிதை, குமரன் புத்தக இல்லம், சென்னை.

❖ ……….. 2009 (மு.ப-1999), ஒப்பியல் இலக்கியம், குமரன் பப்ளிஷர்ஸ், சென்னை.

❖ கோவிந்தனார், கா., 1993, தமிழக வரலாறு சங்க காலம்-அரசர்கள், எழிலகம், திருவத்திபுரம்.

❖ சக்திவேல், சு., 1985, நூறாண்டுத் தமிழ் உரைநடை, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம்.

❖ சண்முகம், செ.வை., 1975, சுவாமிநாதம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.

❖ ……….. தொல்காப்பியத் தொடரியல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

❖ சம்பந்தன், மா.சு., 1997, அச்சும் பதிப்பும், தமிழர் பதிப்பகம், சென்னை.

❖ சதீஷ், அ., 2008, சங்க இலக்கிய உரைகள், அடையாளம், திருச்சி.

❖ ……….. 2010, நூல் பதிப்பும் நுண் அரசியலும், புலம் வெளியீடு, சென்னை.

❖ சாம்பசிவனார், ச., 2007, உரைவேந்தர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, சாகித்திய அகாதெமி, புது தில்லி.

❖ சாமிநாதையர், உ.வே., 1980, பதிற்றுப்பத்து மூலமும் பழைய உரையும், டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை.

❖ சிதம்பரனார், சாமி., 2009, பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும், அறிவுப் பதிப்பகம், சென்னை.

❖ சிவகாமி, ச., 2009, தொல்காப்பியம் சங்கங்க இலக்கியம் பதிப்பும் பதிப்பாளரும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

❖ சிவத்தம்பி, கா., 1982, இலக்கியமும் கருத்து நிலையும், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை.

❖ ……….. 2008, தமிழில் இலக்கிய வரலாறு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை.

❖ சிவலிங்கராஜா, எஸ்., 2004, ஈழத்துத் தமிழ் உரைமரபு, குமரன் புத்தக இல்லம், சென்னை.

❖ சீனிவாசன், ரா., 1979, சங்க இலக்கியத்தில் உவமைகள், பாரிநிலையம், சென்னை.

❖ சீனிவாசன், ச., 2008, ஒப்பிலக்கியம் இனவரைவியல் சமூகம், காவ்யா, சென்னை.

❖ சுந்தரமூர்த்தி., 2005, பதிப்பியல் சிந்தனைகள், சேகர் பதிப்பகம், சென்னை.

❖ சுப்பிரமணியபிள்ளை, கா., 2007, இலக்கிய வரலாறு, காவ்யா, சென்னை.

❖ சுப்பிரமணியன், ச.வே., 1983, திராவிட மொழி இலக்கியங்கள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

❖ சுப்பிரமணியன், சி., 2008, சங்க இலக்கிய சில பார்வைகள், பாரி நிலையம், சென்னை.

❖ சுப்புராயலு, எ., காலச்சுவடு, நவம்பர், 2004.

❖ சுப்புரெட்டியார், ந., 1985, வைணவ உரைவளம், பாரி நிலையம், சென்னை.

❖ செல்வநாயகம், வி., 2000, உரைநடை வரலாறு, குமரன் புத்தக இல்லம், சென்னை.

❖ செல்வராசு, சிலம்பு.நா., 2002, சங்க இலக்கியமும் சமூகவியலும், மணிவாசகர் பதிப்பகம், சென்னை.

❖ தங்கராசு, மு., 2000, சங்க இலக்கியத்தில் நிலவியல், தமிழ் மலர், சென்னை.

❖ தசரதன், ஆ., 1983, இலக்கிய உரையாசிரியர்களின் தொடரியல் கோட்பாடு, International Printers & Publishers ESTEE Books International, மதுரை.

❖ தாமரைக்கண்ணன், ப., 2004, ஈழத்தமிழறிஞர் தாமோதரம்பிள்ளை, குமரன் பதிப்பகம், சென்னை.

❖ தமிழண்ணல்., 1977, ஒப்பிலக்கிய அறிமுகம், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.

❖ ……….. 1985, உரை விளக்கு, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.

❖ ……….. 2007, ஒப்பிலக்கியப் பார்வையில் சங்க இலக்கிய ஒளிச் சுடர்கள், மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம்.

❖ ……….. 1968, சிலப்பதிகாரச் சுருக்கம், கழக வெளியீடு, சென்னை.

❖ ……….. 1970, யசோதர காவியம், திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை.

❖ ……….. 1977, தமிழ்த் தாமரை, வள்ளுவர் பண்ணை, சென்னை.

❖ ……….. 1979, திருவருட்பா (1-200 செய்யுட்கள்), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.

❖ ……….. 1983, திருவருட்பா (இரண்டாம் தொகுதி), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.

❖ ……….. 1983, திருவருட்பா (முதல் தொகுதி), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.

❖ ……….. 1983, நந்தா விளக்கு, பத்மா பதிப்பகம், மதுரை.

❖ ……….. 1984, திருவருட்பா (மூன்றாம் தொகுதி), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.

❖ ……….. 1985, திருவருட்பா (ஐந்தாம் தொகுதி), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.

❖ ……….. 1985, சிவஞான போதம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.

❖ ……….. 1985, மணிமேகலை, கழக வெளியீடு, சென்னை.

❖ ……….. 2008, சேர மன்னர் வரலாறு, நாம் தமிழர் பதிப்பகம், சென்னை.

❖ ……….. 2009, வரலாற்றுக் காட்சிகள், நாம் தமிழர் பதிப்பகம், சென்னை.

❖ ……….. தமிழ்ச் செல்வம், வள்ளுவர் பண்ணை, சென்னை.

❖ ……….. மதுரைக் குமரனார், கழக வெளியீடு, சென்னை.

❖ ……….. புறநானூற்றுச் சொற்பொழிவுகள், கழக வெளியீடு, சென்னை.

❖ திருவாசகன், அ., சுரதா கல்லாடன் (பாரதிதாசன் புகழ் மலர்கள்; ப. 110 (பாரதிதாசன் கவிதைகள்; பூம்புகார் வெளியீடு 1913, 1993)).

❖ நடராசன், தி.சு., 1990, திறனாய்வுக் கொள்கைகள், அன்னம் (பி) லிட், சிவகங்கை.

❖ நெடுஞ்செழியன், இரா., 1982, நற்றிணைக் காட்சிகள், பாரிநிலையம், சென்னை.

❖ நெடுஞ்செழியன், க., 1996, உலகத் தோற்றமும் தமிழர் கோட்பாடும், மனிதம் பதிப்பகம், திருச்சிராப்பள்ளி.

❖ பக்தவத்சலம், கெ., 2003, ஔவை சு.துரைசாமிப்பிள்ளை நூற்றாண்டு மலர், ஒய்.எம்.சி.ஏ பட்டிமன்றம், சென்னை.

❖ பஞ்சாங்கம், க., 1990, தமிழிலக்கியத் திறனாய்வு வரலாறு, செல்வன் பதிப்பகம், புதுவை.

❖ ……….. 2007, தமிழ் இலக்கியத் திறனாய்வு வரலாறு, அன்னம், தஞ்சாவூர்.

❖ ……….. 2007, பெண் மொழி படைப்பு, காவ்யா, சென்னை.

❖ பட்டாபிராமன், து., 1986, புறத்திணை இலக்கணங்களின் திணை துறை, பிரியா பதிப்பகம், சிதம்பரம்.

❖ பரமசிவானந்தம், அ.மு., 1966, பத்தொன்பதாம் நூற்றாண்டின் தமிழ் உரைநடை வளர்ச்சி, தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் லமிடெட், சென்னை.

❖ பழனிவேலு, கே., 2010, சங்க இலக்கியம் பாட்டு மரபும் எழுத்து மரபும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை.

❖ பழநியப்பன், வெ., பழநி, உ., 1984, வரலாற்றுக்களஞ்சியம் (பகுதி-II), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.

❖ பாண்டுரங்கன், அ., 2008, தொகை இயல், தமிழரங்கம், புதுச்சேரி.

❖ பாலகிருட்டிணன், இர., 1958, சங்ககாலப் பாவலரும் காவலரும் (இரண்டாம் பகுதி), விக்டோரியா ப்ப்ளிஷிங் ஹவுஸ், மாயூரம்.

❖ ……….. 1958, சங்க காலப் பாவலரும் காவலரும் (இரண்டாம் தொகுதி), விக்டோரியா பப்ளிஷிங் ஹவுஸ், மாயூரம்.

❖ பாலசாரநாதன், சு., 1986, சங்க காலப் புலவர்கள், டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை.

❖ ……….. 2008, சங்க இலக்கிய ஆய்வுகளின் மதிப்பீடு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

❖ பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், அ., 2007, நற்றிணை, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

❖ பெருமாள் முருகன், 1966, பதிப்புகள் மறுபதிப்புகள், காலச்சுவடு பதிப்பகம், நாமக்கல்.

❖ மறைமலை, சி.இ., 1979, இலக்கியத் திறனாய்வு, நீலமலர் வெளியீட்டகம், சென்னை.

❖ மாதவன், இரா.வே., 2010, பதிப்புலகில் வையாபுரிப்பிள்ளை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

❖ ……….. 2010, திறனாய்வு நோக்கில் வேங்கடசாமி நாட்டார், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

❖ மாதையன், பெ., 2009, தமிழ்ச் செவ்வியல் படைப்புகள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை.

❖ முத்துராசன், கு., 1984, இலக்கிய வடிவங்கள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை.

❖ முத்துசாமிப்பிள்ளை, கோ.மு., 1988, தமிழ் உரைநடை வரலாறும் நெறிமுறைகளும், தஞ்சாவூர்.

❖ மோகன், இரா., சொக்கலிங்கம், ந., 1985, உரை மரபுகள், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம்.

❖ ராமன், கோ.மு., 1982, சுவடியியல் பயிற்சி கையேடு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

❖ ராஜ்கௌதமன்., 2006, பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், தமிழினி, சென்னை.

❖ வள்ளியம்மாள், ந., 1980, தமிழ் இலக்கியத்தில் அகப்பொருள் கொள்கைகள், மக்கள் வெளியீடு, சென்னை.

❖ விசாலாட்சி, ந., 1990, பழந்தமிழ்ப் பதிப்புகள், சரஸ்வதி பதிப்பகம், சென்னை.

❖ விநாயகமூர்த்தி, அ., 1994, பதிப்புச் சிந்தனைகள், பாலமுருகன் பதிப்பகம், மதுரை.

❖ வெங்கடேசன், க., 1996, வரலாற்று வரைவியல், ஜே.ஜே. பப்ளிகேஷன்ஸ், மதுரை.

❖ வேனிலா., 1988, ஔவை உரை நலம்- நற்றிணை (ஆய்வேடு), சென்னை.

❖ வேனிலா ஸ்டாலின்., 2003, உரைவேந்தர் புலமையில் நற்றிணை, சென்னை.

❖ வேலுப்பிள்ளை, ஆ., 1980, தமிழர் சமய வரலாறு, பாரி புத்தகப் பண்ணை, சென்னை.

❖ ……….. 2010, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், குமரன் புத்தக இல்லம், சென்னை.

- ❖ வையாபுரிப்பிள்ளை, எஸ்., 1989, தமிழின் மறுமலர்ச்சி (நூற்களஞ்சியம், தொகுதி-2), பாரிநிலையம், சென்னை.
- ❖ ஜகந்நாதன், கி.வா., 1988, தமிழ்த் தாத்தா, சாகித்திய அகாதெமி, புது தில்லி.
- ❖ வேலுப்பிள்ளை, ஆ., 2010, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், குமரன் புத்தக இல்லம், சென்னை.
- ❖ மதிவாணன், பா., 2006, சங்க இலக்கிய உரைகளும் கறைகளும், சென்னை.

**முனைவர் ப. தாமரைக்கண்ணன்,** எம்.எ., எம்.ஃபில், பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர்,
உயர்தமிழியல் ஆய்வு நிலையம்,
மாநிலக்கல்லூரி,
சென்னை – 600 005.

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

"**சங்க இலக்கிய உரை மரபினில் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை**"என்னும் தலைப்பில் திரு. செ. மார்கண்டன் அவர்கள் முனைவர் பட்டத்திற்காகச் செய்துள்ள இந்த ஆய்வு மாநிலக்கல்லூரித் தமிழ்த்துறையில் என்னுடைய மேற்பார்வையில் செய்யப்பெற்றது என்றும், இந்த ஆய்வின்மீது வேறு எந்தப்பட்டமும் ஆய்வாளர்க்கு வழங்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**மேற்பார்வையாளர்**

இடம் :

நாள் :

தமிழியல் ஆக்க மரபில் இலக்கண இலக்கியப் பதிவுகள் என்பவை தவிர்க்கமுடியாதவை. இவை இரண்டிற்குமான புரிதலை ஏற்படுத்தும் தொழிற்பாடே உரைமரபாகும். படைப்பாக்கப் பின்புலத்தில் எவ்வாறு இலக்கண இலக்கியங்களை முன்வைக்கிறோமோ அவ்வாறே இலக்கிய உரை வகைகளையும் அடையாளப்படுத்த வேண்டும். உரைகள் தனித்த இலக்கிய வகையாகப் பரிமாணம் பெற்று நீள்கின்றன. தற்காலச் சூழலில் இலக்கண வகைமைகள் குறைந்து உரைகளே பெரும் ஆதிக்கம் செலுத்தி வருவதைக் காணமுடிகிறது.

படைப்பிலக்கிய மூலப் பிரதிகளான இலக்கண இலக்கியங்களை ஆராய்வது எவ்வளவு சிறந்ததோ அதைப் போன்றதே அவற்றின் உரைகள் மீதான ஆய்வும் என்பது கவனிக்கத்தக்கதாகும். இதனடிப்படையிலேயே தமிழ் இலக்கிய வரலாற்றில் உரைகள் முதன்மைப்படுத்தப்படுவதை அறியலாம். தமிழ்மொழிப் பயிற்சிக்கும் இலக்கிய வளர்ச்சிக்கும் உரைகளின் பங்களிப்பு மிகவும் தேவைப்படும் ஒன்றாகும். தமிழ் இலக்கண இலக்கிய உரைகளில் இலக்கிய உரைகளை முன்னிறுத்தி இந்த ஆய்வு மேற்கொள்ளப் பெறுகிறது.

உரையாசிரியர்கள் இலக்கண இலக்கிய மூலங்களைச் சமகால நோக்கில் வாசிக்கும் முறையியலை உரைகளில் கையாண்டுள்ளனர். இலக்கிய அகச்சான்றுகள் மட்டுமே காலப்பின்னணி, புலவர், ஊர்ப் பெயர்கள் ஆகியவற்றைத் தீர்மானம் செய்வதில்லை. எனவே, அகச்சான்றுகளை வலுவூட்டப் புறச் சான்றுகள் தேவையாகின்றன. இப்பின்புலத்தின் அடிப்படையில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரைகள் வெளிப்படுத்தும் தொல்லியல் தரவுகளில் கல்வெட்டுச்சான்றுகளை மையமிட்டே இந்த ஆய்வு ஆராய முற்படுகிறது.

தொல்மரபின் வரலாற்றுப் பின்புலத்தை அறிய இலக்கிய, கல்வெட்டு, அகழ்வுச் சாசனச் சான்றுகள் துணைபுரிகின்றன. தமிழியல் ஆய்வுலகில் அகச்சான்றுகளான இலக்கியத் தரவுகளை உறுதிப்படுத்தப் புறச்சான்றுகளான தொல்லியல் தரவுகள் வரலாற்றைத் தீர்மானம் செய்கின்றன. மொழிவழி நமக்கான இருத்தலை நிலைநாட்ட அக, புறத் தரவுகள் இரண்டும் அடிப்படையாகின்றன. இல்லையேல் நவீன ஆய்வாளர்களால் இலக்கியச் சான்றுகள் வெறும் கற்பனையே என்று ஒதுக்கப்படக்கூடும். எனவே, புறச்சான்றுகளான கல்வெட்டுத் தரவின் மூலம் வரலாற்றினை மீளாய்வுக்கு உட்படுத்தும் முகமாகவே இந்த ஆய்வு வடிவமைக்கப்பட்டிருக்கிறது.

மூலப் பிரதி தோன்றிய காலம், அது தொகுக்கப்பட்ட காலம், பின்னாளில் உரை எழுந்த காலம் இவை மூன்றுக்குமான கால இடைவெளி வேறானது. ஒவ்வொரு உரையாளரும் தன் காலத்திற்கு ஏற்றவாறு மூலப் பிரதியைப் புரிந்துகொள்ள

முயன்றுள்ளனர். எக்காலத்திற்கும் பொருத்தம் உடையதாகவே மூலப் பனுவலைக் கொள்ளலாம். இன்னும் சொல்லப்படாத எத்தனையோ பொருண்மைகள் மூலத்தில் அடங்கியுள்ளன. மூலத்தின் பொருள் புலப்பாட்டையும், வரலாற்றுப் பின்புலத்தையும் கட்டமைக்க முயல்பவர்களே உரையாசிரியர்கள். இன்னும் பல ஆண்டுகள் கழித்தும் மூலங்களுக்கு உரை எழுத வேண்டிய தேவை இருந்துகொண்டுதான் இருக்கும். எக்காலத்திற்கும் பொருத்திப் பார்க்கும் வாய்ப்பு சங்கப் பனுவல்களில் காணக்கிடக்கின்றன. அவ்வகையில் பிற்கால உரையாசிரியர் மரபினில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை மரபினைப் புரிந்துகொள்ள முடிகிறது.

## ஆய்வுப்பொருள்

'**சங்க இலக்கிய உரை மரபினில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை**' என்பது இந்த ஆய்வேட்டின் ஆய்வுத் தலைப்பாகும். சங்க இலக்கியப் பனுவல்களான நற்றிணை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய நான்கு பனுவல்களில் அகநூல் இரண்டும், புறநூல் இரண்டும் என்ற அடிப்படையில், இவர் உரை பற்றியான இந்த ஆய்வு அமைக்கப்பட்டுள்ளது. இவ்வுரைகளின் வாயிலாக அக இலக்கியத் தன்மைகளைப் புரிந்துகொள்ளக் கல்வெட்டு, தொல்லியல் முதலான புறத் தரவுகள் துணைநிற்கின்றன. இப்பின்புலத்தில் ஊர்ப் பெயர்கள், புலவர் பெயர்கள் பற்றிய நம்பகத்தன்மை விவாத்ததுக்கு உட்படுத்தப்படுகிறது.

## ஆய்வு நோக்கம்

சமகாலத்தில் சங்க இலக்கிய உரை குறித்த ஆய்வுகள் பெரும்பாலும் சொற்பொருள் விளக்கம், உரைத்திறன் என்ற பொதுவான ஆய்வுப்போக்குகளில் அமைந்துள்ளன. உரைகளில் எடுத்தாளப்படும் மேற்கோள் அடிப்படையில் ஒரு சில ஆய்வுகளே நிகழ்ந்துள்ளன. அத்தகைய ஆய்வுகளும் பிற இலக்கியச் சான்றுகளை ஆராயும்முகமாகவே தென்படுகின்றன. உரைகளில் கல்வெட்டுத் தரவினைப் பயன்படுத்திய உரையாளர்கள் மிகச் சிலரே ஆவர். இதில் ஔவை சு. துரைசாமிப்பிள்ளையின் உரைகளில் கல்வெட்டுச் சான்றுகள் நிறைந்துள்ளன. இவர் உரைகளை ஆராய்ந்த சிலரும் உரைத்திறன், உரைநலம் என்ற அடிப்படையில் அணுகியுள்ளனர். இதுவரை யாரும் உரைகள் வெளிப்படுத்தும் கல்வெட்டுத் தரவினை மட்டும் தனியாக ஆராய்ந்ததாகத் தெரியவில்லை. இக்கருத்தின் அடிப்படையில், சரியான வரலாற்றுத் தெளிவை அடையும் முறையிலும், சங்கப் பெயர்களில் தெளிவு ஏற்படுத்தும் நோக்கமாகவே ஆராய முற்படுகிறது. சங்க இலக்கியப் பதிவுகள் புனைவுகள் மட்டுமல்ல உண்மையுமாகும் என்று உறுதிப்படுத்துவதே இந்த ஆய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு முன்முயற்சிகள்

ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரைகள் குறித்தான ஆய்வுகள் அதிகம் நிகழ்த்தப்படவில்லை. சங்க உரைகளைத் தனித்து ஆராயும் போக்கும் குறைந்தே காணப்படுகிறது. பார்வைக்குக் கிட்டிய வரையில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரைகள் பற்றிய ஆய்வுகள் சில இங்கு இனம் காணப்படுகின்றன. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை உரைத்திறன் குறித்த ஆய்வுக் கட்டுரைகளும், ஆய்வேடுகளும் இந்த ஆய்விற்கு முன்னோடி ஆய்வுகளாகத் திகழ்கின்றன. 'அவ்வை உரை நலம் - நற்றிணை' என்னும் வேனிலாவின் ஆய்வேடும், 'உரைவேந்தர் புலமையில் நற்றிணை' என்னும் வேனிலா ஸ்டாலின் நூலும், 'ஔவை சு. துரைசாமிப் பிள்ளையின் சங்க இலக்கிய உரைத் திறன்' என்னும் இரா. பாக்கியராஜின் ஆய்வேடும், 'உரை வேந்தர் ஔவை' என்னும் தி.நா. அறிவு ஒளியின் ஆய்வுக் கட்டுரை அடங்கிய நூலும், 'உரைவேந்தருக்கு ஒரு நூற்றாண்டு' என்னும் பி.வி. கிரியின் ஆய்வுக்கட்டுரை அடங்கிய நூலும், 'உரைவேந்தர் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை' என்னும் ச. சாம்பசிவனாரின் நூலும், 'ஔவை சு. துரைசாமி ப்பிள்ளை நூற்றாண்டு மலர்' என்னும் கெ. பக்தவத்சலம் உருவாக்கிய நூற்றாண்டு மலரும் இரா. குமரவேலனாரின் இலக்கிய நுட்பமும் பிற ஆய்வுக் கட்டுரைகளும் இந்த ஆய்விற்கு அடிப்படையாகவும் ஆய்வினை வளர்த்தெடுப்பதற்கு உறுதுணையாகவும் விளங்குகின்றன.

## ஆய்வு மூலங்கள்

இந்த ஆய்வின் முதன்மை ஆதாரங்களாகச் சங்க இலக்கியப் பனுவல்கள் நான்கனை இனங்காணலாம். நற்றிணை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய நான்கு உரைப்பனுவல்களே இந்த ஆய்வுக்குரிய முதன்மை ஆதாரங்களாகும். அகம், புறம் என்னும் முறையே இரண்டிரண்டு பனுவல்களை அடையாளம் காணலாம். மேலும், ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சங்க இலக்கிய உரைகள் தொடர்பாகவும், ஊர்ப் பெயர்கள், புலவர் பெயர்கள் என்னும் பெயராய்வுகள் தொடர்பாகவும் வெளிவந்துள்ள நூல்கள், ஆய்வுக்கட்டுரைகள், ஆய்வேடுகள், புலவர் பெயர் அகராதிகள், இதழ்கள், வாழ்வியற் கலைக்களஞ்சியம் முதலியவை இந்த ஆய்விற்குத் துணைமை ஆதாரங்களாகக் கொள்ளப்படுகின்றன.

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை செய்த பனுவல்களான நற்றிணைக்குப் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் உரையும், ஐங்குறுநூற்றுக்குப் பெருமழைப் புலவர் பொ.வே. சோமசுந்தரனார் உரையும், பதிற்றுப்பத்திற்குப் புலியூர்க் கேசிகன் உரையும்,

புறநானூற்றிற்குக் கு. வெ. பாலசுப்பிரமணியன் உரையும் ஆகிய இந்நால்வர் செய்துள்ள உரைகளும் ஒப்பாய்வுக்குப் பயன்படுத்தப்பட்டன.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியங்களில் நற்றிணை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய நான்கு நூல்களுக்கு ஔவை சு.துரைசாமிப்பிள்ளை எழுதிய உரைப்பனுவல்கள் இந்த ஆய்வின் எல்லைகளாகின்றன. இவற்றில், உரைகளின் தன்மைகளை ஆராயாமல், அதில் பயின்றுவந்துள்ள புலவர் பெயர்கள், ஊர்ப்பெயர்கள் குறித்தான பெயராய்வினை மட்டுமே தனது எல்லையாக வரையறுத்துக்கொண்டு இந்த ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது. நான்கு சங்கப் பனுவல்களின் உரைகள் வெளிப்படுத்தும் கல்வெட்டுச்சான்றுகளின் வாயிலாகச் சமூக வரலாறு உறுதி செய்யப்படுகிறது.

## ஆய்வு கருதுகோள்

சங்க இலக்கியப் பாடல் பொருள் விளக்கம் என்னும் உரை மரபுத் தன்மையில் இல்லாமல், பொருள் விக்கத்தின் அடிப்படையிலான ஊர்ப் பெயர், புலவர் பெயர் இவற்றிற்கான வரலாற்றுத் தொடர்ச்சியை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரைகள் எடுத்தியம்புகின்றன. கால மாற்றங்களுக்கு ஏற்ப, பெயர் முறைகளில் மாற்றம் நிகழ்ந்துள்ளது. ஆட்சி, மொழி மாற்றங்களைக் கருத்தில்கொண்டு உரைகள் நகர்ந்துள்ளதை அறியமுடிகிறது. பழங்காலப் பெயர்கள் சமகாலச் சூழலில் மருவி, முற்கால வரலாற்றின் எச்சங்களாக இருப்பதை அறியலாம். இத்தகைய பெயராய்வு வரலாற்றுடன் தொடர்புடையதாக இருக்கிறதா என்பதை ஆய்வதே இந்த ஆய்வின் கருதுகோளாகும்.

## ஆய்வு அணுகுமுறை

ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் ‘வாழ்வும் பணியும்’ என்ற இரண்டாம் இயலில் வரலாற்று அணுகுமுறை பின்பற்றப்பட்டுள்ளது. சங்க இலக்கிய உரைப்பதிப்பு மரபு என்ற மூன்றாம் இயலில் பதிப்பு தொடர்பான வரலாற்று அணுகுமுறையும், பகுப்பு, விளக்கவியல் அணுகுமுறையும் மேற்கொள்ளப்பட்டுள்ளது. நான்கு மற்றும் ஐந்தாம் இயல்கள் கல்வெட்டுத் தரவுகள் அடிப்படையில் வரலாற்று அணுகுமுறை, சமூகவியல் அணுகுமுறை மற்றும் மதிப்பீட்டு அணுகுமுறை ஆகிய அணுகுமுறைகளைப் பின்பற்றி ஆராயப்பட்டுள்ளன. ஆறாம் இயல் ஒப்பாய்வு அணுகுமுறையை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது.

## ஆய்வேட்டின் அமைப்பு

'**சங்க இலக்கிய உரை மரபினில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை**' குறித்து ஆராயும் இந்த ஆய்வேடு பின்வரும் ஏழு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

1. முன்னுரை
2. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் வாழ்வும் பணியும்
3. சங்க இலக்கிய உரைப்பதிப்பு மரபு
4. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரையில் பெயராய்வு - அகம்
5. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரையில் பெயராய்வு - புறம்
6. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையும் - பிற உரையாசிரியரும்: ஒப்பாய்வு
7. முடிவுரை

## இயல் ஒன்று: முன்னுரை

ஆய்வுப்பொருள் தெரிவு - ஆய்வு நோக்கம் - ஆய்வு முன் முயற்சிகள் - ஆய்வு மூலங்கள் - ஆய்வு எல்லை - கருதுகோள் - ஆய்வு அணுகுமுறை - ஆய்வேட்டின் அமைப்பு ஆகியன முன்னுரையில் எடுத்துரைக்கப்பெறுகின்றன.

## இயல் இரண்டு: ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் வாழ்வும் பணியும்

முதல் இயல், தனிமனித உரை ஆளுமை பற்றிய ஆய்வு என்பதால் வாழ்வும் பணியும் என்ற இயல் அவசியமாகிறது. இந்த இயலில் - வாழ்நிலை, பணி புரிந்த சூழல், உரை எழுத நேர்ந்த பின்புலம், உரைகளின் வாயிலாக எழுந்த மற்றப் படைப்பின் அடையாளங்கள் என அனைத்தும் தொகுக்கப்பட்டுள்ளன. இவ்வியல் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் வாழ்வியல், படைப்பு சார்ந்த பின்புலத்தை வெளிப்படுத்துகிறது.

## இயல் மூன்று: சங்க இலக்கிய உரைப்பதிப்பு மரபு

ஒரு பனுவலை ஆராயும் முன், அப்பனுவல் சார்ந்த பதிப்புப் பின்புலத்தை அறிதல் அவசியம். பதிப்பு சார்ந்த நுண் அரசியலைத் தெரிந்துகொண்டு, பனுவலை ஆய்தலே, அப்பனுவலின் உயிர்ப்புத் தன்மையை வெளிக்காட்டும். தொகுப்பு, உரை, பதிப்பு, இவற்றிற்கான புரிதலுடன் தொகுப்பாசிரியர், உரையாசிரியர், பதிப்பாசிரியர், பதிப்பகம் சார்ந்த நுண் அரசியல் முதலியவற்றை இவ்வியல் ஆராய்கிறது.

## இயல் நான்கு: ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரையில் பெயராய்வு - அகம்

சங்கப் பனுவல்களில் அகநூல்களான நற்றிணை, ஐங்குறுநூறு என்ற இரு தொகைநூல்களின் உரைத் தன்மைகள் ஆராயப்படுகின்றன. அகநூல் இலக்கிய உரைகளில் உள்ள ஊர்ப்பெயர்கள், புலவர்ப்பெயர்கள், வரலாறுகள், பண்பாட்டுப் பதிவுகள் ஆகியவை கல்வெட்டுச் சான்றுகள்வழி உறுதிசெய்யப்படுகின்றன. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சங்க இலக்கிய அகநூல்களின் உரையானது, வரலாற்றுப் புரிதலோடு ஒரு பனுவல் எவ்வாறு அணுகப்பட்டுள்ளது என்பதை அறிய உதவுகிறது. அக இலக்கியங்களில் 'சுட்டி யொருவர் பெயர்கொளப் பெறாஅர்' எனும் மரபு உண்டு. ஆயினும், ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, இலக்கிய நயத்தைவிட, பாடினோர் வரலாறு குறித்த ஆய்வில் புலவர் பெயரையும் பெயரடையாக உள்ள ஊர்ப்பெயரையும் கல்வெட்டுச் சான்றுகளின்வழி நிறுவும் தன்மை ஆய்வுக்கு உட்படுத்தப்பெற்றுள்ளது.

## இயல் ஐந்து: ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரையில் பெயராய்வு – புறம்

சங்கப் பனுவல்களில் புறநூல்களான பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய இரு பனுவல்களுக்கு ஔவை சு.துரைசாமிப்பிள்ளை எழுதிய உரையில் காணப்படும் கல்வெட்டுச் சான்றுகள், அவை வெளிப்படுத்தும் வரலாற்றுப் பின்புலங்கள் குறித்து இவ்வியல் ஆராய்கிறது. புறநூல் என்பதால் அகநூல் போல் அல்லாமல், இயல்பாகவே இலக்கியத்தினுள் பெயராய்வுகள் நிகழ்த்தப்பட்டுள்ளன. மேலும், ஊர்கள், பாடினோர், பாடப்பட்டோர் குறித்த பெயர்கள் கல்வெட்டுச் சான்றுகள் மூலம் ஆராயப்பட்டுள்ளன. இந்த ஆய்வானது புறம் என்பதன் அடையாளமான வீரம், போர் போன்ற வரலாற்று அடிப்படையிலான பண்பாட்டு தெளிவினை அடையக் கல்வெட்டுச் சான்றுகள் எவ்வாறு உதவுகின்றன என்பதை விளக்குகிறது. பெயராய்வின் மூலம் சமூக, பண்பாட்டு வரலாற்றைப் புரிந்துகொள்ள முடிகிறது.

## இயல் ஆறு: ஔவை சு.துரைசாமிப்பிள்ளையும் - பிற உரையாசிரியரும்: ஒப்பாய்வு

சங்க இலக்கியங்களுக்கு எழுந்த உரைகளில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை எழுதிய உரையும் அதே நூல்களுக்குப் பிற உரையாசிரியர் எழுதிய உரைகளையும் ஒப்புநோக்கி, இவ்வியல் ஆராய்கிறது. இதனால் பிற உரையாசிரியர்களிடமிருந்து அவர் எவ்வகையில் வேறுபடுகிறார் என்பதையும், அவரின் தனித்தன்மைகளையும் அறிமுடிகிறது.

## இயல் ஏழு: முடிவுரை

ஆய்வேட்டின் இறுதியாக அமையும் இப்பகுதியில், முன்னைய இயல்களில் ஆராய்ந்து கண்ட முடிவுகள் முடிவுரையாகக் கொடுக்கப்பட்டுள்ளது. மேலும், இந்த ஆய்வுப் பொருண்மையோடு தொடர்புடைய மேலாய்வுக் களங்கள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

ஆய்வேட்டிற்குள் பயன்படுத்தப்பெற்ற அடிக்குறிப்புக்களுக்கான, ஆசிரியர் பெயர், பதிப்பு வெளியான ஆண்டு, பக்க எண் ஆகிய அனைத்து விவரங்களும் அதன் அருகிலேயே கொடுக்கப்பட்டுள்ளன. ஆய்வேட்டின் இறுதியில் துணைநூற்பட்டியலும் உரிய பின்னிணைப்புகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

இலக்கியப் பனுவல்களை விளங்கிக் கொள்வதற்காக எழுதப்பெற்ற உரைகள் அவ்வக்காலக் கல்வி, சமூகப் பண்பாட்டு நிலைகளை வெளிப்படுத்துவனவாய் வழங்கிவருகின்றன. இவ்விலக்கிய உரையாசிரியர்கள் பலர், சமூக ஆய்வுத்தளத்தில் திறனாய்வாளர்களாக அறியப்பட்டனர். இவ்வகையில் சங்க இலக்கியங்களுக்குப் பல உரைகள் தோன்றி இருப்பினும், ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை தனித்தன்மை வாய்ந்தது. அவர்தம் உரைகள் சங்கப் பாடல்களுக்கு மேலும் உரமூட்டுவதாய் உள்ளன.

சங்க இலக்கியத்திற்கு உரை எழுதும் மரபு இன்றளவும் தொடர்ந்து வருகிறது. சங்க காலம் தொடங்கிச் சமகாலம் வரை, சங்கப்பாக்களின் பொருள்நிலை விரிந்த வண்ணம் இருக்கிறது. எதிர்வரும் காலத்தையும் சங்கப்பாக்கள் நிரப்பிக்கொள்ளும் என்பதில் ஐயம் இல்லை. எக்காலத்திற்கும் நிறைந்த பொருள்வளம் கொண்டது சங்கப்பாக்கள் என்பது அறிஞர்கள் கண்ட உண்மையாகும்.

சங்க இலக்கியம் பற்றிய ஆய்வுகள் வெளிவரத்தொடங்கி ஒரு நூற்றாண்டுக்காலம் சென்றுவிட்டது. இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் உருவான சமூக, அரசியல் இயக்கங்கள் தங்களுக்கான வரலாற்றைக் கட்டமைப்பதற்குப் பல்வேறுபட்ட வழிகளில் முயன்றுவந்தன. அத்தகைய காலகட்டத்தில் உ.வே. சாமிநாதையர், சி.வை. தாமோதரம்பிள்ளை முதலானோர் ஓலைச் சுவடிகளில் இருந்து சங்க இலக்கியங்களை அச்சில் கொண்டுவரும் பணியில் ஈடுபட்டனர். இதன் காரணமாக, சங்க இலக்கியங்கள் பல்வேறு நிலைகளில் வாசிக்கப்பட்டன. அதேபோன்று உரையாசிரியர்களும் தங்கள் ஆளுமையை வெளிக்காட்டச் சிறந்த களமாகச் சங்கப் பனுவல்களைத் தேர்ந்தெடுத்தனர். சங்கப் பாக்களின் உரைகளின் வாயிலாக உரையாசிரியர்கள் தங்கள் புலமையை நிலைநாட்டினர்.

வரலாறு என்பது ஏதோ வாழ்ந்ததைக் கூறுவது மட்டும் அல்ல. எதிர்கால வரலாற்றையும் தீர்மானிப்பது. ஓர் இலக்கியப் பனுவல் பல நூற்றாண்டுகளாக வாசிக்கப்பட்டு, பேசப்பட்டு, உரையெழுதப்பட்டு, ஆய்வு செய்யப்பட்டு வருகிறது என்றால் அதனுள் அந்தச் சமூகத்தின் இருப்பு அடங்கியுள்ளது என்பது தெளிவாகிறது. அந்த வகையில் சங்க இலக்கிய ஆய்வுகளை நோக்கும்பொழுது அப்பனுவல்கள் காலத்தை வென்று வீரியத்துடன் விளங்குகின்றன என்பதை அறியமுடிகிறது.

இந்த ஆய்வு "சங்க இலக்கிய உரைமரபினில் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை" என்பதாக அமைகிறது. உரைமரபினில் ஔவை துரைசாமி அவர்களின் ஆளுமை பற்றிய ஆய்வை மேற்கொள்வதால் இவரின் வாழ்வும் பணியும் சார்ந்த பின்புலத்தை

அறியவேண்டியது அவசியம். இதன் அடிப்படையில், முதல் இயல் வாழ்வும் பணியும் என்ற கருத்தியலை முன்வைக்கிறது.

## ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் பிறப்பு

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை சைவக் குடும்பத்தில் பிறந்ததால், இயல்பிலேயே தமிழ்ப்பற்று கொண்டு விளங்கியவர். “தொண்டை நாடு சான்றோர் உடைத்து” என்பது பழமொழி. தொண்டைநாடு புலவர் பலரை உருவாக்கிய பெருமைக்குரியது. சைவச் சமயக் குரவர்களாகிய அப்பரையும் சுந்தரரையும் வடலூர் வள்ளலாரையும் வைணவ ஆழ்வார்கள் முதல் மூவரையும் திருமழிசை ஆழ்வாரையும் தமிழகத்திற்குத் தந்த சான்றாண்மையைக் கொண்டது தொண்டைநாடு.

திண்டிவனம் எனும் பகுதி முற்காலத்தே ஓய்மாநாடு என வழங்கப்பெற்றது. ஓவியக் குடியில் தோன்றிய மன்னர் பலர் கிடங்கில் என்னும் ஊரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தனர். கிடங்கில் தற்போதைய விழுப்புரம் மாவட்டத்தைச் சார்ந்த திண்டிவனமாகும். அதற்கு அண்மையில் அமைந்திருப்பது ‘ஔவையார் குப்பம்’ எனும் சிற்றூர். அவ்வூரில் கருணீகர் (ஊர்க்கணக்கர்) மரபில் தோன்றியவர் சுந்தரம்பிள்ளை.

‘சுந்தரம்பிள்ளை, சந்திரமதி அம்மையாரின் நான்காவது மகனாக 05.09.1903-இல் அறிஞர் ஔவை துரைசாமி பிறந்தார்’. (கெ. பக்தவத்சலம்; ஔவை துரைசாமி நூற்றாண்டு மலர்; 2003; ப.3).

சுந்தரம்பிள்ளையின் மக்கள் முறையே மயிலாசலம், முத்துக்குமாரசாமி, சுப்பிரமணியம், பூமாதேவி, துரைசாமி என்னும் பெயரினர். பூமாதேவியும் துரைசாமியும் இரட்டைப் பிள்ளைகள். பெண் குழந்தை பூமாதேவி இளமையிலேயே இயற்கை எய்திவிட்டார்.

## ஔவையார் குப்பம்: பெயர்க்காரணம்

தமிழியல் ஆய்வுலகில் சிலர் மட்டும்தான் காலத்தை வென்று நிலை பெற்று நிற்கின்றனர். இவ்வகையில் ஔவை சு. துரைசாமிப் பிள்ளையை இனம்காண முடிகிறது. உரைகளின் வாயிலாகத் தமிழியல் ஆய்வுலகில் நிலைபெற்று நின்ற அறிஞர் பெருந்தகை பிறந்த ஊரின் பெயரால் அடையாளப்படுத்தப்படுகிறார். “ஒரு முறை தமிழ் மூதாட்டி ஔவையார் மாநாகன் பந்தன் என்ற வளமிக்க வணிகனைக் காண நேர்ந்தபொழுது அவர் கொடை நலமும் செல்வம் கொழிக்கும் குடி நலமும் கண்டு வியந்தார். அவர்மீது ‘பந்தன் அந்தாதி’ என்னும் பனுவலைப் பாடிப் பரிசு பெற்றார். பந்தன் ஔவையாருக்குப் பொற்பாடம் ஒன்றினைப் பரிசாகத் தந்ததோடு பந்தமங்கலத்திற்கு அருகில் உள்ள ஊர் ஒன்றினையும் ஔவையாருக்கு வழங்கி மகிழ்ந்தான். அந்த நாள் முதல் அச்சிற்றூர்

ஔவையார் குப்பம் என்று வழங்கலாயிற்று என்று பக்தவத்சலம் பதிவு செய்துள்ளார். (கெ. பக்தவத்சலம்; 2003; ப.3)

## ஔவை சு.துரைசாமிப்பிள்ளை– பெயர்க்காரணம்

திண்டிவனம் கிறித்தவப்பள்ளியில் ஔவையார் குப்பத்திலிருந்து துரைசாமி என்ற பெயரில் இருவர் ஒரே வகுப்பில் பள்ளிக்குச் சென்று பயின்றனர். பள்ளித் தலைமை ஆசிரியர் ஒரே பெயருடைய அவ்விருவருக்குமிடையே பெயர்வேறுபாட்டினைக் காண்பிக்க, இவர் பெயரை ஔவை துரைசாமி என்று வருகைப் பதிவேட்டில் பெயர்மாற்றம் செய்து அவ்வாறே கையெழுத்திடவும் செய்துள்ளதை அறியமுடிகிறது. ஊர்ப்பெயர், துரைசாமிப்பிள்ளைக்குப் பின்னாளில் பொருத்தமான அடைமொழியாக நிலைபெற்றுவிட்டது.

## கல்விப் பின்புலம்

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தனது தொடக்கக் கல்வியை ஔவையார் குப்பத்தில் முடித்தார். திண்டிவனத்தில் இருந்த அமெரிக்க ஆற்காடு நற்பணி உயர்நிலைப் பள்ளியில் இறுதி வகுப்பு பயின்றார். இடைநிலைக் கல்வியை வேலூர் ஊரிசுக் கல்லூரியில் முடித்தார். முதலில் மக்கள் நலவாழ்வு ஆய்வாளர் (Sanitary Inspector) பணியில் அமர்ந்தார். ஆனால், இவரது வருமை நிலை அவரை அப்பணியில் நீடிக்க விடவில்லை. பல ஆண்டுகள் கழித்து 1930-இல் சென்னைப் பல்கலைக்கழகத்தில் வித்வான் தேர்வு எழுதி வெற்றிபெற்றார். தமிழ் கற்றுத் தமிழ் அறிஞராக உயர்ந்தார்.

ஔவை சு.துரைசாமிப்பிள்ளைக்கு இலக்கண இலக்கியங்களைக் கற்றுக்கொடுத்தவர்கள் கரந்தைக் கவியரசு, நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் முதலாயினோர். பின்னர், க. வெள்ளைவாரணர், தி.வை. சதாசிவ பண்டாரத்தார் ஆகியோரின் தொடர்பினால் கல்வெட்டு, இலக்கியம், வரலாறு முதலானவற்றைக் கற்றுத்தேர்ந்தார்.

## தமிழ் இலக்கியப் பணி

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை மாணவராக இருந்த காலத்தில் கம்பராமாயணச் சொற்பொழிவு நிகழ்த்தி மக்களின் நன்மதிப்பைப் பெற்றார். மறைமலை அடிகளார், திரு.வி.க. முதலானோரை அழைத்துச் சொற்பொழிவு ஆற்றச்செய்வார். அவரே பல இடங்களுக்குச் சென்று சைவத்தையும் தமிழையும் பரப்பி வந்துள்ளார்.

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை ஆழ்ந்த புலமையின் காரணமாகப் பல நூல்களுக்கு உரை எழுதத் தொடங்கினார். பள்ளி ஆசிரியராகவும், பேராசிரியராகவும் இருந்த தருணத்தில் எழும் வினாக்களுக்கு விடை தேட முற்பட்டார். இவ்வகையான

தேடல்கள் உரை விளக்கமாக உருப்பெற்றன. இவர் எழுதிய உரைகள் பல வரலாற்று தகவல்களைத் தாங்கி நின்றன. அவ்வகையில் சங்க இலக்கிய நூல்களான நற்றிணை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய நூல்களுக்கு அவர் எழுதிய உரையினைக் குறிப்பிடலாம். முதுமைக் காலத்தில் திருவருட்பாவிற்கும் உரை எழுதியுள்ளார்.

மணிமேகலைக் காப்பியத்திற்குப் புத்துரை எழுதும் பணியில் ஈடுபட்டுக் கொண்டிருந்த நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் திடீரென்று இயற்கை எய்தினார். அதனால் 'கரந்தைக் கவியரசு' வேங்கடாசலம் பிள்ளையின் விருப்பத்திற்கிணங்க, மணிமேகலைக் காப்பியத்தின் இறுதி நான்கு காதைகளுக்கும் ஔவை துரைசாமி அவர்கள் விளக்கவுரை எழுதியுள்ளதை அறிய முடிகின்றது.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பணிபுரியும்போது சைவ சமய இலக்கிய வரலாறு, ஞானாமிர்தம் என்னும் சமய நூலுக்கு உரைவிளக்கம் எழுதினார். அந்நூல்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தால் வெளியிடப்பட்டன.

வடமொழி, ஆங்கிலம் ஆகியவற்றில் புலமை பெற்றிருந்த ஔவை சு.துரைசாமிப்பிள்ள, 'மகேந்திர வர்மனின் மத்தவிலாசப் பிரகசனம்' என்னும் அங்கத நாடகத்தைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். அந்நாடகம் அண்ணாமலைப் பல்கலைக்கழக மலரில் வெளியிடப்பட்டுள்ளது. மேலும், ஆங்கிலத்தில் திருவள்ளுவர் பற்றிய ஆராய்ச்சி நூல் ஒன்றனையும் வெளியிட்டுள்ளதை அறியமுடிகிறது.

இலக்கியத் தமிழ் ஏடுகளான செந்தமிழ்ச்செல்வி, தமிழ்ப் பொழில், தமிழணங்கு, தமிழ்க்கலை முதலானவற்றில் கட்டுரைகளை எழுதியுள்ளார். சித்தாந்தம், குமரகுருபரன் முதலான சமய ஏடுகளிலும் இவருடைய கட்டுரைகள் வெளியாகியுள்ளன.

## பணிகள்

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தமிழ் ஆசிரியராக, பேராசிரியராக, உயர்நிலைப் பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகம் எனப் பல நிலைகளில் பணிபுரிந்து நூற்றுக்குகணக்காக மாணவர்களை உருவாக்கினார். கல்வெட்டு, ஓலைச்சுவடி, செப்பேடுகளை ஆராய்தல், தமிழ் இலக்கணம், இலக்கியம், வரலாறு, சைவ சித்தாந்தம் உள்ளிட்ட துறைகளில் புலமைத் திறத்தோடு செயல்பட்டுள்ளார்.

"காவிரிப்பாக்கம், காரை, திருவத்திபுரம் (செய்யாறு), போளூர், செங்கம் உள்ளிட்ட ஊர்களில் பணிபுரிந்துள்ளார். தமிழ் நலம் காக்க, இந்தித் திணிப்பை எதிர்ந்து நம் நாடு உரிமை பெறாத காலத்திலேயே போராட்டங்களில் ஈடுபட்டதனால் அக்கால ஆட்சியாளர்களால் உரை வேந்தர் அடிக்கடி பணிமாற்றம் செய்யப்பட்டுள்ளார் என்று

அறிய முடிகிறது” (மு. இளங்கோவன், உரைவேந்தர் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, http://muelangovan.blogspot.in).

1925-28 - கரந்தையில் ஆசிரியப்பணி.

1939 - போளூர் உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழ் ஆசிரியர்.

1941 - செங்கம் உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியர்.

1942 - திருப்பதி திருவேங்கடவன் கீழ்த்திசைக் கல்லூரியில் விரிவுரையாளர்.

1943 - சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் ஆராய்ச்சி விரிவுரையாளர்.

1951 - மதுரை தியாகராசர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியர்.

1964 – ஓய்வு. (ஓய்வு பெற்ற பிறகும் 1968-ஆம் ஆண்டு வரை பல்கலைக்கழக ஆராய்ச்சிப் பணியில் ஈடுபட்டிருந்தார்)

## தனிப்பண்பு

ஒரு நூலை எடுத்துக்கொண்டால், முழுதும் பலமுறை படித்து ஆராய்ந்த பிறகே உரை எழுதத் தொடங்குவார். பிறர் கடுமையானவை என்று கருதிக் கைவிடும் நூல்களைக் கைக்கொண்டு பொறுமையாகப் பலநாள் பயின்று உணரும் பண்புடையவர். சிலரைப் போலப் பழைய நூல்களையும் உரைகளையும் பழித்து ஒதுக்குதலும் புதுமை மோகத்தால் மரபோடு மாறுபட்ட பொருந்தாத புதுக்கருத்துக்களைத் தவிர்க்கும் பண்பும் அவரிடம் இல்லை எனலாம். அவ்வாறே புதுமைக்கு இடம் கொடாமல் பழமையையே பற்றி நிற்கும் தன்மையும் அவரிடம் இல்லை. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, பண்டைய உரையாசிரியர்களின் கருத்துகளோடும் உரைகளோடும் மாறுபட்டுப் புதுக்கருத்துக்களையும் உண்மைகளையும் கூறத் தயங்காதவர் என்பதை அவர் உரைவழி அறியமுடிகிறது.

## பன்முகப் பணி ஆளுமை

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை பள்ளியில் ஆசிரியப் பணியைச் செவ்வனே செய்துவந்துள்ளார். ஆசிரியப் பணியில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை இலக்கியங்களுக்கு நுட்பமாக உரை விளக்கம் கூறினார். அதன்விளைவாக, அவருக்கெனத் தனி நெறி ஒன்றை வகுத்து இலக்கியங்களுக்கு உரை எழுத முற்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

ஆசிரியப் பணி என்பது பல ஆசிரியர்களை உருவாக்கும் உன்னதப் பணியாகும். ஆசிரியர் பலர் பாடம் நடத்துவதோடு மட்டும் தன் பணி முடிந்துவிடுகிறது என்று

எண்ணுகிறார்கள். ஆனால், ஔவை சு.துரைசாமிப்பிள்ளை பள்ளியில் பாடம் நடத்தும்பொழுது எழும் வினாவிற்கு விடை காண முற்படுவார். ஆய்வுக்கட்டுரை நூல்கள் சிலவற்றை எழுதியுள்ளார். ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தன் முழுத்திறனையும் உரை எழுதும் பணியிலேயே செலவிட்டார்.

## பாடம் கற்பிக்கும் முறை

தமிழ் இலக்கியங்களை நடத்தும்பொழுது ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு முறையைப் பின்பற்றியுள்ளார். கற்பிப்பதில், சொற்களுக்கான பொருள் உணர்த்துவதையும் கருத்துக்களை மாணவர்கள் மனதில் பதிய வைப்பதையும் நோக்கமாகக் கொண்டிருந்த ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; அனைத்துப் புலங்களிலும் ஈடுபாட்டுடன் செயல்பட்டமை குறிப்பிடத்தக்கது.

## இலக்கணம் நடத்தும் முறை

இலக்கணப் பாடம் என்றால் அஞ்சி விலகுவது இன்றளவிலும் நிகழ்ந்து வருகிறது. ஆனால், ஔவை சு.துரைசாமிப்பிள்ளை இலக்கணத்தைத் தெளிவாகக் கற்பிக்கும் முறை மாணவர்களுக்கு இலக்கணத்தின் மீது ஈர்ப்பை ஏற்படுத்தியது. இதனால், ஔவை சு.துரைசாமிப்பிள்ளையிடம் பயின்ற மாணவர்கள் பிற பாடங்களைவிட இலக்கணப் பாடங்களை விரும்பி கேட்டிருப்பதை பி.வி. கிரியின் கூற்றின் வாயிலாக அறியமுடிகிறது.

## கற்பிக்கத் தொடங்கும் முன்

வகுப்பறையில் பாடம் தொடங்கும் முன்பு ஒவ்வொருவரும் ஒருவகையான நம்பிக்கை முறையைப் பின்பற்றுவது வழக்கமாக இருந்துள்ளது. சிலர், நாட்டுப்பற்றுடைய பாடல்களைப் பாடுவதும், இறைவணக்கம் சொல்லும் பாடலைப் பாடுவதும் என்ற நம்பிக்கை முறையைப் பின்பற்றி வந்திருப்பதை அறியலாம். ஆனால், ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் தமிழ்ப்பற்று வேறு வகையாக இருந்துள்ளது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையிடம் பாடம் பயின்ற மாணவர்கள் ஒவ்வொரு நாளும் பாடம் தொடங்கும் முன் தொல்காப்பியர், திருவள்ளுவர் முதலிய படைப்பாளிகளுக்கும் பரிமேலழகர், நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியர்களுக்கும் பாடல்களோடு வணக்கம் கூறியபின்பு, தமிழ்ப்பாடம் தொடங்கும் மரபை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை பின்பற்றி வந்துள்ளார் என்பதை பி.வி. கிரியின் கூற்றின் வாயிலாக அறியமுடிகிறது.

## நூலினை அணுகும் முறை

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை முதலில் தான் எடுத்துக்கொண்ட நூல் எந்த வகையைச் சார்ந்தது என்பதை எடுத்துக்காட்டி, நூலை அணுகும் விதம், பயிலும் விதம், பொருள் காணும் விதம், ஆய்வு அடைவு, நயம் காணும் திறன் ஆகியவற்றை விளக்க முற்படுகிறார். பாடல் பயிலும் இடத்தைச் சுட்டி, பாடலின் திரண்ட கருத்தைத் தொகுத்துக்கூறி, அருஞ்சொற்கள், எனத் தொடர்களுக்குப் பொருள் விளக்கம் செய்வார். மேலும், அரிய இலக்கண அமைதிகள் வரலாற்றுச் செய்திகள், புராணக் கதைகள் ஆகியவற்றைச் சுருங்கச்சொல்லி விளங்க வைப்பார் என்பது தி.நா. அறிவொளியின் கூற்றின் வாயிலாக அறியமுடிகிறது.

## உரை எழுதத் தூண்டிய நிலை

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை படைப்பிலக்கியத்தை விட உரைகள் மீது அதிக நாட்டம் கொண்டள்ளதை அறியலாம். உரைகளின் வாயிலாகத் தமிழ் இலக்கியங்களை மீட்டுருவாக்கம் செய்ய முனைந்துள்ளார். இதனை, வேனிலா அறிவொளியின் கூற்றாகப் பதிவு செய்துள்ளார். அம்முறையே, “இளம் வயதினராக இருந்தபோது ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, டாக்டர் உ.வே.சா. அவர்களைச் சந்திக்க வேண்டியிருந்தது. அப்பொழுது, அவர்தம் ஆற்றலை அறிந்த உ.வே.சா. ‘நீங்களும் ஏட்டில் உள்ள பழைய நூல்களைக் கண்டு ஆராய்ச்சி செய்யலாம்; உங்களிடம் உரிய தகுதி உள்ளது’ என்று பாராட்டினார்” (வேனிலா ஸ்டாலின்; 2003, ப.27). இவ்வகையான பாராட்டு ஔவை சு.துரைசாமிப்பிள்ளைக்குப் பெரும் ஊக்கத்தைத் தந்ததுள்ளது.

## ஔவை சு. துரைசாமிப் பிள்ளையின் படைப்பாக்கப் பின்புலம்

படைப்பிலக்கியம் படைப்பவர் மட்டும் சிறந்த அறிஞர் என்று நோக்குவது அபத்தமாகும். சமீபக் காலங்களில் படைப்பிலக்கியப் போக்கு என்பது வேறு நிலைப்பாட்டை எட்டி நிற்கிறது. தரமான கருத்துக்களைச் சமூகத்திற்கு விதைப்பதுதான் படைப்பிலக்கியம் என்ற போக்கு மாறி, தனக்கு தோன்றுவதை எல்லாம் பதிவாக்கும் பண்பற்ற எதிர் நிலைப்பாட்டைக் காணமுடிகிறது.

அவ்வகையில், படைப்பு இலக்கியத்தை உருவாக்கும் ஒருவரைப் படைப்பாளர் என்பது மரபாகும். இதன் அடிப்படையில் இவர் படைப்பாளராக இல்லாமல் நூலாசிரியராக இருந்துள்ளார் என்பது எல்லோரும் அறிந்த ஒன்று. பழமையான நூல்களுக்கு உரை எழுதுவதைத் தன் வாழ்நாள் பணியாகச் செய்தார். பல நூல் சான்றுகளை உரைகளில் கொடுக்கும் திறன் கொண்டவர். இருப்பினும் ஏன் படைப்பிலக்கியத்தின் மீது கவனம் செலுத்தவில்லை என்ற வினா எழுவதைத் தவிர்க்க

முடியவில்லை. அதேபோல், படைப்பிலக்கியங்களை அதிகம் படைக்காமல் போனது ஏன் என்பதும், படைப்பிலக்கியங்களில் நல்ல கருத்துக்களைச் சொல்ல முடியாதா என்ற வினாவும் எழுகிறது.

- உரைகள் எழுதுவதிலேயே அதிகக் கவனம் செலுத்தியதால் படைப்பிலக்கியத்தில் கவனம் செலுத்த முடியாமல் இருந்திருக்கலாம்.
- படைப்பிலக்கியங்களில் சொல்வதைத் தவிர்த்துப் பழைய இலக்கியங்களின் வாயிலாக நல்ல தகவல்களை உரைகளில் சொல்வது சாலச் சிறந்தது என்று கருதியிருக்கலாம்.
- பழமை மோகத்தால் புதுமையைத் தவிர்ப்பவர் சிலர். புதுமை மோகத்தால் பழமையைத் தவிர்ப்பவர் சிலர். இவ்வகையான முரண்பாடு நிறைந்த வாசகர்கள் அனைவரையும் பழைய மூலத்திற்குப் புதுமையான வகையில் உரைகளைச் சொல்ல முற்படுவதால் முரண்களைத் தவிர்க்க முடியும் என்று கருதியும் உரைகளில் அதிகம் ஆர்வம் காட்டியிருக்கலாம்.
- கல்வி பயிலும் மாணவர்கள் தம்மைப் போலவே கல்வி அறிவில் சிறந்து விளங்கவேண்டும் என்ற நோக்கம் கொண்டவராகவும் தாம் அரிதில் கற்றுத்தேர்ந்த தமிழ்ச்செல்வத்தை மாணவர்களிடம் கொண்டுசேர்க்கும் ஒரே கருவி இலக்கியம் என்பதன் காரணமாகவும் இலக்கியத்திற்கு உரை எழுதியிருக்கலாம்.

இதற்கு, "அவர் செய்யுள் இயற்றுவதில் ஆர்வம் கொண்டிலர். ஆதலால், அவர் செய்யுள் நூல் எதுவும் இயற்றவில்லை. ஆனால், அவர் அவ்வப்பொழுது புனைந்த பாடல்கள் பல உண்டு. அவை, யாப்பமைப்பிலும் சொல் நலம், பொருள் வளம், ஓசை நயங்களிலும் சங்கச் சான்றோர் இளங்கோவடிகள் திருத்தக்கதேவர் ஆகிய பழந்தமிழ்ப் பாவலர்களின் பாடல்களை நினைப்பூட்டும் சிறப்பினவாகும். பிள்ளையவர்கள் உரைநடை நூல்கள் இயற்றுவதிலேயே பெரிதும் ஈடுபாடுடையவர். அவர் தமக்கென்று தனி உரைநடை ஒன்றை இனிது அமைத்துக்கொண்டார். அது சொல்லழுத்தமும் பொருள் அழகும் மிடுக்கும் பெருமிதமும் வாய்ந்தது. கதைகள், பாட நூல்கள், எளிய இலக்கியத் திறனாய்வுகள், புதினங்கள் போன்றவற்றை எழுதுவதில் பொழுதைப் போக்கவில்லை. அருந்தமிழ்ப் புலவர்களும் தனித்தமிழ் மாணவர்களும் படித்துப் பயன்கொள்ளத்தக்க இலக்கிய இலக்கணச் சமய வரலாறு ஆராய்ச்சி நூல்கள் ஆக்குவதையே நோக்கமாகக் கொண்டார். இவ்வகையில் அவர் படைத்துத் தந்துள்ள பயன்கெழு நூல்கள் பலவாகும். சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, சூளாமணி ஆகிய பேரிலக்கியங்கள் பற்றி அவர் எழுதியுள்ள சீரிய நூல்கள் அவரது இலக்கிய ஆராய்ச்சியை எடுத்துக்காட்டுவன. திருவள்ளுவர், சேரமன்னர் வரலாறு, வரலாற்றுக்காட்சிகள்

முதலியவற்றில் வரலாற்று துறையில் அவரது ஆராய்ச்சியின் அகலத்தையும் ஆழத்தையும் அளந்தறியலாம். மத்தவிலாசப் பிரகசனம் இவரது மொழிபெயர்ப்புத் திறனுக்கு விழுமியச் சான்று. இவையே அன்றி, அவர் இயற்றிய இலக்கணச் சமய ஆராய்ச்சி இன்னும் பலவாகும்." (பி.வி. கிரி; 2003, ப.29). இக்கூற்று உறுதி சேர்க்கிறது.

தற்காலப் படைப்புலகில் தங்கள் பெயரை வெளிக்காட்டவும் தம் வாழ்வுக்கு வசதி பெறவும் நூல் இயற்றுவோர் பலர். இத்தகையோரின் மத்தியில் தமிழை உலகிற்குத் தெளிவுபடுத்த வேண்டும் என்ற நோக்கில் உரைகள் எழுதுவதையே சிறந்த நோக்கமாகக் கொண்டு வாழ்ந்துள்ளார் என்பது தெளிவாகிறது. இருப்பினும் சைவ இலக்கிய வரலாறு, சேர மன்னர் வரலாறு, மதுரை குமரனார், நந்தா விளக்கு, தமிழ்த்தாமரை போன்ற அரிய உரைநடை நூல்களைப் படைத்துள்ளார் என்பதையும் அறியமுடிகிறது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை மரபு வழியான முறையில் யாப்பு அமைதியோடு கற்பனை கலந்து சில பாடல்களையும் எழுதியுள்ளார் என்பது தமிழ் உலகம் பரவலாக அறியாத ஒன்று.

## உரையாசிரியர்

ஆய்வு அணுகுமுறையில் வரலாற்று அணுகுமுறை என்பது நூல் தோன்றிய சமகாலப் பின்னணியைத் தெளிவுபடுத்துவதாகும். நூல், உரை தோன்றிய காலங்களில் மற்ற நூல்களின் போக்கு என்னவாக இருந்தது என்பதை அறிவதும் அவசியமாகிறது. நூலுக்கு உரை எழுந்த காலப் பின்னணியும் மற்ற உரைகளுடன் சேர்த்துப் பார்ப்பதும் தேவையாகிறது.

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை பழந்தமிழ் இலக்கியங்கள் பலவற்றிற்கு உரை கண்டவர். காப்பிய நூல்களுக்கும் உரை எழுதி வெளியிட்டவர். தமிழ்ப் புலவர் உலகம் இவரைப் பண்டைய உரையாசிரியர்கள் வரிசையில் வைத்து உரைவேந்தர் என்று புகழ்ந்து போற்றுவது தமிழ் உலகம் அறிந்த ஒன்றாகும்.

பழைய உரையாசிரியர்களின் நடையில் அமைந்த தமிழ் வளத்தை இவர் படைப்புகளில் காணலாம். எளிமையும், இனிமையும் இவருடைய நடையின் சிறப்பியல்புகள். ஔவை சு.துரைசாமிப்பிள்ளை சிறந்த ஆராய்ச்சி உண்மைகள், அறிவுலகச் சிந்தனைகள் ஆகியவைகளோடு ஆராய்ச்சி நெறியினை அறிவித்த முன்னோடி ஆவார்.

## பிழையுரையும் புத்துரையும்

இலக்கண இலக்கிய நூலாயினும் அதன் பழைய உரைகளை ஆழ்ந்து பயின்று ஆய்ந்து தெளிந்தார். உரையாசிரியர்களை அணுகும் முறை, உரைகாணும் நெறி, உரை வகுக்கும் திறன், ஆகியவற்றையும் அறிந்திருந்தார். பிறர் கருத்தோடு தம் கருத்து மாறுபட்டு இருந்தால், மற்ற உரையை உடனே பிழையுரை என்று முடிவுசெய்துவிட

மாட்டார். உரை மாறுபாட்டிற்கான காரணங்களை முதலில் கண்டறிவார். அக்காரணம் அவ்வாசிரியர் காலத்திற்கு மட்டுமன்றிப் பொதுவாக எக்காலத்திற்கும், குறிப்பாக இக்கால வழக்கிற்கும் பொருந்தாதாயின் பொருத்தமான புத்துரையைக் காண முயன்றுள்ளார்.

பழமை வாய்ந்த சங்கப்பாடல்களுக்குக் கால மாற்றங்களுக்கு ஏற்ப உரைகள் புதிது புதிதாகத் தோன்றியவண்ணம் இருக்கின்றன. பெரும் உரையாசிரியர்கள் சங்கப்பாக்களுக்கு விளக்கவுரை எழுதியிருக்கிறார்கள். இருப்பினும் ஔவை போன்ற பிற்காலத் தமிழ் அறிஞர் மீண்டும் மீண்டும் உரை எழுதவேண்டிய அவசியம் என்ன என்ற வினாவும் கூடவே எழுந்துவிடுவதைத் தவிர்க்க முடியவில்லை. உ.வே. சா.வின் பழந்தமிழ் இலக்கியப் பதிவுகள் தமிழ் மொழியின் பழமையினைப் பறைசாற்றி நிற்கின்றன. தொல்தமிழ் இலக்கியங்கள், தமிழ் ஆர்வம் உடையோர் பலருக்கும் புரியாமல் இருந்தது. ஒரு படைப்பு முழுமை அடைவது என்பது, அப்படைப்பு அனைத்து வாசகர் தரப்பிலும் சென்று சேர்வதே ஆகும். எனவே, பழந்தமிழ் இலக்கியங்கள் பாமரத் தமிழனையும் சென்றடைய, அவற்றை எளிமைப்படுத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இதன் அடிப்படையில் பழந்தமிழ் இலக்கியங்களுக்கு உரை எழுத முற்பட்டவர்கள் பலர்.

படைப்பை அணுகும் உரையாசிரியருக்குப் பன்னோக்குப் பார்வையும், பல தகுதி நிலைப்பாடுகளும் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் அந்தப் படைப்பின் முழுமையான நிலைப்பாட்டினை வெளிக்காட்ட முடியும். உரைகாரருக்கு ஆராய்ச்சித் திறனும் தத்துவப் பயிற்சியும் கல்வெட்டுச் சான்றுகளோடு வரலாற்றை வலியுறுத்தும் பாங்கும் மொழிப்புலமையும் இருத்தல் அவசியம். அவ்வகையில் தமிழ், ஆங்கிலப் புலமையோடு, ஆராய்ச்சித்திறனையும் ஒருங்கே பெற்ற ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை தனித்தன்மை வாய்ந்ததாகும். இத்திறன்களின் அடிப்படையிலேயே பழந்தமிழ் இலக்கியங்களுக்குப் புத்துரை கண்டார்.

### ஔவை சு.துரைசாமிப்பிள்ளை ஒரு பேச்சாளர்

நூலாசிரியர் உரையாசிரியர் என்ற எழுத்தாற்றல் முறையில் மட்டும் நிற்காமல் தான் ஒரு பேச்சாளர் என்பதையும் நிலைநாட்டினார். விவேகானந்தரை முன்மாதிரியாக வைத்துக்கொண்டு தனது ஆங்கிலச் சொற்பொழிவுகளை நிகழ்த்தினார். பேசும்பொழுது அவைக்கு அஞ்சாத துணிவு, எடுப்பான இனிய குரல், சீரிய செந்தமிழ் நடை, திருத்தமான உச்சரிப்பு, சிந்தனைத் தெளிவு, நினைவாற்றல், சொல்லழுத்தம், தட்டுத்தடையின்றிப் பேசும் பேச்சோட்டம் அனைத்தும் அவரிடம் நிறைந்து காணப்பட்டது. அவர் பேசச் செல்வதற்கு முன் பேச்சுக்குரிய பொருள் பற்றி, சிந்துத்துச் சிறு குறிப்பு ஒன்றை வரைந்து கொள்வது வழக்கம். அக்குறிப்பை உரை நிகழ்த்தும் இடத்திற்கு உடன் கொண்டு

செல்லமாட்டார். ஆனால் அங்கு நிகழ்த்தும் உரை முற்றிலும் அக்குறிப்பை ஒட்டியே அமையும் என்பது அறிஞர்கள் கருத்து, ஔவை சு.துரைசாமிப்பிள்ளை பல நிலைகளில் சிந்தனைத் தெளிவுடன் செயல்பட்டவர் என்பதை வெளிப்படுத்துகிறது.

## முதல் உரை

மாணவர்களுக்குப் பாடம் நடத்தும்பொழுது எழும் வினாவைத் தொகுத்துப் பார்த்த பின்பு உரை எழுத வேண்டும் என்ற எண்ணம் ஔவை சு.துரைசாமிப்பிள்ளைக்குத் தோன்றியுள்ளது. அதேபோன்று, கால மாற்றங்களுக்கு ஏற்ப உரை மாற்றங்களும் தேவை என்பதை உணர்ந்த அவர், பழைய உரையாசிரியர்களின் உரைகளில் தேவையானதை எடுத்துக்கொண்டு, கால மாற்றங்களுக்கு ஏற்ப, புதியவற்றைச் சேர்த்தும் உரையெழுதத் தொடங்கியுள்ளார்.

"பிள்ளையவர்கள் முதன்முதலாக உரை எழுதி வெளியிட்டது, திருஞானசம்பந்தர் அருளிய திருவோத்தூர் தேவாரத் திருப்பதிகம் ஆகும். அதனோடு ஞானாமிர்தம் என்னும் சமய நூலுக்கும் தெளிவுரை எழுதிவந்தார். பின்னர், எட்டுத்தொகையுள் ஒன்றாகிய ஐங்குறுநூறு என்னும் நூலுக்கு உரை எழுதத்தொடங்கினார். அகப்பொருள் இலக்கண இலக்கிய நூல்கள் பலவற்றையும் ஆய்ந்து அறிந்துகொண்டு அதற்கு விரிவான விளக்கவுரை வரைந்து முடித்து, அதன் முற்பகுதியை அச்சிடுவித்து வெளியிட்டார். பின்னர் மற்றப் பகுதிகளும் வெளியிடப்பட்டன. சொற்பொருள், சொல்நயம், சொற்பொருள் நயங்கள், இலக்கண விளக்கம், அகப்பொருள் அமைதி, என்னும் அடைவு முறையில் அமைந்த அவ்வகவுரை புலவர் பெருமக்களால் புகழ்ந்து பாராட்டப்பட்டது.

அதனை அடுத்துப் பதிற்றுப்பத்து நூலுக்கு உரையெழுத முற்பட்டார். சேரர் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ள இலக்கியப் பகுதிகளையும் தென்னாட்டையும் சிறப்பாகத் தமிழகத்தையும் தமிழர்களையும் அவர்களுக்குள் சேர மரபினரையும் பற்றி வரலாற்று ஆசிரியர்களும் ஆராய்ச்சியாளர்களும் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதியுள்ள கட்டுரைகளையும் நூல்களையும் கல்வெட்டுகளையும் விரிவாக ஆராய்ந்து விளக்கவுரை வெளியிட்டார். பதிற்றுப்பத்துக்குப் பின்னர்ப் புறநானூற்றுக்குச் சிறப்புரை வரைவதில் ஈடுபட்டார். பல ஏடுகளைக்கொண்டு ஆராய்ந்து குறைப்பாடல்களாக இருந்தவற்றை இயன்றவரை நிறைவு செய்துகொண்டு முழுநூலுக்கும் விழுமிய விரிவுரை எழுதிமுடித்தார். ஒவ்வொரு பாடலுக்கு முன்னும் பாடினோர், பாடப்பட்டோர் வரலாறு பற்றிய அரிய ஆராய்ச்சிக் குறிப்பைச் சேர்த்து இரு பகுதிகளாக வெளியிடுவித்தார்" (மேலது; 2003, ப. 31).

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை சைவ சமயப் பற்றின் காரணமாக முதலில் சமய நூலுக்கு உரை எழுதத் தொடங்கியுள்ளார். அதேபோன்று அவரின் அனைத்து உரை

நூல்களிலும் சைவ சமயத் தாக்கம் என்பது தவிர்க்க முடியாத ஒன்றாக இருந்துவருகிறது. விளக்கவுரை சொல்லும்பொழுது சைவ சமய வரலாற்றை இடையிடையே புகுத்தி வந்துள்ளார். சைவத்தின் மீது ஈடுபாடு வைத்திருந்தாலும் பௌத்த நூலுக்கு உரை எழுத மறுக்கவில்லை. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தன் திறனைப் பல நூலுக்கு உரை எழுதுவதின் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார்.

“பண்டித ந.மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் முன்னரே மணிமேகலையின் முற்பகுதிக்கு உரை எழுதி வைத்திருந்தார். அந்நூலின் பிற்பகுதி புத்தச் சமயத் தத்துவங்களும் வேறு பல சமயங்களின் மாறுபாடும் கோட்பாடுகளும் அளவை நூல் நுட்பங்களும் அடங்கியதாக இருத்தலின் அதற்குப் பொருள்கண்டு தெளிவது எத்தகையோர்க்கும் எளிதாக இல்லை. எனவே, அதனை முடிக்க யாரும் முன்வரவில்லை. செயற்கரிய செய்யும் சீரியராகிய பிள்ளை அவர்கள் அப்பகுதிக்கு உரை கண்டு முடிக்க உறுதி கொண்டார். புத்தச் சமய நூல்களையும் பிற சமய நூல்களையும் முயன்று பெற்று முறையாக ஆராய்ந்தார். அச்சமயங்கள் பற்றிய அடைமொழி நூல்களை அம்மொழி வல்லுநரின் துணைக்கொண்டு படித்தறிந்தார். அளவை நூற்செய்திகளை ஐயமற ஆராய்ந்து தெளிந்தார். பின்னர் அப்பகுதிக்குத் தெளிவான விளக்கவுரை எழுதிமுடித்து அவ்வுரை நூலை வெளியிடச்செய்தார். அவ்வுரையின் உதவியால் இன்று யாவரும் மணிமேகலை நூல் முழுவதையும் படித்துப் பயன்பெறுவது எளிதாகியுள்ளது.

மணிமேகலை உரைக்குப் பின்னர் அவர் நாட்டம் நற்றிணையின்பால் சென்றது. பல்லாண்டுகளுக்கு முன் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் தம் புலமையையே துணையாக, அவர் காலத்தில் கிடைத்த அருகிய ஆதாரங்களைக்கொண்டு நற்றிணைக்குச் சிற்றுரை ஒன்று எழுதி வெளியிட்டிருந்தார்” (மேலது; 2003, ப.32). ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை எழுதுவதையே தன் முழுநேரப் பணியாகக் கருதி எழுதியுள்ளார். அவர் உரை எழுதி அச்சாகாத நூல்கள் இருப்பதையும் அறியமுடிகிறது. சில நூல்களுக்குக் குறிப்புரைகள் எழுதி வைத்துள்ளதையும் கவனிக்கமுடிகிறது. அவ்வகையான குறிப்புகள் இன்னும் முழுமைபெற்று அச்சாகவில்லை.

“அகநானூறு, குறுந்தொகை, தணிகைப்புராணம், தொல்காப்பியச் சொல்லதிகாரம், பொருளதிகாரம் ஆகியவற்றிற்கும் அவர் அரிய குறிப்புகள் வரைந்து வைத்திருந்தார். அவை இன்னும் உரை வடிவு பெற்றில” (தி.நா. அறிவுஒளி, ம.வி. இராகவன்; 1982, ப. 80). பல துறைகளில் தேர்ந்து விளங்கிய ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் புலமை ஒரு நெறிக்கு உட்பட்டதன்று. இலக்கணம், இலக்கியம், சமயம், அளவை, வரலாறு, கல்வெட்டு ஆகிய பல்வேறு துறைகளிலும்

முத்திரை பதித்தவர். பல உரைகாரரைக் காட்டிலும் முற்றிலும் வேறுபட்ட சிந்தனை உடையவர் என்பதை அறியமுடிகிறது.

## ஔவை சு.துரைசாமிப்பிள்ளை எழுதிய நூல்கள்

1. ஊர்ப்பெயர்கள் வரலாற்றாராய்ச்சி (அச்சாகவில்லை)
2. **ஐங்குறுநூறு உரை**
3. ஔவை தமிழ்
4. சிலப்பதிகார ஆராய்ச்சி
5. சிலப்பதிகாரச் சுருக்கம்
6. சிவஞானபோதச் செம்பொருள்
7. சிவஞானபோத மூலமும் சிவஞான சுவாமிகள் அருளிய சிற்றுரையும்
8. சீவகசிந்தாமணி ஆராய்ச்சி
9. சிவகசிந்தாமணிச் சுருக்கம்
10. சூளாமணி
11. சைவ இலக்கிய வரலாறு
12. ஞானாமிர்தம் மூலமும் பழைய உரையும்
13. தமிழ்த் தாமரை
14. தமிழ் நாவலர் சரிதை மூலமும் உரையும்
15. திருமாற்பேற்றுத் திருப்பதிக உரை
16. திருவருட்பா மூலமும் உரையும் (9 தொகுதிகள்)
17. திருவோத்தூர் தேவாரத் திருப்பதிகவுரை
18. தெய்வப்புலவர் திருவள்ளுவர்
19. நந்தா விளக்கு
20. **நற்றிணை உரை**
21. **பதிற்றுப்பத்து உரை**
22. பண்டை நாளை சேர மன்னர் வரலாறு
23. பரணர்
24. புது நெறித் தமிழ் இலக்கணம் (2 பகுதிகள்)

25. **புறநானூறு மூலமும் உரையும் (2 பகுதிகள்)**

26. பெருந்தகைப் பெண்டிர்

27. மணிமேகலை ஆராய்ச்சி

28. மணிமேகலைச் சுருக்கம்

29. மதுரை குமரனார்

30. மத்தவிலாசம் (மொழிபெயர்ப்பு)

31. மருள் நீக்கியார் நாடகம் (அச்சாகவில்லை)

32. யசோதர காவியம் மூலமும் உரையும்

33. வரலாற்றுக் கட்டுரைகள் (வரலாற்றுக் காட்சிகள்)

34. Introduction to the Study of Thiruvalluvar

## அச்சில் வெளிவந்த கட்டுரைகள்

1. ஆர்க்காடு
2. ஊழ்வினை
3. சிவபுராணம்
4. ஞானசம்பந்தர் வழங்கிய ஞானவுரை
5. தூத்துக்குடி சைவச் சித்தாந்தச் சபைத் தலைமைப் பேருரை.

## குறிப்பு வடிவில் உள்ள நூல்கள்

1. அகநானூறு
2. குறுந்தொகை
3. தணிகைப்புராணம்
4. தொல்காப்பியச் சொல்லதிகாரம்
5. தொல்காப்பியப் பொருளதிகாரம்

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை படைப்பு இலக்கியங்களை விட இலக்கண, இலக்கிய, காப்பிய நூல்களுக்கு உரை எழுதுவதை முக்கிய நோக்கமாகக் கொண்டிருந்ததை விளங்கிக்கொள்ள முடிகிறது. சைவம், சமணம், பௌத்தம் என்ற மூன்று சமயங்களுக்கும் உரை எழுதி உள்ளார். வரலாறு, மொழிபெயர்ப்பு, நாடகம் என அனைத்துத் தளங்களிலும் தன் ஆளுமையைத் திறம்படச் செலுத்தியுள்ளார் என்பதை இந்நூற்பட்டியல் தெளிவாக விளக்குகிறது.

## சான்றோர் பாராட்டில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை

உ.வே. சாமிநாதையர், மறைமலை அடிகளார், திரு.வி.க., கதிரேச செட்டியார், மு. இராகவையங்கார், இரா. பி. சேதுப்பிள்ளை, கா. நமச்சிவாய முதலியார், எஸ். ச. வையாபுரிப்பிள்ளை, ச. சச்சிதானந்தம் பிள்ளை, பாரதிதாசன் முதலான தமிழ் அறிஞர் பெருமக்களின் மதிப்பினைப் பெற்றிருந்தார்.

இருபதாம் நூற்றாண்டின் ஒப்பற்ற உரையாசிரியர் மரபில் நிலைபெற்றவர். பல்வேறு நிலைகளில் தன் திறனை வெளிப்படுத்தியவர். “1950-ஆம் ஆண்டு, ஜனவரித் திங்கள், 14ஆம் நாள் வெளியான ‘தமிழ் நிலம்’ – பொங்கல் இதழில் உரைவேந்தர் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் ஆய்வுப்பணியைப் புகழ்ந்து புரட்சிக் கவிஞர் பாவேந்தர் பாரதிதாசனார் எழுதிய வாழ்த்துக்கவிதை” (பாரதிதாசன் புகழ் மலர்கள்; ப. 110 (அ. திருவாசகன், சுரதா கல்லாடன்; பாரதிதாசன் கவிதைகள்; பூம்புகார் வெளியீடு 1913, 1993)).

**பாரதிதாசன்:**

பள்ளிமுதல் பல்கலைச்சாலை வரைபாங் கெண்ணிக்
கொள்முதல் செய்யும் கொடைமழை – வெள்ளத்தேன்
பாயாத ஊருண்டா? உண்டா உரைவேந்தை
வாயார வாழ்த்தாத வாய்!

**வ.சுப. மாணிக்கனார்:**

நூலுரை திறனுரை பொழிவுரை என முவ்வரம்பாலும் தமிழ்க்கரையைத் திண்ணிதாக்கிய உரைவேந்தர் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை நெடும்புகழ் என்றும் நிலவுவதாக!

**கவிஞர் மீரா:**

அதியன்தான் இன்றில்லை இருந்திருந்தால்
அடடாவோ ஈதென்ன விந்தை! இங்கே
புதியதொரு ஆண் ஔவை என வியப்பான்!

**தி.நா. அறிவொளி:**

வாயில் தமிழ் முழக்கம் வாழ்வில் தமிழ் இயக்கம்
பாயில் துயில்போதும் பைந்தமிழே- நோயில்
படுப்பினும் பண்டமிழின் பண்பாற் பணிசெய்து
எடுத்துரை சாமிபுகழ் ஏற்று.

இவ்வாறு, பலரும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை அவர்களைப் புகழ்ந்து பாராட்டியுள்ளனர். 1981ஆம் ஆண்டு மதுரையில் ஐந்தாம் உலகத்தமிழ் மாநாடு நடந்தபோது உரைவேந்தருக்கு இந்தியப் பிரதமர் திருமதி இந்திராகாந்தி அம்மையார் வழியாகத் தமிழக முதலமைச்சர் திரு எம்.ஜி.ஆர். அவர்கள் பத்தாயிரம் ரூபாய் பொற்கிழி வழங்கிச் சிறப்பித்துள்ளார் என்பதை 'உரைவேந்தர்க்கு ஒரு நூற்றண்டு' என்னும் மலரின் வாயிலாக அறியமுடிகிறது.

## இதழ்ப்பணி

தமிழ்ப்பொழில், செந்தமிழ்ச்செல்வி, செந்தமிழ் முதலிய இதழ்களில் தமிழ் இலக்கிய இலக்கண ஆராய்ச்சிக்கட்டுரைகள் எழுதியுள்ளார். ஔவை சு.துரைசாமிப்பிள்ளை அவர்கள் கழக விழாக்களில் கலந்தும் செந்தமிழ் செல்வி இதழாசிரியர் குழுவில் ஒரு உறுப்பினராகவும் பணியாற்றியுள்ளார்.

## ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சிறப்புகள்

- மதுரை இராதா தியாகராாசனார் தம் ஆசிரியப் பெருந்தகையின் உயர் பண்புகளைப் பாராட்டி 'உரைவேந்தர்' எனப் பட்டம் வழங்கித் தங்கப்பதக்கம் அளித்தார்.
- 1964-ஆம் ஆண்டு மதுரைத் திருவள்ளுவர் கழகம் 'பல்துறை முற்றிய புலவர்' என்ற பாராட்டுப் பத்திரம் வாசித்தளித்துச் சிறப்பித்தது.
- 1980-ஆம் ஆண்டு தமிழக ஆளுனர் பிரபுதாஸ் பி.பட்வாரி 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' என்னும் பட்டம் வழங்கிச் சிறப்பித்தார்.
- சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் சார்பில் 'தமிழ்த்தொண்டு செய்த பெரியார்' எனும் பட்டமும் கேடயமும் வழங்கிச் சிறப்பிக்கப்பட்டுள்ளார்.
- தூத்துக்குடி சைவச் சித்தாந்தச் சபையார் 'சித்தாந்த கலாநிதி',

  'சித்தாந்த கலைக்கடல்' என்னும் பட்டமும் வழங்கிப் பாராட்டினர்.

## ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சமகால உரையாசிரியர்கள்

சங்க இலக்கிய உரைகள் காலந்தோறும் புதிய மாற்றங்களை அடைந்து வருகின்றன. கால மாற்றங்களுக்கு ஏற்ப உரையாசிரியர்களின் மொழி ஆளுமையும் மாறுபடுகிறது. இருபதாம் நூற்றாண்டின் உரையாசிரியர்கள் வரிசையில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை அவர்களுக்குத் தனித்த இடம் உள்ளது.

## இருபதாம் நூற்றாண்டின் உரையாசிரியர்கள்

1. பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர்
2. பேரா. மொ. அ. துரை. அரங்கசாமி
3. புலவர் கா. கோவிந்தன்
4. ரா.பி. சேதுப்பிள்ளை
5. நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார்
6. பெருமழைப்புலவர்
7. புலியூர்க்கேசிகன்

ஆகியோர் இலக்கியங்களுக்கு உரை எழுதி இருப்பினும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை மற்றவர்களிடமிருந்து வேறுபட்டது. இதனை இந்த ஆய்வேடு பின்வரும் இயல்களில் தெளிவாக வெளிப்படுத்த முனைந்துள்ளது.

## ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் தமிழ் உணர்வு

இந்தி எதிர்ப்பு இயக்கம் வலுப்பெற்று வந்த அந்தக் காலத்தில் இந்தியை எதிர்த்துப் போராடினார். இந்தியை எதிர்த்துப் பேசிவரும் தமிழ் ஆசிரியர்கள் பலரும் இடமாற்றம் செய்யப்பட்டனர். இவரையும் அரசு போளூர், செங்கம் முதலான பல இடங்களுக்கு மாற்ற ஆணைப் பிறப்பித்தது. செல்லும் இடமெல்லாம், தாம்கொண்ட கொள்கைகளைக் கைவிடாது செயல்பட்டு வந்தார்.

## மறைவு (03.04.1981)

திருவருட்பாவின் உரையினை முதுமைக் காலத்தில் பல ஆண்டுகள் ஓய்வின்றி எழுதிப் பல்லாயிரம் பக்கங்களில் முழுமை பெறச் செய்தார். எனினும் அவ்வுரை அச்சில் வெளிவரும் போது அவர் புகழ் உடலை விட்டுப் பூத உடலோடு மறைந்தார். 1981-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 3-ஆம் நாள் இவ்வுலக வாழ்வை நீத்தார் (இர. வேனிலா; 1988).

## தமிழுலகம் ஆற்றவேண்டிய பணி

தமிழ் மாநாடுகளிலும், வானொலி அரங்குகளிலும், பல்வேறு தமிழ்ப் பேரவைகளிலும் எண்ணற்ற ஆய்வுரைகளை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை வழங்கியுள்ளார். ஆய்விதழ்கள், மலர்கள், முதலானவற்றிலும் இவர்தம் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. இவ்வாறு வெளிவந்த நூற்றுக்கணக்கான கட்டுரைகள் இனிமேலாவது தொகுக்கப்பெற வேண்டும்.

## தொகுப்புரை

- இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் உருவான சமூக, அரசியல் இயக்கங்கள் சங்க இலக்கியங்களைப் பல்வேறு நிலைகளில் வாசிக்க முற்பட்டுள்ளன.
- உரையாசிரியர்கள் தங்கள் ஆளுமையை வெளிக்காட்ட சிறந்த களமாகச் சங்கப் பனுவல்களைத் தேர்ந்தெடுத்துள்ளதை அறியமுடிகிறது.
- சங்கப் பாடல்களின் மொழியை உள்வாங்கும் உரையாசிரியர்கள் அவர்களின் சமகால மொழிவழி சங்ககாலக் கருத்தை வெளிப்படுத்துகின்றனர். எனினும், சங்க்கால மொழியில் எழுத முடியாமலும் சமகால மொழியை முற்றிலும் பயன்படுத்த முடியாமலும், இவ்விரு மொழிகளுக்கும் இடையிலான ஒரு நடையினைக் கையாள வேண்டிய காட்டாயத்திற்கு உரையாசிரியர்கள் தள்ளப்படுகின்றனர்.

சங்க இலக்கிய உரைப் பதிப்பு என்பது ஏதோ எதார்த்த நிகழ்வாக நடந்துவிடவில்லை. சமூகத் தேவைக்காக, வரலாற்றுத் தேடலை முன்வைத்து நிகழ்த்தப்பட்டது என்பதும் அதன் பின்புலமாகும். சங்கப்பனுவல்கள் முன்பே தொகுக்கப்பட்டு இருந்தாலும், அவற்றை அச்சுப் பிரதியில் ஏற்றுவது பிற்காலத்தில் நிகழ்ந்த ஒன்றாகும். காலப் பழமையால் அழிந்து கொண்டிருந்த சுவடிகளைப் பிரதி எடுத்துப் பதிப்பித்ததின் வாயிலாகப் பழந்தமிழ் இலங்கியங்கள் காப்பாற்றப்பட்டன. அவ்வாறு காப்பாற்றப்பட்ட ஆவணங்கள் இன்று நமக்கான வரலாற்றைக் கட்டமைக்க உதவுகின்றன.

பழம்நெடும் வரலாற்றைக் கொண்ட தமிழிலக்கியத்தில் உரைப் பதிப்புத் தொடர்பான ஆய்வுகள் அதிகம் நிகழவில்லை. ஒரு பனுவலை ஆராயும் முன், அப்பனுவல் சார்ந்த உரைப் பதிப்புப் பின்புலத்தை அறிதல் அவசியம். உரைப் பதிப்பு சார்ந்த நுண்அரசியலைத் தெரிந்துகொண்டு, பனுவலை ஆய்தலே அப்பனுவலின் உயிர்ப்புத் தன்மையை வெளிப்படுத்தவல்லது. இல்லையேல், பனுவலின் இலக்கியநயம் பேசும், ஒரு சார்புத்தன்மை ஆய்வாக அமைந்துவிட வாய்ப்புகள் அதிகம்.

சமீபகாலத் தமிழ் அறிவுச்சூழலில் உரைப் பதிப்புத் தொடர்பான விவாதங்களும் ஆய்வுகளும் பரவலாகத் தொடங்கியுள்ளன. பழைய பதிப்பாசிரியர்களின் மீதான மறுவாசிப்பு, மறுபரிசீலனை ஆகியவை முக்கியமானவை. தமிழ் உரைப் பதிப்பு வரலாறு மிக விரிவாகவும், வரலாற்று உணர்வுடனும் எழுதப்பட வேண்டியது அவசியமாகிறது. உரைப் பதிப்புத் தொடர்பான ஆய்வுகள் மிகக் குறைந்த அளவே நிகழ்ந்துள்ளன. இத்தகைய ஆய்வுகளும் முற்றிலும் சார்புத்தன்மை கொண்டவையாகவும், தனிநபர் மீதான காழ்ப்புணர்ச்சி கொண்டவையாகவும் இருக்கின்றன. உரைப் பதிப்பு வரலாறு எழுதுவதற்கு இன்னும் விரிந்த தளத்தில் பதிப்பாசிரியர்கள், பதிப்பு நுட்பங்கள், பதிப்பு நெறிகள் தொடர்பான ஆய்வுகள் தேவை.

உரைப் பதிப்பு பற்றி நிகழும் ஒரு சில ஆய்வுகளும், சில பதிப்பாசிரியர்களை முன்னிலைப்படுத்திப் புனிதப்படுத்துதல் அல்லது நிராகரித்தல் என்ற உணர்வுடன் செயல்படுவதைக் காணமுடிகிறது. இப்பின்புலத்தைத் தவிர்த்துப் பதிப்பாசிரியர்களைத் தாண்டிய ஒரு உரைப் பதிப்பு வரலாறு உருவாக்கப்பட வேண்டும். அப்பொழுதுதான் உரைப் பதிப்பு சார்ந்த ஆய்வின் அவசியத்தை ஆய்வுலகம் அறியும்.

சங்க இலக்கிய உரைமரபும், உரைப் பதிப்பு மரபும் என்ற இரு பொருண்மைகளை ஆராய இந்த இயல் கவனம்கொள்கிறது. முதலில் ஒரு பனுவல்/படைப்பு உருவான பின்புலத்தை அறிவது அவசியம் என்னும் அடிப்படையில் பதிப்பு உருவான பின்புலம்,

உரைப் பதிப்புத் தேவை, உரைப் பதிப்பு அரசியல் போன்றவை முதலில் பேசப்படுகின்றன. பிறகு உரை தோற்றப் பின்புலம், உரை சார்ந்த அரசியல், பதிப்புக்கும் உரைக்குமான உறவு போன்ற தன்மைகள் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன. மூலங்களை அடிப்படையாக வைத்தே உரைகள் எழுதப்படுகின்றன. மூலங்கள் உருவான பதிப்பும் அதன் பின்புலமும் முதலில் பேசப்படுகிறது. மூலப்பதிப்பின் வாயிலாக உருவான உரை மரபு அடுத்த நிலையில் ஆராயப்படுகிறது.

## உரைப் பதிப்பு உருவாக்கப் பின்புலம்

ஒரு சமூகத்தின் வரலாற்றைத் தாங்கி நிற்பவை படைப்புகள். படைப்புகள் காலம் கடந்து நின்று, எதிர்வரும் தலைமுறைக்கு வரலாற்றை நகர்த்திச் செல்பவை. இலக்கியப் படைப்புகள் மட்டும் வரலாற்றைத் தீர்மானித்து விடுவதில்லை. ஆனால் இலக்கியங்களும் வரலாற்றில் பயனிக்கின்றன. வரலாற்றைக் கட்டமைக்க இலக்கியம் அகவயச் சான்றாக முன்வைக்கப்படுகிறது. இவ்வகையான படைப்புகளை உருவாக்கும் நெறிகளே பதிப்பு உருவாக்க மரபாகும்.

“வரலாறு, ஒன்றைப் புறவயமாக வைத்து அணுகுகிறது. இலக்கியம் அகவயமாக உணரப்படும் தன்மையைக் கொண்டிருக்கிறது. ஆகவே இலக்கியம் முழுமையான வரலாற்று ஆதாரமாகாது. அதற்கேயுரிய புனைவு, உயர்வுநவிற்சி, மரபான உத்திகள் ஆகியவற்றைக் கொண்டிருக்கும். தகவல்களை அடிப்படையாகக் கொண்டியங்கும் வரலாறு, இலக்கியத்திலிருந்து அவற்றைப் பெறுவதற்கு எச்சரிக்கையோடும் தயக்கத்தோடும்தான் முயலவேண்டும்” (பெருமாள் முருகன்; 2011, ப.52) இக்கூற்று இலக்கியத்தை முழு வரலாற்று ஆவணமாக முன்வைக்கக்கூடாது என்பதை உணர்த்துகிறது. இலக்கியத்தை வரலாற்றுக்குப் பயன்படுத்துகிறோம் என்னும் எச்சரிக்கை உணர்வுடன், தேவையானவற்றைப் பயன்படுத்துதல் சாலச் சிறந்தது. சங்க இலக்கியங்களைப் பதிப்பிக்கும் போதும், உரை எழுதும் போதும் இலக்கிய உணர்வு அவசியமானதாகும். ஆனால், இலக்கியத்தை வரலாற்றிற்குப் பயன்படுத்தும்பொழுது இலக்கிய உணர்வைத் தவிர்த்து, வரலாற்று உணர்வு மேலோங்கி இருத்தல் வேண்டும்.

## உரைப் பதிப்பு உருவான சமூகச் சூழல்

வரலாற்று உணர்வு அற்றவர்களாகத் தமிழர் வாழ்ந்த காலம் தமிழ்ப் பனுவல்கள் எதுவும் பதிப்பிக்கப்படாத காலம். நமக்கான இலக்கிய வரலாற்று ஆவணங்கள் பிரதியாக்கப்படாத சூழல். இக்காலகட்டத்தில், வரலாறு இல்லாத சமூகம் என்று ஆளும் ஐரோப்பியர்களால் கருதப்பட்ட இந்தியச் சமூகங்களில் தமிழ்ச் சமூகமும் ஒன்று. அச்சு, பதிப்பு இவற்றை அறியமுடியாததாகத் தமிழ்ச் சமூகம் விளங்கியது.

கால்டுவெல் அவர்களின் திராவிட மொழி ஒப்பிலக்கணம் 1856இல் வெளியிடப்பட்டது. அச்சூழலில் உலக அரங்கில் பெரும் மாறுதல்களை ஏற்படுத்தியது அப்பிரதி. திராவிட மொழிக்குடும்பம் சமஸ்கிருத மொழியில் இருந்து முற்றிலும் வேறானது என்று கால்டுவெல், எல்லிஸ் முதலியோர் ஆராய்ந்து நிறுவியுள்ளனர். இருந்தும் தொல்காப்பியத்தைக் கண்ணில் காணாமல், சிறந்த ஆய்வு செய்த கால்டுவெல்லால், தமிழின் தோற்றத்தை எட்டாம் நூற்றாண்டைத் தாண்டிக் கொண்டுசெல்ல முடியவில்லை. இலக்கிய, இலக்கணத் தரவுகள் அற்ற சூழலில்தான் பதிப்புத் தேவையைத் தமிழ் உலகம் அறியத் தொடங்கியது.

இலக்கிய இலக்கணங்களைப் பதிப்பிக்க வேண்டும் என்ற ஆர்வம் அன்றைய கல்வியாளர்கள் மத்தியில் எழுந்துள்ளதைக் காணமுடிகிறது. ஆங்கிலம் அறிந்த தமிழ் ஆர்வலர்கள் பனுவல்களைப் பதிப்பிக்க நாட்டம் கொண்டனர். அவர்களில் சி.வை. தாமோதரம்பிள்ளை குறிப்பிடத்தக்கவர் ஆவார். அம்முறையே, "தொல்காப்பியம் போன்ற பேரிலக்கணங்கள், சங்க இலக்கியத் தொகுப்புகள், ஐஞ்சிறு காப்பியங்கள், ஐம்பெருங்காப்பியங்கள் பக்தி இலக்கியங்கள் என்று ஒரு பெரும் நூல்தொகுதிகளைப் பெற்றுள்ள ஒரு மொழியை உடைமையாகப் பெற்ற தமிழர்களை அறிவற்ற மூடர்கள் போல் அந்நியர்கள் கருதுவது ஆங்கிலம் கற்ற அன்றைய தமிழ் இளைஞர்களுக்கு அவமானத்தையும் வருத்தத்தையும் கொடுத்தது. இதற்கு மறுமொழி கூறுவதென்றால் மேற்குறிப்பிட்ட நூல்களை முதலில் அச்சில் கொண்டுவரவேண்டும். பின்னர் ஆய்வு நடத்த வேண்டும். இதனூடாகத் தமிழ் வரலாறு, தமிழர் வரலாறு உருவாக்கப்பட வேண்டும் என்ற எண்ணம் வலுவாக உருப்பெற்றது. அத்தகையோரில் ஒருவர் சி.வை. தாமோதரம் பிள்ளை"(பெருமாள் முருகன்; 2007, ப. 192). இச்சூழலில்தான் பதிப்பு மரபு உருக்கொண்டுள்ளது என்பதை உய்த்துணர முடிகின்றது.

சி.வை.தாமோதரம்பிள்ளை இத்தகைய சமுதாயச் சூழலில் மூலத்தைப் பதிப்பாக்க முயன்றுள்ளார். அழிந்துகொண்டுள்ள சுவடிகளைப் பதிப்பில் ஏற்றுவதே இவரின் முதன்மையான நோக்கமாக இருந்துள்ளது. இவருக்குப் பெரும் உறுதுணையாக ஆறுமுக நாவலர் செயல்பட்டுள்ளார். இதன் விளைவாகப் பதிப்புப் பணியில் ஈடுபடலானார். சங்கப் பனுவல்களான பாட்டும் தொகையும் அச்சில் வந்தால்தான் இவை சாத்தியப்படும் என்பதை உணர்ந்து முழு கவனத்தையும் பதிப்பு முயற்சியில் ஈடுபடுத்தியதை அறியமுடிகிறது. இப்பின்புலத்தில் பதிப்புத்துறைக்குப் புதிதாக வந்த உ.வே. சாவையும் பெருமகிழ்வுடன் வரவேற்றது தமிழ்ச்சமூகம். இதன் அடிப்படையில் உரைப்பதிப்பு மரபு தோற்றம் கண்டது எனலாம்.

“மிஷனரிமார்கள் தமக்கென அச்சு இயந்திரச் சாலைகளை நிறுவி, சைவச் சமயத்துக்கு எதிராகப் பிரசுரங்களையும் பாடநூல்களையும் தமது சமயத்துக்கு வளர்ச்சிக் கருவியாக உள்ள நூல்களையும் பதிப்பித்துக் கிறிஸ்தவச் சமய வளர்ச்சியின் பொருட்டுக் கடுமையாக ஊழியம் புரிந்தனர். சுதேசியச் சைவர்களிடத்தில் இத்தகைய ஊடகச் சாதனம் இன்மையால் மிஷனரிமார்களின் சைவத்துக்கு எதிராக முன்வைக்கும் வாதங்களுக்கு எதிர்வினையைக் காட்ட முடியாது இருந்தனர். அதே சமயம் 1835-ஆம் ஆண்டு வரை அச்சு இயந்திரத்தை உபயோகிக்கும் ஏகபோக உரிமை மிஷனரிமார்களிடம் மாத்திரமே இருந்து வந்தது” (இரா. வை. கனகரத்தினம்; 2007, ப.36). இக்கூற்று சமய நோக்கிலான பதிப்பு உருவாக்கப் பின்புலத்தைக் கூறுகிறது. அதேசமயம் தமிழ்க் கல்வி கற்பித்தல்பொருட்டு பாடத்திட்டம் அடிப்படையிலான பதிப்புகளும் வெளிவரத் தொடங்கின. இச்சூழலில் கிருத்துவர்கள் அல்லாதோருக்கும் பதிப்புரிமை வழங்கப்பட்டது. இதனடிப்படையில், 1835க்குப் பிறகு ஏகபோக அச்சு உரிமை கிடைத்தது என்றால் 1812இல் வெளியான திருக்குறள் முதல் பதிப்பு சார்ந்த அரசியல் என்பது ஆய்வுக்குரியது.

பழைய பனுவல்களைப் பிரதியாக்கம் செய்ய வேண்டும் என்ற எண்ணம் எழுந்த சூழலில் இவர்களுக்கு அச்சு இயந்திரம் துணைபுரிந்துள்ளது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் அரிய பெட்டகமாக அச்சு ஊடகம் விளங்கியது. பழந்தமிழ் நூல்களைப் பதிப்பிக்கத் தொடங்கிய பிறகு தமிழாராய்ச்சியின் வளர்ச்சியில் புதிய போக்குகள் வரத்தொடங்கின. பதிப்பாசிரியர்கள் ஏட்டுச்சுவடிகளில் இருந்த இலக்கிய, இலக்கணப் பெருஞ்செல்வங்களை அனைவரும் அறியுமாறு செய்து, புதிய ஆய்விற்குத் தடம் பதித்தனர்.

## உரைப்பதிப்பும் வெளியீடும்

அச்சு ஊடகத்தின் வருகையின் பின்னர்ப் பழந்தமிழ் இலக்கிய வாசிப்பு என்பது பரவலாக்கப்பட்டது. இதன் பின்னணியில் உரை, தொகுப்பு, பதிப்பு எனப் பல செயல்பாடுகள் உள்ளன. அவ்வகையில், பதிப்பும் வெளியீடும் ஒன்றா என்ற வினாவுடன் விவாதிக்கத் தொடங்குவோம். பதிப்பும், வெளியீடும் வேறானவை என்ற புரிதலை முதலில் முன்னெடுப்போம். பதிப்பாளர் வேறாகவும், வெளியீட்டாளர் வேறாகவும் இருந்த காலம் மாறி, பதிப்பாளரே வெளியீட்டாளராகவும் விளங்கும் காலம் தற்பொழுதுள்ளது. இருப்பினும் இவர்களின் செயல்பாட்டு முறைமை என்பது வேறானது.

“பதிப்பு என்பது அச்சிட்டு வெளியிடுதல் என்ற வரையறைக்குள் அமையாது. பதிப்பு உருவாக்கம் (Editing) பெற்ற பின்னரே அச்சேற்றப்பட்டுப் பதிப்பு என்ற

நிலையை அடையும். எனவே பதிப்பு என்பதற்கு, பதிப்பு உருவாக்கம் Editing செய்து அச்சிட்ட நூல் என விளக்கம் தரலாம். அவ்விளக்கத்தை ஆங்கிலத்தில் குறிப்பிடுவதாயின் Editing என்றே குறிப்பிட வேண்டியுள்ளது"(சி. இலட்சுமணன்; 2004, ப.8) இக்கூற்றின் வாயிலாகப் பதிப்புகள், வெளியீடுகள் வேறானவை என்ற கருத்தியலை முன்வைக்கலாம். பதிப்பு என்ற நிலையில் நூலுக்கு முன்னால் உரைப்பது பதிப்புரையாகும். அப்பதிப்புரை அந்நூலைப் பதிப்பித்தவரால் எழுதப்பெறுவது வழக்கம். ஆனால், சமீபகாலச் சுழலில் வெளியீட்டாளர்களே பதிப்புரை எழுதும் மரபு நடைமுறைக்கு வந்துள்ளது.

பண்டைய காலப் பாயிரங்களே தற்காலத்தில் முன்னுரைகளாக வழங்கப்படுகின்றன. பதிப்பு என்பது தயாரிப்பு என்ற நிலையிலும், வெளியீடு என்பது பொருட்செலவினை ஏற்பவரைக் குறிப்பதாகவும் இருக்கிறது. அம்முறையே, "ஒப்புநோக்கி விளக்குவதாயின் 'பதிப்பித்தல்' நூலின் பதிப்புத் தயாரிப்பு எனலாம். அத்தயாரிப்பிற்குரிய செலவை ஏற்பவர் வெளியிடுபவராக இருப்பார். 'பதிப்புப்பணி' என்பது பதிப்பு உருவாக்கம் முதல் அச்சிடல் வரையுள்ள பணிகளாகும். அச்சேற்றும் பணி மட்டுமே வெளியீட்டில் முதன்மை பெறும் எனலாம். இப்பணியினைச் செய்பவர் நூல் வெளியீட்டாளர் எனலாம்." (மேலது; பக். 8-9). இத்தகைய குறிப்புகள் பதிப்பிற்கும் வெளியீட்டுக்குமான வேறுபாட்டை உணர்த்துகின்றன. ஆனால், சமீபகாலச் சூழல் என்பது இதற்கு நேர் எதிர்த் தன்மையிலும் செயல்படுவதை உணரமுடிகிறது. பதிப்பாளர்களே வெளியீட்டாளர்களாகவும், வெளியீட்டாளர்கள் பதிப்பாளர்களாகவும் இருக்கும் தன்மை தமிழியல் பதிப்புச் சூழலில் நிலவுகிறது.

## பதிப்பு ஆய்தல்

பழமையான பனுவல்களை அச்சேற்றி வெளியிடுவதோடு பதிப்புப் பணி முடிந்துவிட்டது எனப் பல பதிப்பாசிரியர்கள் கருதுகின்றனர். அவர்களுடைய கருத்து எப்படி இருப்பினும் பதிப்பு முடிந்து ஒரு பனுவலாக வெளியானபின், அப்பனுவலை ஆய்வுலகம் எவ்வாறு எதிர்கொள்கிறது என்பதும் கவனிக்கப்பட வேண்டிய ஒன்றாகும். இன்றைய சூழலில் பதிப்பு பின்புலம் சார்ந்த ஆய்வு என்பது பதிப்பு தோன்றிய காலம், சூழல், அப்பதிப்பின் தேவை, பதிப்பாசிரியர் சார்ந்த சமூக, சமய வெளிப்பாடு எனப் பன்முகத்தன்மை உடையதாகப் பரிணமித்துள்ளது.

சமகாலச் சூழலில் ஆய்வு நிகழ்த்த எந்தப் பதிப்பைப் பயன்படுத்துவது என்ற தயக்கம் எல்லோரிடமும் இருக்கிறது. நெறியாளர், ஆய்வாளர்களுக்கு எந்தப் பதிப்பு ஆய்வுக்கான பதிப்பு என்பதை அடையாளம் காண்பதில் மருட்சி நிலவுகிறது. தமிழ்ச்சூழலில் ஆய்வுக்குத் தகுந்த பதிப்புகள் எவையென்று வரையறை செய்ய முடியாத

நிலை தென்படுகிறது. செம்பதிப்பு என்று எதனை முன்னெடுப்பது என்ற தெளிவும் எட்டுவதில்லை. அதேபோன்று பதிப்பு நெறிகளைத் தெளிவாக அறிந்துகொள்ளவும் தேவையான அடிப்படைத் தரவுகள் நம்மிடையே இல்லை. பதிப்புத் துறையில் ஒரு சில கட்டுரைகள் மட்டுமே நமக்குக் கிடைக்கின்றன. இவையும் பதிப்பு நெறியினைப் பேசும் பதிப்பாகக் கிடைப்பதில்லை. பதிப்பு நுட்பம் சார்ந்த புரிதல் உள்ளவர்களும், சரியான பதிப்பு நெறிமுறையினை வரையறை செய்யத் தவறிவிட்டனர். தமிழ் ஆய்வுலகம் பதிப்புத் தெளிவு ஏற்படவும், பதிப்பின் தன்மைகளை அறியவும், உரைப் பதிப்பு ஆய்வு நெறிமுறைகள் சார்ந்த கல்வியியல் புலத்தைத் தமிழ்ச் சமூகம் எதிர்நோக்கியுள்ளன.

"ஒரு பதிப்பில் என்னென்ன கூறுகள் இடம்பெறும், அவை எத்தகைய தேவைகளுக்கு உதவும், அவற்றை எப்படிப் பயன்படுத்துவது, என்பவற்றை எல்லாம் அறியத் தேடினால் வெறுமைதான் மிஞ்சும். பொருளடைவு தயாரிப்பதற்கான வழிகாட்டுதல்கூட அற்ற நிலையே இங்குள்ளது. பதிப்புத்துறையில் வெற்றுவெளி விரிந்து கிடக்கிறது. காலப் பழமையும் இலக்கியப் பெருவளமும் கொண்ட இந்தச் செம்மொழியின் நிலை மிகவும் இரங்கத்தக்கதாகும்" (பெருமாள் முருகன்; 2011, ப.12). இக்கூற்று பதிப்பு நிலைப்பாட்டில் நமக்கான வெறுமையை வெளிப்படுத்துகிறது. இத்தகைய வெளிகளே பதிப்புத் தொடர்பான ஆய்வுகளை முன்னெடுக்காத நிலையினை உணர்த்துகின்றன. தற்காலச் சூழலில் பதிப்புத் துறை சார்ந்த ஆய்வுகள் கவனத்தில் எடுத்துக்கொள்ளப்பட்டு வருகின்றன. பதிப்புத்துறை தனி இயக்கமாகச் செயல்படத் தொடங்கியிருக்கிறது. சங்கப் பதிப்பு பற்றிய தெளிவை எட்டாமல் சங்கப் பனுவலை ஆய்தல் என்பது கேள்விக்குரியதாகும்.

## பதிப்பு நெறி

பதிப்புலகில் ஒவ்வொருத்தருக்குமான தனித்தனிப் பதிப்பு முறையியல் உள்ளதே தவிரப் பொது நிலையிலான பதிப்பு முறையியலை யாரும் கவனப்படுத்தவில்லை/கவனம் கொள்ளவில்லை. ஆனால், முன்னைய பதிப்பாளர்கள் கையாண்ட நெறிமுறைகளை அடியொற்றிச் சில வரையறைகளை அறியமுடிகிறது. இதன் அடிப்படையில் நமக்கான பதிப்பாக்க நெறிகளை ஒருங்கிணைக்கலாம். மூலப் பனுவலைப் பொறுத்துத் தனது பதிப்பு நெறிகளை வகுத்துக்கொண்டனர். இருப்பினும் பாதிப்பாசிரியர்கள் மூலத்தைச் சிதைக்காமல் பாதுகாக்கும் எண்ணத்துடன் பதிப்பித்துள்ள முறை எண்ணத்தக்கதாகும்.

"பதிப்பு நெறியில் இன்றியமையாத ஒன்று எவ்வகையிலும் நூலாசிரியரின் சொற்களை மாற்றாது அப்படியே பதிப்பிக்க வேண்டும். அண்மைக்கால நூல்களுக்கே இத்தகைய பாடவேறுபாடு உண்டாகிறதெனின் தொன்மை நூல்களின் நிலை பற்றிச்

சொல்லவேண்டியதில்லை. முன்னையோர் பாடங்களில் ஐயம் ஏற்படின், அவற்றை அவ்வப் பக்கங்களின்கீழ் விளக்கங்களோடு பதிப்பித்த முன்னையோர் நெறியும் எண்ணத்தக்கது" (இ.சுந்தரமூர்த்தி; 2005, பக்.36-37). இக்கூற்று மூலத்தைப் பொன்னேபோல் போற்றுதல் என்ற கொள்கை பதிப்புலகில் அடிப்படையாக இருந்துள்ளது என்பதை அறியமுடிகிறது. எனினும், பதிப்பின் கவனக்குறைவாலும் பல பாடவேறுபாடுகள் தோன்றின. பதிப்பாசிரியர்கள் நேர்க்கோட்டு தன்மையுடன் செயல்பட்டுள்ளதை அறியமுடிகிறது. பதிப்பாசிரியருக்கு ஏற்படும் ஐயங்களை அதே பக்கங்களின்கீழ் கொடுப்பது என்பது பதிப்பாசிரியரின் பதிப்பு நேர்மையை வெளிக்காட்டுவதாகும். அண்மைக்காலப் பதிப்புகளில் அதிகப் பாடவேறுபாடுகள் வருவதைப் பார்க்க முடிகிறது. தற்காலப் பதிப்புகளைக் காட்டிலும் பண்டைக்காலப் பதிப்புகளே நேர்த்தியாக உள்ளதை விளங்கிக்கொள்ள முடிகிறது.

பதிப்பு பற்றிப் பொது மனத்தில் பொதிந்துள்ள பார்வை முழுக்க, பழந்தமிழ் இலக்கியப் பதிப்பு மரபு சார்ந்ததாகும். ஆனால், பதிப்பு என்ற பொதுச்சொல் பழந்தமிழ் இலக்கியத்திற்கு மட்டும் உரியதன்று. எல்லாக் காலத்திலும் வெளிவரும் பிரதி சார்ந்த பதிப்பு வரலாற்றை ஆராய்தல் அவசியமானதாகும்.

பதிப்பின் அடிப்படை படைப்பின்/மூலத்தின் மீதான நம்பகத்தன்மையை வாசகனுக்குக் கொடுப்பதாகும். வாசகர் மூலப்பிரதியை எளிதில் விளங்கிக்கொள்ளத் தேவையான வழிமுறைகளை ஏற்படுத்தித் தருவது பதிப்பின் முக்கிய நோக்கமாக இருந்துள்ளதை அறியமுடிகிறது.

பரவலாகச் 'செம்பதிப்பு' என்ற சொல் சமகாலத்தில் புழங்கி வருவதைக் காணமுடிகிறது. அம்முறையே, "இங்குச் செம்மை என்பதால் பிழை இன்மை, மூல ஆசிரியர் கருத்தை இயன்றளவும் சரியாகத் தருதல், தற்சார்பு கலவாமை என்பன எதிர்பார்க்கப்படுகின்றன" (வே. இரா. மாதவன்; 2010, ப.69). இக்கூற்று எத்தன்மையிலும் மூலத்தை நேர்த்தியாக வாசகருக்குத் தருவதே செம்மைப் பதிப்பின் நோக்கம், என்னும் சிந்தனைப் போக்கு நம்மிடத்தில் நிலவுவதை வெளிப்படுத்துகிறது. மூல நூலாசிரியர் எந்த நோக்கத்துடன் படைத்தாரோ, அந்நோக்கத்துடன் அப்பனுவல் பதிப்பிக்கப்பட வேண்டும் என்பதில் பதிப்பாசிரியர்கள் கவனமாக இருந்துள்ளதை அறியமுடிகிறது.

## மறுபதிப்பும் – பாடவேறுபாடும்

பதிப்புகள் என்பவை காலத் தேவைக்கு ஏற்ப பெரும் மாறுதல்களை உள்ளடக்கியவை. தொடக்ககாலப் பதிப்பாசிரியர்கள் அழிந்து கொண்டிருந்த ஓலைச்சுவடிகளில் உள்ள மூலங்களை வளர்ந்துவரும் அச்சுக்குக்கொண்டுவந்து

மூலத்தைக் காப்பதே அவர்களின் முதன்மை நோக்கமாக இருந்துள்ளன. மூலப்பதிப்பு தோன்றிய பின்னர் மறுபதிப்பு தோன்ற வேண்டிய அவசியம் என்ன என்ற வினா எழுதுவதும் எதார்த்தம். மூலப்பிரதிகளைப் பதிப்பிக்கும் பொழுது ஏற்படும் சில பிழைகளைத் திருத்தம் செய்யவே மறுபதிப்பு தோன்றுகிறது. மேலும், ஒரு காலத்தில் சரியென்று உடன்படும் கருத்து வருங்காலங்களில் மாறுபடுவதுண்டு. பொருள் புலப்பாட்டு நெறியில் ஏற்படும் தெளிவின்மை, காலத்தின் தேவை, போன்றவற்றின் காரணமாகவே மறுபதிப்பு, மறுஉரை, மீளாய்வு ஆகியவற்றை நிகழ்த்த வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. நவீன மொழி ஆளுமைக்கு ஏற்ப உரைப் பதிப்பு மாற்றமும் தேவையாகிறது.

“அச்சு நூல்கள் ஏற்பட்ட பின்னரும் மூலபாட ஆய்வின் தேவை குறையவில்லை. ஏனெனில், ஆசிரியர் இயற்றிய மூலபாடம் பதிப்பின்போது பல காரணங்களினால் மாறுபட வழிகள் உண்டு. அச்சு கோப்பவரால் நிகழும் பிழைகள், அச்சுப்படி திருத்துபவரால் நிகழும் பிழைகள், அச்சு யந்திரத்தால் நிகழும் பிழைகள் முதலியன அவற்றுள் சில” (அ. விநாயகமூர்த்தி; 1994, ப.40). மூலப்பிரதியை அச்சுக்கு ஏற்றும்பொழுது ஏற்படும் பிழைகள் என்பவை கவனிக்கப்பட வேண்டியவையாகும். இப்பிழைகளுக்குக் காரணம் பலவாகும். ஒரு மூலப்பிரதியை உருவாக்க ஒருவர் உழைப்பு கவனம் மட்டும் போதுவதில்லை. மாறாகப் பலரின் உதவிகள் தேவையாகிறது. அச்சுகோர்ப்பவர்களின் கருத்துத் தெளிவு, இயந்திரம் செயல்படுத்துபவரின் கவனம் இவை அனைத்தும் ஒருங்கே சேர்ந்த உழைப்பின் வெளிப்பாடு மூலப்பிரதியாகும். இத்தகைய பின்னணியில் உருவாகும் பிழைகளைத் திருத்த/மாற்ற மறுபதிப்பு தேவையாகிறது.

### பாடவேறுபாடு

அச்சு இயந்திரங்களால் மட்டும் பிழைகள், பாடவேறுபாடு நிகழ்வதில்லை. மூலங்கள் பல்வேறு நிலைகளைத் தாண்டி பதிப்பு பிரதியாக வெளிவருகின்றன. இந்நிலைப்பாட்டு வெளிகளில் ஒவ்வொன்றிலும் பிழைகள், பாடவேறுபாடுகள் ஏற்படுகின்றன. அம்முறையே, “மூலநூல் வாய்மொழியாக வழங்கிப் பின்னர் எழுத்துவடிவம் பெறும்போது பாடவேறுபாடுகள் தோன்றுகின்றன. பின்பு அந்த நூலுக்கு உரையெழுத முற்படுபவர், அதற்குப் பல்வேறிடங்களிலும் கிடைக்கும் பாடங்களையும் முதலில் தொகுத்து ஒன்றற்கொன்று ஒப்பு நோக்குகின்றார். அவற்றுள் சிறந்த பாடமாகத் தம் கருதுவதனை மூலப்பாடமாகக் கொள்கிறார்” (அ.விநாயகமூர்த்தி; 1994, பக்.6-7)

இக்கூற்றின் வாயிலாகப் பதிப்பாசிரியராலும், உரையாசிரியர்களின் சார்புத் தன்மையாலும் பாடவேறுபாடு ஏற்படுவதை உய்த்துணரலாம்.

ஏட்டுவழி பாடத்திலும் வாய்மொழிப் பாடத்திலும் பாடவேறுபாடுகள் நிகழ வாய்ப்பிருக்கிறது. மூலநூல் எழுந்த காலத்திற்கும், பதிப்பிக்கப்படும் காலத்திற்கும் இடையே உள்ள சமூக இடைவெளி பாடவேறுபாடு ஏற்பட ஒரு காரணமாக இருக்கிறது. நூலின் தன்மையையும், அதனைப் பதிப்பிப்பவரைப் பொறுத்தும் பாடவேறுபாடுகள் அதிகரிக்கலாம்.

“ஒருவரது பதிப்பை அவரது காலத்திற்குப் பிறகு மறுபதிப்பு செய்யும்போது நேரும் சிக்கல்கள் ஏராளம். இதற்கு எந்த வகையான வழிகாட்டு நெறிமுறைகளும் உருவாக்கப்படவில்லை. ஆகவே மனம்போனபடி மறுபதிப்புகள் அச்சிடப்படுகின்றன. ஒரு பதிப்பிற்குரிய முக்கியத்துவம் என்ன என்பதை மறுபதிப்பு செய்வோர் உணர்ந்திருக்க வேண்டும்”(பெருமாள் முருகன்; 2011, ப.22). இக்கூற்று ஒரு பதிப்பை மறுபதிப்பு செய்யும்பொழுது மூலப்பிரதி எவ்வகையிலும் பாதிக்கப்படக் கூடாது என்பதை உணர்த்துகிறது. பதிப்பு/மறுபதிப்பிற்கான வழிகாட்டு நெறிமுறைகள் இன்மையால் தனது தேவைக்கு ஏற்ப எந்த நிபந்தனையும் இன்றி மறுபதிப்பு செய்யத் தொடங்கினர். அதே போன்று மறுபதிப்பு செய்வோர் தம் புலமைத் திறத்தைக் காட்டும் வகையில் மூலபாடத்தில் பெரும் மாற்றங்களை ஏற்படுத்தினர். சில மறுபதிப்புகள் மாற்றம் என்ற பெயரில் மூலங்களின் உயிர்ப்புத் தன்மையை அழிக்கவும் செய்தன என்பது பரவலாக நிலவிவரும் கருத்து.

“பிரதியில் பிழைகளும் பாடபேதங்களும் ஏற்படக் காரணம் எவை எனின், ஏடு படிப்பவர் அல்லது எழுதுபவர் அதிகம் கல்லாதவராயிருந்தாலோ அல்லது கவனக்குறைவு உடையவராகவோ இருந்தால் பிழைகள் ஏற்படலாம். கல்லாவிடின், அதிகமாகக் கற்றவர் பாடங்களைப் படிக்கும்போது, தம் சொந்தக் கருத்துக்களையும் புகுத்திவிடுவதன் காரணமாகவும் பாடபேதங்கள் - செருகு கவிகள் முதலாயின மலிந்து விடுகின்றன. இவையேயன்றி அதிகமாகப் பொருள் கொடுத்து ஏட்டுப் பிரதிகளை வாங்க இயலாதோர் பாடங்களை மனப்பாடம் செய்துகொண்டு தம் நினைவாற்றலில் உள்ளவாறு பாடம் சொல்லி வந்தமையாலும் பாடபேதங்கள் தோன்றின” (ப.தாமரைக்கண்ணன்; 2004, ப.24). பதிப்பாசிரியர்களின் பதிப்புரைகளில் ஓரளவு பதிப்பு நெறிமுறைகளைக் கண்டறிய வாய்ப்பிருக்கிறது. பதிப்பு தொடர்பான பல்வேறு ஐயங்களுக்கு, உரைகளின் நடுவே சில குறிப்புகளைக் காணமுடிகிறது. உரைகளின் வாயிலாகவும் பதிப்பு நெறிகளைத் தொகுக்க வாய்ப்பு இருக்கிறது.

## பதிப்புரை - முகவுரை

எந்த ஒரு பனுவலும் பதிப்பிக்கப்படும்போது, அதன் மூலத்தோடு அப்பதிப்பு குறித்த பதிப்பாளரின் கருத்துகள், மதிப்பீடுகள் முதலானவை பதிப்புரை, முகவுரை, அணிந்துரை எனப் பதிப்பினூடே வெளிப்படுத்தப்படுகின்றன. இதனடிப்படையில், பதிப்புரை, முகவுரை இவை இரண்டும் ஒன்றா என்ற வினாவை முன்வைத்து விவாதிக்கத் தொடங்குவோம். நூலின் முகம் போன்றதே இவை இரண்டும். அம்முறையே, "பதிப்பு முன்னுரைகள் முக்கியமானவை. ஆனால் அடுத்தடுத்துப் பதிப்புகள் வரும்போது முந்தைய பதிப்பு முன்னுரைகளை நீக்கிவிடவோ அவற்றில் இருந்த செய்திகள் சிலவற்றை எடுத்துவிடவோ செய்திருக்கிறார். குறிப்பாக, முதல் பதிப்புக்கு உதவிய புரவலர்களின் பெயர்களை அடுத்த பதிப்பில் நீக்கிவிடுகிறார். ஆனால், இன்றைய சூழலில் அவை அவசியமானவையாக இருக்கின்றன" (மேலது; 2011, ப. 21). பதிப்புரை, முன்னுரைகளை நீக்குவதால் அப்பிரதியின் உயிர்ப்புத்தன்மை கெட்டு விடுகிறது. அப்பதிப்பின் சமூகப் பின்னணி மறைக்கப்படுகிறது. இதனால், அக்காலச் சமூகப் பின்புலத்தை அறிய முடிவதில்லை. மேலும் பிரதிகளை எளிதில் புரிந்துகொள்ளவும் முடிவதில்லை. பதிப்பு முன்னுரைகள் என்பவை மூலப்பிரதியின் வழித்தடங்களாகும். எனவே, பதிப்பு முன்னுரைகள் நீக்கப்பட வேண்டிய அவசியமில்லை. பண்டைய இலக்கண, இலக்கியப் பதிப்புரைகள்/பாயிரங்கள் இன்றைய முகவுரைகள் ஆகும். எனவே பதிப்புரை, முகவுரை இரண்டும் ஒன்றானதே என்ற முடிவை எட்டலாம். உ.வே.சா. வின் பதிப்புகளில் முகவுரை, பதிப்புரை இவை இரண்டும் ஒருங்கே இருப்பதும் கவனத்திற்குரியது.

## பதிப்பு வேறுபாடு

நேர்க்கோட்டுத் தன்மையிலான பதிப்பு முறையியலில் பல பதிப்புகள் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. அவ்வகையான பதிப்புகள் இருவகையாகப் பிரதியாக்கம் செய்யப்படுகின்றன. அவை முறையே ஓலைச்சுவடி, காகிதச் சுவடிகள் என்பவையாகும். இவை இரண்டுக்குமான பதிப்பு முறைகள் வேறானவை. அம்முறையே, "ஓலைச் சுவடியிலுள்ளவற்றைப் பதிப்பிப்பதற்கும் காகிதச் சுவடியில் உள்ளவற்றைப் பதிப்பிப்பதற்கும் பதிப்புப்பணி நிலையில் வேறுபாடு உண்டு. காகிதச் சுவடியைப் பதிப்பதென்பது அரிசியைக் கடையிலிருந்து வாங்கிச் சமைப்பதற்கு ஒப்பாகும். ஓலைச் சுவடியைப் பதிப்பிப்பதென்பது கழனியில் நெற்கதிர்களாக இருப்பவற்றைக் களத்தில் கொண்டுவந்து நெல்மணிகளாக்கி அவற்றை வேகவைத்து உலர்த்தி உமி நீக்கி அரிசியாக்கிச் சமைப்பதற்கு ஒப்பாகும்" (சி. இலட்சுமணன்; 2004, ப. 46). இக்கூற்று

ஓலையில் உள்ளவற்றைப் பதிப்பிப்பதே மிகவும் கடினம் என்பதை அறிவிக்கிறது. இத்தகைய பின்புலத்தில் நம் முன்னைய பதிப்பாசிரியர்களை இனம்காணலாம். பெரும்பாலான பதிப்புகள் காகிதப் பிரதிகளைக் கொண்டு நிகழ்ந்துள்ளதையும் அறியமுடிகிறது. அதேபோன்று உரைகளை வைத்துக்கொண்டு மூலத்தினைச் செப்பம் செய்யும் வேலையும் நிகழ்ந்துள்ளது என்பதையும் கவனத்தில் கொள்ளவேண்டியிருக்கிறது.

## பதிப்பு அரசியல்

எந்த ஒரு நிகழ்வும் எதற்காக நிகழ்த்தப்படுகிறது என்ற விடையுடனே நிகழ்த்தப்படுகிறது. அவ்வகையில், பதிப்புகள் யாரை நோக்கி வெளிவருகின்றன என்ற வினாவை அடிப்படையாக வைத்து ஆராய்வோம். தொடக்ககாலப் பதிப்பும் பிற்காலப் பதிப்பும் பெரும்மாறுதல்களைத் தாங்கியுள்ளது. தொடக்ககாலப் பதிப்புகள் சமூக இருத்தலை, வரலாற்றுத் தேவையை அடியொற்றி எழுதப்பட்டவை. ஆனால், பிற்காலப் பதிப்புகளில் ஒரு சில பதிப்பதிப்புகள் வியாபார நோக்கில் பதிப்பிக்கப்பட்டவையாகும். அதேபோன்று ஜனரஞ்சக நோக்கிலும் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

“கற்றார்க்கு மட்டுமின்றி மற்றோருக்கும் நூல் எழுதும் நிலை தோன்றியது. தொழிற்புரட்சி, அச்சு இயந்திர வளர்ச்சி முதலிய மாற்றங்களால் புதிய கல்விச் சிந்தனைகள் உருவாயின. குரு- சீடர் எனும் கல்வி நெறி மாறித் திண்ணைப் பள்ளிக்கூடங்களும், கிறிஸ்துவ மிஷினரிப் பள்ளிகளும் தோன்றலாயின. இதற்குத் தக்கவாறு பாடநூல்களும் தேவைப்பட்டன” (இ.சுந்தரமூர்த்தி; 2005, பக்.36-37). படைப்புகள், பதிப்புகள் என்பவை காலத் தேவைக்கு ஏற்ப உருவாக்கப்படுபவை. ஒருகாலத்தில் ஒரே நோக்கில் பதிப்பிக்கப்பட்ட பனுவல்கள், பின்னர், ஆய்வியல் நோக்கிலான பதிப்பு, இலக்கிய நோக்கிலான பதிப்பு, வினா-விடை நோக்கிலான பதிப்பு, ஜனரஞ்சக நோக்கிலான பதிப்பு எனச் சமூகத் தேவைக்கு ஏற்பப் பதிப்புக்கான தேவைமாறியிருக்கிறது.

## மூலபாட ஆய்வு

மூலப்பிரதியைப் பதிப்பித்தல், உரை எழுதுதல் மூலத்தைச் செப்பம் செய்தல் என்ற நோக்கில் மூலத்தில் பெரும் மாற்றம் நிகழ்ந்துவிடுகிறது. இவ்வகையான வேறுபாடு கொண்ட மூலத்தைப் பிற்காலங்களில் வரும் வாசகன் நம்பவேண்டி இருக்கிறது. ஆனால் அது உண்மையான மூலமா என்று பரிசோதிக்காமல் ஆய்வு நிகழ்த்தும் போக்கினைக் காணமுடிகிறது. இதனால் ஆய்வுலகில் அப்பனுவல் குறித்த தவறான புரிதல் ஏற்படும் அபாயம் உள்ளது. எனவே, நம்பகத்தன்மையான மூலங்கள் தற்கால ஆய்விற்குத்

தேவையாகின்றன. அதேபோன்று மூலப்பாட ஆய்வுப் பின்புல அரசியலையும் கவனத்தில் கொண்டு மூலத்தை அடையாளப்படுத்த வேண்டிய தேவையுள்ளது. இந்நிலையில், செம்மொழி ஆய்வு நிறுவனம் மூலத்தை மீட்டுருவாக்கம் செய்யத் தொடங்கியுள்ளது.

“மூலப்பாட ஆராய்ச்சி செய்யும்போது மூலநூல் ஆசிரியருக்குத் தொடர்பான அனைத்துச் செய்திகளையும், படியெடுப்பவர் தொடர்பான செய்திகளையும் கவனத்தில் கொள்ளுதல் வேண்டும்; நூலின் அகச்சான்றுகள் (Internal Evidences) ஆகிய ஆசிரியரது நடை, மூலக்கருத்துக்கள் வரலாற்றுப்போக்கு ஆகியவற்றையும் புறச்சான்றுகள் (External Evidence) ஆகிய நூல் எழுந்த காலம், ஏடு எழுதப்பட்ட காலம், ஏடு கிடைத்த இடவகை, அதன் வரலாற்றுப் பின்னணி, அவ்வேட்டுடன் ஒத்த பிற ஏடுகளில் காணும் மாறுபாடுகள் திருத்தங்கள் ஆகியவற்றையும் அறிவியலுக்கொப்ப ஆராய்தல் வேண்டும்” (அ.விநாயகமூர்த்தி; 1978, பக்.16,17). இக்கூற்று மூலபாட ஆய்வில் சமூகப் பின்புலத்தையும் கவனத்தில் கொள்ளவேண்டிய தேவையை உணர்த்துகிறது.

மூல ஆய்வு என்பது ஒரு பனுவல் பயணிக்கும் தொடர்ச்சியான காலத்தை முன்னெடுப்பதாகும். அதாவது மூலம் எழுந்த காலம், ஏடு எழுதப்பட்ட காலம், தொகுக்கப்பட்ட காலம், உரை எழுதப்பட்ட காலம், ஆய்வு நிகழ்த்தப்படும் காலம், ஒரு பனுவலைப் பல காலப்பின்னணியின் செயற்பாட்டோடு இணைத்து அணுகவேண்டிய தேவை உள்ளது. இப்பின்புலத்தில் ஆய்ந்து வெளிப்படுத்தலே மூலபாடத் தெளிவை ஏற்படுத்தும்.

நூல் எழுந்த காலத்துக் கல்வெட்டுகள், செப்பேடுகள் முதலியவற்றை ஆராய்தலும் மூலபாட ஆய்வுக்கு உகந்ததாகும். மூலபாட ஆய்வில் ஈடுபடுபவர் ஏடுகளை மட்டுமல்லாது பிறவகை ஆவணங்களையும் ஆய்தல் வேண்டும். ஒரு முதன்மை மூலத்தை அறியப் பல பிரதிகள், பல உரைப்பிரதிகளை ஆய்தல் வேண்டும். புறநானூற்றை ஆராய, உ.வே.சா. மேற்கொண்ட சிரமங்கள், அவர் கூற்றின் வழியே “புறநானூற்றை ஆராய்ச்சி செய்வதற்குச் சங்க நூல் முழுவதையும் ஆராய்ச்சி செய்வது அவசியமாயிற்று. இதனால் எனக்குப் பன்மடங்கு இன்பம் உண்டானாலும் சிரமமும் பன்மடங்காயிற்று” (உ.வே.சா.; 1978, ப.478). உரையாசிரியர்கள், பதிப்பாசிரியர்கள் ஒரு மூலபாடத் தெளிவை எட்டச் சங்கப் பனுவல் முழுவதையும் ஆராய்ந்த திறனை அறியமுடிகிறது. மூலப்பிரதிகள் அதிகமாக உரைகளின் வாயிலாகத் திரட்டப்பட்டுள்ளதைப் பதிப்பாசிரியர்களின் வாயிலாக உய்த்துணர முடிகிறது. அதே போன்று ஒரு மூலத்தை நிலைநாட்ட மற்றொரு மூலப்பிரதியின் பதிப்பை நோக்க வேண்டிய தேவை ஏற்படுகிறது.

## சங்க இலக்கிய உரைப்பதிப்பு மரபு

பழங்காலப் பதிப்புகள் என்பவை தற்கால வரலாற்றிற்கு ஆதாரமாக மாறுகின்றன. உலக வரலாறு அனைத்தும் பதிப்பு/படைப்பின் வாயிலாகவே கட்டிக்காக்கப்படுகிறது. வருங்காலத் தலைமுறைக்கு வரலாற்றை எடுத்துச் செல்வது உரைப் பதிப்பு மரபாகும். ஒவ்வொரு கால வாழ்வியலையும் அடுத்த தலைமுறைக்கு நகர்த்துவது பதிப்பு/படைப்புகளேயாகும். நமது பண்டையகால வாழ்வியல் நெறிகளைக் கொண்டது சங்கப் பனுவல். தமிழிலக்கிய ஆய்வு பல்வேறு துறைகளில் இன்று சிறந்து விளங்குவதற்கு அடிப்படையாக இருப்பவை பழந்தமிழ் உரைப்பதிப்புகளேயாகும். அப்பனுவல்கள் எழுதப்பட்ட காலம் சார்ந்த மொழியும், அதற்கு உரை எழுந்த காலத்து மொழியும், பதிப்பித்த காலத்து மொழியும் ஒன்றாக இருப்பதற்கு வாய்ப்புகள் இல்லை. இந்நிலையில் அப்பனுவலை ஆய்வு செய்யும்போது மட்டும் சமகால மொழியில் அல்லாமல் பழங்கால மொழியில் எழுதவேண்டும் என்று வலிந்து கூறுவது கேள்விக்கு உட்படுத்தப்படவேணடிய ஒன்று. இந்நிலையில் பழந்தமிழ்ப் பனுவல்கள் குறித்த ஆய்வினை மேற்கொள்ளச் சமகாலத்தில் நவீனம் அல்லாத ஒரு மொழிமரபு தேவைப்படுகிறதோ என்ற வினாவும் வலுக்கிறது.

## மரபு - நவீனம்

மரபு நவீனம் என்ற பொருண்மை, பண்பாட்டை ஆராயும் களமாக அல்லாமல், மொழிக்கான களமாக இங்கு முன்னெடுக்கப்படுகிறது. சங்கப் பனுவல்கள் உயர்ந்த நோக்கிலான பனுவல்கள் என்பதில் மாற்றம் இல்லை. அப்பனுவலை இன்று எம்மொழியில் பேசுவது எழுதுவது என்பதே விவாதப் பொருளாகும். தற்காலத் தமிழியல் ஆய்வுலகம் இரண்டு பிரிவுகளாகப் பிரிந்து நிற்கிறது.

ஒன்று மரபுக்கு எதிரானவர்கள், மற்றொன்று நவீனத்திற்கு எதிரானவர்கள். மரபுவாதிகள் நவீனத்தில் ஒன்றுமில்லை; அது குப்பை என்று சொல்வதும், நவீனவாதிகள் மரபுகள் வெறும் பழங்குப்பை என்று ஒதுக்குவதுமான இருவேறு போக்குகள் நிலவுகின்றன. மரபுவாதிகள் நவீனத்தைத் தீட்டாகவும், நவீனவாதிகள் மரபைத் தீட்டாகவும் எண்ணும் போக்கு மாறவேண்டும்.

மரபான இலக்கியங்களைச் சமகால மொழியில் பேசுதல் எழுதுதல் வேண்டும். சமகால வாசகருக்கான வாசிப்பிற்கான மொழியுடன் தற்காலப் பதிப்புகள் வெளிவருதல், அவசியம். இக்கருத்தை வலுவூட்ட “சமகால வாசகருடன், சமகால வாழ்க்கையுடன் சமகால இலக்கியம், அது செவ்வியல் இலக்கியமாக இருப்பினும் அதன் வாசிப்புப் பயிற்சி அருகிப்போகும். அந்நிலை சங்க இலக்கியத்திற் நேராமல் இருக்கவும்

பரவலாக்கவும் கவிதையியல் நோக்கிலான பதிப்பு உதவும்" (பெருமாள் முருகன்; 2011; ப. 40). சமகால வாசகர்களுக்கான மொழியிலான ஆய்வுப் பதிப்புகள் வருதல் வேண்டும். மூலப் பனுவலுக்கான மொழியை அப்படியே ஏற்றுக்கொண்டு அதனைச் சமகாலப் புரிதல்களுக்கு ஏற்ற மொழியில் உரைப் பதிப்புகள் வெளிவருதல் சிறப்பு. இந்நோக்கிலான பதிப்புகள் வருமேயானால் எக்காலத்திற்கும் சங்கப் பனுவல் சென்றுகொண்டே இருக்கும். சங்கப் பனுவலின் கருத்துகள் எக்கால நவீனக் கோட்பாட்டிற்கும் இடமளிக்க வல்லவை. சங்கப் பனுவல்கள் பல நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து இன்றும் நிலைபெற்று இருப்பதற்கு முக்கியக் காரணம் அது ஒவ்வொருகால மொழிப் பண்பாட்டிற்கு ஏற்றவாறு தன்னைத் தகவமைத்துக்கொண்டவையே, அவ்வக்கால மொழியினூடே வாசிக்கப்பட்டு ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டு உயிர்ப்புத்தன்மையுடன் இருக்கிறது என்பது நாம் அறிந்ததே. ஆனால், அப்பனுவல் ஒவ்வொரு கால மொழிக்கும் ஏற்றவாறு வாசிக்கப்பட்டு ஆராயப்பட்டுவதற்குத் தற்காலத்தைப் போலவே பல எதிர்ப்புகளையும் சவால்களையும் சந்தித்திருக்கவேண்டும் என்பதும் இதன்வழி அறியக்கிடைக்கிறது.

## பனுவல் – முடக்கம்

தமிழ் மொழிக்குச் செம்மொழித் தகுதி கிடைக்கவில்லை என்றால், மரபு சார்ந்த ஆய்வுகள் இன்றைக்கு முடங்கி இருக்கும். செம்மொழித் தகுதியே இன்னும் மரபு சார்ந்த ஆய்வுகள் நிகழக் காரணமாய் இருக்கின்றது. எத்தகைய பழமையான மொழியாயினும் மாறுதல்களை எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது. பழைய மரபுகளை மட்டும் நாம் போற்றிக்கொண்டு இருந்தால் நமக்கு மிஞ்சுவது வெறும் காகிதப் பிரதிகளேயாகும். இதில் பொதிந்துள்ள கருத்தாக்கங்கள் சமகாலச் சூழலில் முடங்கிப்போகக் கூடும்.

மரபுவாதிகள், நவீனங்களை ஏற்றலும் நவீனவாதிகள் மரபுகளை ஏற்றலும் தேவையாகிறது. மரபான கருத்தாக்கங்களை நவீன மொழி வாயிலாகப் பதிவு செய்தல் அவசியம். இவ்வகையான நவீன/சமகால மொழித் தேர்வே மரபு. இலக்கியங்களை எதிர்காலத்திற்கு இட்டுச்செல்லும். மரபுவாதிகளும், நவீனவாதிகளும் இணைந்து செயல்படவில்லை என்றால் இலக்கிய 'வாசிப்பு இடைவெளி' ஏற்படுவது திண்ணம். எனவே கருத்தாக்கங்களைச் சமகால மொழியில் பேசுதல், எழுதுதல் அவசியமாகிறது. மரபான மொழிகளிலே அனைத்தையும் எழுதிவந்தால் வருங்காலம் மரபான மொழிதான் இக்கால மொழி என்று தவறான புரிதலுக்குச் சென்றுவிடும் அபாயம் உள்ளது. மேலும், எதிர்வரும் தலைமுறையினருக்கு மரபான மொழியைப் புரிந்துகொள்வதில் ஏற்படும் சமகாலச் சிக்கல்கள் கூடுதலாக இருக்கக்கூடும்.

## சங்கப் பதிப்பு

சங்க இலக்கியப் பதிப்புகளை நோக்கினால் இரண்டு வகையான பதிப்புத் தன்மைகள் தென்படுகின்றன. ஒன்று ஆராய்ச்சிப் பதிப்பு, மற்றொன்று பாடத்திட்டப் பதிப்பு. இவை இரண்டுமே சமகால நவீன இலக்கிய வாசகருக்கு உகந்தவை அல்ல என்று தோன்றுகிறது. அப்படியானால் சங்கப் பதிப்புகள் எதனை மையமிட்டு நகர்கின்றன. பழமைக்கண்கொண்டே பதிப்பிக்கப்பட்டுள்ளன என்பது தெளிவு. அப்பொழுது சங்கப் பதிப்புகள் ஒரு சாராருக்கு மட்டுமே உரியனவாக முடங்கிவிடக்கூடும்.

பண்டைய இலக்கியங்களைப் பற்றிய பழைய பார்வைகளை அப்படியே பின்பற்றிக் கொண்டிருப்பதன் மூலம் அவற்றை இன்றைய தலைமுறைகளுக்கு எடுத்துச் செல்ல முடியாது. அவற்றில் இன்றைய தலைமுறையினர் நுழைவதற்கு உதவும் புதுப்புதுப் பார்வைகளை உருவாக்கித் தருவது அவசியம். கல்விப்புலம், ஆய்வுப்புலம், இலக்கியப் புலத்திற்கான ஆய்வுப்பார்வைகளைத் தரும் பதிப்புகளும் உரைகளும் இன்றைய தேவையாகின்றன.

இன்றைய வாசகருக்குக் கிடைக்கும் பதிப்புகள் மரபான இலக்கணச் சட்டகத்தினுள் சங்கப் பாக்களை அடைத்துப் பார்க்கும் போக்கைக் கொண்டுள்ளன. இருந்தும் சங்கப் பனுவல்களில் பாடபேதங்கள் அதிகம். அம்முறையே, “ஒருநூலுக்குப் பல பதிப்புகள் உண்டாவதற்கு முக்கியமான காரணம் பாடபேதங்கள், சங்க இலக்கிய நூல்களில் பாடபேதங்களின் எண்ணிக்கை மிகுதி. ஆனால் பாடபேதங்களை அடியொற்றி வந்த பதிப்புகள் குறைவு” (பெருமாள் முருகன்; 2011, ப.18) பல ஆண்டுகளாகப் பல பதிப்புகளைக் கண்ட சங்கப் பனுவலை இன்னும் பாடபேதமற்ற பதிப்பாகக் கொண்டுவர முடியவில்லை. தமிழியற்புலத்தில் பல பழந்தமிழ் ஆய்வாளர்கள், பதிப்பாசிரியர்கள் பலர் இருந்தும் இன்னும் பாடபேதமற்ற பதிப்புகள் இல்லை என்பது தமிழ்ச்சமூகம் வருந்தத்தக்க ஒன்று.

## பதிப்பும் ஆய்வும்

முதலில் தரமான நூல் எது என்பதை வரையறை செய்யப் பதிப்பகத்தை நோக்கவேண்டியுள்ளது. இன்றைய சூழலில், பொருள் புலப்பாட்டைவிடப் பதிப்பகமே நூலின் தரத்தைத் தீர்மானிக்கிறது. அம்முறையே, “ஒரு நூலின் தரம் என்பது அந்நூல் நுவலும் செய்திகளை மட்டும் பொறுத்ததன்று. அந்நூலின் பதிப்பு முறைகளையும் உள்ளடக்கியதாகும். எனவே நூல் உருவாக்கத்தில் பதிப்பு முறை முக்கிய இடத்தைப் பெறுகிறது. நூல் சிறந்ததாக இருந்தும் அந்நூலின் பதிப்பு முறை சிறப்புற அமையவில்லையெனில் அந்நூலின் தரத்தையே அது குறைத்து விடும். எனவே சிறந்த

பதிப்பு நெறிமுறைகளைக் கையாண்டு நூல்களைப் பதிப்பிக்க வேண்டும். குறிப்பாகத் தமிழில் தரமான பதிப்புகள் வெளிவரவேண்டும். அதற்கு முன்னோடியாகப் பதிப்பு நெறிமுறைகள் எவை எவை என இனங்காணல் வேண்டும்" (சி. இலட்சுமணன்; 2011, ப.2). இக்கூற்று நூலின் தரத்தினைப் பதிப்புதான் தீர்மானிக்கிறது என்பதை வெளிப்படுத்துகிறது. எனவே, நூலின் தரம் கண்டு பதிப்பகம் கவனிப்பதைத் தவிர்த்து, பதிப்பைக் கண்டு நூல் கவனிக்கப்படும் காலச்சூழல் ஏற்பட்டுள்ளது என்பதை ஒருவகையில் இக்கூற்றும் உறுதிசெய்கிறது. எனவே தரமான பதிப்புகளே நூலின் தரத்தை வெளிப்படுத்தும் என்பதில் ஐயமில்லை.

ஆராய்ச்சிப் பதிப்புகள் பழைய உரைகளைக் கொண்டுள்ளவை அல்லது பழைய உரைகளை முன்மாதிரியாகக் கொண்டு எழுதப்பட்டவை. இத்தகைய பதிப்புகள் ஒரு நூலில் உள்ள பல்வேறு வகையான தகவல்களைத் திரட்டிக் கொடுக்கப்பட்டிருப்பதை வெளிப்படுத்துகின்றன. சங்க இலக்கியம் குறித்து ஆய்வோருக்கு இத்தகைய படைப்புகள் பயன்படக்கூடியவை. இப்பதிப்புகளில் உள்ள உரைகள் பதிப்பிற்கான மரபிலக்கணத்தை முழுதும் பின்பற்றியவை.

## பதிப்பும் திணை, துறை பகுப்பும்

சங்க இலக்கியப் பதிப்புமுறை என்பது மரபு கட்டுப்பாட்டிற்கு உட்பட்டது. சங்க இலக்கியம் தமிழர் பெருமை பேசுவதற்கானது, என்னும் ஒற்றைத் தன்மையில் கட்டமைக்கப்பட்ட காரணத்தால் பல்நோக்கு ஆய்வுகள் பெருகத் தவறின. திணை, துறைப் பகுப்பு என்பது படைப்பைப் படைப்பாளர் வசமே நிறுத்துவது. திணை, துறை அற்ற பதிப்பு/பகுப்பு என்பது பின்நவீனத்துவக் கோட்பாடான படைப்பாளன் இறந்துவிட்டான் என்ற சுதந்திர வாசிப்பை முன் வைப்பது. பின்நவீனத்துவக் கோட்பாடானது சங்கப் படைப்பை வாசகன் எக்காலத்திற்கும் பொருத்திப் புரிந்துகொள்ள உதவுகிறது. வாசகன் குறிப்பிட்ட வரையறைக்குள் வாசித்துக் குறிப்பிட்ட பொருளை மட்டும் புரிந்துகொள்ள வேண்டிய தேவையில்லை. வாசகன், வாசிப்பு சார்ந்த பிரதியாகப் பனுவல் மாற்றப்படுகிறது. எனவே திணை, துறை பதிப்பு என்பது வாசிப்பு/புரிதல் என்பதைத் தடை செய்வதாகும் என்னும் கருத்தும் கவனங்கொள்ளத்தக்கது.

திணை, துறை என்னும் அகப்பொருள் இலக்கணச் செய்திகள் ஒரு பாடலைக் குறிப்பிட்ட ஒற்றைப் பொருளுக்குள் கொண்டு நிறுத்துகின்றன. வாசகர் சுதந்திரமாகப் பொருள்கொள்ள முடிவதில்லை. சில பாடல்களில் எதிரான பொருள் புலப்பாட்டைத் துறைக் குறிப்புகள் தருகின்றன. அம்முறையே, "திணை, துறைக் குறிப்புகள் நீக்கப்பட்ட

நவீன வாசகர் நோக்கிலான பதிப்பாகும். இப்பதிப்பு சமகாலக்கவிதை வாசகரைச் சங்கக் கவிதைகளைநோக்கி ஈர்க்கும். அவற்றை வரலாற்று தரவுகளாக, பண்பாட்டு ஆவணமாக மட்டும் கருதும் போக்கிலிருந்து மாற்றிக் கவிதையியல் நோக்கில் பார்க்க உதவும்"(பெருமாள் முருகன்; 2011, ப.40). இக்கூற்றின் வாயிலாகப் பதிப்பு எத்தகைய நோக்கில் அமைய வேண்டும் என்பதை அறியலாம். சமகால நவீனக் கவிதைகளும், பழங்காலச் சங்கக் கவிதைகளும் ஒருவகையான உரையாடல் தன்மையில் அமைந்திருப்பதைக் கவனிக்க முடிகிறது. நவீனங்கள் என்பவையும் மரபை நோக்கியே செல்கின்றன என்பதற்கு இதுவும் ஒரு சான்றாகும்.

சங்கக் கவிதையும், நவீனக் கவிதையும் ஒரேவகையான மொழி ஆளுமையைக் கையாள்வது கவனிக்கத்தக்கதாகும். சமகால வாழ்வியல் மொழியாகவே சங்கக் கவிதையைக் காணமுடிகிறது. இப்பொழுது எழுதப்படும் கவிதைகளும் பல பொருண்மைகளை ஏற்படுத்துவதைப் பார்க்கமுடிகிறது. அதே போல் சங்கக் கவிதைகளும் எக்கால உரையாளரும் புதுப்புதுப் பொருள் புரிதலை முன்வைப்பதையும் கவனிக்க முடிகிறது. சங்கக் கவிதையும் நவீனக் கவிதையும் நடப்பியல்/எதார்த்த மொழிகளைப் பேசுவதாகக் கருத வாய்ப்புள்ளது.

## சங்க இலக்கிய உரைப் பதிப்பு முன்னோடிகள்

சங்கப் பனுவல்களை வரலாற்றுக் கண்கொண்டு ஆராய்ந்தோர் சிலர். இலக்கியக் கண்கொண்டு ஆராய்ந்தோர் சிலர். இவை இரண்டையும் இணைத்துப் பார்த்தவர்கள் ஒரு சிலர் மட்டுமே. இந்த வகையில் சங்க இலக்கிய உரைப்பதிப்பு முன்னோடிகளை வரையறை செய்யமுடிகிறது. அதேபோன்று பதிப்பாக்கத்தை மூன்று நிலைகளாகப் பகுத்துப் பார்க்கவேண்டி இருக்கிறது. இத்தகைய பின்புலத்தில் பதிப்பாசிரியர்களையும் பதிப்புக் காலத்தையும் கண்டறிய வேண்டியது அவசியம்.

பதிப்பு என்ற நிகழ்வுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட பல வரலாறுகள் எழுத முடியும். எழுதவேண்டிய தேவையும் இருக்கிறது. பதிப்பாசிரியர்களைப் பற்றிய வரலாறு, பதிப்பிக்கப்பட்ட நூல்கள் பற்றிய வரலாறு, பதிப்பிக்கப்பட்ட முறைமைகள் பற்றிய வரலாறு, பதிப்பித்த நிறுவனங்கள் பற்றிய வரலாறு, பதிப்பிக்கப்பட்ட நூல்கள் மீதான சமூக அறிவியல் பார்வை பற்றிய வரலாறு, பதிக்கப்பட்ட நூல்களுக்கான வாசகர் பற்றிய வரலாறு என்று பல கோணங்களில் எழுதவேண்டிய தேவை இருக்கிறது. இத்தகைய பின்னணியில் ஆராய்ந்து வெளியிடுவதே நம்பகத்தன்மையான பதிப்பாக இருக்க முடியும்.

“மேலை நாட்டார் வருகையினால் தோன்றிய அச்சியந்திர வசதிகளும் கல்வி மறுமலர்ச்சியும் புதிய நூலாக்கங்களுக்கு வழிவகுத்தன. ஆறுமுக நாவலர் (1822-1879), சி.வை. தாமோதரம் பிள்ளை (1832-1901), உ.வே. சாமிநாதையர் (1855-1942), ச. வையாபுரிப்பிள்ளை (1891-1955) ஆகியோர் தமிழ்ப் பதிப்பு முன்னோடிகளாய் விளங்கித் தமிழுக்கு வளம் சேர்த்தனர்” (இ. சுந்தரமூர்த்தி; 2005, ப.63) இத்தகைய பதிப்பு முன்னோடிகளால், நமக்குப் பண்டைய இலக்கிய இலக்கணக் கருவூலங்கள் கிடைக்கப்பெற்றன. இல்லையேல் வரலாறுகள் அற்ற சமூகமாக வாழ்ந்திருப்போம். இப்பின்புலத்தில் காலவாரியான உரைப்பதிப்பு முறை சார்ந்த பதிப்பாசிரியரை இனங்காண முயற்சிப்போம். இது, பதிப்பாசிரியர் சார்ந்த ஆய்வாகும். பதிப்புத் தேவைக்கான புரிதலில் சில கருத்துகளை மட்டும் முன்னெடுப்போம். பதிப்புச் சூழல், பதிப்பாசிரியர் சார்ந்த உரைப் பதிப்பு, பதிப்புகளின் நிலைப்பாடு முதலியவற்றை ஆராய முற்படுவோம்.

## ஆறுமுக நாவலர் (1822-1879): முதற்பதிப்புக் காலம்

தமிழகத்தில் முதன்முதலாக, கி.பி. 1712இல் தரங்கம்பாடியில் முதல் அச்சுக்கூடம் நிறுவப்பட்டுள்ளது என்பதை, மா.சு. சம்பந்தன் ‘அச்சும் பதிப்பும்’ என்ற நூலில் முன்வைக்கிறார். இத்தகைய அச்சுக் கூடங்களில் தமிழ்ப் பிரதி அச்சானதே தவிர, தமிழ் இலக்கிய இலக்கணப் பிரதிகள் அச்சாகவில்லை. 1835ஆம் ஆண்டுகளுக்குப் பிறகே அச்சியந்திரம் நமக்குக் கிடைத்துள்ளது என்பதை நாம் முன்பே பார்த்தோம். இக்காலகட்டத்தில் கிறிஸ்துவ சமயத்தை எதிர்த்து, சைவ மரபை நிலைநாட்டவும், தமிழ் இலக்கியம் வாயிலாக நமது வரலாற்றை மீட்டெடுக்கவும் பதிப்பிக்கத் தொடங்கியுள்ளனர் என்பதை உய்த்துணர முடிகிறது. திருக்குறள் போன்ற பதிப்புகள் 1812ஆம் ஆண்டே பதிப்பிக்கப்பட்டிருந்தாலும் சங்க இலக்கியப் பிரதிகள் பிற்காலத்தில் பதிப்பிக்கத் தொடங்கியுள்ளதை அறியமுடிகிறது, இங்குச் சங்க இலக்கிய ஆய்வுகள் மட்டுமே கவனத்தில் கொள்ளப்படுகின்றன.

“1837 ஆம் ஆண்டு கலித்தொகை முதற்பதிப்பில் தொடங்கப்பெற்ற சங்க இலக்கிய முதற் பதிப்பு முயற்சி 1920ஆம் ஆண்டு வெளியிடப்பெற்ற அகநானூறு முதற்பதிப்புடன் நிறைவெய்கிறது” (குளோறியா சுந்தரமதி; 1984, ப.9) இக்கூற்றின்படி சங்க இலக்கிய முதற்பதிப்பு சுமார் 33 ஆண்டுகள் நிகழ்ந்துள்ளதை அறியமுடிகிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் மையப்பகுதியில் ஆறுமுகநாவலர் சங்கப் பதிப்பைத் தொடங்கியுள்ளார். இவரின் பதிப்பு ‘ஓலைச் சுவடியில் உள்ள மூலத்தைக் காப்பது’ என்ற அடிப்படையிலான தொடக்கக் கால/முதற்கட்டப் பதிப்பாக

இருந்துள்ளது. முதற்கட்டப் பதிப்பாசிரியர்கள் அழிந்துகொண்டிருந்த ஓலைச்சுவடிகளில் உள்ள மூலங்களை வளர்ந்து வரும் அச்சுக்குக் கொண்டுவந்து காப்பாற்றிட வேண்டும் என்பதை முக்கிய நோக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதைக் கணிக்க முடிகிறது.

அன்றைய சூழலில் கிறித்தவத்தை எதிர்த்துத் தன் மதத்தை நிலைநாட்ட முயற்சித்துள்ளதை அறியமுடிகிறது. "சைவப் பணிக்காக வேண்டிப் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தினார், அச்சகங்களை நிறுவினார், சொற்பொழிவுகள் செய்து அறிவு கொடுத்தனர். பாடநூல்களைக் கிறித்தவர் சமயப் பரப்புதலைத் தடுப்பதற்காக வேண்டி அழகுற அமைத்துக்கொடுத்தார்" (மா.சு.சம்பந்தன்; 1923; ப.237). இப்பின்புலத்தில் ஆறுமுக நாவலரைச் சைவப் பற்றாளராகப் புரிந்துகொண்டாலும் அவரின் பதிப்புகள் முதற்கட்டப் பதிப்பான நூல் அச்சேறிவிட்டால் போதும், நமது கருவூலங்கள் காப்பாற்றப்படும் என்ற உணர்வைப் புரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது.

ஆறுமுக நாவலர் எந்தப் பொருளின் மீது ஈடுபாட்டுடன் இருந்தாரோ, அதே பொருளை முதலில் பதிப்பித்துள்ளார். சங்க இலக்கிய நூலான திருமுருகாற்றுப்படையை 1851இல் பதிப்பித்துள்ளார் என்பதை ந.விசாலாட்சி 'பழந்தமிழ்ப் பதிப்புகள்' நூலின் வாயிலாக அறியமுடிகிறது. ஆறுமுக நாவலரின் பதிப்புகள் அதிகம் பேசப்படவில்லை என்ற கருத்தும் நிலவுகிறது. அவரின் பதிப்பு ஆய்வுக்குரிய பதிப்பு அல்ல. முன்பே பார்த்ததுபோல் மூலத்தைக் காப்பது என்ற நோக்கிலான பதிப்பாகும். இத்தன்மையால் இவரின் பதிப்பு குறைபாடு உடையதாக இருந்தாலும், இவரின் பதிப்பு முயற்சி எண்ணத்தக்க ஒன்றாகும். அம்முறையே, "இன்று சங்க இலக்கியங்களில் ஒன்றாகக் கருதப்படுகிற திருமுருகாற்றுப்படையை ஆறுமுகநாவலர் முன்பே பதிப்பித்திருந்தாலும் அதை அவர் சைவ இலக்கியமாகவே கருதிப் பதிப்பித்தார். மேலும் திருமுருகாற்றுப்படையுடனிருந்த பிற ஒன்பது பாட்டுக்களையும் பதிப்பிக்கவில்லை"(அ. சதீஸ் (ரோஜா இதழ்); ரோஜாமுத்தையா ஆராய்ச்சி நூலகத்திலிருக்கும் முதல் பதிப்புகள் குறித்த அறிமுகம்; 2012, ப. 9). ஆய்வுலகம் திருமுருகாற்றுப்படையைச் சங்க இலக்கிய முதல் உரைப்பதிப்பாக ஏற்றுக்கொள்வதில்லை. அதேபோன்று திருமுருகாற்றுப்படை பிற்கால நூல் என்ற கருத்தாக்கமும் கவனத்திற்குரியது. எனவே, ஆறுமுக நாவலரைச் சங்க இலக்கியப் பதிப்பாசிரியர் என்ற பொதுநோக்கு தன்மையால் மட்டும் பார்க்க முடிகிறது.

## சி.வை.தாமோதரம் பிள்ளை (1832-1901): மறுபதிப்புக்காலம்

ஆறுமுக நாவலர், சி. வை. தாமோதரம்பிள்ளை இவர்களின் பிற பதிப்புகள் முதற்கட்ட நிலையிலே வைத்து நோக்கத்தக்கவை. இருப்பினும், சி.வை. தா. வின் பதிப்பு

சற்றுக் கூடுதல் கவனம் பெறுகிறது. ஆறுமுக நாவலர், சி.வை.தா. வின் பதிப்புகள் வெளிவரப் பல உதவிகளைப் புரிந்துள்ளதை அறிய முடிகிறது. இப்பின்புலத்தில் ஆறுமுகநாவலரையும் சி.வை.தாவையும் இணைத்தே பார்க்கவேண்டிய தேவை இருக்கிறது.

சுவடியில் உள்ளவற்றை அச்சில் கொண்டுவருவதே பதிப்புப் பணியாய்த் திகழ்ந்த காலத்தில், சுவடிப் பதிப்பிற்கு ஆராய்ச்சி நோக்கில் அரிய பதிப்பு முன்னுரைகளை எழுதி, சுவடிப் பதிப்பை ஆய்வு நிலைக்கு உயர்த்தியவர் சி.வை. தாமோதரம்பிள்ளை ஆவார். அவர்தம் பதிப்புகளில் முத்தாய்ப்பாய் விளங்குவது அவரின் பதிப்புரைகளாகும். அப்பதிப்புரைகளை மூலபாடத் திறனாய்வுடனும் வரலாற்று அணுகுமுறையுடனும் கால ஆராய்ச்சியுடனும் அணுகியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

சி.வை.தா. கலித்தொகைப் பதிப்பில் பெண்களின் உறுப்புகளைக் குறிக்கும் சொற்களைப் பதினொரு இடங்களில் மாற்றியுள்ளார். அதற்கான காரணத்தைக் கூறி மாற்றப்பட்ட இடங்களின் பட்டியலைத் தருகிறார். இம்முறையியலைப் பிற்காலப் பதிப்பாசிரியர்கள் சிலர் பின்பற்றியுள்ளனர். குறுந்தொகையைப் பதிப்பித்த சௌரிப் பெருமாளையங்கார் சி.வை.தாவை மேற்கோள் காட்டி அம்முறையிலை அப்படியே பின்பற்றியுள்ளார்.

சங்கப் பனுவல்களில் ஒன்றான கலித்தொகையை 1887இல் முதற்பதிப்பு கொண்டுவந்த பெருமை சி.வை.தா.வைச் சாரும். அம்முறையே, “கலித்தொகை பதிப்பின் மூலம் சங்க இலக்கிய நூல்களின் பதிப்பிற்கு முன்னோடியாகவும் வழிகாட்டியாகவும் திகழ்ந்தார். தாம் பதிப்பித்த நூல்களிலே இந்நூலிற்குத்தான் 34 பக்கங்களில் மிக நீண்ட பதிப்புரை எழுதியுள்ளார். இப்பதிப்புரையில் உரையாசிரியர் நச்சிநார்க்கினியரைப் பிற உரையாசிரியர்களுடன் ஒப்பிட்டு ஆய்வு செய்துள்ளார். இவரது மற்றப் பதிப்புகளை விட இந்நூற்பதிப்பு சிறந்த ஆய்வுப்பதிப்பாக மிளிர்கிறது”(கரு.அழ.குணசேகரன்; 2008, ப. 83). இக்கூற்றின்வழி சி.வை.தா, ஆறுமுக நாவலருடன் இருந்தும், நாவலர் மறைவிற்குப் பின், தனிநபராய் நின்று பழந்தமிழ் நூல்களைப் பதிப்பித்தும் தமிழ் மொழியை வளப்படுத்தினார் என்பதை அறியலாம். அதேபோன்று மறுபதிப்புக் காலத்தை (1920 முதல் 1937 வரை) சுமார் 17 ஆண்டுகள் சங்க இலக்கிய மறுபதிப்பு காலம் என ச. வையாபுரிப்பிள்ளை வரையறை செய்வதைக் காணலாம். எனவே, முற்சங்க இலக்கிய உரைப் பதிப்புகளை உருவாக்கியவர் சி.வை.தா. என்பதே பொருத்தமுடையதாகும்.

## உ.வே. சாமிநதையர் (1855-1942): புத்துரைக் காலம்

உ.வே. சாவின் காலத்தில் உரைப் பதிப்புகள் பரவலாக்கம் பெற்றன. பதிப்புகளைத் தெளிவுடனும், ஆய்வு நிலைப்பாட்டுடனும், வெளியீட்டுத் தர்க்கத்துடனும், அதேபோன்று வாசகர்களுக்கு விளக்க வேண்டும் என்ற முக்கிய நோக்கிலும் உரைப்பதிப்புகள் வெளிவரத் தொடங்கிய காலம். இருந்தும் பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்தும் பதிப்பிக்கப்படாத நிலையிலேயே காணப்பட்டன. அப்பனுவல்கள் குறித்த ஒரு சில ஆய்வுகள் வெளிவரத் தொடங்கிய காலமாகவும் கருத இடமுண்டு. எனவே வாசகர் தேவை எது என்பதை அவரால் உணர முடிந்துள்ளதை அறியமுடிகிறது. ஆக, வெறும் அச்சுப்பிரதியாக நூலைத் தருவது மட்டும் போதாது என்பதை அக்காலப் பதிப்பாசிரியர்கள் உணர்ந்திருந்தனர் என்பதை அறியமுடிகிறது. அவ்வகையில் ஓலைச் சுவடி பற்றிய அறிவும், உணர்வும் உ.வே.சா.விற்கு அனுபவத்தால் கிடைத்திருக்கக்கூடும். அதன் விளைவாக, அணுகுவதற்கு எளிதான உரைப் பிரதியாகச் சங்கப்பனுவல்களை பதிப்பிக்க முயன்றுள்ளதையும் அறியமுடிகிறது.

மறுமதிப்புகளின் காலகட்டத்திலேயே உடன் கிளைத்த மற்றொரு நெறியாகவே புத்துரையாக்கத்தை நோக்க முடிகிறது. சங்க இலக்கிய உரைப் பதிப்புகளைப் புத்துரைப் பதிப்புக்காலம் என்று வரையறுக்கும் களமாகவும் பதிப்புக்காலம் விளங்கிக்கொள்ள ஏதுவாகிறது. மறைமலையடிகள் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை ஆகியோரையும் இக்காலகட்டத்துள் விளங்கிக்கொள்ள வாய்ப்பிருக்கிறது.

உ.வே. சா. பதிப்பாசிரியர் மட்டுமல்ல. பத்தொன்பது, இருபதாம் நூற்றாண்டில் உரை வரலாற்றிலும் இவர் முக்கியப் பங்காற்றியுள்ளதைக் கவனத்தில் கொள்ளவேண்டியுள்ளது. அதுமட்டுமல்லாமல் உரைப் பதிப்புகளின் வாயிலான சமூக வரலாற்றுத் தரவுகளையும் எண்ணிப்பார்க்க நேர்கிறது.

உ.வே. சா உரைகள் மீது வைத்திருந்த நம்பகத்தன்மையை, “உ.வே.சா. பதிப்பித்த நூல்களில் மூலத்திற்குக் கொடுக்கப்பட்ட முக்கியத்துவத்தைக் காட்டிலும் மூலத்தை விளக்குவதற்கு அவர் காட்டிய அக்கறையே மேலோங்கி நிற்கிறது. அதுதான் தமிழாசிரியர்களும் தமிழறிஞர்களும் விதந்து பேசக் காரணங்களாயின. அவர் பதிப்பித்த நூல்கள் பெரும்பாலும் உரையுடன் கூடிய நூல்களாகவே இருந்தன”(அ. சதீஸ்; 2010, பக்.14-15). இக்கூற்று உரைகளின் வாயிலாக மூலங்கள் சரியசெய்யப்பட்டுள்ளதை வெளிப்படுத்துகிறது. பதிப்பிற்கு உரைகள் எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தவை என்பதைப் புரிந்துகொள்ள ஏதுவாகிறது. தொல் நூல் ஒன்றைச் சரியாக

விளங்கிக்கொள்ள உரைகள் மிகத் துணைபுரியும் என்பதும் உ.வே. சா.வின் கருத்தாக இருந்துள்ளதையும் கவனப்படுத்த வேண்டியிருக்கிறது.

முதற் பதிப்புகளில் ஏற்படும் தவறுகளை அடுத்துவரும் மறு பதிப்புகளில் பிழை திருத்திப் பதிப்பிப்பது உ.வே.சா.வின் வழக்கமாக இருந்துள்ளது. இவர் தன் பதிப்பே முழுமையானது என்ற கருத்து உடையவராக இல்லை. உண்மைத் தரவுகள் வெளிப்படும் போது பதிப்புகள்/மறுபதிப்புகளாக மாறும் தன்மை உடையவை, என்ற கருத்தை உடையவராக இவர் விளங்கி உள்ளதை நம்மால் உணர்ந்துகொள்ள முடிகிறது. பின்வரும் கூற்று, அதனை உறுதி செய்யலாம். அம்முறையே "ஒரு பதிப்பில் தான் கொண்ட பிழை என உணர்ந்தபோது அடுத்த பதிப்பில் அதனை விட்டுவிட்டுச் சரியான பாடத்தைக் கொள்ளச் சற்றும் தயங்காத நிலையை உ.வே.சா. அவர்களது பதிப்பு வரலாறு நமக்குக் காட்டுகிறது" (குளோறியா சுந்தரமதி; 1948, ப.3). இதன் வழியாக அவர் பதிப்பியல் நெறியைப் புரிந்துகொள்ள முடிகிறது. அதேபோலப் பதிப்பையும் உரைநடையையும் இணைத்துப்பார்க்கும் தனித்தன்மையான ஆய்வுகள் அவசியமானவையாகும்.

## சமூகப் புரிதலில் உ.வே. சா.

உ.வே.சா. பற்றிய சமூகப் புரிதலை இரண்டுவகையாகப் பார்க்க முடிகிறது. ஒன்று அவரைப் புனிதப்படுத்துவது, மற்றொன்று புனிதத்தை உடைப்பது என்னும் இரு நிலைப்பாடாகும். சங்க இலக்கியப் பனுவல்களில் அதிக நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டவர் என்பதால் அவரின் குறைபாடுகளைச் சுட்டிக்காட்டக்கூடாது என்பது அபத்தமானது. உ.வே.சா.வையும் அவர் உரைப் பதிப்புகளையும் சீர்தூக்கிப் பார்க்கும் நிலைப்பாடே உகந்ததாகும்.

"தமிழ்த் தாத்தா பற்றிய மதிப்பீடுகள் இரண்டு நிலைகளில் நிகழ்த்தப்பட்டன. ஒன்று உ.வே.சா. வாழ்ந்த காலத்திலேயே கலைமகள், ஆனந்தவிகடன், கல்கி முதலான பார்ப்பன இதழ்களில் புனித ஆளுமையாகக் கட்டமைக்கப்பட்டு இறப்பிற்குப் பிறகு பதிப்புக் கடவுளாக மாற்றப்பட்டுக் கி.வா.ஜ., கல்கி தொடங்கி இன்றைய முக்கியமான சில பதிப்பியல் ஆய்வாளர்கள் வரை அவரைத் திருவுருவாகவே அடையாளப்படுத்தும் புனித மதிப்பீடு" (அ. சதீஸ்; 2010, ப.13) இக்கூற்றின் வாயிலாக உ.வே. சாவைப் புனிதப்படுத்தும் சாதியச் சார்புத் தன்மையை உணரலாம். உ.வே. சா தமிழ்ச் சமூகத்தின் பொது நிலையான பதிப்பாசிரியராக எண்ணத்தக்கவர். ஆனால் அவரை ஒரு சாராருக்கு மட்டும் உரியவராக்கி அவர் சார்ந்த பதிப்புப் பின்புலத்தைத் தனிமைப்படுத்துவது அபத்தமாகும்.

ஒரு பதிப்பாசிரியர் பற்றிய சமூகத் தளத்தில் இருவேறு கருத்துகள் நிலவுகின்றன. தற்கால ஆய்வுலகம் உ.வே.சா. பதிப்பின் நிறைகுறைகளைச் சுட்டிக்காட்டத் தொடங்கியுள்ளது. உ.வே.சா. மூலபாடத்தைத் திருத்தினார் என்னும் வாதமும் அவர் திருத்தவில்லை என்ற வாதமும் தமிழ்ச் சூழலில் நிகழ்ந்துள்ளது. அம்முறையே, "மூலபாட ஆய்வுகளில் உ.வே.சா. ஈடுபடுவதில்லை. பாடபேதங்களை அடிக்குறிப்பில் கொடுத்துவிடுவதோடு சரி, நூலின் காலம் உள்ளிட்ட ஆய்வுகளிலும் அவருக்கு நாட்டமில்லை. நூலைச் செம்மையான பதிப்பாக உருவாக்க வேண்டும் என்பதே அவர் நோக்கம், அவருக்கு ஆராய்ச்சியாளர் என்னும் முகம் கிடையாது" (பெருமாள் முருகன்; 2011, ப.101). இக்கூற்று உ.வே.சா. பற்றிய பதிப்பு நிலைப்பாட்டை உணர்த்துகிறது. மூலபாடம் திருத்தம் இன்மை, நூல் காலத்தை அறியமுயலாமை என்ற இரு நிலைப்பாடுகளை முன்வைக்கிறார் பெருமாள் முருகன். மேலும் ஆராய்ச்சியாளர் என்ற முகம் கிடையாது என்று அவர் குறிப்பிடுவது மேலாய்வுக்குரியதாகும்.

மேற்படி கூறப்பட்ட பெருமாள் முருகனின் கருத்தை, நூல் பதிப்பும் நுண் அரசியலும் என்னும் நூலில் அ. சதீஸ் அவர்கள் மறுத்துள்ளார். இதனை அவர் கூற்றின் வாயிலாகக் கவனிப்போம். அம்முறையே "புறநானூறு, ஐங்குறுநூறு ஆகிய நூல்களில் சில பாடங்களைத் தன் விருப்பம்போல் திருத்தினார் என்றும் (அவர் பயன்படுத்திய சுவடியில் உள்ள பாடம் வேறாகவும் அவர் பதிப்பித்த நூலில் உள்ள பாடம் வேறாகவும் உள்ளதைச் செம்மொழி நிறுவன ஆய்வாளர்கள் எடுத்துக்காட்டுகின்றனர்.) அது சமூகவியல் அடிப்படையில் பெரும் சிக்கலுக்கு உரியதாகவும் வரலாற்றுக்கான மூல ஆதாரங்களைத் திரித்தல் எனும் நேர்மையற்ற செயலாகக் கருதப்பட்டு உ.வே.சா.வை முற்றாக நிராகரிக்கும் போக்கும் நிகழ்கிறது"(அ. சதீஸ்; 2010, ப.13) இவ்வாறு செம்மொழி நிறுவன ஆய்வாளர்கள் கூறுவதான அ.சதீஷ் கருத்தும், பெருமாள் முருகனின் 'மூலத்தை உ.வே.சா. திருத்தவில்லை' என்ற கருத்தும் முற்றிலும் மாறாக உள்ளன. "மூலத்தை உ.வே.சா. திருத்தியதாக இதுவரை எதையும் நிருபிக்க இயலவில்லை" (பெருமாள் முருகன்; 2011, ப. 77) என்ற கருத்தும், அவரே மற்றொரு பிரதியான 'உ.வே.சா. பன்முக ஆளுமையின் பேருருவம்' என்ற பிரதியில் திருத்தியதாக ஒரு உதாரணத்தையும் முன்வைத்துள்ளார். அம்முறையே "பாடங்களை அவர் திருத்தினார் என்னும் வசைக்குக் காட்டப்பட்ட ஒரே ஒரு உதாரணமும் அதன் பொய்மை வெளிப்படக் காணாமல் போயிற்று. புறநானூறு 34ஆம் பாடலில் வரும் 'குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்' என்னும் அடியை 'பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்' என உ.வே.சா. திருத்திவிட்டார் என்னும் அபவாதம் கூறப்படுவதுண்டு. அது திட்டமிட்ட அவதூறு என்பதை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் புறநானூறு உரையைப்

பார்த்தாலே புரியும். அதற்குப் பிற சான்றுகள் காட்டப்பட்டுள்ளன” (பெருமாள் முருகன்; 2007, ப.15). இந்த இருவேறு கருத்துகளும் மீளாய்வுக்குரியன. இத்தகைய கருத்து வேறுபாட்டைக் களைய மூலபாடத்தை அணுகவேண்டியிருக்கிறது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, பெருமாள் முருகன் போன்றவர்கள் உ.வே.சா.வைக் காப்பாற்ற முனைந்திருப்பதாகக் கருத இடமளிக்கிறது. இங்குச் சமகால ஆய்வுநிறுவனமான செம்மொழி நிறுவனத்தின் கருத்தும் கவனத்தில் கொள்ளத்தக்கதாகும்.

உ.வே.சா. பற்றிய மூலபாடத் திருத்தம் என்பதைத் தெளிய ச.வையாபுரிப்பிள்ளையை நாட வேண்டியது தேவையாகிறது. உ.வே.சா. வின் பாடங்கள் பல தவறானவை என்ற கருத்தை முன்வைத்துள்ளார் ச. வையாபுரிப்பிள்ளை. பெருமாள் முருகனின் கூற்று, புறநானூற்றில் 34ஆம் பாடலில் கூறும் ‘குரவர்’, ‘பார்ப்பார்’ என்பது திட்டமிட்ட அவதூறு என்றும் ஒரே ஒரு பாடல் மட்டும் இத்தகைய மாற்றம் உடையதாகக் கூறுகிறார். ஆனால், இக்கருத்து முற்றிலும் மறுக்கத்தக்கதாக உள்ளது. இங்கே, ச. வையாபுரிப்பிள்ளையின் கருத்தைக் கவனிக்கலாம். அம்முறையே, “ச. வையாபுரிப்பிள்ளை குறுந்தொகையிலிருந்தும் பிழையான பாடங்கள் சிலவற்றைக் காட்டுகிறார். குறுந்தொகையின் 113 ஆம் பாடலில் ‘கூழைக்கு எருமண் கொணர்கம் சேறும்’ என்னும் அடியில் ‘எருமண்’ என உ.வே.சா. கொண்டுள்ள பாடம் பொருந்தாது எனவும் ‘எருமணம்’ என்பதே பொருந்தும் எனவும் ச. வையாபுரிப்பிள்ளை கட்டுரை ஒன்று எழுதியுள்ளார்” (பெருமாள் முருகன்; 2007, ப.15). இக்கூற்றின் வாயிலாக உ.வே.சா.வின் பதிப்பை இனம் காணமுடிகிறது. அதேபோன்று உ.வே.சா. வும் மூலபாடத் திருத்தம்/பிழை செய்துள்ளார் என்பதை உய்த்துணரலாம். எனினும், பதிப்பாசிரியர்களைப் புனிதமாக/கடவுளாகப் பார்க்க வேண்டிய அவசியம் இல்லை. அதேபோன்று அனைவரின் பதிப்புகளிலும் ஏதேனும் பிழைகள் நேரிடலாம். அப்பிழைகள் நேரிடாமல் செப்பம் செய்வது பதிப்பாசிரியர்களின் பொருப்பாகும்.

உ.வே.சா. வின் உரைப் பதிப்புகள் மூலத்தை வாசகனிடம் நெருக்கமாகக் கொண்டுசேர்த்தவை எனலாம். இவர் உரைப்பதிப்புகளில் நூலாராய்ச்சி, நூல் ஆசிரியர் அறிமுகம், உரையாசிரியர் வரலாறு, புலவர்களின் வரலாறு, பாடப்பட்டோர் வரலாறு போன்றவை அடங்கியிருப்பதைக் கவனிக்கமுடிகிறது. அதேபோன்று உ.வே.சா. பதிப்புகளில் திணை, துறை குறிப்புகள் கொடுக்கப்படவில்லை என்பதையும் அறியமுடிகிறது. எனினும், ஒவ்வொரு பாடலின் தலைப்பிலும் யார் கூற்று என்னும் தகவல் கொடுத்துள்ளதையும் அறியலாம்.

உ.வே.சா. வின் சங்க இலக்கிய முதல் உரைப் பதிப்புகள் போற்றத்தக்கவையாகும். அவை: 1889-பத்துப்பாட்டு, 1898-புறநானூறு, 1903-

ஐங்குறுநூறு, 1903-பதிற்றுப்பத்து, 1918-பரிபாடல், 1937-குறுந்தொகை என இவை உ.வே.சா.வின் முதற்பதிப்புகளாகக் கருதப்படுகின்றன. இக்குறிப்புகள் 'பழந்தமிழ் பதிப்புகள்' என்னும் நூலில் விசாலாட்சியின் கருத்தின் அடிப்படையில் வரையறுக்கலாம். உ.வே.சா. மீது எளிதான (லேசான) விமர்சனம் வைத்தவர்கள் தமிழ்த் துரோகிகளாகவும், பார்ப்பன எதிர்ப்பாளர்களாகவும் அடையாளப்படுத்தப்பட்டனர். எந்த விமர்சனமும் இன்றி உ.வே.சா.வைத் தாங்கள் (சார்பாளர்கள்) ஏற்றுக்கொண்டது போலத் தமிழ்ச் சமூகமும் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்ற, கருத்தை முன்வைப்பவர்களாகவே உ.வே.சா. சார்பாளர்களை அடையாளம் காணலாம்.

## ச. வையாபுரிப்பிள்ளை (1891-1955):

பதிப்பு, மறுபதிப்பு என்ற இரண்டு நிலைகளைத் தாண்டிய மூன்றாம் கட்டப் பதிப்பாசிரியராக ச. வையாபுரிப்பிள்ளையை அடையாளம் காணமுடிகிறது. இவர் பதிப்புகள் அகராதி நோக்கும், ஆராய்ச்சிக் கண்ணோட்டமும் இயைந்து உருவாக்கப்பட்ட பதிப்புகளாக எண்ணக் கூடியவையாகும். தொகைவாரியாகக் கற்ற நிலையிலிருந்து மாற்றி, புலவர்வாரியாக வாசிக்கும் முறைமையை ச.வையாபுரிப்பிள்ளை பதிப்பு ஏற்படுத்தியுள்ளதை அறியலாம்.

கால ஆராய்ச்சியின் வாயிலாக மூலப்பனுவல்களை அடையாளப்படுத்த முனைந்தவர். இவரின் கால ஆராய்ச்சி அறிவியல் தொடர்புடன் அணுகக்கூடியதாக உள்ளது. தமிழ் ஆய்வாளர்கள் கருதும் காலக்கணிப்பை இவர் மறுக்கிறார். அதேபோன்று வடமொழிக் கருத்தாக்கங்களை முன்வைத்துத் தொல்காப்பியம் முதலான பனுவல்களைப் பின்னுக்குத் தள்ளுகிறார். அம்முறையே, "தொல்காப்பியத்தைக் கி.மு. 3-ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டதெனக் கருத்தும் சங்க இலக்கியத்தைக் கி.பி 2-ஆம் நூற்றாண்டளவில் எனக் கருதுகிறார்" (வே.இரா. மாதவன்; 2010, ப.318). இக்கூற்றின் வாயிலாகக் கால ஆராய்ச்சி சார்ந்த கருத்து மாறுபாட்டை உணரலாம். மேலும், வடமொழிச் சொற்களின் வாயிலாகத் தொல்காப்பியத்தைப் பின்னுக்குத் தள்ளுவது கவனிக்கத்தக்கதாகும். அம்முறையே, "வடமொழியிலிருந்தே தமிழ் மனமும், அறமும், உவமை முதலான கற்பனை வெளிப்பாடு, வேற்றுமை முதலான இலக்கணமும் பெறப்பட்டன என்பது பிள்ளையவர்களின் அசைக்கவியலாத முடிவுகள்" (மேலது; ப.319). இத்தகைய கருத்து மாற்றத்தைத் தமிழியல் உலகம் ஏற்கத் தயங்குகிறது. இருப்பினும் இவரின் கால ஆராய்ச்சி தர்க்க முறையிலானதாகும். புலவர் அடிப்படையிலான பதிப்பு முறைமை, ஒரு புலவர் சார்ந்த கருத்துத் தொடர்ச்சியை இவர் உரைப்பதிப்பு முன்வைப்பதாகும். மேலும், தனிப்பாடல் முறையிலான ஆய்வுப்பதிப்பு

முறை என்பதும் கவனிக்கப்படவேண்டியதாகும். பாட்டும் தொகையும் அடங்கிய தொகுப்பை, ‘சங்க இலக்கியம்’ என்று (1940-இல்) பெயர் சூட்டியவர் ச. வையாபுரிப்பிள்ளை ஆவார்.

சங்கப் பனுவல்களை வரலாற்றுக் கண்கொண்டு ஆராய்ந்தோர் சிலர். இலக்கியக் கண்கொண்டு ஆராய்ந்தோர் சிலர். ஆனால், ச.வையாபுரிப்பிள்ளை அவர்கள் வரலாற்று, இலக்கியக் கண்கொண்டு சங்கப் பனுவலை ஆராய்ந்துள்ளார் என்பதை விளங்கிக்கொள்ள முடிகிறது. ச.வையாபுரிப்பிள்ளை அவர்களின் பதிப்பு இலக்கியம் தாண்டிய ஆய்வுப் பதிப்பாக எண்ணத்தக்கதாகும். அம்முறையே, “இலக்கியம், இலக்கணம் என்ற அளவில் மற்ற மூவரும் தங்கள் பதிப்புப் பணியை வரையறுத்துக் கொண்டனர். ச.வையாபுரிப்பிள்ளை இவற்றோடு நிகண்டு, நாடகம், நாட்டுப்புற இலக்கியம் என மூன்றையும் சேர்த்துக் கொண்டார். அதேபோன்று இவர் பதிப்பித்த நூல்களுக்கு இவர் எழுதியுள்ள முன்னுரைகளும் தனித்தன்மை உடையவையாகும்” (இராம.சுந்தரம்; 1993, ப. 32). இக்கூற்று வையாபுரிப் பிள்ளையின் தமிழியல் புலம் சார்ந்த உரைப் பதிப்பு மரபை முன்வைப்பதாகும்.

## பதிப்பும் பொது நோக்கும்

பதிப்புகள் என்பவை கால மாறுதல்களுக்கு ஏற்ப மாறக்கூடியவை. வாசகனின் தேவையைக் கருத்தில்கொண்டு உரைப் பதிப்பு உருவாக்கப்படுகிறது. இருபதாம் நூற்றாண்டில் வெளியான உரைப் பதிப்புகள் பாடத்திட்டத்தை அடிப்படையாகக் கொண்டவையாகும். பாடத்திட்டத்தையோ அல்லது அவற்றைக் கற்பிக்கும் முறைகள் ஆகியவற்றைக் கருத்தில் கொண்டு, நவீனக் காலத்தையோ கவித்துவ வெளிப்பாட்டையோ வெளிப்படுத்தும் பதிப்புகளை அடையாளம் காண முடிகிறது. தமிழ்ப் பண்பாடு என்பதை வலியுறுத்தி அதற்குள் சங்கப் பாடல்கள் அனைத்தையும் போட்டு அடைத்துவிடும் வேலையையே பாடத்திட்டப் பதிப்புகள் செய்துள்ளதைக் கவனிக்கமுடிகிறது. பாடலுக்குப் பொருள் சொல்வது, அப்பொருளை வினாவாகவும் விடையாகவும் மாற்றுவது என்பதைத் தவிரக் கல்வி சார்ந்த பாடத்திட்டப் பதிவுகள், தமிழ்க் கவிதையியலுக்கு எந்தப் பங்களிப்பும் செய்யவில்லை என்பதை உணரமுடிகிறது.

பாடத்திட்டத்தைக் கருத்தில் கொண்டு உருவாக்கப்பட்ட உரைப் பதிப்புகள், தமிழரின் பழம்பெருமையைக் காட்டும் வரலாற்று ஆவணங்களாகவே புரிந்துகொள்ளப்படுகின்றன. அம்முறையே, “பாடத்திட்டத்தைக் கருத்தில்கொண்டு உருவாக்கப்பட்ட உரை நூல்கள் பல. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடுகள், புலியூர்க்கேசிகன் உரை, இன்று குவியல் குவியலாக வந்துவிழும் உரைகள் போன்ற அனைத்தும் பாடத்திட்ட நோக்கில் வெளிவந்தவையே” (பெருமாள் முருகன்; 2011,

பக்.34-35). இக்கூற்றின் வாயிலாக இருபதாம் நூற்றாண்டின் பெரும்பாலான உரைப் பதிப்புகள் பாடத்திட்டத்தை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்ட உரைப் பதிப்புகள் என்பதைக் கணிக்கலாம். கல்விப் புலத்தில் இத்தகைய உரைப் பதிப்புகள் அதிகம் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதையும் அறியமுடிகிறது.

இலக்கிய உலகில் படைப்பு, பதிப்பு, திறனாய்வு ஆகியவை முக்கியத் துறைகளாக விளங்குகின்றன. இவற்றுள் படைப்பைத் திறனாய்தல் ஒரு வகையாகவும், பதிப்புகளைத் திறனாய்தல் மற்றொரு வகையாகவும் நோக்கத்தக்கதாகும். அதேபோன்று உரைகள் மூலத்தை விளங்கிக்கொள்ளத் துணைபுரிகின்றன. இதனால் உரைகள் கூடிய பதிப்பையே பதிப்பாசிரியர்கள் அதிகம் பதிப்பிக்க முனைந்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது. அம்முறையே, "புகழ்பெற்ற பதிப்பாசிரியர்கள் பலரும் உரையுடன் கூடிய பிரதியையே பதிப்பிக்க எடுத்துக்கொண்டனர். மூலத்தை வரையறை செய்யவும் அடிபிரிக்கவும் இவ்வுரைகளே பெரும்பங்காற்றின. வேறு வகையில் குறிப்பிடுவதானால் பதிப்பாசிரியர்களின் சிரமமான பணியை இவ்வுரைகள் வெகுவாகக் குறைத்தன. மேலும் சங்க இலக்கியப் பிரதிகள் சமகால வாசகனிடம் அந்நியப்பட்டுப்போகாமல் இருக்கவும் உரைகள் தேவைப்பட்டன. உரைகளே கிடைக்காத நற்றிணை மற்றும் குறுந்தொகை ஆகியவற்றை உரையெழுதியே பதிப்பித்தனர்" (அ.சதீஸ்; 2010, ப.34). இக்கூற்று மூலத்தை உருவாக்க உரை எவ்வாறு தேவையாகிறது என்பதைப் புலப்படுத்துகிறது. உரைகள் இல்லாத மூலத்தை உரைகள் எழுதிப் பதிப்பித்தனர் என்பது, உரைகளின் முக்கியத்துவத்தை உணர்த்துகிறது. பெரும்பாலும் உரைகளின் வாயிலாகவே மூலங்கள் செப்பம் செய்யப்பட்டுள்ளதை அறிய முடிகிறது.

அடி பிரித்து, சீர் பிரித்துப் பதிப்பித்தல் என்பது ஒருவகையான பதிப்பு மரபு. இத்தகைய பதிப்பு முறை பிரதியைப் புலமைத் தளத்திலிருந்து வெகுசனத் தளத்திற்கு இட்டுச் செல்லும். மர்ரே பதிப்புகள் மூலத்தை எளிதில் வாசகனிடம் சேர்க்கும் உத்தியைக் கையாண்டுள்ளதை அறியமுடிகிறது. அதே தொழில் முறையிலான உத்தியைச் சமகாலத்தில் என்.சி.பி.எச். நிறுவனம் பயன்படுத்தி வருகிறது. இத்தகைய பதிப்புகள் சில தொழில்முறை சார்ந்த நுணுக்கங்களைக் கையாள்கின்றன. மூலத்தை எளிதில் புரியவைத்தல், குறைந்த விலை, எளிய உரையில் விளக்குதல் போன்ற உத்திகளைக்கொண்டு அப்பதிப்புகளை விளங்கிக்கொள்ள முடிகிறது.

பதிப்பாசிரியர்களின் உரை பதிப்புப்பணி மிகவும் போற்றுதலுக்குரியது. இருப்பினும் ஒவ்வொரு பதிப்பிலும் ஒரு சில குறைகளைக் காணமுடிகிறது. பதிப்பாசிரியர்கள் ஒவ்வொருவரும் ஒரு வகையான நெறிமுறையினைப் பின்பற்றி உள்ளதையும் கவனிக்கமுடிகிறது. பதிப்பிக்கப்படும் நூல் ஏற்கனவே

பதிப்பிக்கப்பட்டிருந்தால் அப்பதிப்பு பற்றிய குறிப்பு எழுதுதல் அவசியம். அதேபோன்று புதிய பதிப்பின் தன்மை குறித்தும், பதிப்பு நூலின் மூலம் குறித்த முன்னுரை, உதவிய சுவடிகளின் விவரம் ஆகியவற்றை உரைப்பதிப்பில் பதிவாக்குவது அவசியமாகும். அதற்குச் சான்றாக, "பதிப்பு-பதிப்பிக்கப்படும் நூல் ஏற்கெனவே பதிப்பிக்கப்பட்டிருந்தால் அதுபற்றிய குறிப்பு எழுத வேண்டும்; புதிய பதிப்பின் தன்மை குறித்து எழுதவேண்டும். பதிப்பிக்கப்படும் நூலைப் பற்றிய விவரங்கள் அடங்கிய முன்னுரை தேவை" (இராம. சுந்தரம்; 1993, ப.82). முன்னைய பதிப்பாசிரியர்கள் அனைவரும் ஓரளவு பதிப்பு நெறிமுறையினைத் தொட்டும் விட்டும் இருப்பதை ஆய்வின் வாயிலாக உணரமுடிகிறது.

பதிப்பாசிரியர்களின் அரியபணி தமிழியல் புலத்தில் என்றும் நினைவுகூரத்தக்கதாகும். அதன்முறையே, ஆறுமுகநாவலர், சி.வை.தாமோதரம்பிள்ளை, உ.வே. சாமிநாதையர், மறைமலையடிகள், பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர், ஔவை சு.துரைசாமிப்பிள்ளை முதலியோர் சங்க இலக்கிய முதற் உரைப்பதிப்பாசிரியர்களாக எண்ணத்தக்கவர்கள் ஆவார்கள். இதுவரை பொதுவான உரைப்பதிப்பு மரபை ஆராய்ந்தோம். இனி, ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சங்க இலக்கிய முதல் உரைப் பதிப்பை ஆராயத் தொடங்குவோம்.

### சங்க இலக்கிய முதல் உரைப் பதிப்பு

சங்க இலக்கிய முதல் உரைப்பதிப்பு என்பது ஒருசிலரால் மேற்கொள்ளப்பட்டுள்ளதை அறியமுடிகிறது. ஒவ்வொருவரின் உரைமரபும், பதிப்பு முறையும் வேறானதாக உள்ளது. தொடக்கக் காலங்களைவிடப் பிற்காலச் சூழலில் பதிப்பு முறைகள் செறிவாக்கப்பட்டுள்ளதை அறியமுடிகிறது. பதிப்பில் புதுப்புது நெறிமுறைகளைக் கையாளத் தொடங்கியுள்ளதும் கவனிக்கத்தக்கதாகும். பண்டைய காலப் பதிப்புகளைக் காட்டிலும் பிற்காலப் பதிப்புகள் கூடுதல் தரவுகளோடு வெளியிடப்பட்டுள்ளதை அறியலாம்.

மூலங்களைக் காப்பாற்றினால் போதும் என்று பதிப்பிக்கத் தொடங்கிய முதல்நிலைப் பதிப்பாசிரியர்கள், பிற்காலச் சூழலில் மூலபாடம் சார்ந்த ஆய்வுப்பதிப்பை மேற்கொள்ளத்தொடங்கியுள்ளனர். மூலபாடங்களை எளிதில் புரிந்துகொள்ளப் பதிப்பு முறைகளை மாற்றியமைத்துள்ளனர் என்பதை உய்த்துணர முடிகிறது. இச்சூழலில், காலத் தேவையையும் வாசகரின் புரிதலையும் கருத்தில்கொண்டு புதிய பதிப்புகள் உருவாகத் தொடங்கின என்பதை அறியலாம்.

சங்க இலக்கிய உரைப்பதிப்புகள் பெரும்பாலானவை படத்திட்டப் பதிப்பு முறையை நோக்கியே நகர்ந்துள்ளன. சமகாலப் பதிப்புகள் நூல்களை விற்பனை

செய்வதை மட்டுமே நோக்கமாகக் கொண்ட பதிப்புகளாக இருப்பதைக் கவனிக்கமுடிகிறது. இத்தகைய பதிப்புகளால் பண்டைய இலக்கியங்கள் விற்பனையாக்கப்படுகின்றன. இருப்பினும் சிலரின் உரைப்பதிப்புகள் சங்கப் பனுவல்களைப் புரிந்துகொள்ள உதவுகின்றன.

மூலநூலாசிரியரின் கருத்தைப் பெரும்பாலும் உரைப்பதிப்பாசிரியர்கள் காப்பாற்றும் போக்கினை உணரமுடிகிறது. உரைமரபினில் இருவகையான போக்குகள் உள்ளன. அவை, பாடத்திட்டப்பதிப்பு, ஆராய்ச்சிப்பதிப்பு. இவற்றில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரைப்பதிப்புகள் பாடத்திட்டப் பதிப்புகளாகவும், ஆராய்ச்சிப் பதிப்புகளாகவும் இருப்பதை உணரமுடிகிறது.

## முதல் உரைப் பதிப்புகள்

சங்கப் பனுவல்களின் நான்கு நூல்களை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரைப் பதிப்புகளாக வெளியிட்டுள்ளார். இந்நான்கு நூல்களையே இந்த ஆய்வு கவனப்படுத்துகிறது. அவை, ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரையெழுதிப் பதிப்பித்த நற்றிணை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய நான்கு பனுவல்களாகும்.

தமிழரின் தனிப்பெரும் செல்வமாக விளங்குவது சங்க இலக்கியமாகும். தொன்மை வாய்ந்த இவ்விலக்கியங்கள் ஏறத்தாழ ஒரு நூற்றாண்டிற்கு முன்னரே அச்சுருவம் பெற்றுள்ளதை அறியமுடிகிறது. முதற்பதிப்புகள் பற்றிய விவரங்களை இரு நூல்களின் அடிப்படையாகக் கொண்டு அறியலாம். அவை முறையே ந. விசாலாட்சியின் ‘பழந்தமிழ்ப் பதிப்புகள்’ என்னும் நூலின் வாயிலாகவும் மற்றும் குளோறியா சுந்தரமதியின் ‘உ.வே. சா. சங்க இலக்கியப் பதிப்புகள்’ என்னும் நூலின் வாயிலாகவும் சங்கப் பனுவல்களைக் கால முறைப்படி வரிசைப்படுத்த முனையலாம். இவற்றில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் நான்கு நூல்கள் மட்டுமே கருத்தில் கொள்ளப்படுகின்றன.

## உ.வே. சா வின் முதற் பதிப்புகள்

1894 - புறநானூறு - உ.வே.சா. (உரை)

1903 - ஐங்குறுநூறு - உ.வே.சா. (உரை)

1904 - பதிற்றுப்பத்து - உ.வே.சா. (உரை)

1952 - நற்றிணை – பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் (உரை)

## ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் முதற் பதிப்புகள்

**அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு**

1938 - ஐங்குறுநூறு (மருதம்)

1957 - ஐங்குறுநூறு (குறிஞ்சி, பாலை)

1957 - ஐங்குறுநூறு (மருதம், நெய்தல்)

1958 - ஐங்குறுநூறு (முல்லை)

1958 - ஐங்குறுநூறு (முழுவதும்)

**கழக வெளியீடு**

1947 - புறநானூறு (1- 200) முதல் தொகுதி

1951 - புறநானூறு (201- 400) இரண்டாம் தொகுதி

1950 - பதிற்றுப்பத்து

**அருணா பப்ளிகேஷன்ஸ்**

1966 - நற்றிணை (1- 200) முதல் தொகுதி

1968 - நற்றிணை (201- 400) இரண்டாம் தொகுதி

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை எழுதிப் பதிப்பித்த இந்நான்கு நூல்களின் பதிப்பு நுட்பமும், உரை நுட்பமும் பற்றிய முடிவுகள் ஆய்வுக்குரியன.

## உரைப்பதிப்பு அக நூல்கள்

சங்கப் பனுவல்கள் இரண்டனை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரைப் பதிப்பாக வெளியிட்டுள்ளார். இதில் ஐங்குறுநூற்றுப் பதிப்பை முதன்முதலில் உரை எழுதிப் பதிப்புத்துள்ளார். அம்முறையே "உ.வே.சா.வின் முதற்பதிப்புக்குப்பின் இரண்டாம் பதிப்பாக 1920-இல் வெளிவந்தது. இவருடைய பதிப்புக்குப் பின் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை அவர்களுடைய பதிப்பானது மூன்று தொகுதிகளாக 1957-இல் வெளிவந்தன. இம்மூன்று தொகுதிகளுக்கு முன் 1938-இல் ஐங்குறுநூற்றின் முதல் நூறு பாடல்கள் மட்டும் வெளிவந்தன. இறுதியில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையவர்கள் எல்லாவற்றையும் ஒருசேரத் தொகுத்து 1958-இல் அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடாக வெளியிட்டுள்ளார்" (ந.விசாலாட்சி; 1990; ப.34). இக்கூற்று ஐங்குறுநூற்றின் பதிப்பு வெளியீட்டுப் பின்புலத்தை அறிய ஏதுவாகிறது. முதலில் நூறு பாடல்கள் கொண்ட பதிப்பாகவும், பிறகு மூன்று தொகுதிகளை உள்ளடக்கியும்,

இறுதியாக அனைத்தையும் தொகுத்து ஒரே தொகுதியாகவும் வெளிவந்துள்ளதை அறியமுடிகிறது. இவ்வெளியீட்டிற்கான உரை, பதிப்புப் பின்புலங்கள் ஆய்வுக்குரியன.

அகநூல்களில் இரண்டாவதாக நற்றிணைப் பதிப்பு கவனத்தில் கொள்ளப்படுகிறது. இவற்றின் பதிப்பு முறையே "முதற்பதிப்பு 1952இல் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடாகப் பின்னத்தூரார் வெளியிட்டார். இவரே 'நற்றிணை நானூறு' என்ற பதிப்பு நூலினைச் சைவச் சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீட்டின் மூன்றாம் பதிப்பாக 1962இல் வெளியிட்டுள்ளார்" (மேலது; ப.32). இக்கூற்று, பின்னத்தூர் நாராயணசாமி ஐயரின் நற்றிணையின் முதற் பதிப்பு குறித்த தகவலை உணர்த்துகிறது. இதனைத் தொடர்ந்து நற்றிணை உரையினை வாசிக்க நேர்ந்தபொழுது சில இடர்ப்பாடுகளைக் கண்ட ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, நற்றிணைக்கு மீண்டும் உரை எழுதிப் பதிப்பிக்க வேண்டிய அவசியத்தை உணர்ந்துள்ளார். இதன் விளைவாக நற்றிணைக்கு ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை எழுத முனைந்துள்ளார் என்பதை அறியமுடிகிறது.

"நற்றிணையினை ஒப்புநோக்கிப் பதிப்பிக்கும்பொழுது சுமார் 1500க்கு மேற்பட்ட பாடவேறுபாடுகளைக் கண்டறிந்துள்ளார். ஏடுகளை ஒப்புநோக்கிய போது காணப்பட்ட பாடவேறுபாடுகளால் பாட்டுக்கட்கு உரையே வேறு எழுதவேண்டிய இன்றியமையாமை பிறந்தது" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 1966, ப.10). இக்கூற்று ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை எழுதுவதற்கான காரணத்தை முன்வைக்கிறது. இத்தகைய பாடவேறுபாடுகளைக் களைந்து நல்ல தெளிவான உரைப்பதிப்பினைத் தமிழ்ச் சமூகத்திற்குத் தரவேண்டும் என்ற அவாவே அவரை உரை எழுதத் தூண்டியதை அறிய முடிகிறது.

நற்றிணை இரண்டு தொகுதிகளாக ஔவை சு.துரைசாமிப்பிள்ளையால் வெளியிடப்பட்டுள்ளது. 1966இல் 1-200 (முதல் தொகுதி) பாடல்களும், 1968இல் 201-400 (இரண்டாம் தொகுதி) பாடல்களும் அருணா பப்ளிகேஷன்ஸில் இருந்து முதற் பதிப்பாக வெளிவந்துள்ளது. மேலும், ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் நூல்கள் நாட்டுடைமையாக்கப்பட்ட பின்பு பூம்புகார் பதிப்பகத்தாரால் நற்றிணை 2010-இல் வெளியிட்டுள்ளது என்பதும் அறியலாம்.

## பூம்புகார் நற்றிணை பதிப்புப் பிழைகள்

ஓலைச் சுவடிகளில் இருந்து பிரதியாக்கம் செய்யும்பொழுது ஏற்படும் பிழைகள் வரலாற்றைப் பிழையாக்குகின்றன. இத்தகைய பிழைகளைக் களையவே ஔவை சு.துரைசாமிப்பிள்ளை முதலிய உரைப்பதிப்பாளர்கள் பெரும் போராட்டங்களுக்குப் பின்னர்த் தடுமாற்றத்துடன் கூடிய தெளிவை எட்டுகின்றனர். இத்தகைய கருத்துகளை

உறுதி செய்யவே வேறு இலக்கியங்கள், தொல்லியல் தரவுகள் முதலானவற்றை ஆராய்ந்து தெளிவை ஏற்படுத்துகின்றனர். அதே போன்று பிழைகள் சமகாலத்தில் சில பதிப்புகளின் கவனக் குறைவால் நிகழ்கின்றன. இத்தகைய பிழைகள் நிராகரிக்கப்படவேண்டும். இத்தகைய பதிப்புப் பிழைகளால் பின்வரும் தலைமுறையினர் வரலாற்றைத் தவறாகப் புரிந்துகொள்ளக்கூடும்.

இப்பதிப்பில் பழைய பதிப்பு முன்னுரைகள் பற்றிய வரலாறு கொடுக்கப்பட்டுள்ளமை சிறப்பு வாய்ந்ததாகும். நற்றிணை முதற்பாகத்தில் இரண்டு பிழைகள் நிகழ்ந்துள்ளன. 179ஆம் பக்கத்தில் மொத்தம் நான்கு கல்வெட்டுத் தரவுகள் கொடுக்கப்பட்டுள்ளன. அதில் இரண்டாம் கல்வெட்டுத் தரவிற்கு எண் மற்றும் எந்த ஆண்டு என்ற பதிவைக் கொடுக்கவில்லை. அவை, P.S.Ins.No… என்ற அளவில் விடப்பட்டுள்ளன. இத்தகைய பிழைகள் பதிப்பகத்தார் கவனக்குறைவினைக் காட்டுவதாகும். இதுவே பிற்கால வரலாற்றுப் பிழையாக அமையலாம். எனவே, இப்பிழையை அடுத்துவரும் பதிப்புகளில் திருத்துதல் அவசியமாகும். அடுத்த பிழை 837-ஆம் பக்கத்தில் நிகழ்ந்துள்ளது. இப்பக்கத்தில் இறுதி வரியில் 'வெட்டுக்கள்' என்று தவறாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. இங்கு 'கல்வெட்டுகள்' என்றே இருத்தல் வேண்டும். சங்கப் பனுவல்களை அச்சுப்பிரதி செய்யும் பொழுது ஏற்பட்ட பிழைகளைப் போன்றே சமகாலத்திலும் இத்தகைய பிழைகள் ஏற்படா வண்ணம் பதிப்புகள் செய்யப்படுதலே சங்கப் பனுவல்களைக் காலத்திற்கும் நிலைபெறச் செய்யும். எனவே, இத்தகைய பிழைகள் நிகழா வண்ணம் பதிப்பகத்தார் கவனத்தில் கொள்ளுதல் அவசியமாகும்.

நற்றிணையின் இரண்டாம் பாகம், அதாவது 201 முதல் 400 வரையிலான பாடல் சார்ந்த உரைகள் வெளிப்படுத்தும் கல்வெட்டுத் தரவுகள் இங்கு ஆராயப்படுகின்றன. இப்பதிப்பில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் முதற்பதிப்பின் முன்னுரை கொடுக்கப்பட்டுள்ளது. நற்றிணையின் முதல் தொகுதி 1966-இல் வெளிவந்ததாகவும், அதன் பிறகே இரண்டாம் பதிப்பு வெளிவந்ததாக முதற்பதிப்பு முன்னுரையில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தன் கருத்தைப் பதிவு செய்துள்ளார். இரண்டாம் பாகத்தில் 'அரும்பொருட் குறிப்பு' கொடுக்கப்பட்டுள்ளது. மேலும் களவு காதல் ஒழுக்கம், கற்பொழுக்கம், பரத்தமை ஒழுக்கம் என்ற மூன்று பிரிவுகளில் பாடல் பொருண்மைகள் அடிப்படையில் பிரிக்கப்பட்டுள்ளன. இத்தகைய வகைப்பாடுகள் சங்கப் பனுவல்களின் மேன்மையை உணர்த்துவதாகும்.

## உரைப்பதிப்பு - புறநூல்கள்

புறநூல்களில் ஒன்றான புறநானூறு மூலத்தினை உ.வே.சா. 1936-இல் வெளியிட்டார். அதன் பிறகே ஔவை சு.துரைசாமிப்பிள்ளை புறநானூற்றினை இரு பிரிவுகளாக 1947-இல் முதல் தொகுதியும் 1951-இல் இரண்டாம் தொகுதியையும் வெளியிட்டுள்ளார் என்பதை அறியமுடிகிறது. புறநானூறு பற்றிய கருத்தினை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை பதிப்புரையின் வாயிலாகக் கவனிப்போம். அம்முறையே "பண்டைய உரையாசிரியர், ஒருவர் இருநூற்று அறுபத்தொன்பது பாடல்களுக்குச் செவ்விய உரையென்று இயற்றியுள்ளார். ஒவ்வொரு பாட்டிலும் பாடினோர், பாடப்பட்டோர், திணை, துறை, முதலியவைகளும் சேர்க்கப்பட்டுள்ளன. எஞ்சிய பாட்டுக்களுக்கு இதுகாறும் யாரும் உரையெழுதி வெளிப்படுத்தவில்லை. அத்தொண்டினைச் செய்ய நம் கழகம் முன்வந்தது. அதனைச் செய்து முடிக்கச் சித்தாந்தக் கலாநிதி ஆசிரியர் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை அவர்கள் வாய்ப்பாக முன்நின்றார்" (ஔவை சு. துரைசாமிப்பிள்ளை; பதிப்புரை). இக்கூற்றின் வாயிலாகத் திணை, துறை பகுப்பு என்பதைப் பழைய உரையாசிரியர்கள் செய்திருக்கலாம் என்ற எண்ணம் வலுக்கிறது. அதே போன்று 269 பாடல்கள் தவிர்த்து மீதமுள்ள பாடல்களுக்கு ஔவை சு.துரைசாமிப்பிள்ளை முதல் பதிப்புரையை முன்வைப்பது கவனிக்கத் தக்கதாகும்.

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை புறநானூற்றின் முதல் பகுதியை உ.வே.சா.வின் உரைப்பதிப்போடு ஒப்பிட்டுப் பார்க்கையில் மிகுதியான வேறுபாடுகள் காணப்படவில்லை. ஆனால், இரண்டாம் பகுதியில் அதிக வேறுபாடுகள் இருத்தலைப் பதிவு செய்துள்ளார். சங்கப் பனுவல்கள் முதலிலேயே பதிப்பிக்கப்பட்டு இருந்தாலும், வேறு பனுவல்களைக் கொண்டு ஔவை சு.துரைசாமிப்பிள்ளை ஒப்புநோக்கிப் பதிப்பித்துள்ளதை அறியமுடிகிறது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை அவர்கள் எந்தப் பிரதிக்கும் எடுத்த உடனே உரை எழுதத்தொடங்கவில்லை. பதிப்பில் முழுத்தெளிவு ஏற்பட்ட பின்னரே உரை எழுத முனைந்துள்ளார் என்பதை அறியமுடிகிறது. இதனை அவர் கூற்றின் வாயிலாகக் கவனிப்போம், "எனக்கு இளமையில் தமிழறிவுறுத்திய ஆசிரியர் திண்டிவனம் A.A.M ஹைஸ்கூலில் தமிழாசிரியராய் இருந்தவருமான சீர்காழி திரு. கோவிந்தசாமி ரெட்டியாரவர்கள் வைத்திருந்த ஐங்குறுநூற்றுக் கையெழுத்துப் படியையும் அச்சாகி வெளியிட்டிருந்த ஐங்குறுநூற்றையும் ஒப்புநோக்கும் வாய்ப்பு பெற்றேன். அப்பொழுது அச்சுப் பிரதியில் காணப்படாத சில வேறுபாடுகள் கிடைத்தன. அதனால், டாக்டர் திரு. ஐயரவர்களுடைய முயற்சிக்கும் அகப்படாத நிலையில் ஏடுகள் பல தமிழ்நாட்டில் உள்ளன என்று ஐயம் தெளிந்தேன். இத்தெளிவால் பழைய ஏடுகளைத் தொடுவதில் வேட்கை யொன்று என் உள்ளத்தே கிளர்ந்தெழுவதாயிற்று" (ஔவை.

சு.துரைசாமிப்பிள்ளை; முன்னுரை). ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் இக்கூற்று அவர் பழைய ஏடுகளை ஒப்புநோக்கிய செய்தியினை வெளிப்படுத்துகிறது.

சங்க காலச் சேர மன்னர்களின் ஆவணம் பதிற்றுப்பத்து. சங்க வாழ்வியலின் புறவாழ்வைப் பதிவாக்கிய இலக்கியங்களில் பதிற்றுப்பத்தும் ஒன்றாகும். 1904-ஆம் ஆண்டு முதன்முதலில் பழைய உரையுடன் வெளியிட்டவர் உ.வே.சா. ஆவார். பின்னர் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, 1950-இல் பதிற்றுப்பத்தை முதல் பதிப்பாக உரையெழுதி வெளியிட்டார் என்பதை அறியமுடிகிறது. இது கழக வெளியிடாக வெளிவந்துள்ளதை அறியமுடிகிறது. இந்நூல் மறு அச்சுப்பதிப்பாக, சைவச் சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் மீண்டும் 2007இல் வெளியிடப்பட்டது.

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை பதிற்றுப்பத்தின் பதிகங்கள் பற்றிய ஆராய்ச்சியை இப்பதிற்றுப்பத்து நூலின் முன்னுரையில் அமைத்துக் கொண்டுள்ளார். இத்தகைய பதிப்பு உரைகளின் வாயிலாகப் பல உண்மைத் தகவல்களை அறிய முடிகின்றன.

## பதிப்பும் பதிப்பாசிரியர் குறைபாடும்

தமிழியல் ஆக்க மரபில் இலக்கண, இலக்கியப் பதிவுகள் என்பவை தவிர்க்க முடியாதவை. இவை இரண்டிற்குமான புரிதலை ஏற்படுத்தும் உத்தி மரபு உரைப் பதிப்பு மரபாகும். படைப்பாக்கப் புலத்தில் எவ்வாறு இலக்கண, இலக்கியங்களை முன்வைக்கின்றோமோ, அதைப்போன்றே உரை இலக்கியப் படைப்பும் அடையாளப்படுத்தப்பட வேண்டியவை. உரைகள் தனித்த இலக்கிய வகையாகப் பரிணாமம் பெற்று நீள்கிறது. தற்காலச் சூழலில் இலக்கிய வகைமைகள் குறைந்து படைப்பாக்கப் பின்புலத்தில் உரைகளே பெரும் ஆதிக்கம் செலுத்தி வருவதைக் காணமுடிகிறது.

தமிழ் இலக்கிய வரலாற்றில் உரைகளை முதன்மைப்படுத்தும் தேவையும் ஏற்படுகிறது. படைப்பிலக்கிய மூலப்பிரதிகளான இலக்கண, இலக்கியங்களை ஆராய்வது எவ்வளவு சிறந்த ஆய்வோ, அதைப் போன்றதே அவற்றின் உரைகள் மீதான ஆய்வும். தமிழ் மொழிப்பயிற்சிக்கும் இலக்கிய வளர்ச்சிக்கும் உரைகளின் பங்களிப்பு நிராகரிக்க முடியாத ஒன்றாகும்.

பதிப்பிக்கும்பொழுது கவனமின்மை காரணமாகவும் குறைகள்/தவறுகள் நிகழலாம். இந்நிலையில், பதிப்பாசிரியர்கள் சிலர் மூலங்களைச் சரிப்படுத்துதல் என்ற பெயரில் திருத்துதல் செய்யும் பொழுது அவையும்கூடக் குறைகளாகிப் போகும் வாய்ப்புகள் ஏற்படுகின்றன. இத்தகைய பின்புலத்தில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் குறைகளை ஆராய முனையலாம். அம்முறையே,

“உரைவேந்தராகிய ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தாம் உரை எழுதிய சங்க இலக்கிய நூல்கள் அனைத்திலும் பல பாடங்களைத் திருத்தியும் மாற்றியும் அமைந்துள்ளார். புறநானூற்றின் பிற்பகுதி பாடல்கள் பலவற்றில் பாடங்களை மாற்றியுள்ளார். ஆசிரியர் பெயர் கிடைக்காமல் உ.வே.சா., ச.வையாபுரிப்பிள்ளை ஆகியோர் விட்டிருந்த பாடல்களுக்கு எல்லாம் ஆசிரியர் பெயர் கொடுத்து நிரப்பி உள்ளார். ஒப்புநோக்கிய ஏட்டுப் பிரதிகள் என்று குறிப்பிடுகிறாரே தவிர ஏட்டுப்படிகள் பற்றி விவரம் எதுவும் வெளிப்படையாக நூலில் தரப்படவில்லை” (பெருமாள் முருகன்; 2011, ப.25). இக்கூற்றின் வாயிலாக ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரைகள் பதிப்பு குறித்த திருத்தக் குறைபாடுகளை அறிய முடிகிறது. உ.வே.சா., ச. வையாபுரிப்பிள்ளை இவர்கள் விட்டுச் சென்ற பெயர்களைக் கண்டறிந்து ஔவை சு.துரைசாமிப்பிள்ளை பதிப்பித்தது சிறப்புக்குரியது. எனினும், அப்பதிப்பில் அதற்கான ஏட்டுச் சுவடிகளைக் கொடுக்காமல் போனது குறையாகும்.

ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் மீதான குற்றச்சாட்டு, “பதிப்பிப்போர் தாம் பயன்படுத்திய ஏட்டுப்படிகள் குறித்த முழுவிவரங்களை நூலில் கொடுப்பது வழக்கம், உ.வே.சா. உள்ளிட்டோர் பயன்படுத்திய ஏட்டுச் சுவடிகளைப் பார்வையை விரும்புவோருக்கு இன்றும் பார்க்க வாய்ப்பு இருக்கிறது. ஆனால் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை பயன்படுத்திய ஏட்டுச் சுவடிகள் பலவற்றைப் பற்றிய விவரம் எதுவும் தெரியவில்லை” (மேலது; ப.25). இக்கூற்றின்வழி வலுக்கிறது. மேற்கூறப்பட்ட செய்திகள் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை பதிப்பு மீதான நம்பகமின்மையை ஏற்படுத்துகிறது.உரைகளில் தேர்ந்தவராக (உரையாசிரியராக) அடையாளப்படுத்தப்படும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் பதிப்புகளில் முழுமையற்ற நிலையைக் காணமுடிகிறது.

ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் பதிப்புகள் குறைபாடு உடையவையாக இருந்தாலும் உரையில் சிறந்தவர் என்பதை மறுப்பதற்கில்லை. அம்முறையே, “மர்ரே ராஜம் பதிப்பு வரைக்கும் கிடைக்காத ஆசிரியர் பெயர்களை எல்லாம் இவர் கண்டறிந்துள்ளார். உ.வே.சா.மிநாதையரும் ச. வையாபுரிப்பிள்ளையும் தமக்கு உதவியதாகச் சிலசம்பவங்களைக் குறிப்பிட்டு நம்பகத்தன்மையை உருவாக்க முயன்றுள்ளார். அவர்கள் இறந்த பின்னரே இந்த முன்னுரைகளைத் துரைசாமிப்பிள்ளை எழுதினார் என்பதையும் கவனத்தில் கொள்ளவேண்டும். ஏராளமான திருத்தங்களைச் செய்துள்ள அவர், பதிப்பிற்குரிய நெறிமுறைகளைச் செம்மையாகக் கையாளவில்லை. அதனால்தான் அவரைச் சிறந்த உரையாசிரியராக மதிக்கும் புலமை உலகம் பதிப்பாசிரியராகக் கருத்தில் கொள்வதில்லை” (மேலது; பக்.25-26). இக்கூற்று ஔவை சு.துரைசாமிப்பிள்ளை பதிப்புக் குறைபாட்டையும் உரைச் சிறப்பையும்

தெளிவுபடுத்துகிறது. இதன் காரணமாகவே ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரைவேந்தர் என்று போற்றுதலுக்குரியவராகப் பாராட்டப்படுகிறார் என்பதை உய்த்துணர முடிகிறது. இவ்வாறு ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் பதிப்பினைக் குறைகூறும் பெருமாள் முருகன் நேர் எதிரான கருத்தைப் பதிவு செய்துள்ளதும் கவனத்திற்குரியதாகும்.

ஒரே பனுவலில் உ.வே.சா. பற்றிய மாற்றுக் கருத்தைப் பெருமாள்முருகன் முன்வைப்பது முரணாக உள்ளது. அம்முறையே "மூலத்தை உ.வே.சா. திருத்தியதாக இதுவரை எதையும் நிரூபிக்க இயலவில்லை" (பெருமாள்முருகன்; 2011, ப.77). ஒரு கருத்தில் சரியென்று உடன்படும் கருத்து வரும் காலத்தில் மறுக்கப்படுகிறது. இதன் காரணமாகவே மறுபதிப்பு/மறு உரை/மறு ஆய்வு நிகழ்த்த வேண்டிய தேவை ஏற்படுகிறது.

மறுபதிப்புகள் என்பவை கால மாற்றத்திற்கு ஏற்ப வணிக நோக்கத்தைக் கருத்தில் கொண்டும் வெளிவந்துள்ளன. அவற்றில் சில பதிப்புகள் முன்னைய பதிப்புகளில் உள்ள பாடினோர் வரலாறு, பதிப்பு முறைகள் போன்றவற்றைத் தவிர்த்து வந்திருக்கின்றன. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சங்கப்பனுவல் நான்கனை ஒருவகையான நேர்த்தியுடன் சைவச் சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்டுள்ளதும், அது தற்காலத்தில் தமிழ்மண் பதிப்பகத்தின் வெளியீடாக வரும்போது சில குறைபாடுகளைத் தாங்கி நிற்பதும் கவனத்திற்குரியதாகும்.

ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சங்க இலக்கிய உரைப்பதிப்பில் ஒவ்வொரு திணைக்குரிய ஆசிரியர் வரலாறு, உலகியல் விஞ்ஞானம், அறிவியல் நோக்கு, தத்துவம் முதலிய கூறுகளோடு விரவிய ஆராய்ச்சியையும் ஆங்காங்கு அறியமுடிகிறது. மேலும் அவ்வப் பாடல்களின்கீழ் உள்ளுறை, உவமம், பாடவேறுபாடு என முறையாக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. உ.வே.சா. அவர்கள் சுட்டிக்காட்டிய பாடவேறுபாட்டைத் தம் நூலிலும் சுட்டிக்காட்டியுள்ளார். மொத்தத்தில் உ.வே.சா. பதிப்பிற்குப்பின், ஔவை சு.துரைசாமிப்பிள்ளை அவர்களுடைய பதிப்பானது செம்மைப் பதிப்பாகவும் காணப்படுகிறது. மேலும் சங்க இலக்கியத்தை ஆராய விழைவோருக்கு இவருடைய பதிப்பு ஒரு கைவிளக்காக அமையும். இத்தகைய பின்புலத்தில் சங்க இலக்கிய உரைப்பதிப்பு மரபை விளங்கிக்கொள்ள முடிகிறது.

## தொகுப்புரை

- மறுபதிப்புகள் என்பவை காலமாற்றங்களுக்கு ஏற்ப வணிக நோக்கத்தைக் கருத்தில் கொண்டு சில பதிப்புகள் முன்னைய பதிப்புகளில் கூறப்பட்ட பாடினோர் வரலாறு, பதிப்பு முறைகள் போன்றவற்றைத் தவிர்க்கின்றனர். இத்தகைய போக்கு பதிப்பு நெறிகளின் குறைகளாக எண்ணப்படுகின்றன. இத்தகைய குறைகளை அறவே களைவது சிறப்பாகும்.
- இலக்கியத்தை வரலாற்றுக்குப் பயன்படுத்தும்பொழுது இலக்கிய உணர்வைத் தவிர்த்து வரலாற்று உணர்வு மேலோங்கி இருத்தல் அவசியம்.
- ஆய்வுக்குத் தகுந்த பதிப்புகள் எதுவென்று வரையறை செய்ய முடியாத நிலையே நம் பதிப்பு மரபில் தென்படுகிறது.
- பதிப்பு நெறிமுறைகள் குறித்தான தனியான வரலாற்றை நாம் இன்னும் அடையாளப்படுத்த முடியவில்லை.
- பாடவேறுபாடுகள் என்பவை ஏட்டுவழிப்பாடத்திலும், வாய்மொழிப்பாடத்திலும் நிகழ வாய்ப்பிருக்கிறது. மூலநூல் எழுந்த காலத்திற்கும் பதிப்பிக்கப்படும் காலத்திற்கும் ஏற்படும் சமூக இடைவெளிகளும் பாடவேறுபாட்டை ஏற்படுத்துகின்றன.

காலம் நெடுக மாற்றங்களை மட்டுமே நிரந்தரமாகக் கொண்டுள்ளது இச்சமூகம். பழைய வரலாறு சார்ந்த வாழ்வியலை அக, புற நூல்கள் வெளிக்காட்டுகின்றன. புற நூல்கள் என்பவை நமக்கான வீர மரபையும், புறம் சார்ந்த வாழ்வியலையும் வெளிப்படுத்துகின்றன. எனவே, புறநூல்களில் அரசன் பற்றியோ அல்லது அரசன் போர் புரிந்த இடம் பற்றியோ, புறவாழ்வு சார்ந்த பின்புலம் பதிவாக்கப்படுதல் இயல்பாகும். புற இலக்கியப் பதிவுகளில் கல்வெட்டுத் தரவினை இணைத்துப் பார்த்துப் பொருள் புரிதல் சாலச் சிறந்ததாகும். இப்பின்புலத்தில் அகநூல்கள் எவ்வாறு பொருந்துகின்றன என்பதை ஆராயும் முகமாக இவ்வியல் ஆராய முனைகிறது.

அக நூல்கள் தொல்காப்பியக் கூற்றுப்படி “சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாஅர்” என்னும் மரபிற்கு உட்பட்டதாகும். எனவே இத்தகைய அகநூல்களில் கல்வெட்டு சார்ந்த பெயராய்வை எவ்வாறு இனம் காண்கிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை என்பது ஆய்வுகுரியதாகும். ஊர்ப்பெயராய்வுகளையே புறநூல்களில் அதிகம் ஆராய்ந்துள்ள ஔவை சு.துரைசாமிப்பிள்ளை அகநூல்களில் எவ்வாறு கல்வெட்டுத் தரவினைப் பொருத்திப் பார்க்கிறார் என்ற வினாவுடன் இவ்வியல் விவாதிக்கத் தொடங்குகிறது.

அகநூல்களில் ஒன்றான நற்றிணை, பூம்புகார் பதிப்பகத்தாரால் வெளியிடப்பட்ட மூலமே இங்கு ஆய்வுக்குரிய பதிப்பாக எடுத்துக்கொள்ளப்படுகிறது. பூம்புகார் பதிப்பகம் பதிப்பு நெறிமுறைகளைப் பின்பற்றி உள்ளதைக் கவனத்தில்கொள்ள வேண்டும். முதற்பதிப்பின் முன்னுரை, முதற்பதிப்பின் அணிந்துரை, முதற்பதிப்பின் உரைநலம் எனக் கழக முதற் பதிப்புகளைப் பின்பற்றி நற்றிணையைப் பதிப்பித்துள்ளனர். இத்தகைய பதிப்புத் தகவல்கள் கொடுக்கும் முறை பதிப்பகங்களுக்கு இருத்தல் அவசியம். பழைய பதிப்பு முன்னுரைகள் உரை எழுந்த சூழல் சார்ந்த புரிதலை ஏற்படுத்துகின்றன. இனி அகநூலான நற்றிணை உரை சார்ந்த கல்வெட்டுப் பதிவுகளை ஆராய முனைவோம்.

## நற்றிணை வெளிப்படுத்தும் கல்வெட்டுத் தரவுகள்

நற்றிணை என்ற அக நூலுக்கு இதற்கு முன்னரே பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் உரை எழுதி இருக்க, மீண்டும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை இந்நூலுக்கு உரை எழுத வேண்டிய அவசியம் என்ன என்ற வினாவுடன் விவாதிக்கத் தொடங்குவோம். பின்னத்தூர் நாராயணசாமி ஐயரின் நற்றிணை உரை, மூலப்பிரதியை முழுமையாக வெளிப்படுத்தவில்லையோ என்ற எண்ணம் எழுந்திருக்கலாம். மேலும், பல பாடவேறுபாடுகள் இருப்பதை உணர்ந்து, அவற்றைக் களைய வேண்டும் என்ற அவாவிலும் உரை எழுத முற்பட்டிருக்கலாம்.

நற்றிணைக்கு உரை எழுதவேண்டிய அவசியத்தை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றின் வாயிலாகவே கவனிப்போம். அம்முறையே "ஏடுகளை ஒப்புநோக்கிய போது காணப்பட்ட பாடவேறுபாடுகளால் பாட்டுக்கட்டு உரையே வேறு எழுதவேண்டிய இன்றியமையாமை பிறந்தது. அதனால், எனது இப்பதிப்பு நற்றிணை மூலத்தோடு விளக்கவுரை பெற்று வெளிவருகிறது" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; முதற்பதிப்பின் முன்னுரை; 2010; ப.10). இக்கூற்றின் வாயிலாக நற்றிணைக்கான உரை எழுந்த பின்புலத்தை உணரமுடிகிறது. மேலும், புறநானூறு பாட்டுகளுக்கான முன்னுரை, விளக்கம் போல நற்றிணைக்கும் உரை விளக்கம் அமைந்துள்ளதை விளங்கிக்கொள்ள முடிகின்றது.

புறநூல்கள் வெளிப்படுத்தும் இலக்கியத் தரவுகளை உறுதிப்படுத்தக் கல்வெட்டுத் தரவுகள் துணைபுரிகின்றன. அகநூல் கல்வெட்டுப் பதிவுகளில் பிற்காலக் கல்வெட்டுப் பதிவுகளையும், செப்பேட்டுத் தரவுகளையும் பொருத்திப்பார்ப்பது பொருந்துமா என்ற ஐயம் எழுவதையும் தவிர்ப்பதற்கில்லை. இத்தகைய கேள்விக்கு அவர் தரும் விளக்கத்தைக் கவனிப்போம். அம்முறையே, "சங்ககால வாழ்வுக்கு இடைக்காலப் பல்லவ, பாண்டிய, சோழர் கால வாழ்வுக்கும் மிக்க வேறுபாடு காணப்படவில்லை. சங்க காலத்தும் இடைக்காலத்தும் மக்கள் பெயர்களும் பழக்கவழக்கங்களும் ஓரளவு ஒத்து இயல்கின்றன வாதலால் இடைக்காலக் கல்வெட்டுகளும் செப்பேடுகளும் இந்நூலாசிரியருக்குப் பெரும் துணைசெய்கின்றன" (மேலது; ப.10). இக்கூற்றின்வழி, பிற்காலக் கல்வெட்டுத் தரவுகளும் சங்ககாலப் பாடலுக்குச் சான்றுபகர்வதைப் புரிந்துகொள்ள முடிகிறது.

ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் பாடல் விளக்க முன்னுரை என்பது சங்கப் பாடல்களை வரலாற்று ஆவணமாக்குகிறது. சங்கப் பாடல்களுக்கு ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரைகூறும் முறை தனிச்சிறப்பு வாய்ந்ததாகும். பாடல் பொருள் புலப்படுத்தும்போது ஆசிரியர் வரலாற்றையும், அவர் பாடுவதற்கு அமைந்த சூழலையும், அப்பாட்டின் வாயிலாக அவர் உரைக்க இருந்த கருத்தாக்கங்களையும், ஒவ்வொரு பாட்டிலும் முன்கூட்டியே எடுத்துரைப்பது, அப்பாடல் சார்ந்த பல புரிதல்களை ஏற்படுத்தக்கூடியதாகும். மேலும்,பாட்டினிடையே காணலாகும் இயற்கைப் பொருள்களின் இயல்புகளை இக்கால விஞ்ஞானக் கருத்தாக்கங்களோடு ஒப்பிட்டு உரைப்பதே ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரையின் புது நெறியாகக் கொள்ளலாம்.

### ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரைத்தன்மை

சங்கப்பாடல்களிலேயே நிலவக்கூடிய கொள்கைகளையும், வழக்காறுகளையும் விளங்கிக்கொள்வதோடு வரலாற்றின் மீதான நம்பகத்தன்மையைக் காட்டுவதாகவும்

அவருடைய உரைகள் அமைந்திருக்கின்றன. இலக்கியத் தரவுகள் காட்டும் வரலாற்று, வழக்காற்றுப், பண்பாடுகளை; கல்வெட்டு, செப்பேடுகள் முதலான தொல்லியல் தரவுகளின் வாயிலாக விளக்குவது நமக்கான வரலாற்றின் மீதான நம்பகத்தன்மையை ஏற்படுத்துவதாகும்.

பொதுவாக, சான்றுகள் கொடுக்கும் பொழுது நாம் எங்கிருந்து அந்தச் சான்றினை எடுத்தோம், அச்சான்று குறிப்பு என அனைத்தையும் எடுத்துக்காட்டுவது மரபு. ஆனால், ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரையில், காட்டப்படும் கல்வெட்டுச் சான்றுகள் எங்கிருந்து எடுக்கப்பட்டன என்ற குறிப்புகள் உள்ளனவே தவிர, அக்குறிப்பு என்ன என்பது குறிப்பிடப்படவில்லை. மாறாக, அக்குறிப்பில் உள்ள செய்திகளைத் தன்னுடைய புரிதல் சார்ந்து அவரது மொழிநடைக்கு ஏற்ப மாற்றி எழுதியுள்ளது இங்குக் குறிப்பிடத்தக்கது.

## கபிலர் திருவாதவூர்

கபிலர் பற்றியான பாடல்கள் பல இடம்பெற்றிருந்தாலும், நற்றிணையின் முதல் பாடலில் அவரின் ஊர்ப்பெயர் தெளிவை ஏற்படுத்தப்பட்டுள்ளது. அகப்பாடல்களில் பெரும்பாலும் புலவர் பெயர், புலவர் ஊர்ப்பெயர் முதலான அடையாளங்களை ஆராயவே கல்வெட்டுத் தரவுகள் முன்னெடுக்கப்பட்டுள்ளன என்பதை அறுதியிட முடிகிறது. இப்பின்புலத்தில் கபிலர் ஊர்ப்பெயராய்வை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றின் வாயிலாகக் கவனிப்போம். அம்முறையே, “சங்க கால அகப்பாட்டுத் தொகுதிகளில் ஒன்றாகிய இந்நற்றிணையின்கண் நிற்கும் முதற்பாட்டைப் பாடிய சான்றோர் கபிலராவார். இவர் சங்க காலத்தில் பாண்டிய நாட்டில் விளங்கிய நல்லிசைச் சான்றோர்களில் முன்னணியில் இலங்குபவர். இவரது ஊர் மதுரைக்குக் கிழக்கில் உள்ள திருவாதவூர் என்பர். அவ்வூர் தென்பாண்டி நாட்டுத் திருவாதவூர் என்று (A.R.No. 300 of 1916) கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்டுள்ளது” (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2010, ப.35). இக்கூற்று கபிலரின் ஊர்ப் பெயரை இலக்கியத் தரவுகளுடன் கல்வெட்டு தரவும் உறுதிப்படுத்துவதை அறியமுடிகிறது. மேலும், இப்பாடலைப் பாடியவர் பறம்பு நாட்டைச் சார்ந்த வேள்பாரியின் நண்பன் என்பதும் புலனாகிறது.

## பெருங்குன்றூர் கிழார்

கிழார் பற்றிய ஆய்வுகள் பல இடங்களில் விவாதிக்கப்பட்டுள்ளன. இருப்பினும் நற்றிணை உரையில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தரும் விளக்கம் ஆய்வுக்குரியதாகும். ‘கிழார்’ என்ற சொல்லாட்சி நிலவுடைமையாளர் என்ற

பொருண்மையை விட, அனைத்து வகையிலும் புகழ் பெற்றவராக, அரசனுக்குத் துணையாக உள்ள ஒருவரை இவ்வாறு அழைப்பது வழக்கமாக இருந்திருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது. இப்பின்புலத்தின் அடிப்படையில் பின்வரும் கூற்றினை ஆராயத்தொடங்குவோம். அம்முறையே, “கிழார் என்பது கிழவர் என்ற சிறப்புப் பெயரின் வேறு வாய்பாடு. ஓரூரின்கண் இருந்து ஒருவர், தமது புலமையாலோ, ஆண்மையாலோ, செல்வத்தாலோ, பிறவற்றாலோ மன்னர் மதிக்கும் மாண்பு பெறுகுவராயின், முன்னாளில் அவருக்குக் கிழார் என்ற சிறப்பு நல்கப்பட்டு வந்தது. அவ்வகையில் வந்தவரே இப்பாட்டுடைச் சான்றோரான பெருங்குன்றூர் கிழார். இவ்வழக்கு இடைக்காலச் சோழப் பாண்டியக் காலத்திலும் இருந்துள்ளது; இருஞ்சோ நாட்டுக் கூடற்குடி, குளத்தூர், துழாயூர், இருப்பைக்குடி, வெளியங்குடி, ஆலங்குடி என்ற ஊர்கட்குரியனாய் இருப்பைக்குடிகண் வீடுவாயில் கொண்டு விளங்கிய எட்டுச்சாத்தான் என்பான் செய்த அறச்செயலை வியந்த அந்நாளைய மன்னர் அவற்கு இருப்பைக்குடிக்கிழான் என்ற சிறப்பைத் தந்து மகிழ்வித்த செய்தியை இருப்பைக்குடிக் கல்வெட்டு (A.R.No. 334 of 1929-30) ஒன்றும், கல்வெட்டுத்துறை ஆண்டறிக்கையும் (Annual Report of the Madras Epigraphy 1936-37, para.73-4) எடுத்துக்காட்டுகின்றன. இவ்விருப்பைக்குடி கிழான் போலச் சிறப்புற்றவர்களே பெருங்குன்றூர் கிழார், அரிசில் கிழார், ஆலத்தூர் கிழார், ஆவூர்கிழார், ஆவூர் மூலங்கிழார், கோவூர்கிழார், மாங்குடி கிழார், மருதங்கிழார் என வரும் பலரும் எனக் கோடல் வேண்டும். இவ்வாறு நிலவும் வரலாறு நோக்காமல், கிழார் என்பது வேளாளர்க்கே உரிய மரபு பெயரெனக் கருதி இக்கிழார் பலரையும் வேளாளர் என உரைத்தோருமுண்டு” (மேலது; ப.53). இக்கூற்று கிழார் பற்றியான வரலாற்றுத் தெளிவை ஏற்படுத்துகிறது. மேலும், மன்னர்களே இவர்களைக் கிழார் என அழைத்துள்ளனர் என்பதையும் அறியமுடிகிறது. பொதுவாகக் கிழார் சமூகம் என்பது மன்னருக்கு இணையாக அல்லது மேட்டுக்குடிச் சமூகத்தைச் சார்ந்தவர்கள் என்பதே பொருந்தும். மேலும், இக்கருத்தாக்கம் அனைத்துச் சங்கச் சான்றோருக்கும் பொருந்துமா என்பதும் மேலாய்வுக்குரியதாகும். எனவே, ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தரும் இக்கருத்தாக்கம் சில கிழார் புலவர்களுக்கு மட்டும் பொருந்துவதாகப் புரிந்துகொள்ளல் அவசியமாகிறது.

இப்புலவரின் ஊர்ப் பெயரைத் தெளிவடைய இரா.பி. சேதுப்பிள்ளையின் கருத்தை முன்னெடுக்கலாம். அம்முறையே “குன்றை அடுத்துள்ள ஊர் குன்றூர் என்றும், குன்றத்தூர் என்றும், குன்றக்குடி என்றும் பெயர் பெறும். அப்பெயர்களிலுள்ள குன்றம் பெரும்பாலும் குன்னம் என மருவி வழங்கும். நீலகிரி என்னும் மலையில் இப்பொழுது குன்னூர் என வழங்குவது குன்றூராகும். இன்னும், தொண்டை நாட்டுக் குன்றத்தூரும்,

பாண்டி நாட்டுக் குன்றக்குடியும் இப்போது முறையே குன்னத்தூர் என்றும், குன்னக்குடி என்றும் குறிக்கப்படுகின்றன" (இரா.பி. சேதுப்பிள்ளை; 2009, ப.11). இக்கூற்று குன்றூர் பற்றிய பெயர் மாற்றத்தினைத் தெளிவுபடுத்துகின்றன. மேலும், இவ்வூர் பெயரைக் குறிஞ்சி நிலத்தின் அடையாளமாகவும் காணலாம்.

## பொய்கையார்

இரும்பொறையைப் பாடிய பொய்கையாரே களவழி நாற்பது பாடியவர் ஆவார். கழுமலம் என்ற இடத்தில் போர் நடந்ததன் விளைவாகக் கிடைத்ததே 'களவழி நாற்பது' என்னும் நூல். அக்காலக் கழுமலம் சமகாலத்தில் 'குழுமம்' என்று அழைப்பதையும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை நமக்குத் தெளிவுபடுத்துகிறது. இம்மன்னன் நினைவாக இவ்வூர் பொய்கையூர் என்று அழைக்கப்படுவதையும் விளங்கிக்கொள்ள முடிகிறது. இப்பின்புலத்தில் பின்வரும் கூற்றினை ஆராய முனைவோம். அம்முறையே, "ஆழி யிழைப்பப் பகல்போம் இரவல்லாம், தோழி துணையாகத் துயர்தீரும்- வாழி, நறுமாலை தாராய்த் திரையவோஓ என்னும், சிறுமாலை சென்றடையும் போது" என்ற பாட்டு இவர் பாடியது எனப்படுவதால், இவர் தொண்டைமான் இளந்திரையனைப் பாடிச் சிறப்புப்பெற்றது தெரிகிறது; இதற்குச் சான்றாகத் தொண்டை நாட்டில் இவர் பெயரால் பொய்கை என்றோர் ஊர் (S.I.I.Vol.i.No. 61) உளது; களவழி யென்ற நூலால் சோழன் செங்கணானை மகிழ்வித்த காரணத்தால் அவன் செய்த சிறப்புக்குச் சான்றாகச் சோழ நாட்டில் இவர்பெயரால் பொய்கை, பொய்கைக்குடி என ஊர்கள் தோன்றியுள்ளன. வடகரைப் பொய்கைநாட்டுப் பொய்கை என்று திருச்சோற்றுத்துறைக் கல்வெட்டுக்களும் (A.R.No. 200 of 1930-31) குறிக்கின்றன. பொய்கைக்குடியைத் திருக்கருகாவூர்க் கல்வெட்டுகளும் (A.R.No. 426 of 1918) குறிக்கின்றன. திருமால் அடியார்களான ஆழ்வார் நிரல்களுட் காணப்படும் பொய்கையார் இவரேயாகலாம் என்று சிலர் கருதுகின்றனர். "பொய்கையாழ்வார் மறந்தும் புறந்தொழா மாந்தர்; ஆதலால், அவர் சேரமானையும் சோழனையும் தொண்டைமானையும் பாடார்; ஆதலால் இருவரையும் வேறுவேறாகக் கோடலே பொருத்தமாகிறது" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2010; பக்.117-118). இக்கூற்று புலவரின் சிறப்பின் தன்மைகளை உணர்த்துகிறது. புலவனை நினைவுகூறும் விதமாகப் பொய்கை, பொய்கைக்குடி, பொய்கையூர் என்ற ஊர் பெயர் உருவாக்கத்தினைப் புரிந்துகொள்ளலாம். மேலும், பொய்கையார், பொய்கையாழ்வார் இருவரும் வேறானவர்கள் என்ற வரலாற்றுத் தெளிவையும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை நமக்குக் காட்டுகிறது. இத்தகைய இலக்கியத் தகவல்களைக் கல்வெட்டுத் தரவுகளுடன் தெளிவுபடுத்தும் திறன் இவரின் உரைக்குச் சிறப்பை விளக்குகிறது.

**நக்கண்ணையார்**

நக்கண்ணையார் என்ற பெயர் 'ஆர்' விகுதி பெற்று வருவதால் ஆண் பாலைக் குறிப்பதாகக் கொள்ளலாம். ஆனால், கண்ணை என்ற பெயர் பெண்பாலைக் குறிப்பதாகச் சொல்லப்படுகிறது. சமகாலச் சூழலில் 'கண்ணையன்' என்ற பெயர்களும் ஆண்பாலையே குறிக்கின்றன. எனவே, இப்பெயர் பெண்பாலைக் குறிப்பது என்பது சற்று ஐயத்தை எழுப்புவதாகும். இப்பெயரை இருபாலுக்கும் உரியதாகவும் கொள்ள வாய்ப்பிருக்கிறது. இப்பின்புலத்தில் பின்வரும் கூற்றினை ஆராய முனையலாம். அம்முறையே, "கண்ணை என்ற பெண்பாற் பெயர், நச்செள்ளை, நப்பின்னை என்பன போல நக்கண்ணை என வழங்கிய தூய தமிழ்ப்பெயராகும். இடைக்காலச் சோழப் பாண்டியர் காலத்துக் கல்வெட்டுகள் கண்ணை என்ற பெயர் மக்கள் வழக்கில் இருந்தமையைக் காட்டுகின்றன. முதற்பராந்தக சோழனுடைய திருக்கண்டியூர்க் கல்வெட்டொன்று ''பிராமணி மதிசூதன் கண்ணை (S.I.I.Vol.V.No.571) என்ற ஒருத்தியைக் குறிப்பது போதிய சான்றாகும்" (மேலது; ப.121). இக்கூற்றின் வழி 'கண்ணை' என்பது பெண்ணைக் குறிக்கும் சொல்லாகவே கொள்ளப்படுகிறது. இவ்விடத்தில் கல்வெட்டுச் சிதைவினையும் கவனத்தில் கொள்ள வேண்டியது அவசியமாகின்றது. கண்ணை என்ற பெயர் முழுப் பெயராக இருந்திருக்குமோ என்பதும் மேலாய்வுக்குரியதாகும்.

**நல்வேட்டனார்**

பெரும்பாலான பெயர்களுக்குப் பின்னர் 'ஆர்' விகுதி சேர்க்கப்பட்டுள்ளதைப் புரிந்துகொள்ள முடிகிறது. 'ஆர்' விகுதிகள் என்பவை பிற்கால மரபில் புலவரின் பெருமை கருதிச் சேர்க்கப்பட்ட ஒன்றெனலாம். மேலும், இவர் வாழ்ந்த ஊர் பெயரின் அடையாளங்களை ஆராய முனைவோம். அம்முறையே, "இப்பெயர் அச்சுப்பிரதியில் காணப்படவில்லை யாயினும் தேவர் ஏட்டிலும், செட்டியார் ஏட்டிலும் காணப்படுகிறது. இவர் மிளைக்கிழான் நல்வேட்டனார் என்றும் கூறப்படுவது நோக்குமிடத்து இவர் மிளையென்னும் ஊரினர் என்பது தெளிவு. இவ்வூர் சோழ நாட்டில் பெருமிளை என இரு கூறாக இடைக்காலத்தில் பிரிந்திருக்கிறது. பெருமிளை இடைக்காலத்தேயே பெருமுளையென மருவிச் சயங்கொண்ட சோழவள நாட்டு மிளை நாட்டுப் பிரமதேயமான பெருமுளை (A.R.No. 210-4 of 1917) என வழங்கியது அவ்வூர்க் கல்வெட்டுக்களால் தெரிகிறது. மிளை நாடென்பது சில கல்வெட்டுக்களில் விளைநாடு எனக் காணப்படுகிறது. வேறு கல்வெட்டுக்களில் காணப்படும் விளைநாடு வேறு; இதுவேறு. இச்சான்றோர் மிளைகிழான் எனப்படுதலின் இவர் வேந்தவை அறியச் சிறந்த புலமை மிக்கவர் என்பதில் ஐயமில்லை" (மேலது; ப.140). இக்கூற்றின் வழி 'மிளைகிழார்'

என்ற அடைமொழி பல வரலாற்றுத் தெளிவை ஏற்படுத்துகிறது. மிளை என்பது ஊர்ப் பெயராகக் கொள்ள நேர்ந்தாலும், நல்வேட்டனார், கிழான் என்ற சொல்லாட்சி இவரின் சமூக மதிப்பீட்டை வெளிப்படுத்தும் குறியீடு எனலாம். எனவே, நல்வேட்டனார் என்பவரை வேளாள மரபைச் சார்ந்த மேட்டுக்குடிச் சமூகமாகக் கருதலாம். மிளை என்பது காலப்போக்கில் முளை என மருவி, மீண்டும் விளை எனவும் மாறியதற்கான சான்றாகக் கல்வெட்டுத் தரவினை, இனம் காணலாம். ஔவை சு.துரைசாமிப்பிள்ளை விளைநாடு என்பது வேறானது என்கிறார். மிளை நாடே இப்புலவர் வாழ்ந்த நாடு என்ற தெளிவை இவ்வுரை காட்டுகிறது. மிளைக்கிழான் நல்வேட்டனார் என்ற கருத்தை முன்வைப்பதையும் கவனத்தில் கொள்ளலாம். மேலும், நல்வேட்டனார் வேளாளர் மரபைச் சார்ந்தவர் என்பதையும் அறியமுடிகிறது.

## போந்தை - ஊர்ப்பெயராய்வு

போந்தை என்பது சங்கக் கால ஊர்ப் பெயர்களில் ஒன்றாகும். இத்தகைய ஊர்ப் பெயர்கள் சங்கப்பாடல்களில் பொதிந்து கிடக்கின்றன. சங்கப் பாக்களில் இடம்பெற்றுள்ள ஊர்ப்பெயர்களை மட்டும் நாம் கவனப்படுத்தி ஆராய்கிறோம். பாடல்களில் இடம்பெறாத இன்னும் எத்தனையோ ஊர்ப் பெயர்கள் அழிந்திருக்கக்கூடும். எனவே, இத்தகைய ஊர் பெயர்கள் சங்கக் கால வரலாற்று புரிதலை ஏற்படுத்தும் ஆவணமாகவும் விளங்குகின்றன. போந்தை பற்றிய ஊர் பெயர் தெளிவை எட்டப் பின்வரும் கூற்றைக் கவனிக்கலாம். அம்முறையே, "சோழநாட்டுக் காவிரி வடகரைப் பகுதியில் போந்தை யென்னும் ஊர்க்குரியனாய் நெடுவேல் ஆதன் என்பான் வாழ்ந்து வந்தான். "படுவண்டார்க்கும் பன்மலர்க் காவின் நெடுவேளாதன்" என, அவனையும் அவனது ஊரையும் கண்ணத்தனார் பாராட்டிப் பாடியுள்ளார். இப்போந்தையை மிறைக் கூற்றத்துப் போந்தை (A.R.No. 5 of 1920) என்று கல்வெட்டுகள் குறிக்கின்றன. மீயறைக் கூற்றம் என்பது இடைக்காலத்தில் மிறைக்கூற்றம் என மருவிற்று" (மேலது; ப. 149). இக்கூற்று போந்தைப் பற்றியான ஊர்த் தெளிவை ஏற்படுத்துகிறது. போந்தை மிறைக் கூற்றத்தும் போந்தை, மீயறைக் கூற்றம் என மருவிய பிறகே மிறைக் கூற்றமானதை இவ்வுரை உணர்த்துகிறது.

## வடவண்ணக்கன் பேரிசாத்தனார்.

திசை குறிப்பாலும் பெயர்கள் இடம்பெற்றுள்ளன என்பதற்கு இப்பெயரே சான்றாகும். பேரி என்ற சொல்லாட்சி ஆய்வுக்குரிய பெயராகக் கொள்ள நேர்கிறது. பேரி என்பது செட்டியார் சமூகத்திற்கான குறியீடு என்பதாக ஔவை சு.துரைசாமிப்பிள்ளை கூற்று அமைகிறது. பேரியைத் தொடர்புபடுத்திச் சமகாலச் செட்டியார் மரபையும்

வெளிப்படுத்துகிறார். பேரி பெயர் மரபு சார்ந்த பின்புலத்தைப் பின்வரும் கூற்றின் வழி ஆராய்வோம். அம்முறையே, “பேரி சாத்தனார் பொன்னின் ஓட்டம் காணும் வணிகர். பேரி, ஆலம்பேரி என்பன வணிகர் குடிப்பெயர்; இக்காலத்தும் பேரி என்பதைக் குடிப்பெயராகக் கொண்டோர் பேரி செட்டிகள் எனத் தொண்டைநாட்டில் வாழ்கின்றனர். பொன்னின் ஓட்டம் காணும் தொழில் வண்ணக்கம் எனப் பண்டை நாளில் வழங்கினமையின், இவர் வடபுலத்தில் இத்தொழில் செய்தமையால் இவரை வட வண்ணக்கன் எனச் சிறப்பித்துள்ளனர். தொண்டை நாட்டின் வடபகுதியில் வண்ணக்கன் பாடி, வண்ணக்கனூர் என ஊர்கள் இன்றும் இருப்பது இதற்குப் போதிய சான்று பகர்கின்றன. பொன்னின் ஓட்டம் பார்க்கும் வண்ணக்கர் இடைக்காலத்தும் இருந்திருக்கின்றனர்; திருவையாற்று முதல் இராசாதிராசன் கல்வெட்டொன்றில், வண்ணக்கன் சாத்தன் நின்றானான வீரசோழ அனுக்கன் (S.I.I.Vol.V.No. 520) என ஒருவன் காணப்படுவது இதற்குச் சான்றாகும். இந்நூல் ஆராய்ச்சிக்குக் கிடைத்த ஏடுகளில் எல்லாம் வடவண்ணக்கன் என்று காணப்பட்டதேயன்றி வடம வண்ணக்கன் என்று காணப்படாமை இங்கே குறிக்கவேண்டியிருக்கிறது”(மேலது; ப. 153). இக்கூற்று செட்டியார்களில் ஒருவரே வண்ணக்கன் என்பதைத் தெளிவுபடுத்துகிறது. பேரி என்பது குடிப் பெயராகவும் இருந்துவருகின்றது என்பதையும் புலப்படுத்துகிறது. செட்டிமார்களின் சமகாலத் தொழிலே சங்கக் காலத்திலும் நிலவி இருந்தது என்பதற்கான சான்றாகவே பொன்னின் ஓட்டம் காணும் தொழிலையும் இனம் காணலாம். தற்காலத்திலும் வண்ணக்கன்பாடி, வண்ணக்கணர் என்ற பெயர்கள் கொண்ட ஊர்கள் இருப்பதையும் அறியமுடிகின்றது. வடக்குப் பகுதியில் இத்தொழில் செய்தமையால் இப்பெயர் பெற்றமையும் புலனாகிறது.

**முதுகூத்தனார்**

இப்பெயர் கொண்ட சான்றோர், சோழநாட்டு நல்லிசை சான்றோர்களில் ஒருவராவார். இவர்பெயர் முதுகூற்றனார் எனவும், முதுகூத்தனார் எனவும் பாடவேறுபாட்டைக் கொண்டுள்ளது. இவ்விரு பெயர்களில் முதுகூத்தனார் என்பதே கல்வெட்டுகளால் உறுதிசெய்யப்பட்டதாகும். அம்முறையே, “தித்தனதுவீரை, காவிரியின் வடகரையில் திருப்பழனம் முதலிய ஊர்களைத் தன்னகத்துக்கொண்ட வீரைக் கூற்றத்துக்குத் தலைநகர், திருப்பழனத்துக் கல்வெட்டுகள் அதனை வீரைக் கூற்றத்துத் திருப்பழனம் எனவும், ‘விக்ரம சோழ வளநாட்டு வீரைக் கூற்றம் (A.R.No. 134, 182 of 1927-28) எனவும் குறிக்கின்றன. வீரைக் கூற்றத்துத் தித்தனைச் சோழன் போரைவைக் கோப்பெரு நற்கிள்ளிக்குத் தந்தை யென்றலும் உண்டு. இதற்கேற்பவே, இப்பகுதியில் இடைக்காலத்தில் சோழர் குடியில் தோன்றிய தலைவன் ஒருவன், சோழப்

பெருமானடிகள் பெருநற்கிள்ளிச் சோழன் (A.R.No. 143 of 1927-28) என்று திருப்பழனத்துக் கல்வெட்டுகளில் சிறப்பிக்கப் பெறுகின்றான்" (மேலது; ப. 165). இக்கூற்று முதுகூத்தனார் சோழ மரபைச் சார்ந்தவர் என்பதை உறுதிப்படுத்துகிறது. கல்வெட்டுகளில் வீரைக் கூற்றம் என்று கொள்ள நேர்கிறது. ஆனால் இதைச் சில கல்வெட்டுகளில் ஏற்பட்டுள்ள பிழையாகச் சுட்டிக்காட்டுதாகக் கொள்ளலாம். எனவே, முதுகூத்தனார் என்பதே பொருத்தமானது என்று ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை ஆராய்ந்துள்ளதை அறியமுடிகிறது.

### மருங்கூர் ஊர்ப்பெயராய்வு

மருங்கூர் பற்றியான பதிவு என்பது வெவ்வேறாக அமைவதைக் காணலாம். மருங்கூர், மருங்கூர் பட்டிணம், திருமருதத்துறை இவைகள் அனைத்து ஒரே ஊரைக் குறிக்கின்றனவா என்பதை இங்கு ஆய்வுப் பொருளாக்கி ஆராய முனைவோம். இவ்வூர் பெயர் பதிவை உறுதிசெய்ய நான்கு கல்வெட்டுத் தரவுகள் ஆராயப்படுகின்றன. எனவே, தேவைகருதி இங்கு முழு விவரங்களையும் தரவேண்டியது அவசியமாகிறது. அம்முறையே, "மருங்கூர்ப்பட்டினம், பாண்டி நாட்டு முத்தூற்றுக் கூற்றத்துக் கடற்கரை ஊர்களுள் ஒன்று என இராமநாதபுரம் மாவட்டத்துத் திட்டாந்ததான புரத்துக் கல்வெட்டுக்களால் (A.R.No. 597-603 of 1926) தெரிகிறது; ஆயினும், இதற்கு வடபாலில் விளங்கிய ஊணூர் கல்வெட்டு காலத்தேயே மறைந்து போனதாக அறிகின்றோம்; ஒருகால் இனி வெளிவர இருக்கும் கல்வெட்டுக்களில் காணப்படுதலும் கூடும். கடலடையாது இலங்கை கொண்ட வளநாடு எனப்படும் கோனாட்டுப் பகுதியிலுள்ள மருங்கூர் (P.S.Ins. No. எண் கொடுக்கவில்லை). பட்டினமாகாமையின், அதனை ஈண்டுக் கோடற்கு இடமில்லை. எருமைநாட்டு அயிரியாறு இப்போது மைசூர் நாட்டு ஆசன் மாவட்டத்தில் உளது; குட்டுவனது தொண்டி, மலையாள மாவட்டத்துக் குறும்பர்நாடு வட்டத்தில் கடற்கரையில் இருக்கிறது. பவத்திரி நகரம் நெல்லூர் மாவட்டத்துக் கூடூர் வட்டத்துக் கடற்கரை நகராயிருந்து கடல்கோட்டு இரையாகிவிட்டது; அதனை அம்மாவட்டத்து ரெட்டிபாளையம் கல்வெட்டுகள் "சயங்கொண்ட சோழ மண்டலத்துக் கடல்கொண்ட பவத்திரிக் கோட்டம்" (Nel.Ins.Gudur.No. 87) என்று கூறுகின்றன. கரிகாற் சோழனது ஆட்சி மேற்கில் மலையமான் நாடு வரையிலும் பரந்திருந்தமையின், அந்நாட்டின் கீழ்ப் பகுதியான திருமுனைப்பாடிநாட்டு இடையாறு என்னும் ஊர் அக்காலத்தே சிறந்த நகரமாக விளங்கிய செய்தியை நக்கீரனார் குறிக்கின்றார். பாண்டி நாட்டு வையைக் கரையில் விளங்கிய திருமருதந்துறை போலத் தென்பெண்ணைக் கரையில் இவ்விடையாறு திருமருதந்துறையாக விளங்கிற் றென்பதை அவ்வூர்க் கல்வெட்டுகள் திருமுனைப்பாடி நாட்டு இடையாற்றூர் நாட்டு இடையாறுடைய

திருமருதந்துறை (A.R.No. 278 of 1928-9) என்று கூறுகின்றன. மதுரை மாவட்டத்துப் பெரியகுளம் பகுதியிலுள்ள குள்ளபுரத்துக் கல்வெட்டுகள் வையைத் துறையை "திருமருதந்துறை" (A.R.No. 146 of 1908) என்று இயம்புகின்றன" (மேலது; பக். 179-180). இக்கூற்று மருங்கூர் பற்றியான புரிதலை ஏற்படுத்துகிறது. மரூங்கூர் என்ற பெயர் கொண்ட ஊர்கள் பல இருந்துள்ளன என்பதையும் அறியமுடிகிறது. கடல்கோளால் பல ஊர்கள் அழிந்துபோனதை அவ்வூர்ப் பெயர்களைத் தாங்கி நின்ற கல்வெட்டுக்களால் அடையாளம் காணமுடியும் என்பதையும் புரிந்துகொள்ளலாம். ஊர்ப்பெயர்கள் பிற்காலங்களில் 'திரு' என்ற அடைமொழி பெற்று வருவதையும் அறியமுடிகிறது. இப்பின்புலத்தின் வாயிலாகவே திருமருதந்துறையைப் புரிந்துகொள்ளுதல் அவசியமாகிறது.

மருங்கூர் பெயர்க்காரணம் பற்றிய தெளிவை அடைய ரா.பி. சேதுப்பிள்ளையின் கருத்துகள் துணைநிற்கின்றன. அம்முறையே, "நால்வகை நிலங்களிலும் பொதுவாகத் தமிழ்மக்கள் குடியிருந்து வாழ்ந்தாரேனும் மருத நிலமே சிறப்பாகக் குடியிருப்புக்கு ஏற்றதாகக் கொள்ளப்பட்டது. ஆதலால், ஊர் என்னும் பெயர் மருத நிலக் குடியிருப்பைக் குறிக்கும். மரப்பெயர், மாப்பெயர் முதலிய எல்லா வகையான பெயர்களோடும் ஊர் என்னும் சொல் சேர்ந்து, தமிழ் நாட்டில் வழங்கக் காணலாம். மருத மரத்தின் அடியாகப் பிறந்த ஊர் மருதூர்; நாவலடியாகப் பிறந்த ஊர் நாவலூர். இன்னும் தேவாரப் பாடல் பெற்ற தெங்கூரும், பனையூரும், பாசூரும், கடம்பூரும் மரங்களாற் பெயர்பெற்ற பதிகளேயாகும்" (இரா.பி. சேதுப்பிள்ளை; 2009; ப. 27). இக்கூற்று மருங்கூர் மருதநிலம் சார்ந்தது என்பதைப் புலப்படுத்துகிறது. இம்மருங்கூர் என்பதைப் புலப்படுத்துகின்றன. நிலப்பெயர் அடையாளங்களையும் அந்நிலம் சார்ந்த மரப்பெயர்களையும் கொண்டு இவ்வூர்ப் பெயரினைப் புரிந்துகொள்ள ஏதுவாகிறது.

மருங்கூர் பற்றியான நடனகாசிநாதன் கருத்தும் நோக்கத்தக்கதாகும். அம்முறையே, "மருங்கூர்ப் பட்டினம் கீழைக்கடற்கரையில் இருந்த தொண்டிக்கும், கொற்கைக்கும் இடைப்பட்ட கடலோரப் பகுதியில் இருந்ததாகச் சீனி வேங்கடசாமி கருதியுள்ளார். அண்மையில் அகழ்வாய்வு மூலம் கண்டுபிடிக்கப்பட்டுள்ள அழகன்குளம் தான் பண்டைய மருங்கூர்ப் பட்டினமாக இருக்கலாம் என்று கருத இடமேற்படுகிறது" (நடனக் காசிநாதன்; 1999; ப.123). இக்கூற்று மருங்கூர்ப் பட்டினத்தின் பழைய பெயர் அழகன்குளம் என்பதைத் தெளிவுபடுத்துகிறது. சீனி வேங்கடசாமி கருத்தும் நடனகாசிநாதன் கருத்தும் மேலாய்வுக்குரியதாகும். மேலும், மருங்கூர் பற்றிய சேதுபதி மன்னர் செப்பேடுகள் கூற்றும் கவனிக்கத்தக்கதாகும். அம்முறையே "மருங்கூர் என்பது சேதுபதி மன்னர்கள் தானமாக வழங்கிய ஊர்களில் ஒன்று என்பதைச் சேதுபதி மன்னர்

செப்பேடுகள் கூறுகின்றன" (எஸ்.எம். காமல்; 1992; ப.699). இக்கூற்று இவ்வூர் பெயர் பற்றிய பழைய வரலாற்றை உணர்த்துகிறது. எனவே, மருங்கூர் என்பது தானமாக வழங்கப்பட்ட ஊர் என்பதும் புலனகிறது.

## மன்றம் - பெயர் புலப்பாடு

மன்றம் என்ற சொல்லாட்சி சங்கப் பனுவல்களில் காணக்கிடக்கின்றது. இச்சொல்லாட்சி மக்கள் ஒன்றுகூடும் இடத்தை அடையாளப்படுத்துவதாகக் கொள்ளலாம். மன்றம் என்பதைப் பல பெயர்களுக்கான பொதுச்சொல்லாகக் கொள்ளலாம். இத்தன்மையில் இப்பெயர் புலப்பாட்டு முறையை ஆராய முனையலாம். அம்முறையே "புலம்பு, தனிமை, மன்றம், பொதுவிடம், மலைநாட்டு ஊர்களில் உள்ள பொதுவிடங்களை மன்று என்பது இன்றும் உள்ள வழக்கு. பஞ்சாயதிமன்று, தேவாரமன்று, ஊர்மன்று என்பன கற்காவான குடகு நாட்டில் (Imperial Gazetter. Mysore and Coorg. p.300) வழங்குகின்றன." (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2010; ப.190). இக்கூற்று மன்றம் என்பது பொதுத்தன்மையில் இருந்து, இயங்கியுள்ளதை வெளிப்படுத்துகிறது. பொதுமக்கள் ஒன்று கூடும் இடமே பொதுமன்றம் எனல் பொருந்தும். சமகாலத்தில் இப்பெயர் மருவிக் கிராமங்களில் ஊர்சபை, ஊர்ப் பஞ்சாயத்து என்ற பல பெயர்களில் அடையாளப்படுத்தப்படுவதையும் அறிய முடிகின்றன.

## பிரமன் காரி

பிரமன் காரி என்ற பெயரைச் சமகாலத்தில் பிரமச்சாரி என்ற சொல்லோடு பொருத்திப்பார்க்கலாம். இன்று வழக்கில் உள்ள பிரமச்சாரி என்ற சொல்லுக்கான பொருளைப் பழங்கால இலக்கியத்தில் உள்ள பிரமச்சாரி என்ற சொல் என்று எண்ணி உரையெழுதும் போக்கினைச் சில உரையாசிரியர்களிடமும் காணமுடிகிறது. பிற்கால உரையாசிரியர்கள் பழந்தமிழ் இலக்கியங்களுக்கு உரையெழுதும் பொழுது ஏற்படும் பொருட் பிறழ்வில் இதுவும் ஒன்று. அம்முறையே, "இச்சான்றோர் பிரமன் என்பார்க்கு மகனாதலின் பிரமன்காரி எனப்பட்டனர். காரி யென்பது இவரது இயற்பெயர் என்றும் இப்பெயர் பூண்டவர் பலர், சங்கக் காலத்தும் இடைப்பட்ட கல்வெட்டுக் காலத்தும் (S.I.I.VoL.V.No.648) இருந்துள்ளனர். புறநானூற்று ஆசிரியர்களுள் பிரமனார் என ஒருவர் உள்ளார். அவர்க்கும் இக்காரியின் தந்தையான பிரமனுக்கும் தொடர்பில்லையென்பதை அவர் பிரமனார் எனப்படுவதொன்றே வற்புறுத்துகிறது. இவர் பெயர் ஏடு பெயர்த்தெழுதினோரால் பிரமசாரி எனப் பிழைக்கப்பட்டுள்ளது; கிடைத்த ஏடுகளில் பிரமன்காரி எனக் காணப்படுவதே இதற்குச் சான்று" (மேலது; ப.191). மேலும், "இவர் பெயரினாலேயே இவர் மனம்புரிந்து கொள்ளாது பிரமசரியம்

காத்திருந்த அந்தணரென்பது தோன்றுகிறது" (பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர்; 2007; ப.191). இக்கூற்றுகள் பிரமன்காரி பற்றியான பெயர்த் தெளிவை ஏற்படுத்துகின்றன. பிரமன்காரிக்கும் பிரமனார் காரிக்கும், புறநானூற்று ஆசிரியரான பிரமனார் என்பவர்க்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்பதையும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை வெளிப்படுத்துகிறது. காரி என்ற இயற்பெயரைக் கொண்டதனால், கடையெழு வள்ளல்களுக்கும் இவருக்கும் தொடர்புண்டோ என்பதும் ஆராயத்தக்கதாகும். ஏடுபெயர்த்து எழுதுவோரால் ஏற்பட்ட பிழையின் காரணமாகவே பிரமசாரி என்ற தற்காலப் பொருள் புரிதல் முறையைக் கொள்ள நேர்கிறது. எனவே, பிரமன் மகன் காரி என்னும் பெயரே ஏற்புடையதாகக் கொள்ளலாம்.

### மதுரைச் சீத்தலைச் சாத்தனார்

சீத்தலைச் சாத்தனார் என்ற பெயர் தொடக்கக் காலங்களில் பரவலாக இருந்துள்ளதை அறியமுடிகின்றது. சங்கப் பனுவல் காட்டும் சாத்தனாரும், மணிமேகலை எழுதிய சாத்தனாரும் ஒருவரா அதே போன்று இருவரும் மதுரையைச் சார்ந்தவர்களா என்ற வினா முனைப்பின் வாயிலாக ஆராயத் தொடங்குவோம். அம்முறையே, "இச்சீத்தலைச் சாத்தனார் மதுரையின்கண் வாழ்ந்த சான்றோருள் ஒருவர். சீத்தலை என்பது மேலைக்கடற்கரைச் சேர நாட்டில் முன்னாளில் விளங்கிய பேரூர்களில் ஒன்று; இதனைக் குடகு நாட்டுக் கல்வெட்டுகள் (Coorg.Ins.Vol.i.No. 10) சீத்தலை மாளிகை என்று குறிக்கின்றன. சாத்தனாருடைய முன்னோர் சீத்தலையிலிருந்து போந்தைமையின் இவர் இவ்வாறு குறிக்கப்படுகின்றார்" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2010; ப.201). இக்கூற்று சீத்தனார் பற்றிய தெளிவை எட்ட வழிவகை செய்கின்றது. சீத்தலை, சீத்தலை மாளிகை என்பது இடப்பெயராகக் கொள்ள வாய்ப்பு ஏற்படுத்துகிறது. மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் என்றும், மதுரை சீத்தலைச் சாத்தனார் என்றும் குறிப்பதால் இருவரும் ஒரே ஊரினர் என்பது தெளிவாகிறது. அதேபோன்று இருவரும் வேறானவர்கள் என்பதை இவர்களின் பாடல்தன்மையில் பிரித்தறியலாம்.

### கோமால் நெடுங்கோடனார்

கோடன் என்ற பெயர்ப் பின்னொட்டைக் கவனத்தில் கொண்டு ஆராய்தல் அவசியமாகும். நல்லியக்கோடன், நெடுங்கோடன் இவற்றிற்கான பொருண்மைகள் ஆராயப்பட வேண்டிய தேவையுள்ளது. கோடன் என்பதைப் போலவே, கோமால் என்பதையும் புரிந்துகொள்வது தேவையாகிறது. கோடன் என்ற பெயர் பிற்காலங்களில் ஊர்ப்பெயராக மருவி வந்துள்ளதைக் கவனிக்கமுடிகிறது. அம்முறையே, "இப்பெயர் கோமான் நெடுங்கோடனார் எனவும், கோமால் நெடுங்கோடனார் எனவும்

கொள்ளப்படும். பறம்பிற் கோமான், செல்லிக்கோமான் என இடஞ்சுட்டிக் கூறப்படாமையின் கோமால் நெடுங்கோடன் எனக்கோடல் பொருத்தமாகவுள்ளது. கோமால் என்பது சோழ நாட்டு ஊர்களில் ஒன்று; அதனைக் கல்வெட்டுகள், "சயங்கொண்ட சோழமண்டலத்துத் திருவழுந்தூர் நாட்டுக் கோமாலான குலோத்துங்க சோழச் சதுர்வேதி மங்கலம்" (A.R.No. 40 of 1925) என்று கூறுவது நோக்கத்தக்கது. இந்நாளில் அது கோமல் என வழங்குகிறது. கோடன் என்ற பேருடையோர் பலர் தமிழகத்து இருந்துள்ளனர். கோடனூர் என்ற பெயருடைய ஊர்கள் இருப்பது அதற்குச் சான்று"(மேலது; பக்.214-215). இக்கூற்று கோமால், கோடன் பற்றியான தெளிவை ஏற்படுத்த வல்லதாகும். கோடன் என்ற பெயர் கொண்ட பலர் இருந்ததற்கான சான்றுகள் சங்கப் பனுவல்களில் காணக்கிடக்கின்றன. கோமால் என்பது சமகாலப் புழக்கத்தில் உள்ள பெயரான கோமல் சுவாமிநாதன் என்ற பெயரோடு பொருத்திப்பார்க்க வாய்ப்பிருக்கிறது. மேலும், கோடன் என்பது சமகாலத்தில் கோடனூர், கோணனூர் என்று வழங்குவதையும் எண்ணிப்பார்க்கத் தூண்டுகிறது. கிருஷ்ணகிரி மாவட்டம், போச்சம்பள்ளி தாலுகாவில் உள்ள கோணனூரை இக்கண்ணோட்டத்தில் புரிந்துகொள்ள ஏதுவாகின்றது.

## பண்பாட்டு வழக்காறுகள்

தமிழர் பண்பாடு என்பது தாய்வழிச் சமூகத்தின் வெளிப்பாடு எனலாம். மகப்பேறு பெறுதல் என்பது பெண்ணுக்குரிய தனித்தன்மையாகும். மகப்பேறு காலத்தில் ஒரு தலைவன் எவ்வாறு நடந்துகொள்ளல் வேண்டும் என்பதையும் நமக்கு நம் இலக்கியப்பண்பாடு உணர்த்துகின்றது. மகப்பேறு நிகழ்வைக் கல்வெட்டுகளில் எவ்வாறு பதிவுசெய்யப்பட்டுள்ளன என்பதைப் பின்வரும் கூற்றின் வாயிலாக அறியலாம். அம்முறையே, "மகப்பெறு நிகழ்ந்த மனையைத் தூய்மை செய்து முற்றத்தே பந்தரிட்டுப் புதுமணல் பரப்பி, மணியிரட்ட மங்கல மகளிர் மகப்பெற்ற தாய்க்கு நெய்யாட்டீரணி செய்வர். தலைமகன் அக்காலத்தே தூயநீராடிச் சீரிய உடை அணிந்து பிறந்த புதல்வனைக் காண்பன்; மகன் பிறந்தானைக் காணப்போந்த அதியமான் நெடுமான்அஞ்சியை உடனிருந்த மகளிருள் ஒருவராகிய ஔவையார் பாடிய புறப்பாட்டு இங்கே நினைவுகூரத் தக்கது. இஃது இடைக்காலத்தே புத்திரமுக தரிசனம் என மொழிபெயர்க்கப்பட்டு வழக்கில் இருந்து வந்தமை புதுக்கோட்டைக் கல்வெட்டுகள் (P.S.Ins.No. 672) வாயிலாக அறிகின்றோம்" (மேலது; ப.217). இக்கூற்று தமிழர் புத்திரமுக தரிசனத்தைப் படம்பிடித்துக் காட்டுகிறது. இங்கு அகப்பாடல் செய்திகளுக்குப் புறப்பாட்டான புறநானூற்று தரவு துணைபுரிவதை அறியலாம். இத்துடன்

இப்பண்பாட்டு நிகழ்வை இலக்கியம், கல்வெட்டு என்ற இரு தளத்திலும் பொருத்திப்பார்ப்பது பொருத்தமுடையதாகும்.

### பெருங்கோசிகனார்

பெருங்கோசிகனார் என்ற பெயர் சங்கப் பனுவல்களில் ஆதிக்கம் செலுத்துவதை அறிய முடிகின்றது. பத்துப்பாட்டில் ஒன்றான மலைபடுகடாம் என்னும் சங்கப் பனுவலைப் படைத்தவர் இவரா என்ற வினா நம்மைத் தொற்றிக்கொள்கிறது. இத்தகைய ஐயப்பாட்டைக் களைய இப்புலவர்களின் பாடலை ஆராய்ந்து தெளிவுகாணலாம். அல்லது இவ்விரு புலவரின் ஊரினை அடிப்படையாகக் கொண்டும் இவர்களை அடையாளம் காணலாம். இந்நோக்கில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை இத்தகைய வேறுபாட்டைக் களைய எவ்வாறு முனைகிறார் என்பதைக் கவனிப்போம். அம்முறையே, "வடநூல் ஒழுக்கங்களும் கொள்கைகளும் தமிழகத்திற் பரவியபோது, வடநூற் சான்றோர் பெயரைத் தம் மக்களுக்கு இட்டு வழங்குவது மரபாயிற்று. இந்நாளிலும் மேலை நாட்டார் ஒழுக்கங்களையும், கருத்துக்களையும் மேற்கொண்ட சிலர், மேலைநாட்டு சான்றோர் பெயர்களை மக்கட்கு இட்டிருப்பதைக் காண்கிறோமன்றோ? தமிழர் பண்டு தொட்டே புதுமை மேவலராயிருந்தமைக்கு இது தக்க சான்றாகும். வடநூல் கூறும் சான்றோர்களில் கௌசிகனார் என ஒருவர் உளர்; அவருடைய குணநலங்களை வியந்து இச்சான்றோருடைய பெற்றோர் இவர்க்குக் கோசிகன் என்ற பெயரை இட்டுள்ளனர். இளங்கோசிகன் என ஒருவர் இருந்தமையின் இவர் பெருங்கோசிகன் எனப்பட்டார். பத்துப்பாட்டிலுள்ள மலைபடுகடாம் என்னும் கூத்தராற்றுப்படையை ஒரு பெருங்கோசிகனார் பாடியிருக்கின்றார். அங்கே அவர் இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கோசிகனார் என்று குறிக்கப்படுகின்றார். ஒருகால் இந்நூற்கண் எங்கும் இவர் பெயர் பெருங்கோசிகனார் என்றே காணப்படுகிறது. இவரின் வேறுபடுத்திக் காட்டவே அவர் இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கோசிகன் எனப்பட்டார் போலும். இரணிய முட்டம் என்பது பாண்டி நாட்டு உள்நாடுகளுள் ஒன்று; இடைக்காலத்தில் இது மேல் இரணிய முட்டம் கீழ் இரணிய முட்டம் என இரண்டாகப் பிரிந்திருந்தது; மதுரை மாவட்டத்து அழகர் கோயிற் பகுதி கீழ் இரணிய முட்டத்தைச் சேர்த்தது என அவ்வூர்க் கல்வெட்டுகள் குறிக்கின்றன. அவர் மலைபடுகடாம் பாடிய செய்தியை 'திருவண்ணாமலைக் கல்வெட்டு (S.I.VoL.VIII.No.69) "நல்லிசை கடாம்புனை நன்னன் வெற்பு' என்று குறிக்கின்றது" (மேலது; பக்.232-233). இக்கூற்று பெருங்கோசிகனார் பற்றிய வரலாற்றுத் தெளிவை ஏற்படுத்துகிறது. புதுமை மோகம் என்பது தமிழரிடையே அனைத்து நிலைப்பாட்டிலும் கவனிக்கமுடிகிறது. பெருங்கோசிகனார் பற்றி மேலும் தெரிய தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியத்தின்

அடிப்படையில் புரிந்துகொள்ளலாம். அம்முறையே, “இவரும் தொண்டை நாட்டு இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனாரும் ஒருவரா என்று ஓர் ஐயம் உண்டு. இருவரும் ஒருவரே என்பது பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் போன்றோருடைய கருத்தாகும். இவ்வாறாயின் மலைபடுகடாம் பாடியவரும் இவரேயாவர். சமாசப் பதிப்பினர் இருவரையும் வெவ்வேறு புலவர்கள் என்று கருதுகின்றனர்”(வெ. பழனியப்பன்; உ. பழனி; 1989; ப.52). இக்கூற்று பெருங்கௌசிகனார் பற்றிய வேறுபாட்டையும் பிரித்தறிய வழிவகை செய்கிறது. மேலும், ஔவை சு.துரைசாமிப்பிள்ளை பெருங்கோசிகனார் என்றும், பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் பெருங்கௌசிகனார் என்றும் கூறுவதிலிருந்து இவ்விரு பெருங்கோசிகனாரும் வேறானவர்கள் என்பதும் தெளிவாகின்றது. மஇப்பெயர் பற்றியான தெளிவை அடைய இத்தகைய பல தகவல்களைத் திரட்டி ஆராய்தல் அவசியமாகும்.

## சிறுமேலாதனார்

இப்பெயர் ஊர்ப்பெயரை அடையாளமாகக் கொண்ட புலவர் பெயர் எனலாம். அச்சுப்படிகளில் பிழைகள் ஏற்படுவது என்பது பெயர், கால முறைமையை மாற்றக்கூடியதாகும். இத்தகைய அச்சுப்படிகளில் ஏற்படும் மாற்றங்களைக் களைய மூலநூலை நாடவேண்டியது அவசியமாகிறது. இக்கண்ணோட்டத்தில் பின்வரும் கூற்றினை எதிர்கொள்வோம். அம்முறையே, “அச்சுப்படியில் இச்சான்றோர் பெயர் சிறுமோலிகனார் என்று காணப்படுகிறது. கிடைத்த ஏட்டில் சிறுமேலாதனார் என்றும் சிறுமேலிதனார் என்றும் உளது. இப்பெயர் வேறுபாடுகளுள் ஓரளவு பொருள் விளங்க நிற்றலின் சிறுமேல் ஆதனார் என்ற இப்பாடம் மேற்கொள்ளப்பட்டது. ஐயன் ஆரிதனார் என்ற புறப்பொருள் வெண்பாமாலையாசிரியர் பெயரும், காவிதி ஈதன் (P.S.Ins.No. 1) என வரும் கல்வெட்டுப் பெயரும், சிறுமேலிதனார் என்ற பெயர்க்கு ஆதரவு தருகின்றன. ஆதனார் என்பது பெருவழக்காதலால் ஏனை எல்லாவற்றினும் அது சிறந்ததாகத் தோன்றுகிறது. சிறுமேலூர் என்பதைச் சிறுமேல் என்ற ஊராகவும் ஆதனார் என்பதை இயற்பெயராகவும் கோடல் ஓரளவு பொருத்தமாகவும் உளது. சிறுமேலூர் மதுரையைச் சார்ந்த ஊர்களில் ஒன்றாதலை நோக்குங்கால், இச்சான்றோர் பாண்டிநாட்டுச் சான்றோருள் ஒருவராதல் தெள்ளிது” (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2010; ப.299). இக்கூற்று சிறுமேலாதனார் என்ற பெயர்த் தெளிவை ஏற்படுத்துகிறது. சிறுமோலி, சிறுமேலி என்ற இரு வேறுபாடுகளைக் களைந்து சிறுமேலாதனார் என்பதே பொருந்தும் என்பதைக் கல்வெட்டுத் தரவுடன் உறுதி செய்யும் முறை ஏற்புடையதாகிறது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தரும் பெயர் முடிவு என்பது ஓரளவு பொருந்துவதாகும் என்பதையும் உணரலாம்.

## உரோடகத்தனார்

சங்கப் பனுவல்கள் உலோச்சனார், உரோடகத்தனார் என்ற இரு பெயரைக் காட்டுவதை அறியலாம். இவ்விரு பெயர்களும் ஒன்றா இல்லை, அச்சுப் பிழைகளால் இவ்வாறு அழைக்கப்படுகிறதா என்பன போன்ற வினாக்களைக் களைய ஊர்ப்பெயராய்வுகளை வெளிக்காட்டும் கல்வெட்டுத் தரவுகளைக் கொண்டு இனம் காண்பது சாலச் சிறந்ததாகும். இப்பின்புலத்தில் பின்வரும் கூற்றினை ஆராய முற்படுவோம். அம்முறையே, "ஊரோடகம் என்பது தொண்டை நாட்டு ஊர்களுள் ஒன்று. இப்போது உரகடம் என வழங்குகிறது. செங்கற்பட்டுப் புகைவண்டி நிலையத்துக்குத் தென்கிழக்கில் மகாபலிபுரத்துக்கு ஒன்பது கல் தொலைவில் இவ்வூர் உளது; இங்கேயுள்ள பழமையான சிவன் கோயிலின் கல்வெட்டு இதனை உரோடகமான பல்லவமல்லச் சதுர்வேதி மங்கலம் என்றும், சிவனைத் திருவாடாமாலையார் என்றும் குறிக்கின்றது. இதனைத் திருவாடாமல்லீச்சுரம் என்பதும் உண்டு. கடம்பத்தூர்க்கு அண்மையிலுள்ள சிவபுரத்தில் இருக்கும் இராசராசேச்சுரம் என்ற சிவன்கோயிலில் காணப்படும் முதல் இராசேந்திர சோழனது எட்டாம் ஆச்சியாண்டுக் கல்வெட்டொன்று (S.I.I.Vol.V.No. 881) இதனைச் சயங்கொண்ட சோழ மண்டலத்து மணையிற் கோட்டத்துப்புரிசை நாட்டு உரோடகம் என்று கூறுகிறது. இதனால், இவ்வுரோடகத்தனார், தொண்டை நாட்டுச் சான்றோர்களில் ஒருவராதல் விளங்குகிறது" (மேலும்; பக். 310-311). இக்கூற்று உரோடகம் என்ற ஊர்ப் பெயரின் அடையாளமாக இப்புலவர் அழைக்கப்பட்டுள்ளதை விளங்கிக்கொள்ள முடிகிறது. இயற்பெயர் மறந்து ஊர்ப்பெயரே இப்புலவருக்காகி இருப்பதை உணர்த்துகிறது. சங்க கால உரோடகம் என்ற ஊர் பெயர் சமகாலத்தில் உரகடம் என வழங்குவதையும் அறியலாம். இவ்வூர் சிவனை அங்கமாகக் கொண்டு விளங்குவதால் இப்பெயர் பெற்றுள்ளது என்பதையும் புலப்படுத்துகிறது. எனவே, இவ்வூர் தொண்டை மண்டலம் சார்ந்ததெனில், இப்புலவரும் தொண்டை மண்டலத்தார் என்பதே பொருத்தமாகும்.

## விரான் சாத்தனார்

சங்கப் புலவர்களின் பெயர்கள் பெரும்பாலும் வேறுபாடு உடையதாகவே காணப்படுவதை அறிய முடிகிறது. இப்பெயர் மாற்றங்களை ஏற்படுத்தும் சாதனமாக அச்சு பிரதியாக்கம் செய்வது இருக்கிறது. கல்வெட்டு செதுக்குவோராலும் இத்தகைய பிழைகள் ஏற்படுகின்றன. ஆனால், பிரான் விரான் என்று இப்புலவரின் பெயர் வேறுபாடு உடையதாகக் காணப்படுகிறது. இத்தகைய பெயர் மாற்றங்களைப் பின்வரும் கூற்றின் வாயிலாகக் கவனிப்போம். அம்முறையே, "விரான் என்பவன் திருச்சிராப்பள்ளி மாவட்டத்து விராலி மலைப் பகுதியில் வாழ்ந்த ஒரு பெருஞ்செல்வன். அவனை

‘கைவண்விராஅன்’ என்றும் ‘தேர்வண் விராஅன்’ என்றும் சான்றோர் பாராட்டிக் கூறுவர். அவற்குரிய ஊர்களுள் ஒன்றான இருப்பையும் புலவர்பாடும் புகழ்பெற்றது. விராஅனது மலை விராலிமலையென இப்பொழுது வழங்குகிறது. அப்பகுதியில் அவன் பெயரால் அமைந்த விரான்குடி இடைக்காலத்தே விரையான்குடி (P.S.Ins.No. 89) என்றாகி, இப்போது திருவிளாங்குடியென வழங்குகிறது. இச்சாத்தனார் அவ்விராஅன் குடியிற் பிறந்தவராதலின் விரான் சாத்தனார் எனப்படுகின்றார். அச்சுப் பிரதியில் இவர் பெயர், பிரான் சாத்தனார் என்று காணப்படுகிறது” (மேலது; ப.325). இக்கூற்று விரான் ஊர்ப்பெயர் மாற்றம் பற்றிய தெளிவை ஏற்படுத்துகிறது. விராலிமலை என்ற பெயர் தற்காலச் சூழலில் புழக்கத்தில் உள்ளதைக்கொண்டு இப்பெயர் மரபைப் புரிந்துகொள்ளலாம். விரான்குடி, விரையான்குடி என்ற பெயர் மாற்றங்களைக் கல்வெட்டுச் சான்றுடன் பொருத்திப் பார்த்துத் தெளிவு காண்பது ஊர்ப்பெயர்த் தெளிவை ஏற்படுத்தவல்லதாகும். இப்புலவரின் பெயரும், இவரின் பாட்டும் பெரும் வேறுபாடு உடையதாக அறியப்படுகிறது. இப்புலவரின் பாடல் கவனிக்கப்படாமைக்கான காரணம் உய்த்துணரப்படுகிறது.

## சேந்தம் பூதனார்

இப்பெயர் ஆய்தலை முன்னிட்டுச் சமகாலப் பெயர் புரிதலுடன் பொருத்திப்பார்த்தல் அவசியம். சேந்தம் என்பதைச் சேந்தமங்கலம் என்ற பெயரையும், பூதம், பூதனார் என்னும் பெயர்களைச் சமகாலத்தில் பூதனூர் என்ற பெயர் நீட்சி இருப்பதையும் அறிய முடிகிறது. கிருஷ்ணகிரி மாவட்டத்தில், போச்சம்பள்ளி தாலுகாவில், பாரண்டப்பள்ளி பஞ்சாயத்தில் ‘பூதனூர்’ என்ற ஊர்ப் பெயர் புழக்கத்தில் இருப்பதை நினைவூட்டுகிறது. எனவே, இத்தகைய ஊர்ப் பெயர்களைச் சங்கக் கால ஊர்ப்பெயர் மரபுத் தொடர்ச்சிகள் என்றே புரிந்துகொள்ளலாம். இப்பின்புலத்தில் பின்வரும் கூற்றினைக் கவனிக்கலாம். அம்முறையே, “சேந்தம் பூதன் என்ற தொடர் சேந்தன் மகனான பூதன் என்று பொருள்படும். இவர் பெயர் அச்சுப்பிரதியில் சேகம் என்று இருக்கிறது. அது பற்றி கூறவந்த திரு.அ.நாராயணசாமி ஐயரவர்கள், “பிரதிகளில் சேகம்பூதனார் என்று இருத்தலானே இருந்தவாறே பதிப்பிக்கப்பட்டது; சேந்தம் பூதனார் என்பவரும் இவரே என்பர்.” சேந்தம் பூதன் என்ற பெயருடையோர் கழுகுமலைப் பகுதியிலுள்ள கல்வெட்டுக்களில் (S.I.I.Vol.V.710, 307) காணப்படுகின்றார்கள்; ஆயினும், சேந்தன் பூதன் என்ற பெயர் இடைக்காலத்தும் தமிழகமெங்கும் மக்களிடையே வழங்கியதுண்டு என்பதை நினைவிற் கொள்ளல் வேண்டும்” (மேலும்; ப. 329). இக்கூற்று சேந்தன் பூதன் என்ற பெயர் புரிதலை ஏற்படுத்துகிறது. மேலும், இக்கூற்று

பெரும் கருத்து வாதத்தையும் முன்னெடுக்கிறது. சங்கப் பாடல்களை விளக்க வேண்டிய உரைப் போக்கில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தரும் கல்வெட்டுத் தரவுகள் தேவையா என்று பலர் எழுப்பும் வினாக்களுக்கு இங்கே விடையும் காணக்கிடக்கிறது. இதனாலே ஔவை சு.துரைசாமிப்பிள்ளை இங்குப் பின்னத்தூர் நாராயணசாமி ஐயரின் கூற்றினை எடுத்துக் கையாண்டுள்ளார் என்பதைப் புரிந்துகொள்ளலாம்.

பிரதிகளை மட்டும் பொருள் புரிந்து உரை எழுதும் பொழுது ஏற்படும் குறைபாடுகளைப் பின்வரும் கூற்று தெளிவுபடுத்துகிறது. பின்னத்தூர் நாராயணசாமி ஐயரின் கூற்று, "அப்பிரதியில் சேகன் பூதனார் என்று இருத்தலானே இருந்தவாறே பதிப்பிக்கப்பட்டது" என்ற கருத்தைக் கொடுத்துள்ளார். பழைய மரபுகளைப் போற்றுதல் சிறப்பு என்றாலும், தவறுதலை ஆராய்ந்து தெளிதல் என்பது அவசியம். இருந்தவாறே கூறுவதால் உண்மை பெயர் அறியாமலேயே போகிறது. இத்தகைய பிழைகளைக் களையத்தான் கல்வெட்டைத் துணைக்கு நிறுத்துகிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை. எனவே, இத்தகைய கல்வெட்டுத் தரவுகள் வாயிலாகவே சேகன், என்பது சேந்தன் என்று உரையாசிரியரான, திறனாய்வாளரால் திறனறியப்பட்டது. இத்தகைய புரிதல்களை ஏற்படுத்தவே கல்வெட்டுத் தரவுகள் பயன்படுகின்றன என்பதைப் புரிந்துகொள்ள முடிகிறது.

இலக்கியத் தரவுகள் என்பவை புனைந்துரைகளைச் சற்று கொண்டுள்ளது. புனைந்துரைகளைப் பிரித்து உண்மை வரலாறுகளை வெளிக்காட்டக் கல்வெட்டுத் தரவுகள் துணைபோகின்றன என்பதைத் தி.வை. சதாசிவபண்டாரத்தாரின் கூற்று விளக்குவதைக் கவனிக்கலாம். அம்முறையே, "இலக்கியச் செய்திகள் எல்லாம் புனைந்துரை சிறிது கலந்த நூல் வழக்கில் அமைந்தவை. கல்வெட்டுச் செய்திகள் எல்லாம் புனைந்துரை கலவா உலக வழக்கில் அமைந்தவை. ஆதலால், வரலாற்று ஆராய்ச்சியாளர் கல்வெட்டுக்களையே தக்க சான்றுகளாகக் கொண்டு ஆராய்ந்து உண்மை காண்பாராயினர். அன்னோர் இலக்கியங்களைச் சிறந்த சான்றுகளாக மதித்து ஏற்றுக்கொள்வதில்லை" (தி.வை.சதாசிவபண்டாரத்தார்; 1977; ப.103). இக்கூற்று கல்வெட்டுச் சான்றை ஆய்வாளர் பயன்படுத்த வேண்டிய அவசியத்தைக் கூறுகிறது.

## கிளியூர் மலையமான் ஊர்ப்பெயராய்வு

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரைகளில் பெரும்பான்மையாக ஊர்ப்பெயர் ஆய்வுகளே அதிகம் ஆராயப்பட்டுள்ளன. இவ்வூர்ப் பெயர்களை உறுதிப்படுத்தப் பல கல்வெட்டுத் தரவுகளைத் தேடி உரைகளில் கொடுத்து, வரலாற்றை வலுவூட்டம் செய்கிறது ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை. ஊர் பெயர் மாற்றம் என்பது காலந்தோறும் நிகழ்ந்தவண்ணமே இருக்கிறது. மலாடு என்பது மருவி மலையன் நாடு

என்றானது என்பதைப் பின்வரும் கூற்றின் வாயிலாக ஆராய முற்படுவோம். அம்முறையே, “தேர்வண் மலையன், தென்பெண்ணைக் கரையிலுள்ள திருக்கோவலூரில் இருந்து அதனைச் சூழவிருந்த நாட்டைக் காவல் புரிந்த குறுநில மன்னன்; அவனது நாட்டை மலாடு என்றும், அவனை மலாடர் கோமான் என்றும் கூறுவர். மலையன் நாடு மலாடு என மருவிற்றென்பர். அவன் வழிவந்தோர் மலையமான்கள் எனப்பட்டு இடைக்காலச் சோழப் பாண்டியர் காலத்தும் இருந்து மறைந்தனர்; அவர்களிற் பிற்காலத்தோர் கிளியூர் மலையமான்கள் எனப்பட்டமை அத்திருக்கோவலூர்ப் பகுதியிற் காணப்படும் கல்வெட்டுக்களால் (A.R.No. 233 of 1936-37) தெரிகிறது” (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2010; ப.365). இக்கூற்று மலையமான் நாடு கிளியூர் என அழைக்கப்படுவதை உணர்த்துகிறது. இங்குக் கிளியூர் பற்றிய சமகாலப் பெயர்களையும் இணைத்துப் பார்க்கவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. மலையமான் நாடு என்பது விழுப்புரம் மாவட்டத்தில் உள்ள மலையனூர் என்னும் ஊர், பெயரளவில் பொருந்துவதையும் எண்ணிப் பார்க்கத் தோன்றுகிறது. மேலும், இத்தகவலை வலுவூட்டும் விதமாகக் கிளியூர் என்பது சமகாலக் கிளியனூராகவும் இருப்பதையும் கருத்தில் கொண்டு நோக்குதல் தேவையாகிறது. இத்தகைய ஊர்ப் பெயர்களைச் சமகாலப் பெயர்களுடன் இணைத்துப் பார்த்தல் மீளாய்வுக்களங்களை ஏற்படுத்தவல்லதாகும். கிளியனூர் பற்றிய ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கருத்தும் நோக்கத்தக்கதாகும். அம்முறையே, “இப்போது வைகுண்டவாசப் பெருமாள் கோயில் என்று பெயர் கூறப்படுகிறது. இது, தென் ஆர்க்காடு மாவட்டம், திண்டிவனம் தாலுகா கிளியனூரில் இருக்கிறது. “ஓய்மா நாட்டுக் கிளிஞலூர் திகைத்திறல் விஷ்ணு கிருகம்” என்று சாசனத்தில் எழுதப்பட்டிருக்கிறது. திகைத்திறலார் என்பவர் இக்கோயிலை அமைத்து நிலபுலங்களைத் தானம் செய்தார் என்று சாசனம் கூறுகிறது” (மயிலை சீனி. வேங்கடசாமி; 2009; ப.60). இக்கூற்று கிளியூர், கிளியனூர் என்ற இரு பெயர் கிளைகளைப் புலப்படுத்துகிறது.

### அகம்பன் மாலாதனார்

இப்பெயர் ஆய்வை ஆராய்ந்து உரை வரையும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை மற்ற உரையாசிரியர்களின் உரைகளை மறுக்கும் தன்மையைக் கையாண்டுள்ளதைக் கவனிக்க முடிகிறது. மூத்தோர்களின் உரைகளை ஏற்றல் என்பதே முறையெனலாம். இத்தகைய பின்னணியில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை நகர்ந்துள்ளதைக் கவனிக்கலாம். நற்றிணைக்கு முன்னரே உரையெழுதிய பின்னத்தூர் நாராயணசாமி ஐயரின் உரைகளை நாசுக்காக மறுத்துரைத்துள்ளார். இவ்வுரை மறுத்தலைப் பின்வரும் கூற்றின் வாயிலாக அறியலாம். அம்முறையே, “அகம்பன் மாலாதனார் என்ற

இச்சான்றோருடைய பெயரில் முதற்கண் நிற்கும் அகம்பன் என்பது மக்கட் பெயர்வகையுள் ஒன்று; சிதம்பரம் பகுதியிலுள்ள உடையார் குடிக் கல்வெட்டொன்றில் (EP.A.R.No. 561 of 1920) இடையள நாட்டு அகம்பன் திட்டையுடையான் என ஒருவன் காணப்படுகின்றான். இதனால் இம்மாலாதனாரை அகம்பன் என்பார்க்கு மகனாகவோ, அகம்பன் என்பானுடைய குடிப்பிறந்தாராகவோ கோடல் பொருத்தமாகவுளது. இனி, பி.அ. நாராயணசாமி ஐயரவர்கள் அகம்பல் என்பது பாண்டி நாட்டு ஊர் என்றும், அவ்வூர் இப்போது அகமலை என மருவி வழங்குகிற தென்றும், எனவே, இச்சான்றோர் அகம்பல் என்னும் ஊரவர் என்றும் உரைக்கின்றார். அகம்பன், அசையாதவன்" (மேலது; ப. 382). இக்கூற்று இரு உரையாசிரியர்கள் மீதான வாதத்தை ஏற்படுத்துகிறது. இங்குப் பின்னத்தூர் நாராயணசாமிஐயர் தரும் விளக்கத்தை மறுக்கும் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை உரைகளையும் ஏற்பதில் சில சிக்கல் ஏற்படுகிறது. ஔவை சு. துரைசாமிப் பிள்ளை கூற்றின் அடிப்படையில் பார்த்தால் அகம்பன் அசையாதவன் என்ற அகம்பல், ஆம்பல் மலரை மிகுதியாகக் கொண்ட ஊராகக் கூட இருந்திருக்கலாம். ஔவை சு.துரைசாமிப் பிள்ளையின் இத்தகைய கூற்று மீளாய்வுக்குரிய களங்களை ஏற்படுத்துவதாகும். அகம்பன் என்ற பெயர் கல்வெட்டுகளில் இருந்தாலும் வேறு இடங்களும் அடையாளப்படுத்தப்பட்டு இருக்கலாம். அகம்பன், அருகன் என்ற பௌத்தப் பெயரையும் நினைவுபடுத்துகிறது.

## அழிசிக்காடு-அசிக்காடு: ஊர்ப்பெயர் மாற்றம்

அழிசி என்ற சோழப் பாரம்பரியத்தின் ஒருவன் பெயரையும், இவன் வாழ்ந்த ஊரைச் சுற்றிக் காட்டுப்பகுதி இருந்ததால் இப்பெயர் பெற்றது என்பதும் சிந்தனைக்குரியதாகும். இருப்பினும், இங்கு ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தரும் ஊர்ப்பெயர் உருவாக்கம் மாற்றம் நிகழ்ந்ததைப் பின்வரும் கூற்றின் வாயிலாக ஆராய முனைவோம். அம்முறையே, "அழிசி என்பான் சோழர்குடித் தோன்றல்களுள் ஒருவனாய்ப் போர் புகழ்பெற்று விளங்கினவாதலால், வெல்போர் சோழன் அழிசி என்றும், அவன் நாட்டுக் காட்டைப் பெருங்காடு என்றும் கூறினார். அழிசியைச் சேந்தன் என்பானுக்குத் தந்தையென்றும், அவனது ஊர் காவிரி நாட்டு ஆர்க்காடு என்றும் இவ்வாசிரியரே பிறிதோரிடத்தில் கூறுவர். பிற்காலத்தே அழிசியின் பெருங்காடு ஊராயிற்று; ஆயினும் அதன் பெயர் மாறாது அழிசிக்காடு என இருந்து பின் அசிக்காடு என மருவியதை உடையார் பாளையம் பகுதியிலுள்ள கோவிந்தபுத்தூர்ச் சிவன் கோயில் கல்வெட்டால் அறிகின்றோம். "இராசநாராயண வளநாட்டுத் திருவழுந்தூர் நாட்டு அசிக்காடு (A.R.No. 182 of 1928-29) எனக் கல்வெட்டு குறிக்கிறது" (மேலது; ப. 407).

இக்கூற்று அழிசிக்காடு அரிசிக்காடான வரலாற்றை உணர்த்துகிறது. மேலும், இக்கூற்று பல விவாதங்களையும் முன்னெடுக்கிறது. இவ்வுரையாசிரியர் முன்னரே கூறிய அரிசிக்கரை என்பதையும் அழிசிக்காடு என்பதையும் பொருத்தி ஆராய்தல் தேவையாகிறது. பெருங்காடு இவ்வூரைச் சுற்றி இருந்ததால் இவ்வூருக்கு இப்பெயரானது என்பதும் மேலாய்வுக்குரியதாகும்.

## இளம்புல்லூர்க் காவிதியார்

பல ஊர்ப் பெயர்களையும், சில புலவர் பெயர்களையும் 'இளம்' என்ற சொல்லாட்சியில் அடையாளப்படுத்துவதை இலக்கியங்கள் வழி அறியலாம். இப்பெயர்களில் இளமை இருத்தல் வேண்டும் என்னும் அவாவில் இப்பெயர் இடம்பெற்றிருக்கலாம். இன்னோக்கோடு பின்வரும் கூற்றினைக் கவனிக்கலாம். அம்முறையே, "சங்ககாலப் பாண்டி நாட்டு ஊர்களுள் இளம்புல்லூர் என்பது ஒன்று; இளங்கோக்குடி, இளவெண்பைக்குடி, இளஞ்சேரி என ஊர்ப் பெயர்கள் இளமைப்பெயரால் சிறப்பிக்கப்படுவது மரபு. இச்சான்றோரது ஊரான இளம்புல்லூர், இடைக்காலத்தே மிழலைக் கூற்றத்து நடுவிற்கூறான இளம்புல்லூர்க்குடி (A.R.No.130 of 1908) என்று கல்வெட்டுக்களில் குறிக்கப்படுகின்றது. நல்லொழுக்க நற்செய்கைகளால் உயர்ந்த நன்மக்கட்குப் பண்டைத் தமிழரசர், காவிதி, எட்டி முதலிய சிறப்புப்பெயர் தந்து பாராட்டுவது வழக்கம்" (மேலது; ப.414). இக்கூற்று இளமை மற்றும் சிறப்பு கருதியும் பெயர் வழங்குவதைப் புலப்படுத்துகிறது. மேலும், இக்கூற்று இளங்கோக்குடி என்பது இளங்கோவடிகளின் குடியினராகவும் இருக்கலாம் என்றும் எண்ணத் தூண்டுகிறது. புலவர்களின் சிறப்பு கருதிப் பரிசுகளோடு சிறப்புப் பெயர்களைப் பட்டமாகவும் வழங்கியுள்ளதை உய்த்துணர முடிகின்றது.

## அஞ்சில் அஞ்சியார்

இப்புலவரின் இயற்பெயரால் இவ்வூர் பெயர் பெற்றுள்ளதை அறியலாம். படியெடுத்தலில் ஏற்படும் பெயர் மாற்றங்கள் என்பவை ஊர்ப் பெயர்களையே மாற்றியும் விடுகின்றன. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை ஊர்ப் பெயரை உறுதிசெய்யக் கல்வெட்டுத் தரவுகளுடன், சைவ சமய இலக்கியச் சான்றுகளையும் துணைநிறுத்துவதை அறிய முடிகிறது. இவ்வூர்ப் பெயர் மருவி வருவதையும் பின்வரும் கூற்றின் வாயிலாகக் கவனிக்கலாம். அம்முறையே, "அஞ்சில் என்பது இப்போது அஞ்சூர் என்ற பெயருடன் தொண்டை நாட்டில் உளது; அதனைக் கல்வெட்டுகள் சயங்கொண்ட சோழ மண்டலத்துக் களத்தூர்க் கோட்டத்துச் செங்குன்ற நாட்டு அஞ்சிலூர் (A.R.No. 171 of 1932-3) என்றும், அஞ்சூர் உடையான் வண்டன் சாந்தராயன் (Do.No. 174 of 1932-3)

என்றும் குறிக்கின்றன. அஞ்சி என்பது இச்சான்றோரது இயற்பெயர்; இவரது அஞ்சிலூர் அஞ்சியூர் என மருவிப் பின் அஞ்சூர் எனைத் திரிந்தது போலும். இனிப் புதுப்பட்டி யேடு, இவரை அம்பில் அஞ்சியார் என்று குறித்துளது. அம்பில் என்பதே பாடமாயின், அம்பில் அன்பில் என்பதன் திரிபாம். அன்பிலும் பழமையான ஊர் என்றற்குக் கல்வெட்டுகள் அதனை வடகரை இராசராச வளநாட்டு மழநாட்டுக் கீழைமுறிப் பிரமதேயமான அன்பில் (Do.No. 149 of 1937-8) இவ்வன்பில் ஆலந்துறைக்கண் கோயில் கொண்ட இறைவனைப் பாடிய திருநாவுக்கரசர் "வள்ளலார் வயல் அன்பில் ஆலந்துறை" என்றும் கூறுவது சான்றாகும். அஞ்சி என்ற பெயருடையார் பலர் சங்க காலத்தும் இடைக்காலத்தும் இருந்துள்ளனர். இவர் வரலாறு பற்றிய குறிப்பொன்றும் வேறே கிடைத்திலது" (மேலது; ப.420). இக்கூற்று அஞ்சில் என்ற பெயராய்வைத் தெளிவுபடுத்துகிறது. அஞ்சிலூர் என்பது அஞ்சியூர் ஆகி, பின் அஞ்சூர் எனத் திரிந்து வந்துள்ளதை அறிய முடிகிறது. அஞ்சூர் என்பது சமகாலத்தில் கிருஷ்ணகிரி மாவட்டத்தில் ஜெகதேவிக்கு அருகில் இவ்வூர் புழக்கத்தில் இருப்பதைக் கவனிக்கலாம். சங்க காலத்தில் சொல்லப்பட்ட அஞ்சூரையும், சமகாலத்தில் வழங்கிவரும் அஞ்சூரையும் தொடர்புபடுத்தி ஆராய்தல் மேலும் பல வரலாற்றுத் தகவல்களைப் பெற வழிவகுக்கும். அம்பில் என்பது திரிந்து அன்பில் என மருவி வந்துள்ளதையும் அறிய முடிகிறது. 'அஞ்சி' என்ற பெயர் பல சங்கப்புலவர்களை அடையாளப்படுத்தி வருவதையும் அறியலாம். நெடுமான் அஞ்சி, அதியமான் அஞ்சி இத்தகைய பெயர்களின் வழியாக அஞ்சி என்ற இப்பெயரையும் இணைத்து நோக்குதல் அவசியமாகும்.

## இளந்திரையன்

இளம் என்ற பெயர் அடையாளம் பல பெயருக்கு ஆகிவருவதை முன்னரே கண்டோம். அக்கூற்றின் சான்றாக இப்பெயரையும் இணைத்துப் பார்க்கலாம். மேலும், இளம் என்ற பெயர் சிறப்பைத் தவிர்த்துத் திரையன் என்பதும் இம்மன்னனுக்கான அடையாளங்களை வெளிப்படுத்துவதாகலாம். திரையன் என்ற அடையாளம் சோழர் மரபைக் குறிப்பதாகக் கொள்ளலாம். மேலும், இப்பெயர் மன்னனுக்குப் பெயராகி, பிறகு ஊரினை அடையாளப்படுத்துவதை அறியமுடிகிறது. திரையன், திரையனூர் என்பதை இப்பின்புலத்தில் புரிதல் அவசியம். இத்தகைய பெயர் ஆய்வுகளைப் பின்வரும் கூற்றின் வாயிலாக ஆராய முனையலாம். அம்முறையே, "திரையனுடைய பெயரால் ஊர்கள் இன்றும் உண்டு; செங்கற்பட்டு மாவட்டத்துத் தென்னேரி என்ற ஊர் திரையனூர் என்பதன் மரூஉவாகும். அவ்வூரிலுள்ள கல்வெட்டுகள், அதனை ஊற்றுக்காட்டுக் கோட்டத்துத் தியாகவல்லி வளநாட்டுத் திரையனூர் (A.R.No. 230 of 1922) என்ற பெயர்

குறிக்கின்றன. இத்திரையர் காலத்தில் காஞ்சிமாநகர் தொண்டை நாட்டுக்குத் தலைநகராகவும், பவத்திரி என்ற பேரூர் கடற்றுறை நகரமாகவும் விளங்கின. இப்பவத்திரியை "செல்லா நல்லிசை பொலம் பூண் திரையன் பல்பூங்கானற் பவத்திரி" என நக்கீரர் குறித்துள்ளார். சோழ நாட்டில் காவிரிப்பூம்பட்டினம் கடற்கோட் பட்டபோது இப்பவத்திரியும் கடற்கு இரையாயிற்று. பிற்காலக் கல்வெட்டுகள் அக்கடல்கோளை மறவாமல் "இராசேந்திர சோழமண்டலத்துக்குக் கடல் கொண்ட பவத்திரிக் கோட்டத்துக்காகந்தி மாநகர் (A.R.No. 541 of 1908. Nel.In.No. 87-105) என்று காட்டுகின்றன" (மேலது; ப.438). இக்கூற்று திரையன் பற்றிய பெயர்த் தெளிவைப் புலப்படுத்துவதாகும். மேலும், கடற்கோளால் பவத்திரி என்ற பேரூர் அழிந்துள்ளதையும் இக்கல்வெட்டு உணர்த்துகிறது. இளந்திரையன் என்ற சங்கப் பெயர் முனைப்பு என்பது சமகாலத்திலும் தொடர்வதையும் அறிய முடிகிறது. சமகால எழுத்தாளரான சாலை இளந்திரையன் என்ற பெயரையும் இப்பின்புலத்தில் விளங்கிக்கொள்ள ஏதுவாகின்றது.

திரையன் என்ற பெயர்த் தெளிவை அடைய இரா.பி. சேதுப்பிள்ளையின் கூற்றினைத் துணை நிறுத்தலாம். அம்முறையே, "திரையர் என்பார் இன்னொரு பழந்தமிழ் வகுப்பார். திரைகடலின் வழியாக வந்தவராதலின் அவர் அப்பெயர் பெற்றார் என்பர். தொண்டை நாட்டை யாண்ட பண்டை யரசன் ஒருவன் இளந்திரையன் என்று பெயர் பெற்றான். காஞ்சிமா நகரத்தில் தொண்டைமான் என்னும் பட்டமெய்தி அரசாண்ட இளந்திரையனைத் தலைவனாக வைத்து உருத்திரங்கண்ணனார் பெரும்பாணாற்றுப்படையினைப் பாடியுள்ளார். இன்னும், தொண்டை நாட்டில் திரையர் குலத்தைச் சேர்ந்த ஒருவன் பெயரால் திரையனேரி என்னும் ஊர் உண்டாயிற்று. அதுவே இப்பொழுது செங்கற்பட்டு நாட்டில் தென்னேரியாக விளங்குகின்றது" (இரா.பி.சேதுப்பிள்ளை; 2009; ப.69). இக்கூற்று திரையன் மரபு சார்ந்த வரலாற்று நீட்சியை உணர்த்துகிறது. திரையர் குலம், ஊர், பெயர் என்ற மூன்று நிலைப்பாட்டிலும் இப்பெயரைப் புரிந்துகொள்ள முடிகிறது.

### முள்ளூர்

சோழர்களின் தாய் மரபினரை அடையாளம் காட்டுவதாகவே இவ்வூரினை இனம் காணலாம். மேலும், மலாடு பற்றிய கூடுதல் தகவலையும் இவ்வுரையின் வாயிலாக அறியலாம். மலாடு என்ற பெயர் மாற்றத்தினை முன்னர்க் கூறியதைக் காட்டிலும் வேறுபாடு உடையதாகக் கருதலாம். இருப்பினும் இங்குக் கல்வெட்டுத் தரவுடன் முள்ளூரை உறுதி செய்கிறது இவ்வுரை எனலாம். இப்பின்புலத்தில் பின்வரும் கூற்றினை ஆராய முனைவோம். அம்முறையே, "முனையூர், பகைப்புலத்து ஊர், தேர்வன்மலையன்,

தென்பெண்ணைக் கரையில் திருக்கோவலூரில் இருந்து நாடுகாவல் செய்த மன்னன். இவனது நாடு மலாடு எனவும் வழங்கும். பிற்காலத்தே இது சேதி நாடு எனவும் மகதைநாடு எனவும் வழங்கியது என்று கல்வெட்டுகள் கூறுகின்றன. சோழ மாதேவியின் தாய் முள்ளூர் நங்கையார் எனக் கல்வெட்டு கூறுவது (A.R.No. 107 of 1930-31) முள்ளூரின் சிறப்பைக் குறிக்கிறது. இது மலையமானுக்கு உரிய போரூர்" ( ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2010; ப.466). இக்கூற்று முள்ளூர் பற்றிய வரலாற்றுத் தெளிவைப் புலப்படுத்துகிறது. மலாடு என்பது சேதி நாடு எனவும் மகதை நாடு எனவும் கால மாற்றங்களுக்கு ஏற்ப மாறியுள்ளது. பொதுவாக, ஊர்ப் பெயர்களும் இவ்வாறு மாறிவருவதை இவ்வுரைகளின் வழியான கல்வெட்டுத் தரவுகள் உணர்த்துகின்றன. மேலும், இவ்வூர் மலையமானுக்கு உரிமை உடையதாகும் என்பதையும் அறிய முடிகிறது.

## செம்பியனார் - பெயராய்வு

செம்பியன் என்ற பெயர் வரலாற்றுப் பெருமை உடைய பெயராகக் கருத இடமுண்டு. இப்பெயர் சோழர் குடிகளில் வழங்கிய பெயர்களில் ஒன்றெனலாம். மேலும், சென்னி, செம்பி என்ற பெயர்களுக்கான தொடர்பினையும் அவதானிக்கலாம். அல்லது சென்னி, செம்பி என்ற பெயர்கள் அச்சுப் பதிவிறக்கத்தால் நிகழ்ந்த பிழையாகவும் இருக்கலாம். இத்தகைய பின்புலத்தில் பின்வரும் கூற்றினை ஆராய்வோம். அம்முறையே, "செம்பியன் என்பது சோழர்குடிக் குரிய பெயர்களுள் ஒன்று தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் என்றொரு சோழன் பண்டை நாளில் வாழ்ந்தமை நாடறிந்தது. சோழன், வளவன், சென்னி என்பன போலச் செம்பியன் என்பதும் பயில வழங்குவது. இவ்வாறே செம்பியன் என மக்கட்குச் சிறப்பாகப் பெயரிட்டு வழங்குவதும் தொல்வழக்கு. தஞ்சை மாவட்டத்தில் செம்பியன் இரும்பு, செம்பியன் காட்டூர் (A.R.No. 140 of 1929) செம்பியன் நல்லூர் (A.R.No. 31 of 1938) செம்பியன் மணலி (A.R.No. 126 of 1938) என்ற ஊர்களும் செம்பியன் என்ற பெயரைச் சிறப்பாகக் கொண்டு விளங்குதலை நோக்கின் இவை ஒருகால் இச்சான்றோர் பெயரால் தோன்றினவோ எனவும் நினைத்தற்கு இடமுண்டாகிறது. இவர் பாடியதாக இப்பாட்டு ஒன்றுதான் இத்தொகை நூலில் காணப்படுகிறது" (மேலது; ப. 471). இக்கூற்றுகள் செம்பியன் என்ற ஊர்ப்பெயர் முன்னொட்டு அடையாளங்களை வெளிப்படுத்துகின்றன. மேலே கூறப்பட்ட செய்திகளில் காட்டூர், நல்லூர், மணலி என்ற மூன்று ஊர்களுக்கும் 'செம்பியன்' என்ற முன்னொட்டு அடையாளம் இருப்பதால் இப்பெயரின் சிறப்பை உணரலாம். மேலும், செம்பியன் என்ற பெயரை நீக்கிய பின் கிடைக்கும் காட்டூர், நல்லூர், மணலி என்பது சமகாலச் சூழலில் தனிப் பெயர்களாகப் புழங்கி வருவதையும்

கவனிக்க முடிகிறது. எனவே, இப்பெயர்கள் பழைய மரபுகளைத் தாங்கி, பிற்காலச் சூழலில் இவ்வாறு மாறி நிற்கின்றன என்பதை அறியலாம். இருப்பினும், இத்தகைய பெயர்கள் பழங்காலப் பெயர்களின் வரலாற்று தொடர்ச்சிதானா என்பது ஆய்வுக்குரியது.

செம்பியன் என்ற பெயர் புலவரையும் ஊர்களையும் அடையாளப்படுத்துவதை மேலும் உறுதிப்படுத்த ரா.பி. சேதுப்பிள்ளையின் கூற்று இங்கு நோக்கத்தக்கதாகும். அம்முறையே, “செம்பியன், வளவன், சென்னி முதலிய பெயர்கள் அவற்றுள் சிறந்தனவாம். செங்கற்பட்டிலுள்ள செம்பியம், வட ஆர்க்காட்டிலுள்ள செம்பிய மங்கலம், தஞ்சை நாட்டிலுள்ள செம்பிய நல்லூர், பாண்டி நாட்டிலுள்ள செம்பிய னேந்தல் முதலிய ஊர்கள் செம்பியன் பெயரைத் தாங்கி நிற்கின்றன. தஞ்சை நாட்டிலுள்ள செம்பங்குடி என்பது செம்பியன் குடியாக இருத்தல் கூடும்” (இரா.பி. சேதுப்பிள்ளை; 2009; ப.72). இக்கூற்று செம்பியன் பெயரில் வழங்கும் பெயர் புழக்கத்தைத் தெளிவுபடுத்துகிறது. செம்பங்குடி என்ற பெயரின் வாயிலாகச் செம்பியன் பெயரால் தனிக் குடிகள் இருந்துள்ளதையும் அறியமுடிகிறது. பல உரைகளின் வாயிலாகச் செம்பியன் என்பது சோழர் குடி என்பதும் தெளிவாகிறது.

## முட்டத்திருமாறன் பெயராய்வு

அச்சுப் படியெடுப்பில் நிகழும் சில பிழைகள் வரலாற்றையே பிழையாக்குகின்றன என்பதற்கு இப்பெயரே சான்றெனலாம். தொடக்கக் காலங்களில் பயன்படுத்தப்பட்ட பெயர்கள் முன்னோர்கள் வழியே அப்படியே செல்லாமல், இது பிழையான பெயர் என்று முதலில் சுட்டிக்காட்டியவர் ஒளவை சு.துரைசாமிப்பிள்ளை ஆவார். இப்பெயர் குறித்து ஒளவை சு.துரைசாமிப்பிள்ளை எவ்வாறு உரை எழுதியுள்ளார் என்பதைப் பின்வரும் கூற்றின் வழியே, ஆராயத் தொடங்குவோம். அம்முறையே, “முட்டத்திருமாறன் என்ற இச்சான்றோர் பெயர் அச்சுப்பிரதியில் முடத்திருமாறன் எனக் காணப்படுகிறது. முடத்திருமாறன் என்ற பாடத்தினும் முட்டத்திருமாறன் என்பது சிறந்து தோன்றுகிறது. முட்டம் என்பது “தென்னாட்டு வள்ளுவநாட்டில்” (T.A.S.Vol.I.P. 292)உளது. இதுமுதல் இராசராசன் காலத்தில் மும்முடிச் சோழநல்லூர் எனப் பெயர் மாற்றம் எய்தியது கல்வெட்டாராயச்சியாளர் நன்கறிந்தது” ( ஒளவை சு.துரைசாமிப்பிள்ளை; 2010; ப.483). இக்கூற்று முடத்திருமாறன் என்ற பெயர் தவறானது என்றும் முட்டத்திருமாறன் என்பதே சரியானது என்றும் புலப்படுத்துகிறது. ‘முடம்’ என்பது உடல் ஊனமுடையவரைச் சுட்டும் ஒரு சொல்லாகும். எனவே முடம் என்பதைத் தவிர்த்து முட்டம் என்ற ஊரைச் சார்ந்தவர் என்பது பொருந்தும் என்ற எதார்த்தத் தெளிவை நமக்கு இவ்வுரை வெளிக்காட்டுகிறது.

## மீளிப் பெரும்பதுமனார்

பதுமனார் என்ற பெயர் சங்கப் பனுவல்களில் பயின்று வருதலைக் காண நேர்கிறது. பல்வேறுபட்ட பதுமனார்களை வேறுபடுத்தவே பெரும்பதுமனார் என்ற அடைமொழியுடன், மேலும் பிரிவுபடுத்தவே மீளி என்ற குன்றின் அடையாளத்தையும் இணைத்துப் பொருந்துதல் காரணமாக இப்பெயர் இவ்வாறு வழங்கலாயிற்று எனலாம். இப்பெயர் பெற்றியைப் பின்வரும் கூற்றின் வழியே அடையாளம் காணலாம். அம்முறையே, "பெரும்பதுமனார் என்ற பெயருடைய சான்றோர் வேறு உண்மையால் இவர் மீளிப் பெரும்பதுமனார் என்று சிறப்பிக்கப்பெறுகின்றார். மீளி என்பது மீளிக்குன்று என்னும் மூதூரின் சுருக்கம். இது தென் பெண்ணைக் கரையில் மகத மண்டலம் எனக் கல்வெட்டு கூறும் நாட்டிலுள்ளதோர் ஊர். மலையமான்களுக்குரிய மலாடு பிற்காலத்தே சேதி நாடு எனவும் மகதநாடு எனவும் இரண்டாகப் பிரிந்து நிலவிற்று; அப்பிரிவினுள், மகதநாடு மகத மண்டலம் எனவும் வழங்குவதுண்டு. (A.R.No. 403 of 1937-38) மீளிக்குன்று, மலாடான சனநாத வளநாட்டுப் பெண்ணைத் தென்கரை மகதமண்டலத்துப் பழங்கூர்ப்பற்றில் உள்ளதெனக் கல்வெட்டுகள் கூறுகின்றன. பெரும் பதுமனார் என்பது இச்சான்றோருடைய இயற்பெயர். இவர் பாடியதாக இவ்வொரு பாட்டுத்தான் தொகை நூல்களிற் காணப்படுகிறது" (மேலது; ப.498). இக்கூற்றுவழி மீளிப் பெரும்பதுமனார் என்ற பெயர் பற்றிய தெளிவை ஏற்படுத்துகிறது. மலாடு என்ற நாடு இருபிரிவுகளாகச் சேதிநாடு, மகதநாடு எனப் பிரிக்கப்பட்டதை அறிய முடிகிறது. மேலும், மகதநாடே மகத மண்டலம் என்ற தெளிவையும் கல்வெட்டு உணர்த்துகிறது.

## கச்சிப் பேட்டுக் கதக்கண்ணனார்

கச்சிப்பேடு என்பது சமகாலக் காஞ்சி மாநகரைக் குறிப்பது எனலாம். கச்சிப்பேசு என்ற ஊரினால் இப்புலவனை அடையாளப்படுத்த இவ்வூரினை முன் சேர்த்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது. கதக் கண்ணனார் என்ற பெயரை அலங்கரிக்கும் இவ்வூர்ப் பெயர்கள் எவ்வாறு பிணைக்கப்பட்டுள்ளன என்பதைப் பின்வரும் கூற்றின் வாயிலாகக் கவனிக்கலாம். அம்முறையே, "கச்சிப்பேடு என்பது இன்றைய கச்சிமாநகர்க்குப் பெயர் என்பது கல்வெட்டுக்களால் (A.R.No.474 of 1925, 239 of 1931; 82 of S.I.I.Vol.1) அறியப்படுகின்றன. கதக் கண்ணன் என்பது இவரது இயற்பெயர். இப்பெயருடைய சான்றோர் ஒருவர் குறுந்தொகைக்கண் காணப்படுகின்றார். அவரின் வேறுபடுத்தற்கு இவர் கச்சிப்பேட்டுக் கதக்கண்ணனார் எனச் சிறப்பிக்கப் பெறுகின்றார். கதக்கண்ணன் என்றொரு தலைவன் பண்டை நாளில் இருந்தான் என்பது யாப்பருங்கல விருத்தி மேற்கோள் இலக்கியங்களால் தெரிகிறது. இக்கச்சிப்பேட்டுக் கதக்கண்ணனார் பெயர் அச்சுப் பிரதியிலும் மதுரைத் தமிழ்ச் சங்க ஏட்டிலும் விடுபட்டுளது" (மேலது; ப.569).

இக்கூற்று கச்சிப்பேட்டைச் சார்ந்த கதக்கண்ணனார் என்ற புலவர் பெயர்த் தெளிவை ஏற்படுத்துகிறது. கதக்கண்ணன் என்றொரு தலைவனை இனம் காண யாப்பருங்கல விருத்தி என்ற இலக்கணப் பனுவலை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை சான்றாக்குகிறார். இத்தகைய பெயர்த் தெளிவை அடைய, அனைத்துத் தரவுகளையும் முன்வைக்க முனைந்துள்ளார் என்பதை இக்கூற்று தெளிவாக்குகிறது.

## சீத்தலைச் சாத்தனார்

சீத்தலைச் சாத்தனார் என்ற பெயர் பெரும் மருட்டுதலை ஏற்படுத்துகிறது. காப்பியம் படைத்த சீத்தலைச் சாத்தனாரும் சங்கப் பாடலைப் பாடிய இச்சீத்தலைச் சாத்தனாரும் ஒருவரா என்ற வினா எழுவதைத் தவிர்ப்பதற்கில்லை. இத்தகைய விவாத முனைப்புடன் பின்வரும் கூற்றினை ஆராய முனையலாம். அம்முறையே, “சீத்தலை என்பது மேலைக் கடற்கரை சேரநாட்டில் பண்டை நாளில் விளங்கிய ஊர்களுள் ஒன்று. இங்கிருந்த மாளிகை சிறப்பால் இதனைச் சீத்தலைமாளிகை என்று குடகுநாட்டுக் கல்வெட்டுகள் (Coorg. Ins.Vol.IX.No.1-10) கூறுகின்றன. புதுப்பட்டி ஏட்டிலும் இப்பாட்டுச் சீத்தலைச் சாத்தனார் பாடியதெனக் குறிக்கப்பட்டிருக்கிறது” (மேலது; ப.577). இக்கூற்று இப்புலவரின் பெயரைத் தெளிவுபடுத்தும் அளவிற்கு ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை சரியான தரவுகளை முன்வைக்கவில்லை எனலாம். காப்பியச் சாத்தனாரும் இப்பாடலைப் பாடிய சாத்தனாரும் ஒருவரா என்ற வினாவிற்கான விடைகளை அடைய போதிய தரவுகள் வழங்கப்படவில்லை. எனவே, இதற்கான விடைகளைத் தேடுதல் தேவையாகிறது. சீத்தலைச் சாத்தனார் என்ற பெயர் மேலாய்வுக்குரியதாகும்.

## நற்சேந்தனார்

சேந்தனார் என்ற பெயரை நன்மை விளைக்கும் என்ற பொருண்மையால் ‘நற்’ என்ற சொல்லாட்சியை இணைத்து நற்சேந்தனார் என அழைத்திருக்கலாம். சேந்தனர் என்ற பெயர் சங்ககாலம் தொடங்கிச் சமகாலம் வரையிலும் புழக்கத்தில் இருப்பதை அறியமுடிகிறது. மேலும், சேந்தனர் என்ற பெயரைப் பிராமணர் இனத்தில் இனம் காண நேர்கிறது. இத்தகைய பெயர் ஆய்வு முறையே, பின்வரும் கூற்றினைக்கொண்டு விளக்க முற்படுகிறது. அம்முறையே, “கொடி மங்கலத்து வாதுளி நற்சேந்தனார் என்றொரு சான்றோர் ஏனைத் தொகை நூல்களுட் காணப்படுகின்றார். அவரின் வேறு என்றற்கு இவர் நற்சேந்தனார் எனப் பொதுப்படக் குறிக்கப் பெறுகின்றார். சேந்தன் என்ற பெயர் தமிழகத்தில் மிகவும் பயில வழங்கிய தொன்று. தமிழகத்தில் மக்கட்பெயர் வடமொழிப்பட்ட தன்மை சென்ற மூன்று நான்கு நூற்றாண்டுகட்கு முன்பு இல்லை எனலாம். இந்நாள் வேதியரிடையே நிலவும் வடமொழிப் பெயரும் இடைக்காலத்தில்

அவரிடையே வழங்கியது கிடையாது. இரண்டாம் இராசராசன் காலத்துக் குடுமியான் மலைக் கல்வெட்டு ஒன்று, “சிவப்பிராமணன் பாரத்துவாசி மாறன் குன்றன்” (P.S.Ins.No. 135) எனவும், திரிபுவனச் சக்கரவர்த்தி சோணாடு வழங்கிய சுந்தரபாண்டியன்காலத்துக் கல்வெட்டு ஒன்று, “சிவப்பிராமணன் அகத்தியக் கோத்திரத்துத் திருக்கொடுங் குன்ற முடையானான நம்பிப்பிள்ளை (ibid, No, 296) எனவும் வருவன போதிய சான்றாகும். கொடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார் என்பவர் மதுரைக்கு அண்மையிலுள்ள கொடிமங்கலம் என்னும் ஊரில் வாழ்ந்த பிராமணருள் வாதுளிக் கோத்திரத்தவர் என்றும் நற்சேந்தன் என்பது அவருடைய இயற்பெயர் என்றும் அறிதல் வேண்டும்” (மேலது; ப.588). இக்கூற்று நற்சேந்தனார் என்ற பெயர்த் தெளிவை ஏற்படுத்துகின்றன. ‘சேந்தன்’ என்ற பெயர்கள் சங்கப் பனுவல்களில் பல பயின்று வருவதால் இவரை வேறுபடுத்தும் முகமாகவே ‘நற்’ சேந்தன் என்ற பெயர் அமைந்துள்ளதைப் புரிந்துகொள்ள ஏதுவாகிறது. மேலும், சேந்தன் என்ற பெயரைப் பிராமணர் இனத்தின் அடையாளமாகக் கருதலாம். நற்சேந்தனார் கொடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனாரினும் வேறானவராகவும் இருக்கலாம் என்று தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியத்தின் மூன்றாம் தொகுதி கூறுவதையும் கவனத்தில் கொள்ள வேண்டியது அவசியமாகின்றது.

## நெய்தல் தத்தனார்

நெய்தல் திணைப் பாடல்களை அதிகம் பாடியதால் இப்பெயரான நெய்தல் தத்தனார் என்று அழைக்கப்பட்டார் போலும். நெய்தல் என்ற பொருண்மையில் பல ஊர்கள் இப்பதை அறியமுடிகிறது. நெய்தல் என்ற பெயர் சமகாலத்தில் எப்பெயரால் அழைக்கப்படுகிறது. தற்பொழுது எம்மாவட்டத்தில் எவ்வூருக்கு அருகில் உள்ளது, என்பதைப் பின்வரும் கூற்றின் வாயிலாக அறிவோம். அம்முறையே, “சான்றோராகிய தத்தனார்க்கு நெய்தல் என்பது ஊர்; நெய்தல் வாய், நெய்தல் வாயில், நெய்தலங் கானல், நெற்தற்றலை (S.I.I.Vol.V.No. 791) எனப் பெயரிய ஊர்கள் நம் தமிழகத்தில் உண்டு. நெய்தல், இடைக்காலக் கல்வெட்டுக்களில் சயங்கொண்ட சோழ மண்டலமான தொண்டை மண்டலத்துப் பல்குன்றக் கோட்டத்து நெய்தல் என்றும், நெய்தல் நெடுங்குன்றம் (A.R.No. 113 of 1924) என்றும் குறிக்கப்படுகிறது. பிற்காலத்தே நாயக்க மன்னர் சிலர் இவ்வூரில் இருந்து நாடுகாவல் புரிந்திருந்தனர் என்பது இங்கே குறிக்கத்தக்கதொன்று. இந்த நெய்தல் என்னும் ஊர் நெடுங்குன்றம் என்ற பெயருடன் வட ஆர்க்காடு மாவட்டத்து வந்தவாசியிலிருந்து போளூர் செல்லும் பெருவழியில் இருக்கிறது. நெய்தலில் சிறந்து தோன்றிய சான்றோராதலால் நம் தத்தனார் நெய்தல் தத்தனார் என்று குறிக்கப்பெறுகின்றார். இவர் தந்தை கொடியூர்கிழார் என்பவராதலின், இவரை நெடுந்தொகை கொடியூர் கிழார் மகனார் நெய்தற்றத்தனார் என்று கூறுகிறது. கொடியூரும் இப்போது கொடூவூர் எனத் திரிந்து அத்தொண்டை நாட்டிலேயே

திருக்கழுக்குன்றத்துக்கு அண்மையில் உளது. (A.R.No. 127 of 1932-33) இவர் பாடியதாக ஒரு பாட்டு அகநானூற்றில் உள்ளது” (மேலது; பக்.591-592). இக்கூற்று நெய்தல் தத்தனார் பற்றிய வரலாற்றுத் தெளிவை ஏற்படுத்துகிறது. பிற்காலங்களில் நெய்தல் என்ற பெயர் நெடுங்குன்றம் என்று திரிந்து வந்துள்ளதையும் அறியமுடிகிறது. கொடியூர் கிழான் என்பதும் நெடுந்தொகை கொடியூர் கிழான் என்று அழைக்கப்படுவதையும் உய்த்துணர முடிகிறது. சங்கப் பாடல்களில் ஒரே பெயரில் பல புலவர்கள் இருப்பதால், அவர்களை வேறுபடுத்தி அடையாளம் காண இத்தகைய முன்னொட்டுக்கள் சேர்க்கப்பட்டுள்ளதை அறியலாம். இத்தகைய பெயர்களும் அப்புலவர்களின் சிறப்பினைக் கருத்தில் கொண்டே அமைக்கப்பட்டுள்ளதை அறிய முடிகிறது.

## நற்றாமனார்

நன்மை விளைக்கும் பொருண்மைகளின் அடையாளமாகவே இயற்பெயர்களுக்கு முன்னர் ‘நல்’, ‘நற்’ என்ற அடைமொழிகளை முன்னிலைப்படுத்துகின்றனர் எனலாம். தாமன் என்ற பெயரே இயற்பெயராக இருந்துள்ளது. பிறபெயர்களில் இருந்து இப்புலவரை வேறுபடுத்திக் காட்டும் முகமாகவே இத்தகைய மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன எனலாம். இத்தகைய மாற்றங்களை உள்ளடக்கிய பெயர்களின் விவரங்களைப் பின்வரும் கூற்றின் வழி ஆராய முனையலாம். அம்முறையே, “நல்லந்துவனார், நல்லுருத்திரனார், நல்விளக்கனார், நல்வேட்டனார் என்றாற் போல, இத்தாமனார் நற்றாமனார் என்று குறிக்கப் பெறுகின்றார். நற்றமனார் என்ற பாடம் ஏடெழுதினோரால் நேர்ந்த பிழை; தாமன் என்ற இயற்பெயருடையார் திருந்தாமனார் எனச் சங்கக் காலத்திலும், திருநாரையூர் நாட்டுச் சிற்றடி என்னும் ஊரில் தாமன் அமலனான நமசிவாயன் என இடைக்காலத்திலும் (A.R.No. 141 of 1923) இருந்திருக்கின்றனர். தோன்றிக்குடித் தலைவனான தாமான் பெயரும் இத்தாமன் என்பதன் மரூஉவே. இவரைப் பற்றி வேறு குறிப்புகள் கிடைத்தில”(மேலது; ப.604). இக்கூற்றுகள் பெயருக்கு முன்னொட்டாகச் சேர்ப்பது வழக்கமாக இருப்பதையும், தாமன் என்பதே நற்றாமனார் என்றானது என்ற பெயர்த் தெளிவை ஏற்படுத்துகின்றன. நற்றாமனார், திருத்தாமனார் என்பதையும் இணைத்துப் பார்த்தல் அவசியமாகிறது. ‘நற்’, ‘திரு’ என்ற அடைமொழிகள் பல பெயருக்கு ஆகிவருவதையும் அறியலாம். நற்றமனார், நற்றாமனார் என்ற பெயர் வேறுபாடு இருப்பதைக் காணமுடிகிறது. நல்தமனார் எனப் பிரித்து யாவருடனும் உறவு கொள்ளும் இயல்பினரெனக் காரணப்பெயராகவும் கொள்ளலாம்.

## அரிசிலங்குமரனார்

அரிசில் என்ற ஊர்ப் பெயராய்வை இவ்வுரையாசிரியர் வழி முன்னரே ஆராய்ந்துள்ளோம். அசிரிலாறு, அரிசிக்கரை என்ற ஊர்ப் பெயர்களுடன் அரிசில் கிழார், அரிசிலங்குமரனார் என்ற பெயர்களையும் இணைத்துப் பார்த்து ஆய்தல் அவசியமாகிறது. சில்லியங் குமரனார் என்பது சல்லியங் குமரனார் என்னும்படி அச்சுப்படிகளில் பிழைகள் ஏற்படுவதையும் பின்வரும் கூற்றின் வாயிலாகக் கவனிக்கலாம். அம்முறையே, "அரிசில் என்பது காவிரியின் கிளையான அரிசிலாறு காவிரியினின்றும் பிரியுமிடத்தே குடந்தைக்கு அருகேயிருந்து மறைந்து போன ஊர் (A.R.No. 255 of 1911) அரிசில்கிழார் என்னும் சான்றோரும் இவ்வூரவரே. இக்குமரனாரைச் சில்லியங் குமரனார் எனத் திரு. ச. வையாபுரிப்பிள்ளையின் கையெழுத்துப்படி கூற, அச்சுப்படி சல்லியங் குமரனார் எனத் திருத்தி காட்டப் புதுபட்டியேடு இவர் பெயரை அரிசிலங்குமரனாரெனக் குறித்தமை கொண்டு மேலே குறித்த உண்மை வடிவு உய்த்துணரப்பட்டது. இக்குமரனார் சோழ நாட்டுக் கிள்ளியையும் அரிசிலாற்றையும் இப்பாட்டின் கண் எடுத்துப்பாடுவது இவர் அரிசிற்குமரனார் எனப்படுவதை வற்புறுத்துகிறது" (மேலது; ப.639). இக்கூற்று அரிசில் என்ற ஊர்ப் பெயருடனான, புலவர் பெயரையும் தெளிவுபடுத்துகிறது. அரிசிலாறு என்பது மறைந்து போனது என்ற வரலாற்றுத் தரவுகளைக் கல்வெட்டுத் துணையுடன் விளக்கிச் செல்கிறது ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை. அச்சுப்படிகளால் ஏற்படும் மாற்றங்கள் பெயர் மாற்றம் நிகழ்வதற்கும் காரணமாகிறது என்பதை உய்த்துணர முடிகிறது. பாடல்களின் பாடுபொருள்களை வைத்துப் புலவர்களின் ஊர்ப் பெயர்களையும் அடையாளம் காணலாம் என்பதை இக்கூற்று உணர்த்துகிறது.

## இடைக்காடனார்

இடைக்காடனார் என்ற பெயரை ஆராய முனையும் உரையாசிரியர்கள் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் கருத்தினையும் உ.வே.சாமிநாத ஐயரின் கருத்தினையும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை மறுக்கிறார். இடைக்காடு என்ற ஊரினர் ஆதலால் இப்பெயர் பெற்றனர் என்பது இரு உரையாசிரியர்களின் கருத்தாகும். ஆனால், இக்கருத்தை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை மறுக்கிறார். அதாவது வெண்காடு, மறைக்காடு, ஆர்க்காடு என்ற ஊர்களைச் சேர்ந்தவர்களை வெண்காட்டான், மறைக்காட்டான், ஆர்க்காட்டான் என்று அழைப்பது வழக்கில் இல்லை. எனவே, இப்பெயர் பொருந்தாது என்பதை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை முன்வைக்கிறார்.

அகநானூற்று உரைகாரரான வேங்கடாசலப் பிள்ளையின் கூற்றினையும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை மறுத்துரைக்கிறார். இடைக்காடனார் என்ற பெயரில் பெரும்'காடன்' என்பது இயற்பெயராகும். இடை என்பது இடையர் இனத்தைக்

குறிப்பதாகும் என்ற வேங்கடாசலப்பிள்ளையின் கூற்று ஏற்புடையதாக இல்லை என மறுக்கிறார். இடையர் சமூகத்தினைக் குறிப்பதெனில் இடையன் சேந்தன் கொற்றனார் எனவும், இடையன் நெடுங்கீரனார் எனக் குறிப்பது போல, இப்புலவரையும் இடையன் காடனார் என்றே குறிப்பிட்டிருக்க வேண்டும். ஆனால், அவ்வாறு எங்கும் குறிப்பிடவில்லை. எனவே, இக்கூற்றும் பொருந்தாது என்று தன் கருத்தை முன்நிறுத்த முயல்கிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை. இத்தகைய மறுப்பினைப் பின்வரும் கூற்றின் வழி எவ்வாறு முன்னிலைப்படுத்துகிறார் என்பதை ஆராய்வோம். அம்முறையே, "இடை என்றது காடனாரது ஊரைக் குறிப்பதாகக் கொண்டால் தடையேதும் இராது. இடைக்குடி (A.R.No. 84 of 1931) எனவும், இடையூர் (A.R.No. 202, 205 of 1932) எனவும் ஊர்கள் பல பண்டை நாளில் இருந்துள்ளன. அவற்றுள் ஒன்று இவரது ஊராதலால், இவரைப் பண்டையோர் இடைக்காடனார் என வழங்கினார். இடைக்காட்டூர் (A.R.No. 284 of 1930) என்றோர் ஊர் உண்டு; ஆயினும் அவ்வூரவர் இடைக்காடனார் என வழங்கப்படார் என உணர்க. பிற்காலத்தில் தோன்றிய திருவாலவாய்த் திருவிளையாடற் புராணம், "பின்னமில் கபிலன் தோழன் பெயர் இடைக்காடன் என்பான்" என்று குறிப்பதும் ஈண்டு நோக்கத்தக்கது. ஊசிமுறி யென்னும் செய்யுள் வகையைப் பாடியவர் இடைக்காடனார் எனவும், அவரும் இவரும் ஒருவரே எனவும் கருதுபவருண்டு; அவர்கள் இருவரும் காலத்தால் வேறுபட்டவர் என்பது நினைத்திலர்" (மேலது; ப.645). இக்கூற்று இடைக்காடனார் பற்றிய பெரும் விவாதத்தைக் கிளப்புகிறது. இக்கருத்தில் மூன்று உரையாசிரியர்களின் கருத்தினையும் மறுத்துத் தன்கருத்தினை முன்னிறுவுகிறார். இருப்பினும் வேறுபல இடங்களில் இந்த ஊர் பெயருக்கு இவர் தரும் விளக்கங்கள் முரணாக இருக்கின்றன. எனவே, இப்பெயராய்வு என்பது மேலாய்வுக்குரியதாகும்.

**நல்லாவூர்கிழார்**

நற்செயல்களைச் செய்யும் எவரையும் 'நல்' என்ற அடைமொழியால் குறிப்பதைக் கவனிக்கலாம். நல்லவற்றையே செய்கின்ற ஊரில் வாழ்ந்தவர் என்பதாலும் இப்பெயர் பெற்றிருக்கலாம். இப்பெயர்ப் பின்புலத்தைப் பின்வரும் கூற்றின் வாயிலாக ஆராய்வோம். அம்முறையே "நல்லாவூர் என்ற பெயருடைய ஊர்கள், தென்னார்க்காடு செங்கற்பட்டு தஞ்சாவூர் ஆகிய மாவட்டங்களில் காணப்படுகின்றன. அதனால், இச்சான்றோரை இன்ன நாட்டவர் என வரைந்து காண்பது இயலாததாகின்றது. நல்லாவூர்க்கண் இருந்து வேந்து பாராட்டும் வகையில் விளங்கினமையின், கிழார் என்ற இச்சிறப்பினைப் பெற்றாராதல் வேண்டும். நாட்டுமக்களிடையே நற்பணி செய்து

மேம்படுபவர்க்குக் கிழார் என்ற சிறப்பு பெயர் நல்கும் வழக்காறு இடைக்காலச் சோழப் பாண்டியர் காலத்தும் இருந்து வந்தமை முன்பே கூறப்பட்டது. இதனைக் கல்வெட்டுக்களால் (A.R.No. 334 of 1930) அறிகின்றோம்" (மேலது; ப.708). இக்கூற்று நல்லாவூர் பற்றிய பெயர்த் தெளிவை ஏற்படுத்துகிறது. நாட்டு மக்களுக்கு நற்பணிகளைச் செய்பவர்களுக்கு 'கிழார்' என்ற சிறப்பு பெயர் வழங்குவதையும் உணர்த்துகின்றது. நல்லாவூர், நல்லூர், நெல்லூர் என்ற சமகாலப் பெயர்களையும் தொடர்புபடுத்திப் பார்த்தலும் தேவையாகிறது. சங்கக் காலப் பெயர்களுக்கும் இத்தகைய சமகாலப் பெயர்களுக்கும் ஏதேனும் ஒரு வகையில் தொடர்பு இருக்கலாம்.

நல்லாவூர் கிழார் பற்றிய பெயர்த் தெளிவை அடைய தமிழ்ப்புலவர் வரலாற்றுக் களஞ்சியத்தை அணுகலாம். அம்முறையே, "இவர் இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. ஊராற் பெயர் பெற்ற சங்கப் புலவர்களுள் இவரொருவர். இவர் பிறந்த ஊராகிய நல்லாவூர் இப்பொழுது எங்குள்ளது என்று தெரியவில்லை" (வே. பழனியப்பன்; உ. பழனி; தமிழ்ப் புலவர் வரலாற்று களஞ்சியம், தொகுதி மூன்று;1989, ப.221). இக்கூற்றின் வாயிலாக நல்லாவூர் கிழாருக்கான இயற்பெயர் இன்னதெனத் தெரிந்தில என்பதைப் புலப்படுத்துகின்றன.

### பாரதாயனார்

ஓலைச் சுவடிகள் அனைத்திலும் இப்பெயர் இவ்வாறே இருக்க, அச்சுப்பிரதிகளில் மட்டும் பராயனார் என்றிருப்பதை அறிந்த ஒளவை சு.துரைசாமிப்பிள்ளை, இப்பெயர்த் தெளிவை எட்ட கல்வெட்டுத் தரவினை நாடுகிறார். கல்வெட்டுத் தரவுகளின்படி பாரதாயினார் என்ற பெயர்த் தெளிவை எட்டுகிறார். இப்பெயர் உருவாக்கப் பின்புலம் என்பதைப் பின்வரும் கூற்றின் வாயிலாகக் கவனிக்கலாம். அம்முறையே, "பாரதாயன் செல்வன் அரங்கன் (S.I.I.Vol.V.No. 520) எனவும், பாரதாயன் திருச்சிற்றம்பலமுடையான் நாராயணன், பாரதாயன் நாராயணன் பற்பநாபன் (Ibid No. 702) எனவும், பாரதாயன் சிங்கன் தேவன் எனவும், திருநறையூர் நாட்டுப் பிரமதேயமான பாரதாயக்குடி (S.I.I.Vol.VIII.No. 684) என்றும் கல்வெட்டுகள் குறிப்பது காண்க. பிற்காலத்தே இப்பாரதாயம் சேஷ்டபாகம் என வழங்குவதாயிற்று. ஒரு குடும்பத்தில் தந்தை இறந்துபட மூத்தமகன் அக்குடும்பப் பாரத்தைச் சிறப்புற உய்த்து இளையோர் பலரும் தனித்து வாழும் தகுதி பெருவித்தமைக்கு அவ்விளையோரால் விரும்பி நல்கப்படும் பாகமாக இருந்தமையின், இப்பாரதாயம் நாளடைவில் மறைந்தொழிந்தது; அதனால் பாரதாயன் என்ற சிறப்பு பெற்றோரும் மறைந்துபோயினர். இப்பாரதாயனாரது இயற்பெயர் மறைந்தமையின் இந்நூலைத் தொகுத்தோர் பாரதாயனார் என்றே குறித்தொழிந்தனர்" (ஒளவை சு.துரைசாமிப்பிள்ளை; 2010; ப.713). இக்கூற்று பாரதாயனார் பற்றிய

தெளிவுடன், புதுச் சிந்தனைகளுக்கும் இடமளிக்கிறது. பராயனார் என்பது பொருந்தாது. பாரதாயனார் என்பதே பொருந்தும் என்ற ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்று ஏற்புடையதாகும். ஏன் என்றால் சாதிய அடையாளப்பெயராக பராயனார் என்பதை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. மூத்த பிள்ளை குடும்பப் பாரத்தைச் சுமப்பவனுக்கு இப்பெயர் ஆகிவருதல் என்னும் கருத்தும் சிந்தனைக்குரியது. எனவே, இக்கருத்து மேலாய்வுக்குரியதாகும்.

## பெருந்தலை சாத்தனார்

பெருந்தலை என்பது ஊர்ப்பெயரையும், சாத்தனார் என்பது பெயரையும் குறிப்பதாகும். சீத்தலை, பெருந்தலை என்ற இரு ஊரும் தொடர்புடையதாகக் கருத இடமுண்டாகிறது. இவ்விரு பெயர்கள் சார்ந்த கதைகள் பிற்காலங்களில் புனையப்பட்டவையாக இருக்கலாம். ஒவ்வொரு உரையாசிரியர்களும் தங்கள் அனுபவங்களுக்கு ஏற்பவே பெயர் விளக்கம் செய்ய முயல்கின்றனர். இதனால், எப்பெயர் விளக்கம் பொருத்தமானது என்று தெளிவு ஏற்பட மருட்டுகிறது. இப்பின்புலத்தில் பின்வரும் கூற்றினை ஆராய்வோம். அம்முறையே, “பெருந்தலை என்பது சாத்தனாரது ஊர்ப்பெயர்; பெருந்தலையூர் என்ற இவ்வூர் கோவை மாவட்டத்தில், பூவானி (பவானி)யாறு பாயும் நாட்டில் உள்ளதோர் ஊர்; இது பெருந்தலை எனச் சுருங்கி நிற்கிறது; குடநாட்டு ஊர்களுள் ஒன்றான சீத்தலையூர், சீத்தலை யெனக் குறுகிக் கல்வெட்டுக்களில் (Coorg. Ins.Vol.I.No. 10) காணப்படுவது போல இப்பெருந்தலையூரும் பெருந்தலை என வழங்கும்” (மேலது; ப.742). இக்கூற்று காலமாற்றத்தால் பெயர் சுருங்குதலை உணர்த்துகிறது. பெருந்தலையூர், சீத்தலையூர் என்பதில் ஊர் என்பது சுருங்கிப் பெருந்தலை, சீத்தலை என்ற அடையாளத்துடன் ஊரைக் குறிக்கும் சொல்லாக நிற்கின்றன. மேலும், இப்பெயர்களுக்குச் சில கட்டுக்கதைகளும் புனையப்பட்டிருப்பதை அறியமுடிகிறது. உண்மைத் தெளிவின்மையால் இக்கதைகள் சில காலம்கடந்து நம்பப்பட்டு வருவதைக் கவனிக்கலாம். பிற்கால ஆய்வுகளுக்குப் பிறகு உண்மையான பெயர்க்காரணங்களைத் தமிழியல் உலகம் கண்டறிந்துள்ளது. இத்தகைய பெயர் புலப்பாட்டு முறையால் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை வழியான பெயர் ஆய்வுகள் முக்கிய இடம்பெறுகின்றன. சீத்தலை என்பது சீழ்வடியும் புண் பொருந்திய தலை உடையவன் என்றும், பெருந்தலை என்பது தலைபெருத்திருந்ததால் இப்பெயர் பெற்றனர் என்ற கருத்துக்கள் ஏற்புடையதாகத் தோன்றவில்லை. எனவே, ஊர்ப்பெயர்களை அடையாளப்படுத்தும் முகமாகச் சாத்தனார் என்ற பெயரை இணைத்துப் பார்த்தல் சாலச் சிறந்ததாகும்.

## தலைக்கோல் வழக்கு

தலைக்கோல் வழங்கும் வழக்கம் தமிழகத்தில் இருந்துள்ளமையை அறியமுடிகிறது. தலைக்கோல் பட்டம் என்பது மன்னர்களால் ஆடல் மகளிருக்கு வழங்கப்படும் பட்டமாகும். இத்தலைக்கோல் பட்டம் மாதவிக்கு அளிக்கப்பட்டதையும் இணைத்துப் புரிந்துகொள்ளல் தேவையாகிறது. ஆடல் கலைகளில் சிறந்து விளங்கிய மகளிருக்கு இத்தலைக்கோல் பட்டம் அளிக்கப்பட்டிருக்கலாம். இத்தகைய பின்புலத்தில் பின்வரும் கூற்றினை ஆராய முனைவோம். அம்முறையே, “வேந்தரது தலைக்கை பெற்று ஆடல் பாடல் நிகழ்த்தும் மகளிரைத் தலைக்கோல் மகளிர் என்றும், அதற்கு அடையாளமாக அவர் மூங்கிலாற் செய்து பொற்பூணிட்டுச் சிறப்பித்து நல்கப்பெறும் கோலைத் தலைக்கோல் என்றும் கூறுவர். இவ்வாறு தலைக்கோல் பெறும் வழக்காறு நம் தமிழகத்தில் இடைக்காலச் சோழ வேந்தர் காலத்தும் இருந்தமை கல்வெட்டுகளால் தெரிகிறது. (A.R.No. 231 of 1932-33) இவ்வாறு தலைக்கை தந்தும் ஆடல் பாடல் அழகுகளை நயந்தும் பரத்தையர் தொடர்பு பெறும் புறத்தொழுக்கத்தை ஆண்மக்கள், தம் மனைமகளிர் கருவுற்றிருக்கும் காலத்திற்குக் கைக்கொள்வது வழக்கு” (மேலது; ப.773). இக்கூற்று தலைக்கோல் மரபைப் பற்றிய தகவலை விளக்குவதாகும். தலைக்கோல் பட்டம் என்பது பரத்தையருக்கு வழங்கியமையை உணர்த்துகிறது. இருப்பினும், இங்குச் சில வினாக்கள் எழுவதைத் தவிர்ப்பதற்கில்லை. பரத்தமையில் வேந்தருக்கான பரத்தமை என்றும், பொதுப்பரத்தைமை என்றும் இரு பிரிவுகள் இருந்துள்ளதை அறியலாம். சமூகத்தில் ஏற்றத்தாழ்வு என்பது எக்காலத்திலும் பொருந்துவதாகவே இருக்கின்றது. எனவே, பொது மகளிர் அல்லது பொதுப்பரத்தையர் இத்தகைய தலைக்கோல் பட்டம் பெற்றிருக்க முடியாது என்பது திண்ணம். ஆகவே, இத்தலைக்கோல் பட்டம் என்பது வேத்தியல் மரபில் வேந்தருக்கான பரத்தையருக்கு மட்டுமே பொருந்தும். இப்பின்புலத்தினிலே சிலப்பதிகார மாதவியைப் புரிந்துகொள்ளல் அவசியமாகிறது. மேலும், தலைக்கோல் என்பது மூங்கிலால் வேயப்பட்ட பூங்கொத்தை உடையதாக இருந்திருந்த காரணத்தால் சமகாலத்தில் கொடுக்கப்படும் பூங்கொத்து வழங்குவதையும் அதனோடு இணைத்துப் பார்த்தல் அவசியமாகிறது.

## பரத்தையர்-பாணர்

பரத்தமை உருவாக்கப் பின்புலம் என்பது தொடக்கக் காலங்களிலே இருந்துள்ளமையை அறியமுடிகின்றன. ஆடவர் தொகை குறைந்தும் மகளிர் தொகை மிகுந்தும் இருந்துள்ளமையால் பெண்களை மனைவியாகவோ, காமக்கிழத்தியாகவோ, உரிமை மகளாகவோ வரையப்படாத பெண்கள் வரைவில் மகளிர் என்று கூறப்பட்டதை அறியமுடிகின்றது. இத்தகைய மகளிரையே பரத்தையர் என்று வரையறை செய்கிறார்

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை. இக்கருத்து ஒரு வகையில் ஏற்புடையதாக இருப்பினும், முழுக்கருத்தும் பொருந்துவதாகத் தெரியவில்லை. ஆணாதிக்கப் பெருஞ்செல்வர்கள் பல பெண்களை நுகரும் நோக்கிலும் இப்பரத்தமை உருவாகியிருக்கலாம். பரத்தையரை நூற்றுக்கணக்கிலும், ஆயிரக்கணக்கிலும் திரையாகக் கொடுக்கும் வழக்கம் இருந்ததென எரடோட்டஸ் முதலியோர் எழுதிய வரலாற்று நூல்கள் குறிப்பதாக ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தன் கருத்தை முன்வைக்கிறார். இத்தகைய கண்ணோட்டத்தில் பின்வரும் கூற்றினை ஆராய்வோம். அம்முறையே, "எல்லா வுயிர்க்கும் இன்ப நாட்டம் இயல்பிலே இருப்பதொன்று; பரத்தையர் இதற்கு விலக்கல்லராகலின், அவர்கள் தமக்கினிய ஆடவர் மனத்தைத் தம்பால் ஈர்த்தற்குரிய செயல்வகைகளாக ஆடல் பாடல் முதலிய பலவற்றை மேற்கொண்டிருந்தனர். தாம்பெறும் இன்பம் நிலைபேறும் வளமும் எய்துதற்குப் பொருள் இன்றியமையாமையின், அவர்கள் பொருள் மிக்க செல்வத் தலைவர்களைத் தம்பால் ஈடுபடுமாறு முயல்வாராயினர். அத்துறையில் அவர்கட்குப் பாணர் என்பார் துணையாக இருந்தனர். பாண்மகளிரை விறலியர் என்பதும் உண்டு. அவர்கள் ஆடல் பாடல் அழகுகளில் வல்லுநராய், அரசர், செல்வர் முதலியோருடைய மறமாண்புகளையும் அறச்செயல்களையும் இசையிலும் கூத்திலும் அமைத்துப் புகழ்ந்து அவர் தரும் பரிசில் பெற்று வாழ்வர். அவ்வழக்காறு இடைக்காலச் சோழ வேந்தன் இரண்டாங்குலோத்துங்கன் காலத்தும் இருந்ததனைக்(S.I.I.Vol.V.No. 705) கல்வெட்டுகள் கூறுகின்றன"(மேலது; ப.791). இக்கூற்று பரத்தையர் பற்றிய இயல்பான புரிதலை ஏற்படுத்தவல்லது. பாணர் என்பவர்கள் இசைக்கலை மீட்டுபவர்கள் ஆவார்கள். எனவே, பரத்தையர்களுக்கு இசைமீட்டும் கலைஞர்களாகப் பாணர்களை அடையாளம் காணலாம். பாண் மகளிரே விறலியர் என்ற வேறொரு பெயரால் அழைக்கப்பட்டுள்ளனர் என்பதையும் அனுமானிக்கலாம். பரத்தையர் என்று தனியான குடும்பப் பிரிவு என்பது பிற்காலங்களிலே தோன்றியிருக்கலாம். ஆனாலும், பாண்மகளிர் அனைவரும் பரத்தையரா என்பது மேலாய்வுக்குரியதாகும்.

## முள்ளூர்க்கோட்டை

முள்ளூர் என்பது வரலாற்றுப் போர் நடந்த இடமாகும். இதனால், இவ்வூர் இன்று சிறப்புடன் விளங்கும் முள்ளூர்க்கோட்டை அங்கமாகக் கொண்டுள்ளதை அறியலாம். சேரநாட்டின் வடபுலமே ஆரியநாடு என்ற வழக்கம் இருந்ததாக ஔவை சு.துரைசாமிப்பிள்ளை கூறும் கருத்து ஆராய்தலுக்குரியதாகும். சேரநாட்டின் வடபுலத்தாரே ஆரியர் என்பது பொருந்துமா என்பதும் சிந்தனைக்குரியதாகும். இப்பின்புலத்தில் பின்வரும் கூற்றினை வைத்து முள்ளூர் பற்றிய கருத்தினை ஆராய்வோம். அம்முறையே, "ஆரியர்க்கும் சேரர்க்கும் ஒரு காலத்தே முள்ளூரென்னும்

ஊரிடத்தே கடும்போர் நடந்தது; சேரர்க்குத் துணையாக மலையமான் தன் வேற்படையுடன் சென்று பொருதான்; ஆரியரது வாட்படை மலைமான் ஏந்திய வேற்படைக்கு எதிர் நிற்க ஆற்றாது உடைந்து ஓடிற்று. தமிழ்வேந்தர்க்கு வேண்டுமிடத்து உதவி புரிந்து வெற்றி பெறுவிப்பதில், மலையமான் புகழ் அந்நாளில் சிறந்து விளங்கிற்று. "வல்வேல் மலையனல்ல னாயின், நல்லமர்க் கடத்தல் எளிதுமன் நமக்கெனத் தோற்றோன் தானும் நிற்கூறும்மே, தொலை இயோன் இவனென" என்பதனால் இஃது உணரப்படும். இந்த முள்ளூர் இப்போது கோயம்புத்தூர் மாவட்டத்துக் கொள்ளேகால் வட்டத்தில் உளது; இதனை அங்குள்ள கல்வெட்டுகள் முள்ளூர்க் கோட்டை (A.R.No. 629-32 of 1912) என்று குறிக்கின்றன" (மேலது; ப.793). இக்கூற்று முள்ளூர் பற்றிய வரலாற்றுத் தெளிவை ஏற்படுத்துகிறது. சமகாலத்தில் கோயம்புத்தூர் மாவட்டத்தில் இப்பெயர் புழக்கத்தில் உள்ளதை அறியமுடிகிறது. மேலும், மலையமான் பல தமிழ் வேந்தர்களுக்குத் துணைபுரிந்துள்ளான் என்பதையும் அறிய முடிகின்றது.

## மதுரை இளம்பாலாசிரியன் சேந்தங் கூத்தனார்

இப்புலவரின் பெயரினை நான்கு நிலைகளில் பகுத்தாய்தல் அவசியமாகும். சங்ககாலச் சமூகத்தில் அறம் பற்றிய பொருண்மைகளைக் கற்பித்தோரே பாலாசிரியர் என்று குறிப்பிடும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்று ஆய்வுக்குரியதாகும். மேலும், பாலாசிரியர் பலரும் வேதியர்கள் என்று அழைக்கப்பட்டனர் என்னும் அவரின் கருத்தை நோக்கும்பொழுது பாலாசிரியர் என்போர் பிராமணர்களே என்று கருதத்தோன்றுகிறது. இத்தகைய பெயர்ப் பின்புலத்தை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றின் வாயிலாக ஆராய முற்படுவோம். அம்முறையே, "இச்சான்றோர் கூத்தனார் என்ற இயற்பெயர் கொண்டு பண்டை நாளில் மதுரையில் வாழ்ந்த பெரியவர். இவர் தந்தை பெயர் சேந்தன் என்பது. அந்நாளில் மக்களுக்கு அறமுதலிய பொருள்களைக் கற்பித்த ஆசிரியர்களுக்குப் பாலாசிரியன் என்ற பெயர் வழங்கிற்று; பாலாசிரியன்மார் பலர் சங்ககாலம் முதல் இடைக்காலச் சோழ வேந்தர் காலம் வரை இருந்துள்ளனர். முதல் இராசராசன் மகனான இராசேந்திர சோழன் காலத்தில் கருந்திட்டைக்குடியில் தோன்றிய கல்வெட்டு ஒன்றில் (S.I.I.Vol.v.No.1407) பாலாசிரியன் பரமேசுவரன் சீராகவன் என்றொருவன் காணப்படுகின்றதே இதற்குப் போதிய சான்றாகும். வேறு கல்வெட்டுகளில் பிராமணன் பாலாசிரியன் நக்கன் கொல்லி (190 of 1894 at Tiru vallam) என்றெல்லாம் வருவது நோக்கின் பாலாசிரியர் பலரும் வேதியராகவே காணப்படுகின்றனர்; பாலாசிரியன் சேந்தன் கொற்றனார், பாலாசிரியர் நப்பாலனார் என வரும் பலரும் வேதியராக இருத்தலால் இச்சான்றோரையும்

வேதியராகக் கோடற்கு இடமுண்டு. இப்பாலாசிரியர் இளமையிலே இச்சிறப்பெய்தியது பற்றி இவர் இளம்பாலாசிரியர் எனப்பட்டார். இளம்பால் என்பது இவரது ஊர் என்றும், கூத்தனார் எனப்படுவதால் கூத்தாடுவதில் இவர் வல்லுநர் என்றும் சிலர் கூறுவதுண்டு" (மேலது; பக்.816-817). இக்கூற்று பாலாசிரியன் என்ற பெயருக்கான தெளிவை ஏற்படுத்துகிறது. மேலும் சில விவாதங்களையும் இக்கூற்று எழுப்புகின்றது. இவ்விவாதத்தின் தொடக்கமாக வேதியரும் பிராமணரும் ஒன்றா என்ற வினாவுடன் ஆராய முற்படுவோம்.

ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கருத்துப்படி வேதியரும், பிராமணரும் ஒன்று என்பது புலப்படுகிறது. இது இந்த ஆய்வில் முன்னரே விவாதிக்கப்பட்ட பொருண்மையாகும். சங்ககாலக் கல்வி யாருக்கானது எனும்போது பிராமணர்களே முன்னிற்கின்றனர். எனவே, பிராமணர்கள் கல்வி கற்றவர்கள் என்றால், அறமுதலியவற்றை ஓதியவர்களும் பிராமணர்களே ஆவார். எனவே இங்குப் பாலாசிரியர் என்பவரும் பிராமணர் என்பது தெளிவாகிறது. இக்கூற்று இத்துடன் நிற்க.

கூத்தனார் என்ற பெயரின் மூலம் கூத்தாடுவதில் வல்லுநர் என்ற கருத்தை இப்பொழுது விவாதிக்கத் தொடங்குவோம். இளம்பாலாசிரியர் என்பவர்கள் பிராமணர் என்பது உண்மையானால் பிராமணர்கள் கூத்தாடினார்கள் என்பதற்கு எப்பதிவுகளும் இல்லை. எனவே, இப்பெயருக்கு ஔவை சு.துரைசாமிப்பிள்ளை கூறும் விளக்கம் வேறுபாடு உடையதாகத் தோன்றுகிறது. எனவே இப்பெயராய்வு என்பது மேலாய்வுக்குரியதாகும்.

### அன்னியூர் – திதியன் சீமை

அன்னி என்ற பெயர் கொண்ட தலைவர்களின் பெயர் அடையாளங்களான ஊர் பெயர்கராக அன்னியூரைக் குறிப்பிடலாம். திதியன் என்ற தலைவன் பெயரால் 'திதியன் சீமை' என்ற ஊர்ப்பெயர் வழங்குவதையும் அறியலாம். இத்தகைய சிறப்பு காரணமாக மனிதர் பெயர்கள் ஊருக்கு ஆகிவருவதைப் பின்வரும் கூற்றின் வாயிலாகக் கவனிக்கலாம். அம்முறையே, "அன்னி என்னும் பெயருடைய தலைவர்கள் பலர் பண்டைத் தமிழகத்தில் இருந்துள்ளனர். அன்னியூர், அன்னிகுடி, அன்னிசேரி என்ற ஊர்களே இதற்குப் போதிய சான்றாகும். திதியன் என்ற பெயருடைய தலைவர்களும் பலர் இருந்துள்ளனர். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனொடு போர் உடற்றிய எழுவருள் ஒரு திதியனும், பொதியின் மலைப்பகுதியில் ஒரு திதியனும், காவிரி நாட்டுத் திருவழுந்தூர்ப் பகுதியில் ஒரு திதியனும் இருந்தமை தொகை நூல்களால் அறிகின்றோம். மதுரை வட்டத்திலுள்ள சிந்துப்பட்டிப் பகுதிக்கு 'திதியன் சீமை' என்று

பெயரென அங்குள்ள கல்வெட்டுகள் (A.R.No. 316 of 1927-28) குறிக்கின்றன. எனினும் இப்பாட்டிற் காணப்படும் அன்னியையும் திதியனையும் சோழ நாட்டவராகவும் புன்னையைப் பற்றி வழக்காடுதலால் அந்நாட்டுக் கடற்கரைப் பகுதியினராகவும் கோடல் பொருத்தமாகத் தோன்றுகிறது. அன்னியின் ஊர் இடைக்காலத்தே வளவன் அன்னியூர் என்ற பெயர் தாங்குவதாயிற்று. தமிழ் நாட்டிற் பழையவாகக் காணப்படும் குறுக்கைகளுள் திருமுனைப்பாடி நாட்டுக் குறுக்கை (A.R.No. 136 of 1933-4) குலோத்துங்க சோழவளநாட்டுத் திருநாரையூர் நாட்டுக் குறுக்கை (A.R.No. 316 of 1927) வடகரை இராசராச வளநாட்டுத் திருப்பிடவூர் நாட்டுக் குறுக்கை (A.R.No. 265 of 1926) விருதராச பயங்கர வளநாட்டுக் குறுக்கை (A.R.No. 215 of 1917) என்பன கல்வெட்டுக் குறிப்புடையன. இவற்றுள் இறுதியிற் கண்டது புன்னை வளமுடையதாகலின்அதற்குரிய திதியனையே இங்கே கொள்ளலாம்" (மேலது; பக்.837-838). இக்கூற்று அன்னி, திதியன் என்ற பெயர்த் தெளிவை ஏற்படுத்துகின்றது. அன்னி என்ற தலைவன்பால் இப்பெயர்கள் அன்னியூர், அன்னிகுடி, அன்னிசேரி என்ற மூன்று பொருண்மைகளைக் கொண்டு விளங்குவதை அறியமுடிகின்றது. குறுக்கை என்ற ஊரைப் பல கல்வெட்டுகள் பலவாறு பதிவு செய்துள்ளதை அறியமுடிகிறது. அவை, திருமுனைப்பாடி நாட்டுக் குறுக்கை, திருநாரையூர் நாட்டுக் குறுக்கை, திருப்பிடவூர் நாட்டுக் குறுக்கை, குறுக்கை நாட்டுக் குறுக்கை என ஒரே பெயரில் பல ஊர்கள் புழங்கி வந்துள்ளதை அறிய முடிகிறது.

அன்னியூர் பற்றிய செய்திகளைப் பிற்கால இலக்கியங்கள் வழியான மாற்றங்களையும் பின்வரும் கூற்றின் வழியாக ஆராய்வோம். அம்முறையே, "திருநாவுக்கரசர் பதிகம்பாடிச் சிறப்பித்துள்ள வன்னியூர் இவ்வன்னியூரே எனக் கருதுவர். நாவுக்கரசர் தம் பதிகத்தில் "மணங்கமழ் மாட மாமதில்சூழ் வன்னியூர் என இவ்வூரின் வளத்தினைக் குறித்துள்ளார். எனவே, இவ்வூரும் இவ்வூரில் உள்ள சிவாலயமும் ஏறத்தாழ 1300 ஆண்டு காலச் சிறப்பு மிக்கவை. பிற்காலச் சோழராட்சிக் காலத்தல் இவ்வூர் உய்யக்கொண்டார் வளநாட்டிற்குட்பட்ட வெண்ணாட்டுப் பிரிவிற்குட்பட்டிருந்திருக்கிறது. ஊரின் பெயர் வளவன் அன்னியூர் என்றும் சிவாலயம் திருவகத்தீஸ்வரம் என்றும் வழங்கியிருக்கின்றன"(கு. தாமோதரன்; 2000; ப.90). இக்கூற்று அன்னியூர் பற்றிய பெயர் மாற்ற நிகழ்வினை உணர்த்துகின்றது. அன்னியூர் என்பது பிற்காலச் சூழலில் வன்னியூர் எனவும், அதுவே பிறகு அன்னூர், அன்னனூர் எனவும் மருவிச் சமகாலத்தில் புழங்கி வருவதையும் அறியமுடிகின்றது.

### அதியன்

அதியன் என்ற அடையாளம் கொண்ட ஒரு பெரும் சமூகத்தின் நீட்சியைச் சங்கப் பனுவல்களில் காணலாம். அதனடிப்படையில் அதியர், உதியர் இருவரும் சேர மரபினர்

என்று கருத இடமுண்டு. இத்தகைய கருத்தாக்கத்தினை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றின் வழி கவனிப்போம். அம்முறையே, “பண்டை நாளைச் சேரர் குடியில் உதியர், அதியர் என இரு கிளையினர் இருந்தனர். அவருள் உதியர் சேரநாட்டிலும், அதியர் மேற்கு மலைத் தொடரின் கீழ்ப்பகுதியிலும் பரவியிருந்தனர். பண்டைய சேரர் குடியைச் சேர்ந்திருந்ததற்கு அடையாளமாக அதியமான்கள் பனந்தார் அணிந்துகொள்வது மரபு; “இவனுக்குப் பனந்தார் கூறியது சேரமாற்கு உறவாதலின்” எனப் புறநானூற்று பழைய வுரைகாரர் கூறுவது காண்க. இதனைக் காணாமையால் அரசியற் கல்வெட்டுத் துறையினர் அதியர் சேரர் குடியைச் சேர்ந்தவரல்லர் (Madras Epigraphy Annual Report for 1906 para. 34) எனக் கூறினர். அதியமான்களின் ஆட்சி, சேலம் மாவட்டம் முழுதும் பரந்து இன்று தருமபுரி என வழங்கும் பண்டைய தகடூரைத் தலைநகராகக் கொண்டு விளங்கிற்று. இடைக்காலக் கல்வெட்டுக்களை நோக்கின் அதியமான்கள் கிழக்கில் வடஆர்க்காடு மாவட்டத்திலும் தென்னார்க்காடு மாவட்டத்திலும் பரந்திருந்தமை உணரக்கிடக்கின்றது. தகடூர் நாட்டுக்கு வடக்கிலுள்ள கங்க நாட்டிலும் கன்னட நாட்டிலும் அதியமான்களைப் பற்றிய கல்வெட்டுக் குறிப்புகள் பெருகவுள்ளன”( ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2010; பக்.845-846). இக்கூற்று அதியர், உதியர் பற்றிய உறவுமுறை குறித்த தெளிவினை ஏற்படுத்துகின்றது. உரையாசிரியர் பிழைபடும் இடங்களில் மறுப்பதும், மேலும் தான் எடுத்துக்காட்டும் கல்வெட்டுத்தரவுகளைக் கூடச் சில இடங்களில் மறுப்பதைக் காணமுடிகின்றது. அரசின் கல்வெட்டுத் துறையினர் கூறும் உதியர் என்பவர்களைச் சேரர் மரபினர் அல்லர் என்பதை மறுத்து, பழைய உரையாசிரியரின் கூற்றினை முன்வைத்துத் தன் கருத்தினை உறுதிசெய்கிறார். உரைகளில் எவ்விடங்களில் கருத்து பொருந்துகிறதோ அதை ஏற்றும், தவறானவற்றை மறுக்கும் போக்கை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை நெடுகப் பரக்கக் காணலாம். ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரைத்திறன் என்பது பெரும்பான்மை, சார்புத்தன்மை அற்ற ஆய்வு நேர்மையை மேற்கொண்டுள்ளாதாக உள்ளது என்பதே திண்ணம்.

அதியர் பற்றி இரா.பி. சேதுப்பிள்ளையின் கருத்தும் நோக்கத்தக்கதாகும். அம்முறையே, “தமிழ்நாட்டில் வாழ்ந்த மற்றொரு குலத்தோர் அதியர் எனப்படுவார். அன்னார் தலைவன் அதியன் என்றும், அதியமான் என்றும், அதியர் கோமான் என்றும் வழங்கப் பெற்றான். ஒரு காலத்தில் அதியமான் ஆட்சி தமிழ்நாட்டில் பெரும் பகுதியில் நிலவியிருந்ததாகத் தெரிகின்றது. அக்குலத்தைச் சார்ந்த தலைவருள் சிறந்தவன் அதியமான் நெடுமான் அஞ்சியாவான். அவனது நாட்டின் தலைநகர் தகடூர் என்று தமிழ் இலக்கியம் கூறும்” (இரா.பி. சேதுப்பிள்ளை; 2009; ப.70). இக்கூற்று அதியர் என்ற

அதியமான் பரம்பரை பற்றிய வரலாற்றுத் தெளிவினைப் புலப்படுத்துகின்றது. அதியமான்களின் தலைநகரம் தற்காலத் தருமபுரி என்பதையும் அறியமுடிகிறது.

## குறும்பொறை நாடு - குறும்பர்நாடு

பொறையன் என்ற வேந்தன் வாழ்ந்த பகுதியே பிற்காலங்களில் பொறைநாடு என மாறியிருக்கலாம். குட்டநாட்டு வேந்தர் வாழ்ந்த பகுதிகளைக் குட்டநாடு, குட்டுவன், குடநாட்டவன், குடவன் என்று வழங்குதல் போலப் பொறைநாடு இரண்டாகப் பிரிந்து குறும்பொறை நாடானது. இதன் தொடர்பாகவே குறும்பொறை நாடு 'குறும்பர்நாடு' என ஆகியிருக்கலாம். இத்தகைய கருத்தாக்கங்களைப் பின்வரும் கூற்றின் வழி கவனிக்கலாம். அம்முறையே, "பொறைநாடு பிற்காலத்தே குறும்பொறை நாடு, நெடும்பொறை நாடு என இரண்டாகப் பிரிந்தது; குறும்பொறை நாடு இப்போது குறும்பர் நாடு தாலுகா என்ற பெயருடன் மலையாள மாவட்டத்திலுள்ளது. கொச்சி நாட்டின் வடபகுதி நெடும்பொறை நாடு என விளங்கினமை கல்வெட்டுக்களால் (A.R.No. 321 of 1924) தெரிகிறது" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2010; ப.862). இக்கூற்று பொறைநாடு பற்றியான நெடும் வரலாற்றுப் பெயர் மாற்றத்தினை உணர்த்துகிறது. பொறைநாடு பற்றிய விவாதத்தை இந்த ஆய்வில் முன்னரே விவாதித்ததன் விளைவாக இப்புரிதலை அடையலாம். குறும்பொறை நாடு என்பது குறும்பர் நாடு என்றானதையும் அறிய முடிகிறது. இந்நாடு குறும்பர் இனத்திற்கான நாடா என்ற வினாவுடன் ஆராய்தல் மேலாய்வுக்குரியதாகும். இருப்பினும் பெயர் அடையாளங்களை மட்டும் வைத்து ஓர் இனத்தினை வரையறை செய்ய முனைவது பொருத்தமுடையதாகத் தெரியவில்லை.

## அழிசி - அழிசியூர்

ஊர்ப் பெயர்கள் புலவர்கள், மன்னருக்கு ஆவதுபோலப் புலவர்கள் மன்னர்கள் பெயர்களும் ஊருக்கு ஆகி வருவதையும் காணமுடிகிறது. ஒரே பெயரை உடைய புலவர்கள் மன்னர்கள் சங்கப் பனுவல்களில் பலர் இருந்துள்ளனர். இவர்களை வேறுபடுத்திக்காட்டத் தந்தை பெயர்களும், ஊர்ப் பெயர்களும், சிறப்புப் பெயர்களும் இணைக்கப்பட்டன போலும். இப்பின்புலத்தில் பின்வரும் கூற்றினை ஆராயலாம். அம்முறையே, "ஆதன் அழிசியென ஒருவன் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் காலத்தில் இருந்தமையின் அவனின் வேறுபடுத்து உணர இவனைச் சேந்தன் தந்தை அழிசி என்றார் போலும். அழிசி என்ற பெயருடையார் பலர் தொண்டை நாட்டிலும் இருந்துள்ளனர்; "சயங்கொண்ட சோழ மண்டலத்துக் காலியூர்க் கோட்டத்துச் சுங்கத் தவிர்த்த சோழச் சதுர்வேதி மங்கலமான அழிசியூர் (A.R.No. 399 of 1923) என்பதனால் இது தெரிகிறது" (மேலது; ப.883). இக்கூற்று அழிசி பற்றிய தெளிவை ஏற்படுத்துகின்றது. ஆதன் அழிசி

என்பவன் சோழ மரபைச் சார்ந்தவன் என்பது தெளிவாகிறது. இங்கு அழிசி என்பவனை அடிப்படையாகக்கொண்டு இப்பெயர் உருவாக்கப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது. அதேபோன்று இப்பெயர் கொண்ட ஊர்கள் பல இருப்பதையும் அறியலாம்.

மேலும், அழிசி என்ற பெயர்த் தெளிவை ஏற்படுத்த ரா.பி.சேதுப்பிள்ளையின் கூற்றினை இணைத்துப் பார்க்கலாம். அம்முறையே, "அழிசி என்னும் பெயருடையார் மூவர் சங்ககாலத்தில் இருந்தனர். அன்னவருள் ஒருவர் நல்லழிசியார். பரிபாடலில் இரு பாடல்கள் அவருடையன. கொல்லன் அழிசி என்பவர் இயற்றிய செய்யுட்கள் நான்கு குறுந்தொகையிற் சேர்ந்துள்ளன. அழிசி நச்சாத்தனார் என்பது இன்னொரு புலவர் பெயர். ஆதன் அழிசி என்னும் தலைவன் பூதப்பாண்டியனுடைய நண்பர்களுள் ஒருவன் என்பது புறப்பாட்டால் விளங்குகின்றது. இவர்தம் பெயரை நினைவூட்டும் அழிசிகுடி என்னும் ஊர் தென் ஆர்க்காட்டுச் சிதம்பர வட்டத்தில் உண்டு" (இரா.பி. சேதுப்பிள்ளை; 2009; ப.102). இக்கூற்றின் வழி அழிசி என்ற ஊர்ப்பெயருடன் அழிசிகுடி என்ற இனக்குழுவின் பெயரினையும் அறியமுடிகிறது. அழிசி என்பது புலவருக்கும் ஊருக்கும் ஒரு குடிக்கும் ஆகிவருவதைக்கொண்டு அப்பெயரின் சிறப்பினை உய்த்துணரலாம்.

## நெடும்பொறை நாடு

பொறை நாடு பற்றிய குறிப்புகள் இந்த ஆய்வில் பல இடங்களில் ஆராயப்பட்டுள்ளன. பொறை நாட்டின் இரு பிரிவுகளில் ஒன்று குறும்பொறை மற்றொன்று நெடும்பொறை என்பதாகும். குறும்பொறை என்பது குறும்பர் நாடாகும். ஆனால், நெடும்பொறை நாடு என்பது கல்வெட்டுகளிலும் இப்பெயர் முறையாலே பதிவு செய்யப்பட்டுள்ளதை அறியலாம். இத்தகவல்களை உறுதிப்படுத்த பின்வரும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றினைப் பொருத்தி ஆராய்வோம். அம்முறையே, "பொறையன், சேரமன்னர்களில் பொறை நாட்டுக்குரியவன், பொறைநாடு நெடும்பொறை நாடு, குறும்பொறை நாடு எனப் பிற்காலத்தே இரண்டாய்ப் பிரிந்து இயன்றது; குறும்பொறை நாடு இப்போது குறும்பர் நாடு என மருவி வழங்குகிறது; நெடும்பொறை நாடு(A.R.No.213 of 1924) கல்வெட்டுகளில் காணப்படுகிறது" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2010; ப.903). இக்கூற்று பொறைநாடு குறித்த தெளிவைப் புலப்படுத்துகிறது. இலக்கியத் தரவுகள் காட்டும் நெடும்பொறை நாட்டைக் கல்வெட்டுத் தரவுகள் காட்டி உறுதி செய்கிறது இவ்வுரை. எனினும், ஔவை சு.துரைசாமிப்பிள்ளை நற்றிணையின் 195 வது பாடலுக்கு எழுதும் விளக்க உரையில் நெடும்பொறை நாட்டுக்கு இக்கல்வெட்டுச் சான்றினைப் பயன்படுத்தவேண்டும் என்ற நோக்கில் வலிந்து எடுத்தாண்டுள்ளதாகத் தோன்ற இடமளிக்கிறது.

### கூடலூர்ப் பல்கண்ணனார்

பல்கண்ணனார் என்ற பெயரில் பல புலவர்கள் இருந்துள்ளமையால் இப்புலவரை வேறுபடுத்திக் காட்ட கூடலூர் என்ற ஊர்ப் பெயரை இணைத்துள்ளனர் எனலாம். தாமற்பல் கண்ணனாரும், பல்கண்ணனாரும் ஒரு மரபைச் சேர்ந்தவராகவும் இருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது. இதற்கான விளக்கங்களை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தெளிவுபடுத்த முற்படவில்லை. இப்பெயர் பற்றி அவர் தரும் விளக்கங்களைப் பின்வரும் கூற்றின் வழியே கவனிக்கலாம். அம்முறையே, "பல்கண்ணனார் என்பது இச்சான்றோரது இயற்பெயர். இப்பெயர் பண்டை நாளில் மக்களிடையே பயில வழங்கியுள்ளது. தாமற் பல்கண்ணனார் என்றொரு சான்றோர் புறநானூற்றுச் சான்றோரிடையே காணப்படுகின்றார். தாமல் என்பது தொண்டை நாட்டுப் பாலியாற்றின் கரையில் காஞ்சிமா நகர்க்கு மேற்கிலுள்ளதோர் ஊர். பல்கண்ணன் என்ற பெயருடையார் பலர் தொண்டை நாட்டில் இடைக்காலச் சோழ வேந்தர் காலத்தும் இருந்துள்ளனர்; செங்கற்பட்டு மாவட்டத்துக் குன்னத்தூர்க் கல்வெட்டொன்று (A.R.No. 229 of 1929-30) பல்கண்ணன் வியாகரணதானன் கூத்தாடுந் தேவன் என்றும் தென்னார்க்காடு மாவட்டத்துத் திண்டிவன வட்டத்து முன்னூர்க் கல்வெட்டு ஒன்று (A.R.No. 65 of 1919) இறையூர்ப் பல்கண்ணன் தாமன் திருவகத்தீச்சுர முடையான் என்றும் கூறுவதால் அறிகின்றோம். இதனால் இப்பல்கண்ணனாரையும் தொண்டை நாட்டுச் சான்றோராகக் கருத இடமுண்டாகிறது. இவருடைய கூடலூரும் தொண்டை நாட்டுக் கூடலூராகலாம்" (மேலது; பக்.920-921). இக்கூற்று பல்கண்ணனார் என்ற பெயர் பற்றிய தெளிவை ஏற்படுத்துகிறது. சங்க காலத்துக் கூடலூர் என்பது சமகாலக் கடலூராகவும் இருக்கலாம் என்பது இவ்வுரை ஆய்வில் முன்னரே காணப்பட்டது. இலக்கியம் கூறும் இத்தகைய பெயர்களைப் பிழையறத் தெளிவுபடுத்த கல்வெட்டுத் தரவுகள் துணைபுரிகின்றன என்பது திண்ணம். இத்துடன் நற்றிணையின் முதற்பாகத்திலுள்ள கல்வெட்டாய்வான பெயர் ஆய்வுகள் நிறைவுற்றது. இனி நற்றிணையின் இரண்டாம் (201-400) பாகத்திலுள்ள கல்வெட்டுச் சான்றுகள் ஆராயப்படுகின்றன.

### கச்சிப்பேட்டு நன்னாகையார்

சங்கப் பனுவல்களில் பெரும்பாலான பிழைகள் அச்சுப் பிழைகளால் ஏற்பட்டிருப்பதைக் கவனிக்க முடிகிறது. அச்சுப்படி எடுப்போரின் கவனக்குறைவாலும், ஏடுகளின் சிதைவாலும் இத்தகைய பிழைகள் ஏற்பட வாய்ப்புள்ளன. இத்தகைய பிழைகளைக் களையவே பிற இலக்கியக் குறிப்புகள், தொல்லியல் தரவுகள் ஆகியவை துணைபுரிகின்றன. இப்பின்புலத்தில் பின்வரும் கூற்றினை நோக்கலாம். அம்முறையே,

“இவர் பெயர் கச்சி நன்னாகையார் என்று தேவர் ஏட்டில் காணப்படுகிறது. அச்சுப்படியில் இப்பாட்டைப் பாடியவர் நொச்சிநியமங்கிழார் என்று குறிக்கப்பட்டிருப்பது, ஏடுபெயர்த்தெழுதப் பெற்றபோது நேர்ந்த பிழையாகலாம். காஞ்சிமாநகரின் ஒரு பகுதிக்குக் கச்சிப்பேடு என்பது பெயர்; இஃது இடைக்காலக் கல்வெட்டுகளிலும் (A.R.No. 474 of 1925; 239 of 1931) காணப்படுகிறது. நன்னாகனார் என்பது ஆடவரைக் குறிப்பது போல நன்னாகையார் என்ற இப்பெயர் பெண்பாலார்க்குரியதாகத் தோன்றுதலின் இவர் ஒரு நல்லிசைப் புலமை மெல்லியலார் என்று தெளிவாகிறது. இவர் பாடியனவாகச் சில பாட்டுகள் குறுந்தொகையில் உள்ளன” ( ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2011; ப.62). இக்கூற்று கச்சிப்பேட்டு நன்னாகையார் குறித்த பெயர்த் தெளிவை ஏற்படுத்துகிறது. இதில் ஊர் பெயர்க்காரணம் என்பது வரலாற்று முறையில் பொருந்துவதையும் உணர முடிகின்றது.

இங்குக் கச்சிப்பேடு பற்றிய தெளிவை ஏற்படுத்தும் கல்வெட்டுத் தரவினைக் கொடுத்துள்ளார். இக்கல்வெட்டுத் தரவு காஞ்சிப் பெயரைத் தெளிவுபடுத்துகின்றது. ஆனால், அச்சுப்படிகள் பலவற்றிலும் குறிப்பதாகக் கூறும், ‘நொச்சி நியமங்கிழார்’ என்ற பெயருக்கான தெளிவை ஏற்படுத்த எக்கல்வெட்டுத் தரவுகளும், எவ்வகை இலக்கியத் தரவுகளும் கொண்டு ஆராயப்படாதது இவ்வுரையில் பெருங்குறையாகவே தென்படுகிறது. ‘நொச்சிநியமங்கிழார்’ என்று அச்சுப்படிகள் பதிவு செய்துள்ள இப்பெயர் குறித்த சான்றாதாரங்கள் இல்லாத சூழலில், அதனை ஏடுபெயர்த்து எழுதலில் நேர்ந்த பிழை எனக் கூறிச்செல்லும் பொதுவான போக்கினை உரைமரபினில் காணலாம். சரியான சான்றாதாரம் இல்லாமல் ஒன்றைத் தவறு என்பதும் சரி என்பதும் அனுமானத்தை மையமிட்டதாகக் கருத இடமளிக்கிறது. அவ்வகையில், இப்பெயராய்வு மேலாய்வுக்குரியதாகும்.

## கணியன் பூங்குன்றனார்

கணியன் பூங்குன்றனார் என்ற பெயர் இரு பொருண்மைகளில் பிரிக்க வல்லது. கணியன் என்பது தந்தைப் பெயராகவும், கணி என்பது கணித்துக் கூறும் தொழில் சார்ந்த பெயராகவும் கொள்ளலாம். பூங்குன்றனார் என்ற பெயரின் சிறப்பால் ஊர் பூங்குன்றம் என்று அழைக்கப்படுகிறதா அல்லது ஊரின் சிறப்பால் இப்புலவருக்குப் பூங்குன்றனார் என்று பெயரானதா என்ற பெயர்த் தெளிவை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை வெளிப்படுத்தவில்லை. இப்பின்புலத்தில் பின்வரும் கூற்று ஆராயப்படுகிறது. அம்முறையே, “கணியன் பூங்குன்றனார் எனப்படும் இச்சான்றோர் பறம்புநாட்டுப் பூங்குன்றம் எனப்படும் ஊரினர்; பூங்குன்றன் என்பது இவரது இயற்பெயர். இவர் தந்தை கணியன் எனப்படுகின்றார். அஃது அவரது இயற்பெயரோ, கணி கூறுவதால் வந்த

சிறப்புப் பெயரோ தெரிந்தில. இவ்வாறே பிறரும், “இவர்க்கு இப்பெயர் தொழிலாலும் இடத்தாலும் வந்தது போலும்” என்று இயம்புகின்றனர். இப்போது இராமநாதபுர மாவட்டத்து மகிபாலன்பட்டி என்னும் ஊரிலுள்ள கல்வெட்டால் (A.R. 162 of 1936.P.S.Ins.No.1027,1032) அதுவே முன்னாளைய பூங்குன்றமெனத் தெரிகின்றது” (மேலது; ப.134). இக்கூற்று கணியன் பற்றிய மருட்டுதலையும், பூங்குன்றனார் பற்றிய பெயர்த்தெளிவையும் ஏற்படுத்துகிறது.

கணியன் பற்றிய பெயரைத் தொழிலாலும், இடத்தாலும் என இரு பொருண்மைகளில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை முதலான பலரும் தெளிவை ஏற்படுத்த சரியான தரவுகள் தரவில்லை என்பதே பொருந்தும். இப்பெயர்த்தெளிவை எட்ட வேறு எந்தத் தரவுகளும் துணைபுரியவில்லை. மேலும், பூங்குன்றம் என்ற ஊர் சமகாலத்தில் மகிபாலன்பட்டி என அழைக்கப்படுவதாக இவ்வுரை நமக்கு உணர்த்துகிறது.

## ஆர்க்காடு

ஆர்க்காடு என்ற பெயர் கொண்ட ஊர்கள் பல இருப்பதால் அதனை வேறுபடுத்த ‘சோழர் ஆர்க்காடு’ என ஒவ்வொன்றிற்கும் ஒரு வித முன்பெயர் அடையாளங்களை இணைக்கலாயினர் போலும். இத்தகைய வேறுபாடுகளைக் கண்டறிய கல்வெட்டுத் தரவுகள் துணைநிற்கின்றன. இவ்விளக்கங்களைப் பெற பின்வரும் கூற்றினை நோக்கலாம். அம்முறையே, “ஆர்க்காடு எனப் பெயர் கொண்டவர்கள் தொண்டை நாட்டிலும் நடுநாட்டிலும் பாண்டி நாட்டிலும் பல இருத்தலின், இது சோழநாட்டுக் காவிரி தென்கரையில் உள்ள ஆர்க்காடு என்பது தோன்ற சோழர் ஆர்க்காடு என்றார். பாண்டி நாட்டு ஆர்க்காடு இரணிய முட்ட நாட்டது என அழகர்கோயில் கல்வெட்டு (A.R.No. 290 of 1930) உரைக்கிறது. தொண்டை நாட்டு ஆர்க்காட்டை ஈக்காட்டுக் கோட்டத்து ஆர்க்காடு எனத் திருப்பாசூர்க் கல்வெட்டும் (A.R.No. 190 of 1930) நடுநாட்டு ஆர்க்காட்டைப் பெண்ணை வடகரை விலையூர்நாட்டு ஆர்க்காடு என்றும் திருக்கோயிலூர் வட்டத்து ஆர்க்காட்டுக் கல்வெட்டு (A.R.No. 49 of 1936) கூறுகிறது. இவற்றின் வேறாக, தொண்டை நாட்டில் பாலியாற்றின் கரையில் மகமதியராட்சி நடத்திய ஆர்க்காடு ஒன்றும், குன்றவத்தன கோட்டத்து இலத்தூர் நாட்டு ஆர்க்காடு ஒன்றும் காணப்படுகின்றன” (மேலது; ப.142). இக்கூற்று ஆர்க்காடு என்ற ஊர் பல கோட்டங்களில் இருந்துள்ளமையை உணர்த்துகிறது. முகமதியராட்சி நடத்திய ஆர்க்காடே வேலூர் மாவட்ட ஆர்க்காடு என்று கருதலாம்.

ஆர்க்காடு பற்றி மேலும் வரலாற்றுத் தெளிவை எட்ட பின் வரும் ரா. பி. சேதுப்பிள்ளையின் கூற்று கவனிக்கத்தக்கதாகும். அம்முறையே, "தமிழ்நாட்டில் ஆர்க்காடும், ஆலங்காடும், வேற்காடும், களக்காடும், பிற காடுகளும் இருந்தன என்பது ஊர்ப் பெயர்களால் விளங்கும். ஆர் என்பது ஆத்தி மரத்தைக் குறிக்கும். ஆத்தி மாலை அணிந்த சோழ மன்னனை 'ஆரங்கண்ணிச் சோழன்' என்று சிலப்பதிகாரப் பதிகம் குறிக்கின்றது. அந்நாளில் ஆத்தி மரம் நிறைந்திருந்த நிலப்பகுதி ஆர்க்காடு என்று பெயர் பெற்றது. இக்காலத்தில் ஆர்க்காடு என்பது ஒரு நாட்டுக்கும், நகருக்கும் பெயராக வழங்குகின்றது. ஆர்க்காட்டுக்கு அணித்தாக ஆர்ப்பாக்கம் என்ற ஊர் உள்ளது. அன்றியும் சோழ நாட்டின் பழைய தலைநகரம் ஆரூர் ஆகும். அது பாடல் பெற்ற பின்பு திருவாரூர் ஆயிற்று" (இரா.பி. சேதுப்பிள்ளை; 2009; ப.13). இக்கூற்று ஆர்க்காடு பற்றிய பெயர் சார்ந்த வரலாற்றினைப் புலப்படுத்துகிறது. காடு நிறைந்த இடத்தைக் கொண்டதால் இவ்வூருக்கு இடப்பெயரானது என்ற காரணத்தையும் அறியமுடிகிறது.

## திருமுட்டம் ஊர்ப்பெயராய்வு

முட்டம் என்ற ஊரினை அச்சுப்பிழைகளால் முடம் என்று குறிக்கப்பட்டதால், முட்டத்திருமாறன் என்பது முடத்திருமாறன் என்று தவறான பெயரை அடையாளப்படுத்தியதை முன்னரே கண்டோம். இப்பொழுது முட்டம் என்ற ஊர் பற்றிய தெளிவை எட்ட பல கல்வெட்டுத் தரவுகளைக் கொண்டு ஊர் பெயர்த் தெளிவை அடைய பின்வரும் கூற்றினைக் நோக்கலாம். அம்முறையே, "பழைய பல்லவ சோழர் காலங்களில் இவ்வூர் முட்டமென்றே பெயர் குறிக்கப்பெற்றது அவ்வூர்க் கல்வெட்டுகளால் தெரிகிறது. வடகரை விருதராச பயங்கர வளநாட்டு மேற்காநாட்டு இருங்கோளப்பாடி நாட்டு வளந்தைக் கூற்றத்துத் திருமுட்டம் (A.R.No. 230 of 1916) என்பது பழைய சோழ மன்னர் கல்வெட்டு. பிற்காலத்தே இங்கே திருமால் கோயில் ஒன்று தோன்றியதன் விளைவாக இவ்வூர் முடிகொண்ட சோழ நல்லூர் என்ற பெயருடன் ஆதிவராகநல்லூர் என்ற பெயரும் பெற்றது (A.R.No. 233 of 1916). விசயநகர வேந்தர் நாளில் கோயில்களும் ஊர்களும் வடமொழியில் பெயர்க்கப்பட்ட போது, திருமுட்டம் என்ற பழந்தமிழ் பெயர் திருமுஷ்ணமெனவும், ஸ்ரீ முஷ்ணமெனவும் மாறிற்று. இவ்வூரில் மானக்கஞ்சாறன் என்ற ஒருவன் திருப்பதியம்பாடி இங்குள்ள சிவன் கோயிலில் விண்ணப்பம் செய்து வந்தான் என்றும், அவன் இறந்தபின் அவனது உருவம் கோயிலில் அமைக்கப்பெற்றது என்றும் இவ்வூர்க் கல்வெட்டுகள் (A.R.No 225 of 1916) கூறுகின்றன. இத்துணை வரலாற்று சிறப்பமைந்த இப்பேரூரில் திருமாறன் என்ற இச்சான்றோர் தோன்றியிருக்கலாமென எண்ணுதல் தவறாகாது. மாறன் என்னும் பெயர் பாண்டி வேந்தர்க்குரியதாயினும், நாட்டில் வாழ்ந்த மக்களும் அப்பெயர் தாங்கியிருந்துள்ளனர். பாண்டி நாட்டு இளையான்

குடியில் வாழ்ந்த சைவ நாயனார் ஒருவர் மாறனார் என்ற பெயருடையவர். திருமுட்டம் இருக்கும் பகுதியில் மாறன்பாடி என்று ஓர் ஊரும் உளது; அப்பகுதியைக் கல்வெட்டுகள் விருதராச பயங்கர வளநாட்டு மேற்காநாட்டு இருங்கோளப் பாண்டிநாடு (A.R.No. 211 of 1928-29) என்றும் கூறுகின்றன" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2011; ப.145). இக்கூற்று முட்டம் பற்றியான நெடும் வரலாற்றுத் தெளிவை ஏற்படுத்துகிறது. வடமொழி வருகையால் தமிழ்ப் பெயர்கள் எவ்வாறு மாற்றம் அடைந்தன என்பதையும் இக்கூற்று புலப்படுத்துகிறது. இருங்கோளப்பாடி நாடு என்பது இருங்கோளப்பாண்டிநாடு என பிழைபட்டுள்ளது என்றற்கும் இடமுண்டு என்று ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தன் கருத்தை முன்வைக்கிறார்.

## ஆலங்குடி வங்கனார்

அச்சுப்படியில் ஏற்பட்ட பிழையால், ஆலங்குடி என்பது வாலங்குடி என்று பதிவுசெய்யப்பட்டுள்ளது. வங்கனார் என்பர் பெரும்பாலும் மருதத்திணைப் பாடல்களைப் பாடியுள்ளதாகவும் கூறலாம். வங்கனார் என்ற பெயர் முறையினை, கடலில் சென்று வணிகம் புரிந்த குடியைச் சார்ந்தவர் என்பதையும் புலப்படுத்துகிறது. பின்வரும் கூற்றின் வாயிலாக இப்பெயராய்வுக்கான காரணங்களை உய்க்கலாம். அம்முறையே, "ஆலங்குடி என்ற பெயர் தாங்கிய ஊர்கள் பல நம் தமிழகத்தில் உண்டு; எனினும் தொன்மைச் சிறப்பமைந்தவை சோழ நாட்டில் இரண்டு உள்ளன; அவை தஞ்சை மாவட்டத்து மேலைப்பெரும் பள்ளத்துக் கல்வெட்டில் காணப்படும் ஆலங்குடியும், புதுக்கோட்டை நாட்டு ஆலங்குடியும் ஆகும். மேலைப் பெரும்பள்ளத்து ஆலங்குடி திருஞானசம்பந்தர் முதலியோர் காலத்தில் திருவிரும்பூளை என்று வழங்கி வந்திருக்கிறது. அதனால் அவர்கட்குப் பின்னர்த் தோன்றிய சோழர் காலத்தில் அது சுத்தமல்லி வளநாட்டு முடிச்சோணாட்டு ஆலங்குடியான சனநாத சதுர் வேதமங்கலம் (A.R.No.496 of 1920) ஆயிற்று. அதுவே இராமநாதபுர மாவட்டத்து இரணியூர்க் கல்வெட்டிலும் (Ibid.No. 6 OF 1926) குறிக்கப்படுகிறது; பிறிதொரு கல்வெட்டில் இந்த ஆலங்குடியே குலோத்துங்க சோழ வளநாட்டு வேளாநாட்டு ஆலங்குடி (Ibid.No.222 of 1925) யென்று கூறப்படுகிறது. மற்றைய ஆலங்குடியை இராசராச வளநாட்டுப் புன்றிற் கூற்றத்து ஆலங்குடி என அவ்வூர்க் கல்வெட்டுகள் குறிக்கின்றன. இவையிரண்டினுள்ளும் புன்றிற் கூற்றத்து ஆலங்குடியே ஆலங்குடியென்ற பெயரளவில் தொன்மையுடையதாகத் தெரிதலால், இதுவே நல்லிசைச் சான்றோரான வங்கனாருடைய ஆலங்குடியென்று கொள்ளற்கு இடம் தருகிறது" (மேலது; பக்.154-155). இக்கூற்று ஆலங்குடி பற்றிய தெளிவைப் புலப்படுத்துகிறது. ஆலங்குடி என்ற பெயரில் பல ஊர்ப்பெயர்கள் இருந்துள்ளன என்பதை இக்கூற்று உணர்த்துகிறது. இங்குக்

கூறப்படும் பல ஆலங்குடியில் புன்றிற் கூற்றத்து ஆலங்குடியே வங்கனார் என்ற இப்புலவர் வாழ்ந்த இடமெனக் கருதலாம். வங்காளக் கடல் என்ற பெயரின் திரிபாகவும் கொள்ளலாம். இதன் காரணமாகவே இக்குடியினர் கடல்வழி வாணிகம் செய்திருக்கலாம் என்று கணிப்பதும் பொருத்தமாகலாம்.

## அஞ்சில் ஆந்தையார்

அஞ்சில் என்பது மருவி அஞ்சூர் என அழைக்கப்படுவது முன்னரே ஆராயப்பட்டுள்ளது. சங்கப் பெயர்கள் சமகால நோக்கிலும் தொடர்புடையதாக இருப்பதற்குக் காரணம் அவ்வூர்களின் சிறப்புத் தன்மையைக் காட்டுவதாகின்றன. அஞ்சில் என்ற இயற்பெயர் மருவி, காலத்தால் அஞ்சூர் என்று நிலைத்திருக்கலாம். இத்தகைய பின்புலத்தின் வாயிலாகப் பின்வரும் கூற்றினை ஆராய்வோம். அம்முறையே, “அஞ்சில் என்பது ஓர் ஊர்; இந்த அஞ்சிலூர் இடைக்காலத்தில் அஞ்சூர் என மருவிவிட்டது; இதனைத் திருக்கழுக்குன்றத்துக் கல்வெட்டுகள், சயங்கொண்ட சோழமண்டலத்துச் செங்குன்றக் கோட்டத்துக் களத்தூர் நாட்டு அஞ்சூர் (A.R.No. 171 of 1933) என்று குறிக்கின்றன. பண்டை நாளைப் பொதும்பில் பொதும்பு எனவும், விளம்பில் விளம்பி எனவும், அழும்பில் அம்புக்கோவில் எனவும் மருவியது காண்போர்க்கு அஞ்சில் அஞ்சியென மருவி அஞ்சூராகியது வியப்பு நல்காது. ஆந்தையென்பது இவரது இயற்பெயர். அஞ்சில் என்பதற்கு மாறாக அம்பில் என்றும் ஓர் ஏட்டில் காணப்படுகிறது. அஞ்சிலத்தியார் என்றும் ஒரு பாடவேறுபாடு புதுப்பட்டியேட்டில் காணப்படுகிறது” (மேலது; ப.167). இக்கூற்று அஞ்சில் ஆந்தையார் பற்றிய தெளிவினை முன்வைக்கிறது. அஞ்சில் என்பது அஞ்சிலூர் என்று இடைக்காலத்தில் மாறி, சமகாலத்தில் அஞ்சூர் என வழங்குவதாயிற்று. இப்புலவர் பாடிய பாடல் குறுந்தொகையில் ஒரு பாட்டு மட்டும் உள்ளதாக ஔவை சு.துரைசாமிப்பிள்ளை கூறுகிறார். அஞ்சில் என்பது பற்றி முன்னரே ஆராயப்பட்டுள்ளதும் கவனத்திற்குரியதாகும்.

‘இல்’ என்ற பெயரைக் கொண்ட ஊர்கள் பட்டியலில் அஞ்சில் என்பதையும் இணைத்து நோக்கலாம். இத்தகைய பெயர்களுக்கான காரணங்களாக ரா.பி. சேதுப்பிள்ளை கூறும் கருத்தினை இங்கு முன்வைப்போம். அம்முறையே, “இல் என்னும் பெயருடைய சில ஊர்கள், பண்டைப் புலவர்கள் பெயரோடு இணைத்துச் சங்க இலக்கியங்களில் பேசப்படுகின்றன. அரிசில் என்னும் ஊரிற் பிறந்த புலவர் அரிசில் கிழார் என்றும், அஞ்சில் என்னும் ஊரிலே தோன்றியவர் அஞ்சில் ஆந்தையார் என்றும், பொருந்தில் என்ற ஊரைச் சார்ந்தவர் பொருந்தில் இளங்கீரனார் என்றும், கள்ளில் என்ற

ஊரிற் பிறந்தவர் கள்ளில் ஆத்திரைய ரென்றும் பழைய நூல்களிற் குறிக்கப்படுகின்றனர்” (இரா.பி. சேதுப்பிள்ளை; 2009; ப.47). இக்கூற்று ‘இல்’ பெயர் ஊர்களின் பட்டியலுடன் அஞ்சில் பற்றிய தெளிவையும் ஏற்படுத்தியது. ‘இல்’ என்ற பொருண்மைகளில் கோயிலும் ஊர்ப் பெயரும் அமையும் வழக்கினையும் இக்கூற்று புலப்படுத்துகிறது.

## காமக்காணி நப்பசலையார்

நப்பூதன் என்பது போல நப்பசலையார் என்று குறிக்கப்பட்டிருக்கலாம். ‘காணி’ நிலம் வழங்குதலையோ அல்லது பெறுபவர்களையோ இவ்வாறு அடையாளப்படுத்தியிருக்கலாம். கூத்தர்களுக்கு கூத்தாட்டுக்காணி என்றும் தச்சர்களுக்குத் தச்சக்காணி என்றும், அரசன் விரும்பி அளிக்கும் நிலமேயாகும். எனவே ‘காணி’ என்பது பொருந்துவதாக உள்ளது. இதில் முன்னொட்டாக வரும் ‘காமக்’ என்ற சொல்லாட்சி ஆராய்தலுக்குரியதாகும். இப்புரிதல்களைப் பின்வரும் கூற்றின் வழியே அறியலாம். அம்முறையே, “காமக்காணி என்ற இச்சிறப்புப் பெயர் சங்கக் காலத்தேயன்றி இடைக்காலச் சோழ-பாண்டியர் அரசிலும், பிற்காலத்தும் வழக்கில் இருந்துள்ளது. இச்சிறப்பு பெற்றோர் வழிவழியாகத் தம்மைக் காமக்கணி என்று கூறுவது கல்வெட்டுகளாலும் செப்பேடுகளாலும் நன்கு விளங்குகிறது. திருக்கண்டியூர்க் கல்வெட்டு ஒன்று, காமக்காணி சலாகன் திருமழுவாடி (S.I.I.Vol.V.No.572) என ஒருவனையும், திருநாகேச்சுரம் கல்வெட்டு ஒன்று, காமக்காணி வடுகன் நாராயணன், காமக்காணி மாறன் விஷ்ணு, காமக்காணி மாதேவடிகள், காமக்காணி இளையசீராமன் வடுகன் (Ibid.Vol.VI.No.33) என்பாரையும், வேள்விக்குடிச் செப்பேடு (EP.Indi.Vol.XVII.No.16) கொற்கைக் கிழான் காமக்கோணி நற்சிங்கன் (Ibid.No.660) என்பானையும் குறிப்பது காண்க. ஏடு எழுதினோர் காமக்காணி என்பதைக் காமக்கணி எனப் பிழையாக எழுதிவிட, அதனைத் திருத்திக்கொள்ளாது காமக்கணி என்றது காமக்கண்ணி என்பதன் விகாரமாகக் கருதி, அது காமாட்சி என்ற வடசொல்லின் மொழிபெயர்ப்பு எனப் பொய் கூறிவிட்டனர்” (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2011; ப.207). இக்கூற்று காமக்கண்ணி, காமக்கணி என்பதன் தவறினை வெளிப்படுத்தி ‘காமக்காணி’ என்பதே சரியானது என்பதைக் கல்வெட்டுத் தரவுகளின்வழித் தெளிவுபடுத்துகிறார். இருப்பினும் இவ்வழி மரபினர் இருந்துள்ளனர் என்பதும் பொருந்துவதாகத் தெரியவில்லை. ‘காமக்’ என்பதற்கு எத்தகைய விளக்கமும் கொடுக்கப்படவில்லை. எனவே, இப்பொருள் புரிதல் சற்று தோய்வை ஏற்படுத்துகிறது. இச்சொல்லாட்சிக்கு வேறு ஒரு இடத்தில் காம – வேதியர்கள் என்று

சொல்லப்படுவதையும் இணைத்துப் பார்க்க நேர்கிறது. எனவே, ‘காமக்’ என்ற சொல்லாட்சி மேலாய்வுக்குரியதாகும்.

## காப்பியஞ் சேந்தனார்

காப்பியக்குடி என்பது தமிழ் வரலாற்றுப் புலத்தில் பரக்கக் காணக் கிடப்பதை அறியலாம். காப்பிய மரபினர் தமிழ் இலக்கியங்களில் பலர் இருப்பதையும் புரிந்துகொள்ள முடிகிறது. மேலும், இக்குடிப் பெயர்களிலே ஊர்ப்பெயர்களும் அடையாளப்படுத்தப்படுவதை அறிய நேரிடுகிறது. இத்தகைய பின்புலத்தில் பின்வரும் கூற்றினை ஆராயலாம். அம்முறையே, “காப்பியன் என்பார்க்கு மகனாதலின், இச்சான்றோர் காப்பியஞ் சேந்தனார் எனப்படுகின்றார். காப்பியன் என்ற பேருடையார் சங்க காலத்தும் இடைக்காலச் சோழ, பாண்டியர் காலத்தும் இருந்துள்ளனர். காப்பியாற்றுக் காப்பியனார் எனச் சங்கச் சான்றோரும், திருபழபாடிக் கல்வெட்டொன்றில் (S.I.I.Vol.V.No.660) காப்பியன் ஆதித்தன் கண்டத்தடிகள் என்பாரும் காணப்படுகின்றனர்” (மேலது; ப.220). இக்கூற்று காப்பியன் என்ற குடிமரபைப் பற்றிய வரலாற்றுப் புரிதலை ஏற்படுத்துகிறது. காப்பியன் குடி மரபின் அடிப்படையிலேயே தொல்காப்பியம், பல்காப்பியம், காப்பியம் குடி என்ற மரபின் அடிப்படையிலேயே தொல்காப்பியன், பல்காப்பியன், காப்பியனார் என்ற பெயர்களையும் இணைத்து நோக்குதல் அவசியமாகின்றன. மேலும், இப்பெயர் முறையுடன் ஊர்ப்பெயர்களின் தொடர்ச்சிகளையும் அறியமுடிகின்றன. காப்பியாறு, காப்பியங்குடி, காப்பியனூர் என்ற ஊர்ப்பெயர்களையும் காப்பிய மரபுடன் புரிந்துகொள்வது அவசியமாகிறது.

## காப்பன் கீரனார்

காப்பன் குடியும் காப்பியன் குடியும் உறவாகவும் இருக்கலாம் அல்லது அச்சுப்பிழைகளால் ஏற்பட்ட தவறாகவும் இருக்கலாம். காப்பன் என்ற பெயரைக் காத்தன், காத்தாயி என்ற சமகால நோக்கிலான பெயர்களுடன் பொருத்திப் பார்க்க நேர்கிறது. காப்பன் மரபினைக் காத்தல், காப்பு, பாதுகாப்பு என்ற காவல் புரியும் மரபினரின் வழித்தோன்றல் என்பதும் பொருந்தும் எனலாம். இத்தகைய பெயர் முறையினைப் பின்வரும் கூற்றின் வழியே ஆராய்வோம். அம்முறையே, “காப்பன் என்பது கீரனாருடைய தந்தையின் பெயர். இப்பெயருடையார் பலர் முன்னாளில் இருந்துள்ளனர். முதல் இராசராசன் காலத்துக் கல்வெட்டுகளில் காப்பனான இலக்குமணதாசன் (Nell. Ins.Gud.No.30) என்பானும், இவ்வாறே பிற கல்வெட்டுக்களில் காப்பன் குமரன், காப்பன் தேவன் என்பாரும் காணப்படுகின்றனர். உணவைக் காப்பு என்றும், ஊர்க் காவலரைக் காப்பு என்றும் தொண்டை நாட்டவரும் அந்நாட்டுக்

கல்வெட்டுகளும் (Ibid.Atm.No.25) வழங்குவதாலும், சங்க நூல்கள் "காப்பாள்", "காப்பான்" எனக் குறித்தலாலும், காப்பன் என்பது பண்டைய மக்கட் பெயர்களுள் ஒன்றாதல் துணியப்படும்" (மேலது; பக்.228-229). இக்கூற்று காப்பன் பெயர் பற்றிய வரலாற்றுத் தொடர்ச்சியினைப் புலப்படுத்துகிறது. காப்பன் குமரன், காப்பன் தேவன் என்ற பெயர்களை நோக்கும் பொழுது காப்பன் என்பதைப் பொதுப்பெயராகக் கொள்ள இடமளிக்கிறது. மேலும், காப்பன் என்ற பெயர் மரபு இருபாலருக்கும் பொருந்துவதாகவும் அமைகிறது. காப்பன் என்ற பெயர் மரபைக் 'காத்தல்' என்ற தொழில் முறையிலாகப் புரிந்துகொள்வது சாலச் சிறந்ததாகும்.

## வண்ணக்கன்சேரிக் குமரங் குமரனார்

இப்பெயரை மூன்று பொருண்மைகளில் பிரித்துப் பொருள்புரிந்துக் கொள்ளலாம். 'வண்ணக்கன்' என்ற பெயரில் பல ஊர்கள் இருப்பதை அறிய முடிகிறது. சங்க இலக்கியங்களில் வருகின்ற பெயர்கள் மட்டும் அதிகமாகக் காணப்படுவதுடன், அப்பெயரின் திரிபுகளையும் பல பெயர்கள் உருவாகிப் புழங்கி வருவதையும் அவதானிக்க முடிகின்றன. வண்ணக்கன், சேரி, குமரனார் என்ற மூன்றினையும் பின்வரும் கூற்றுகள் எவ்வாறு விளக்க முற்படுகின்றன என்பதை நோக்கலாம். அம்முறையே, "வண்ணக்கன் என்பது பொன்னின் ஓட்டம் காண்பானுக்குப் பெயர்; பின்னர் அது பலர்க்குச் சிறப்புப் பெயராகவும் அமைந்து வழங்குவதாயிற்று. வண்ணக்கன் பேரி சாத்தனார் என்றொரு சான்றோரும் இத்தொகை நூலுள் காணப்படுகின்றார். வண்ணக்கர் பெயரால், சேரி, குடி, அம்பலம் என்பன பெயர் தாங்கியிருந்ததற்குச் சோழ, பாண்டியர் காலத்துக் கல்வெட்டுகளும் சான்று பகர்கின்றன. முதற்குலோத்துங்கன் கல்வெட்டொன்றில் (A.R.No.272 of 1907) வண்ணக்கன் குடியான தியாகச் சமுத்திரச் சதுர்வேதி மங்கலம் என்றோர் ஊர் காணப்படுகிறது; வேறொரு கல்வெட்டில் (Ibid.No.273 of 1907) அதுவே, "உய்யக் கொண்டார் வளநாட்டுத் திரைமூர் நாட்டுப் பிரமதேயம் வண்ணக்குடியான தியாகச் சமுத்திரச் சதுர்வேதி மங்கலம்" என்று காணப்படுகிறது; ஆயினும் வண்ணக்கன் குடியென்பது வண்ணக்குடி எனப் பிழைக்கப்படுவது இயல்பு. தஞ்சை மாவட்டத்துத் திருநாவலூர் மயானத்துக் கல்வெட்டு ஒன்று (Ibid.No. 308 of 1910). "சேற்றூர்க் கூற்றத்துப் பிரமதேயமான நாவலூர் மகாசபையார் வண்ணக்கனார் அம்பலத்துக் கூடியிருந்து" என்று குறிக்கிறது" (மேலது; ப.271). இக்கூற்று வண்ணக்கன் என்ற ஊர்ப் பெயர்த் தெளிவை ஏற்படுத்துகிறது. வண்ணக்கன் என்ற பெயர் பல பின் சேர்ப்புகளைத் தாங்கி நிற்பதையும் கவனிக்க முடிகிறது. வண்ணக்கன் சேரி, வண்ணக்கன் குடி, வண்ணக்கன் அம்பலம், வண்ணக்கன் பாடி, வண்ணக்கன் குளம் எனப் பல பெயர்களைத் தாங்கி வருவதை அறியலாம். சில

அச்சுப்பிரதிகளில் ‘வண்ணக்குடி’ என்று பிழைப்பட உள்ளதைப் பகுத்தறியவே இங்குக் கல்வெட்டுத் தரவுகள் துணைபுரிந்துள்ளதைப் புரிந்துகொள்ளலாம். கல்வெட்டுச் சான்றுகள் வழி வண்ணக்குடி என்பது பிழையானது. அது வண்ணக்கன் குடி என்பதே சரியானது என்ற தெளிவை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை காட்டுகிறது.

## சடங்கு – நம்பிக்கை – மரபு

நமது முன்னோர்களின் வாழ்வு நம்பிக்கை சார்ந்த சடங்குகள் நிறைந்த வாழ்வாகவே காண முடிகிறது. ஒவ்வொரு சடங்கிற்கும் ஒவ்வொரு நம்பிக்கை வைத்திருந்தனர் பண்டையோர். ஆகவே, நமக்கான வாழ்வியல் மரபுகளை இன்றுவரை அதன்நீட்சியாகவே காணமுடிகிறது. உணவு உண்ணும் முன்பு காக்கைக்கு உணவிடல் தொடக்க காலங்களில் வழக்கம். அதுவே பின்பு பழக்கமாகித் தமிழர் மரபாகவும் விளங்கி வருவதைக் காணலாம். இத்தகைய பழக்க வழக்கத்தின் வழியான சடங்கு, நம்பிக்கை சார்ந்த மரபுகளைப் பின்வரும் கூற்றின் வாயிலாக ஆராயலாம். அம்முறையே, “இனஞ்சூழ இருந்துண்ணும் இயல்பு பற்றி விருந்தோம்பும் விரும்பினராயப் பண்டைத் தமிழர் நாளும் காக்கையை வருவித்து உணவிட்டோம்புவது மரபாகக் கொண்டனர். பின்னர் வருவிக்கும் விருந்தைக் காக்கை முற்படப்போந்து கரைந்து காட்டும் என்பது ஒன்று. “விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே” எனப் பிறரும் கூறுவது காண்க. திருவள்ளுவனாரும் “காக்கை கரவா கரைந்துண்ணும்” என்பர். திருச்செங்காட்டங்குடியிற் காணப்படும் கல்வெட்டுகளுள் ஒன்று மருங்கூர் ஒன்றைக் குறிப்பிட்டு “மருங்கூரான இராசநாராயணச் சதுர்வேதி மங்கலம்” (A.R.No.63 of 1913) என்று உணர்த்துகிறது” (மேலது; ப.278). இக்கூற்று முன்னோர்களின் விருந்தோம்பல் மரபினை விளக்குகிறது. காக்கைக்கு உணவிடுதல் தொடக்கத்தில் எதனால் ஆரம்பித்தது என்பதை அறிய முடியவில்லை. பாதுகாப்பு அற்ற பழங்குடிகளாக வாழ்ந்த மக்கள் சமைத்த உணவில் ஏதேனும் தெரியாமல் விசத்தன்மைகள் கலந்திருக்கும் என்பதை அறியக் காக்கைக்கு உணவிட்டிருக்கலாம். ஆனால், இப்பழக்கம் வழக்கமாக மாறி இன்றைய தமிழ் மரபின் பிரிக்க முடியாத செயலாக அறிய முடிகிறது. இத்தகைய செயல்பாடுகளே சடங்கு, நம்பிக்கையோடு சமூகத்தில் தொடர்வதை அறியலாம்.

## ஆவூர் பெயராய்வு

ஆவூர் என்ற ஊர்ப் பெயர் புலவர்களுக்கும் ஆகிவருவதைச் சங்க இலக்கியத் தொகை நூல்களில் நெடுகக் காணலாம். ஆவூர் கிழாரும் இப்புலவரும் ஒரே ஊரைச் சார்ந்தவராக இருக்கலாம். இப்புலவர்கள் ‘ஆவூர்’ என்ற ஊர்ப் பெயராலே அடையாளப்படுத்துவதால் இப்பெயரை இவ்வாறு விளங்கிக் கொள்ள இடம் தருகிறது.

புலவர் பெயராலே காவிதி என்ற பட்டமும் அடங்கியுள்ளதை வைத்து இவரின் சிறப்பினைப் புரிந்துகொள்ளலாம். இச்சிறப்பு பொருந்திய பெயரைப் பின்வரும் கூற்றின் வாயிலாக ஆராயலாம். அம்முறையே, "ஆவூர் எனப் பெயரிய ஊர்கள் தொண்டை நாட்டிலும் சோழ நாட்டிலும் உண்டு. இடைக்காலச் சோழ, பாண்டியர் காலம் வரையில் சோழநாட்டு ஆவூர், ஆவூர்க் கூற்றத்து ஆவூர் என்று விளங்கியிருந்தது; அது பிற்காலத்தே பசுபதி கோயில் என்ற பெயரை மேற்கொண்டமையின், ஆவூர் என்ற பழம்பெயர் மறைந்தொழிந்தது. அதனை அவ்வூர்க் கல்வெட்டுகள் நித்தவிநோத வளநாட்டு ஆவூர்க் கூற்றத்து ஆவூர் (A.R.No. 81 of 1911) என்று குறிக்கின்றன. பழந்தமிழ் அரசில் செல்வர்களில் நற்பணியால் உயர்ந்தோர்க்கு எட்டி, ஏனாதி, காவிதி முதலிய சிறப்புப் பட்டங்கள் வழங்கினர். பட்டம் வழங்கும் மரபு இன்று நிலவும் மக்களாட்சியிலே உளதென்றால் வேறு கூறுவது மிகை. ஆவூர்ச் சான்றோரான மாதேவனார் காவிதிப் பட்டம் பெற்றவராதல் பற்றி ஆவூர்க் காவிதி மாதேவனார் எனக் குறிக்கப்படுவாராயினர். காவிதி கணிமா தேவனார் எனக் காணப்படும் பாடத்தைக் காவிதிக்காணி மாதேவனார் என்று கொள்வதாயின், காமக்காணி நப்பசலையார் என்றாற் போல இவர் காவிதிக்காணி பெற்ற சான்றோர் என்பதாம். காவிதிக்காணியுடைமை இடைக்காலத்தும் இருந்தமை கல்வெட்டுகளால் (A.R.No. 229 of 1927) அறியக்கிடக்கின்றன. இவர் பாடியதாக இவ்வொரு பாட்டுத்தான் காணப்படுகிறது" (மேலது; ப.300). இக்கூற்று ஆவூர்க்காவிதி பெயர் பற்றியான வரலாற்றுத் தெளிவைப் புலப்படுத்துகின்றது. காவிதி என்ற பட்டம் புலவர்களுக்கு வழங்குவது பற்றி இந்த ஆய்வில் முன்னரே ஆராய்ந்துள்ளோம். ஆனால், ஒரு புலவனின் பெயராகக் காவிதி நிற்பதே அப்புலவரின் தனிச்சிறப்பை வெளிப்படுத்துவதாகும். ஆவூர் என்பது பசுபதி என்று மாறியதால் ஆவூர் என்ற பெயர் மறைந்துள்ளதை அறிகின்றோம். எனவே, இப்பெயரை மீட்டுருவாக்கம் செய்து கண்டறிய கல்வெட்டுத் தரவுகள் தக்க சான்று பகர்கின்றன.

## இளந்தச்சனார் – தச்சக்காணி

சங்க காலச் சமூகத்தில் சாதி இருந்ததா இல்லையா என்ற வினா, வினாவாகவே நிற்கிறது. இதற்கான விடைகள் என்பது வேறுபாடு உடையதாகவே தென்படுகின்றன. ஏன், சிலர் சாதி என்ற பெயர் இல்லையே தவிர அதற்கான படிநிலை இருந்துள்ளதை அவதானிக்கலாம் என்கின்றனர். சங்க இலக்கியங்களைத் தூக்கி பிடிக்கும் சிலர் இத்தகைய சாதிய வேறுபாடுகளே இல்லை என்று கருதுவோரையும் காணமுடிகின்றது. இத்தகைய இளந்தச்சனார், தச்சக்காணி என்ற பெயர்களை எவ்வாறு விளங்கிக்கொள்வது என்பதைப் பின்வரும் கூற்றின் வழியே ஆராய்வோம்.

அம்முறையே, "மட்பாண்டம் செய்பவர் வேட்கோவர்; அத்தொழிலில் மேன்மை பெறுவபவர் குயவர் என்ற சிறப்பைப் பெற்றனர். "சாதகனென்னும் குலாலற் கேற்பப் பெருங்குயம் அருளி" எனக் கொங்குவேளிர் கூறுவது காண்க. அம்முறையே தச்சுத் தொழில் செய்வோர்க்குத் தச்சன் என்ற சிறப்பளித்தனர். அச்சிறப்பு பெற்றோர்க்கு இடைக்காலத் தமிழ் வேந்தர் தச்சக்காணி என நிலம் தந்தமை கல்வெட்டுகளால் (S.I.I.Vol.v.No.990) அறியமுடிகிறது. அதனால் இப்பாட்டைப் பாடிய சான்றோர் தச்சனார் என்ற சிறப்பு பெற்றவர் என்பது பெறப்படும்" (மேலது; ப.310). இக்கூற்று தச்சனார் பற்றியான சமூகத் தெளிவை அடைய பெரும் வாய்ப்பாக அமைகிறது.

தச்சன் என்பவன் தச்சுத் தொழில் செய்பவன் என்றாலும், அத்தொழிலை மையமிட்ட தச்சர் என்ற சாதிய அடையாளமாகவே இனம் காண நேர்கிறது. குயவர் என்பதையும் இப்புரிதல்களுடன் புரிந்துகொள்ளல் அவசியமாகிறது. 'தச்சக்காணி' என்பதைத் தச்சர்களும் காணி நிலம் பெற்றிருந்ததை உணர்த்துகிறது. தொழில் பெயர்களால் இளந்தச்சனார் என்றும், பெருந்தச்சனர் என்றும் தொழில் அடிப்படையில் தொடக்க காலங்களில் அழைக்கப்பட்டிருக்கலாம். பிறகு இயற்பெயரான இளம், பெரு என்ற வழக்குகள் மறைந்து குயவர், தச்சர் என சாதிய அடையாளங்களாக மாறியிருக்கலாம் என்ற கருத்தை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை முன்வைக்கிறார். கச்சிப்பேடு என்பதும் தச்சத் தொழில் சிறப்பின் அடையாளம் எனலாம். தொழில் அடையாளங்களே பிற்காலச் சமூகத்தின் சாதிகளாக நிலைத்தன என்ற கருத்தாக்கம் பொருந்துவதாகக் கருத இடமுண்டாகிறது.

## முக்கில் – ஊர் பெயராய்வு

முக்கில் என்ற ஊர் சங்க காலத்தில் சிறப்புற்று விளங்கியுள்ளதை அறிய முடிகிறது. அச்சுப்படிகள் முக்கல் என்றும் பிழைப்படக் குறித்துள்ளதை அறிந்து, கல்வெட்டுகள் சிலவற்றை ஆய்ந்து முக்கில் என்பதே சரியானது என்று முடிவு செய்துள்ளதை அறியமுடிகிறது. 'ஆசான்' என்னும் வார்த்தை சங்க காலத்தில் அந்தணரைக் குறித்துள்ளதாக, பி.அ. நாராயணசாமி ஐயர் கூறுவதை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை மறுத்துள்ளார். இத்தகைய பின்னணியில் பின்வரும் கூற்றினை ஆராய்வோம். அம்முறையே, "முக்கில் என்பது தொண்டை நாட்டுப் பழமையான ஊர்களில் ஒன்று; இப்போது தென்னார்க்காடு மாவட்டத்துத் திண்டிவனம் வட்டத்தில் பெருமுக்கல் என்ற பெயருடன் இருக்கிறது. கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டிலேயே இவ்வூர் பெருமுக்கில் சிறுமுக்கில் என இரண்டு ஊர்களாகப் பிரிந்துள்ளது. கோவிராச கேசரி வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்தி இராசாதிராச தேவர் காலத்தில் இப்பெருமுக்கில் கங்கை

கொண்ட சோழனல்லூர் (A.R.No. 39 of 1905) என்ற பெயரையும், எதிரிலி சோழனல்லூர் (A.R.No. 46 of 1905) என்ற பெயரையும் பெற்றிருந்தது; பின்னர், எதிரிலி சோழனல்லூர் சிறு முக்கில் என வழங்குவதாயிற்று. முதற் குலோத்துங்க சோழன் முதலிய பெருவேந்தர் காலத்தே இந்த முக்கில் சிறந்து புகழ்பெற்று விளங்கியுள்ளது" (மேலது; ப.335). இக்கூற்று முக்கில் பற்றியான புரிதலை ஏற்படுத்துகிறது. முக்கில் என்பதைப் பொதுப்பெயராகக் கொள்ளலாம். இதில் பெருமுக்கில், சிறுமுக்கில் என்ற இரு பிரிவுகளைக் காண நேர்கிறது. கல்வெட்டுத் தரவுகள் என்பவை அச்சுப்படி பிழைகளைக் களைவதுடன் சரியான வரலாற்று பெயர்த் தெளிவையும் புலப்படுத்தக்கூடியதாகும்.

## தடவூர் – தண்டலம் – பெயராய்வு

தடவூர் என்ற ஊர்ப்பெயர் பிற்காலச் சூழலில் தண்டலம் என மாறியதாகக் கொள்ளலாம். இவ்வூர் திருக்கோவலூரைச் சார்ந்த பகுதியென வரையறை செய்யலாம். இப்பொழுது சேலம் மாவட்ட ஆற்றூர் பகுதிகளே இப்பெயரைத்தாங்கி இருப்பதை அறியமுடிகிறது. இப்பின்புலத்தின் அடிப்படையில் தடவூர் பற்றிப் பின்வரும் கூற்றினைக் கவனிக்கலாம். அம்முறையே, "ஆற்றூர்ப் பகுதியில் உள்ள தடவூரில் இருக்கும் கோயில் கல்வெட்டு, அப்பகுதியின் பழம்பெயரையும் இடைக்காலத்துத் தோன்றிய புதுப்பெயரையும் கூட்டி மலாடான சனநாத வளநாட்டு ஆற்றூர்க் கூற்றத்து மேல் கங்கபாடி நாட்டுத் தடவூர் (A.R.No.461 of 1913) என்று கூறுகிறது. இதனால் சங்ககாலப் பெயர் வழக்கு இக்கல்வெட்டுக் காலத்தும் மறையாமை விளங்கும். ஊரும் நாடும் போலவே மக்கட் பெயரும் அந்நாளில் சங்ககால வழக்கை முற்றிலும் கைவிட்டு விடவில்லை என்பது தோன்றும். அத்தடவூர்க் கோயிலுக்கு நிருமாலியத் தொட்டி யொன்றை நிறுவினான் ஒரு வணிகன்; அவன் பெயர், வணிகன் காவன் கூத்தாண்டான் (A.R.No. 464 of 1913) என்பது. இவ்வாறே செங்கற்பட்டு மாவட்டத்தில் காவன் என்ற செல்வன் ஒருவன் தண்டலம் என்னும் ஊர்க்கு உரியனானது பற்றி அவ்வூர் காவன் தண்டலமென்ற பெயர் பெற்றது. அவ்வூர் சோழிச்சுரத்தில் முதற் குலோத்துங்கன், விக்கிரமச் சோழன் முதலியோருடைய கல்வெட்டுகள் உண்டு. இது போலவே அப்பகுதியில் காவனூர் எனப் பெயரிய ஊரும் உண்டு. இவற்றால் காவன் என்பது மக்கட் பெயர்களுள் ஒன்று என்பது தெளிவாகிறது" (மேலது; பக்.344-345). இக்கூற்று காவன் தடவூர் இன்றைய தண்டலம் என மாறியதன் வரலாற்றுப் பின்புலத்தைப் புலப்படுத்துகின்றன. காவனூர் என்பதும் தற்காலத்தில் புழக்கத்தில் புழங்கி வருவதையும் அவதானிக்கலாம். தண்டலம் என்ற ஊர்ப் பெயரும் சமகாலம் வரையிலும் தொடர்வதை அறியமுடிகின்றது. எனவே, இத்தகைய ஊர்ப் பெயர் மாற்றங்களின் நீட்சிகளைக் கல்வெட்டுத் தரவுகளுடன் புரிந்துகொள்வது தக்க சான்றாகும்.

தண்டலம் சமகாலத்தில் மேலும் விரிந்து, இப்பெயர் பொருண்மையிலே நீண்டு வழங்கி வருவதை அறியலாம். இவ்வூர் பற்றியான மேலும் தெளிவை எட்ட ரா.பி. சேதுப்பிள்ளையின் கூற்றினை முன்னெடுப்போம். அம்முறையே, “சோலையைக் குறிக்கும் மற்றொரு தமிழ்ச்சொல் தண்டலை என்பதாகும். அது தண்டரை எனவும், தண்டலம் எனவும் வழங்கும். திருச்சிராப்பள்ளியைச் சார்ந்த குழித்தலை என்னும் ஊர் குழித்தண்டலை என்று முன்னாளில் வழங்கிற்று. காவிரிக் கரையில், பள்ளத்தாக்கான ஓர் இடத்தில், செழுஞ் சோலைகளின் இடையே எழுந்த ஊரைக் குழித்தண்டலை என்று அழைத்தனர் பண்டைத் தமிழர். இன்னும் தொண்டைநாட்டில் பூந்தண்டலம், பழந்தண்டலம், பெருந்தண்டலம் முதலிய ஊர்கள் காணப்படுகின்றன. இவையெல்லாம் சோலை சூழ்ந்த ஊர்களாக முற்காலத்தில் இருந்திருத்தல் வேண்டும்” (இரா.பி.சேதுப்பிள்ளை; 2009; பக்.14-15). இக்கூற்று தண்டலம் என்ற பெயர்க்காரணத்தைப் புலப்படுத்துகின்றது. தடவூர் என்ற தண்டலம் சமகாலத்தில் பல பெயர்களாக விரிந்து சமூகத்தில் புழங்கி வருவதை அறியமுடிகிறது. இத்தகைய ஊர்கள் சோலையை மையமிட்டதாக விளங்கும் என்பதையும் மேற்கண்ட உரைகள் நமக்கு உணர்த்துகின்றன.

## தும்பைச் சொகின்னார்

தும்பைச் சொகின்னார் என்பதை இரு பொருண்மைகளில் ஆராய முடியும். அச்சுப்படி பிழையால் இவ்வூர்ப் பெயர் பெரும் மாற்றங்களைத் தாங்கி வருவதைக் கவனிக்கலாம். தும்பையூர் என்பது தும்பியூர் என்று பிழைபட அச்சுப்படி கூறிவந்ததை மற்ற கல்வெட்டுத் தரவுகளின் வழி உண்மைப் பெயரை அறிய முயன்றுள்ளதை அறியலாம். இத்தகைய நோக்கில் பின்வரும் கூற்றினை ஆராய்வோம். அம்முறையே, “சொகினன் என்பது கணியன் என்றாற் போல நிமித்தம் கூறுபவன் என்னும் பொருளது. ஈண்டு, இஃது இவர்க்கு இயற்பெயர் போல நிற்கிறது. திருவேங்கடத் திருப்பதி கணிமையில் பொன் முகலியாற்றின்” வடகரையில் இப்போது திருச்சானூர் என விளங்கும் ஊரின் பழம்பெயர் திருச்சொகினூர் (சொகினனூர்) எனக் கல்வெட்டுகளில் (A.R.425 of 1924) காணப்படுவது. சொகினன் என்பது இயற்பெயரென்று துணிதற்குச் சான்று காட்டுகிறது. தும்பையூரும் அத்திருப்பதிக்கு அணிமையிலிருக்கும் ஊர் என்பதைத் தும்பையூர்க் கொண்டி யென்பவள் வரலாற்றால் காணலாம். (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2011; ப.355). இக்கூற்று தும்பையூர் சொகினன் பற்றிய தெளிவைப் புலப்படுத்துகின்றன. சொகினர் என்பதைக் கணியன் என்பதைச் சோசியம் கூறும் சமகாலத் தொழிலின் அடையாளமாகக் கருதலாம். சொகினன், கணி

கூறுபவர்கள், சொசியம் பார்க்கும், இத்தொழிலைச் செய்பவர்களாக இப்புலவர்களைக் காண்பதாக இக்கூற்றைப் புரிந்துகொள்ள முடிகிறது. திருப்பதிக்கு அருகில் உள்ள திருச்சொகினூர் இப்பொழுதும் புழக்கத்தில் இருப்பதைக் கொண்டு அறியலாம்.

## கழார்க் கீரன் எயிற்றியார்

கீரன் என்ற பெயர் நக்கீரன் பரம்பரையைச் சேர்ந்தவராக இருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது. எயிற்றியார் என்ற பெயரைப் பாலை நிலத்தின் அடையாளமாகக் கருதலாம். கழார் என்பதை இப்புலவரின் ஊராகவும் கொள்ளலாம். கழார் என்ற ஊர்ப்பெயர் சங்க காலத்தில் இருந்ததாகவும், பிற்காலத்தில் அவ்வூர்ப் பெயர் மறைந்ததாகவும் கூறப்படுகின்றன. கழார் என்ற பெயர் சிதைந்து களார் என்றே கல்வெட்டுகள் கூறுவதாக ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தன் கருத்தை முன்வைக்கிறார். பின்வரும் கூற்றின் வாயிலாகக் கழார், களார் பற்றிய தெளிவை எட்ட முற்படலாம். அம்முறையே "உலகுடை முக்கோ கிழானடி வளநாட்டுக் களார்க் கூற்றம்" (A.R. 243 of 1929 – 30) எனவும், "வடகரை இராஜராஜ வடநாட்டுக் களார்க் கூற்றம் (A.R. 245 of 1929 – 30) எனவும், "இராசாசிரய வளநாட்டுக் கழார்க் கூற்றம்" (A.R. 246 of 1929 – 30) எனவும், "வடகரை மழநாட்டுக் களார்க் கூற்றம்" (A.R.257 of 1929 - 30) எனவும், "திரிபுவன முழுதுடை வளநாட்டுக் களார்க் கூற்றம்" (A.R.251 of 1929 - 30) எனவும் குறித்துள்ளன. (மேலது, ப.370). இக்கூற்று, கழார், களார் என்ற பெயர்கள் இரண்டினையும் இக்கல்வெட்டுகள் குறித்துள்ளதை அவதானிக்கலாம். ஆனால், இவ்விரு பெயர்களில் எது சரியானது என்ற தீர்வை எட்ட சற்று தடுமாற்றம் ஏற்படுகிறது. அல்லது, இப்பெயர் இரண்டு ஊர்ப் பெயர்களைக் குறிக்கின்றதா என்பதும் புலப்படவில்லை. எனவே, இவ்விரு பெயர்களின் தெளிவை எட்ட இன்னும் ஆராய்தல் அவசியம்.

## தண்கால் – திருத்தங்கால் : ஊர்ப்பெயராய்வு

தண்கால் என்ற பெயர் சங்கப் பனுவல்களில் பயின்று வருவதை அறிய முடிகின்றது. தண்கால் என்ற பெயர் பிற்காலங்களில் என்னவாக மாறியுள்ளது என்பதை அறிய பின்வரும் கூற்றினை ஆராய்வோம். அம்முறையே "தண்கால், இப்பொழுது திருத்தங்கால் என வழங்குகிறது. இவ்வூர்க் கல்வெட்டுகள், "இராசராசப் பாண்டி வளநாட்டு மதுராந்தக வளநாட்டுக் கருநீலக்குடி நாட்டுத் திருத்தங்கால் (A.R. NO : 564 of 1922) என்று கூறுகின்றன". (மேலது; ப.385). இக்கூற்று சமகாலத் திருத்தங்காலே சங்ககாலத் தண்கால் என்பதை உணர்த்துகின்றன. திருத்தங்கால் என்பதைத் தற்காலப் புழக்கத்தில் உள்ள திருத்தங்கால் என்பதுடன் இணைத்துப் பார்த்தல் அவசியமாகிறது.

மேலும், திருத்தங்கால் என்பதை ஒரு குறிப்பிட்ட சாதியினரின் அடையாளமாகக் கொள்ளவும் முடிகின்றது.

தண்கால் என்பது தாங்கல் என்றும் மருவி இருக்கலாம். தாங்கல் பற்றி இரா.பி.சேதுப்பிள்ளை தரும் கருத்தினை எண்ணிப் பார்க்கலாம். அம்முறையே "சிற்றேரியைக் குறிக்கும் ஏந்தல், தாங்கல் என்னும் இரு சொற்களும் ஊர்ப்பெயர்களில் வழங்குகின்றன. இளவரசன் ஏந்தல், செம்பியன் ஏந்தல் முதலிய ஊர்கள் ஏரியினடியாகப் பிறந்தனவாகும். தாங்கல் என்ற பெயருக்குச் சான்றாக ஆலந்தாங்கல் வட ஆர்க்காட்டிலும், வளவன் தாங்கல் செங்கற்பட்டிலும் உள்ளன". (இரா.பி. சேதுப்பிள்ளை; 2009, 24). இக்கூற்று தாங்கள் என்ற பெயர் நீட்சியைப் புலப்படுத்துவதாகும். மக்கள் தங்கி வாழ்ந்த இடங்களைக் குறிப்பதால் இப்பெயர் இடம்பெற்றிருக்கலாம் என்று தோன்றுகிறது.

## குளம்பனார்

சங்க காலப் பெயர் முறைகளில் ள, ழ மாற்றங்கள் அதிகம் நிகழ்ந்துள்ளதை அறிய முடிகின்றன. கழார், களார் என்று அழைக்கப்படுவதே முதற் சான்றெனலாம். பின்னர், குளம்பனார், குழம்பனார் என்ற இப்பெயர்களை நோக்கும் பொழுது இத்தகைய மாற்றங்களை எளிதில் புரிந்துகொள்ள முடிகின்றன. ஏன் இத்தகைய மாற்றங்கள் நிகழ்கின்றன என்ற வினாவின் விடைகளாக நிறுத்தப்படுவது அச்சுப்பிழை மாற்றங்களும், பொருள் புரியாதோர் ஏடு பெயர்த்து எழுதியதாலும் இத்தகைய மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன என்பதை அனுமானிக்கலாம். அம்முறையே "குளம்பன் என்பது இச்சான்றோரது இயற்பெயர். நல்லிசை புலமையாற் சிறந்தமையின், குளம்பனார் எனப்பட்டார். தொண்டை நாட்டு ஊர்களில் குழப்பந்தாங்கல் என்றோர் ஊரும் உண்டு; குளம்பன் என்பது குழம்பன் எனவும் வழங்கும். இப்பெயர் இடைக்காலத்தே பிராமணரிடையேயும் இருந்துளது. "சிவப்பிராமணன் பாலாசிரியன் சாத்தன் சிவப்பிரியனான குழம்பன் நாயக்கன்" (S.I.I. Vol. VIII. NO. 330) எனக் கல்வெட்டு கூறுவது காண்க. குளம்பந்தாயனார் என்றொரு சான்றோர் புறநானூற்றில் காணப்படுகிறார். குளம்பந்தாயனார் மகனார் தாயனாரெனப்படாமையின் அவர் இவரின் வேறாதல் விளங்கும்". (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2011; ப.396). இக்கூற்று குளம்பனார் பற்றிய தெளிவின்மையை ஏற்படுத்துகிறது. குளம்பன், குழம்பன் என்ற இரு பெயர்களில் எது சரியானது என்ற தெளிவை எட்ட பெரும் தடுமாற்றம் நிலவுகிறது. இத்தகைய சூழலில், இலக்கியம் காட்டும் தரவுகளைச் சரிபார்க்க கல்வெட்டுத் தரவினை முன்னெடுப்பது சாலச் சிறந்தது. ஆனால், இங்குக் கல்வெட்டுத்

தரவு ‘குழம்பன்’ என்ற பெயரையே காட்டுகிறது. இங்கு, ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தன் கோட்பாட்டையே செப்பம் செய்வதாகக் கருதலாம். கல்வெட்டுத் தரவு தவறானது என்று கல்வெட்டுத் தரவினையே மறுக்கிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை. கல்வெட்டுத் தரவான குழம்பன் என்பதை நிராகரித்து இலக்கியத் தரவான ‘குளம்பன்’ என்பதே சரியானது என்ற முடிவை எட்டுகிறார். இதற்கான காரணங்கள் எதையும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை முன்வைக்கவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். மேலும், இப்பெயர் பிராமணர் மரபைச் சார்ந்தவை எனபதைக் கல்வெட்டுப் பதிவு உறுதி செய்வதை அறிய முடிகிறது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரைகளில் பல இடங்களில் சைவச் சார்பு வெளிப்படுவதையும் அவதானிக்கலாம்.

## மதுரை ஆர்வலநாட்டு ஆலம்பேரிச் சாத்தனார்

புலவர் பெருமக்கள் பெரும்பாலானோர் மதுரையைச் சார்ந்தவர்களாக இருப்பதை அறிய முடிகிறது. ஆர்வலநாடு என்பது பல பொருண்மைகளில் திரிந்து வந்துள்ளதைப் பின்வரும் கூற்றின் வாயிலாக ஆராயலாம். அம்முறையே “ஆர்வலநாடு என்பது இடைக்காலத்தே ஆர்வலக் கூற்றம் என வழங்கினமை கல்வெட்டுகளால் தெரிகிறது. சில ஏடுகளில் இஃது ஆருலவிய நாடு எனவும், ஆரள நாடு எனவும் குறிக்கப்பட்டுள்ளது. தென்னார்க்காடு மாவட்டத்து உலகாபுரத்துக் கல்வெட்டொன்றில் (A.R. No. 137 of 1919) ஆர்வலம் என்பது ஓர் ஊர் என்று தெரிகிறது; ஆயினும், அஃது இன்ன நாட்டதென்று விளங்கவில்லை. ஆலம்பேரி இந்த ஆர்வல நாட்டின்கண் உள்ளதோர் ஊர். சீவல்லபப் பேரேரி என்பது சீவலப்பேரி எனச் சிதைந்தாற் போல ஆலம்பேரேரி என்றது ஆலம்பேரி என வந்தது என்றலுமுண்டு. ஆலம்பேரிச் சாத்தனாராகிய இச்சான்றோர், மதுரை நகர்க்கண் வாழ்ந்தமை பற்றி மதுரை ஆலம்பேரிச் சாத்தனார் எனப்படுவராயினார்”. (மேலது; ப.451). இக்கூற்று ஆலம்பேரி பற்றியான வரலாற்றுப் பெயர்ப் புரிதலைப் புலப்படுத்துகிறது. சங்கப் பெயர்கள் பிற்கால மொழி ஆளுகையின் காரணமாகச் சொற்கள் உடைந்து பெயர் மாற்றம் பெறுவதைக் காணலாம். ஆர்வலம் என்ற ஊர் பற்றியான தகவல்களை அறிய முடியவில்லை என்பதை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்று புலப்படுத்துகிறது. சீவலப்பேரி, ஆலம்பேரி என்ற பெயர்களில் வரும் ‘பேரி’ என்பது ‘பேரேரி’ என்பதின் விரிவு எனலாம். இருப்பினும், ‘பேரி’ என்பதை ஒரு சாதியத்திற்கான குறியீடுகளாகவும் பார்க்கலாம். எனவே, இச்சொல்லாய்வு என்பது மேலாய்வுக்குரியதாகும்.

## மாறோகத்து நப்பசலையார்

மாறோகத்து நப்பசலையார் என்ற பெயராய்வில், இங்கு நப்பசலையார் என்பதை ஆராய்வதைத் தவிர்த்து, மாறோகம் என்பதே ஆய்வுப் பொருளாக ஆராயப்பட உள்ளன. மாறோகம் என்பது வீரத்தின் அடிப்படையிலும், வேளாளர் இனக் குறியீட்டின் தன்மையிலும் அடையாளப்படுத்தப்படுவதை அறியலாம். இத்தகைய பின்புலத்தின் அடிப்படையில் பின்வரும் கூற்றினை ஆராயலாம். அம்முறையே "மாறோகம் மாறோக்கம் எனவும் வழங்கும். மாறை நாட்டு ஓகம் என்னும் ஊர் மாறோக்கம் எனப் பண்டை நாளிலே மருவிவிட்டதென்றும், பின்பு அதனைத் தலைநகராகக் கொண்டு இன்றுள்ள கொற்கையைச் சூழ்ந்த நாட்டுக்கு மாறோகம் என்ற பெயர் வழங்குவதாயிற்றென்றும் அறிஞர் கருதுகின்றனர். நற்குடி வேளாளர் வரலாறு என்ற நூலால் இக்குறிப்பு விளங்குகிறது. இது திருநெல்வேலி மாவட்டத்து மாறமங்கலம், மாறவன்மன் மங்கலம் எனவும் மானமங்கலம் எனவும் கல்வெட்டுகளில் (S.I.I.Vol.VIII. No. 445 – 59) வழங்குவது; இதுவே சங்க கால மாறோக்கம் என்பாருமுண்டு. அற்றாயின், மாறோகமான மாறவன்மன் மங்கலமெனக் கல்வெட்டுகள் குறிக்க வேண்டும். அவ்வாறு குறிப்பது கல்வெட்டுக்களின் மரபு. அத்தகைய குறிப்பொன்றும் இதுகாறும் காணப்படாமையால் மாறமங்கலத்தை மாறோகம் எனக் கோடற்கு இடமில்லை" (மேலது; பக்.454 – 455). இக்கூற்று மாறோகம் என்பதைத் தவிர்த்து மாறோக்கம் என்பது சரியானது என்பதைப் புலப்படுத்துகிறது. கொற்கை நாட்டினைச் சூழ்ந்த நாடு மாறோக்கம் என்றும் குறிப்பிடுவதை அவதானிக்கலாம். இம்மாறோக்கமே பிற்காலத்தில் மாறமங்கலம், மாறவன்மன் மங்கலம் எனவும் மாறியுள்ளது என்பதைக் கல்வெட்டுத் தரவுகள் குறிப்பிடுவதை ஒளவை சு.துரைசாமிப்பிள்ளை மறுக்கிறார். இங்குக் கல்வெட்டுத் தரவுகளின் பிழைகளைச் சுட்டி காட்டுகிறார். கல்வெட்டுகள் மாறோகமான மாறவன்மன் என்றே குறிப்பிட்டிருக்க வேண்டும் என்ற வாதத்தை முன்வைக்கிறார். இத்தகைய குறிப்பு இதுகாறும் காணாமையால் மேற்கூறப்பட்டவை தவறு என்பதைப் புலப்படுத்துகிறார். எனவே, இத்தகைய இடங்களில் மேலும் சில தரவுகளைக் கொண்டு மீளாய்தல் அவசியமாகிறது. கொற்கையைச் சூழ்ந்துள்ள பகுதிகளே மாறோக்க நாடு என்பதை ஒளவை சு.துரைசாமிப்பிள்ளை உரை முன்வைக்கின்றது.

## உரோடகத்துக் கந்தரத்தனார்

உரோடகம், கந்தரத்தனார் என்பதை முறையே ஊர்ப்பெயராகவும், புலவர் பெயராகவும் கொள்ளலாம். உரோகம் பற்றியான விவரங்களை இந்த ஆய்வில் முன்னரே ஆராய்ந்துள்ளோம். மேலும், உரோடகத்தனார் என்னும் பெயரைப் புலவர் பெயராகவும்

கொள்ள நேர்கிறது. இத்தகைய பின்புலத்தில் பின்வரும் கூற்றினை ஆராயலாம். அம்முறையே “கந்தரத்தனாரது ஊர் உரோடகம். இது செங்கற்பட்டு மாவட்டத்தில் உளது. கல்வெட்டுகள் சயங்கொண்ட சோழ மண்டலத்து மணவிற் கோட்டத்துப் புரிசை நாட்டு உரோடகம் (S.I.I.Vol.V.No. 881) என்று கூறுகின்றன. உரோடகத்தனார் என்றொரு சான்றோர் இந்நூலிற் காணப்படுகின்றார். இக்கந்தரத்தனாரே அவ்வாறு குறிக்கப்படுவதாகக் கருதுபவரும் உண்டு”. (மேலது; ப.464). இக்கூற்று உரோடகத்தார் பற்றிய தெளிவை ஏற்படுத்துகிறது. ஒரு பெயர், ஓரிடத்தில் ஊரையும், மற்றொரு இடத்தில் புலவர் பெயரையும் குறிப்பதற்கான எதார்த்தப் பின்புலத்தை அறிய வழிவகை செய்கிறது. இத்தகைய பின்புலத்தில் சங்கப் பெயர்கள் பலவற்றையும் அடையாளம் காணலாம்.

### தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார்

தங்கால் என்பது திருத்தங்கால் என்பதின் சுருக்கம் எனலாம். அல்லது திருத்தங்கால், தங்கால் எனக் கால மாற்றத்தால் மருவியும் இருக்கலாம். மேலும், தங்கால் என்பதைத் தக்கல் என்ற ஊர்ப் பெயரையும் இணைத்துப் பார்த்து ஆராய்தலும் அவசியமாகிறது. இவ்வூர் பாரதம், இராமாயணம் ஓதும் முக்கிய இடமாகவும் இருந்துள்ளதை அறிய முடிகிறது. எனவே, இவ்வூர் சிறந்த கல்விப் புலத்தைப் பெற்றிருந்தது என்பதையும் அவதானிக்கலாம். இத்தகைய பின்புலத்தில் பின்வரும் கூற்றினை ஆராயலாம். அம்முறையே “தங்கால் என்பது தண்கால் என்பதன் மரூஉ. இவ்வூர் பாண்டி நாட்டில் இன்றைய விருதுநகர்க்கு அண்மையில் இருக்கிறது. இளங்கோவடிகள் காலத்துக்கு முன்பிருந்தே இது சான்றோர் தோன்றிய தொல்பதியாகப் புகழ் கொண்டது. சங்கச் சான்றோருள் இவ்வெண்ணாகனாரும் ஆத்திரேயேன் செங்கண்ணனாரும் இவ்வூரினராகக் காணப்படுகின்றனர். இளங்கோவடிகள் இவ்வூரை “தடம்புனற் கழனி தங்கால்” என்று சிறப்பிப்பர். இடைக்காலத்தில் விளங்கிய பாண்டியர் பேரரசில் இஃது இராசராசப் பாண்டி நாட்டு மதுராந்தக வளநாட்டுக் கருநீலக்குடி நாட்டுத் திருத்தங்கால் (A.R.No.564 of 1922) எனக் குறிக்கப்பெறுவது. பாரதமும் இராமாயணமுமாகிய பெருநூல்களையோதும் பெருநிலையாக இவ்வூர் விளங்கிற்றென்று மாறவன்மனான முதற் சுந்தர பாண்டியனுடைய கல்வெட்டுகள் (A.R. No. 546 of 1922) கூறுகின்றன. சான்றோராகிய இவர் பொற்கொல்லற்குரிய தொழில் செய்தமையால் இவரைப் பொற்கொல்லன் வெண்ணாகனார் என்று ஏடுகள் இயம்புகின்றன”. (மேலது, 495 – 496). இக்கூற்று தங்கால் பற்றிய ஊர்ப்பெயர் வரலாற்றுத் தெளிவை ஏற்படுத்துகின்றன. இவ்வூர் கி.பி.2ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட பழமை வாய்ந்தது என்பதை உறுதி செய்ய இளங்கோவடிகளுக்கு முற்பட்டது இவ்வூர்

என்பதை உணர முடிகிறது. இளங்கோவடிகளே இவ்வூர்ப் பெயரை எடுத்தாண்டுள்ளதால் இவ்வூரின் பழம்பெருமையும், வரலாற்றுச் சிறப்பும் தெள்ளத் தெளிவாகின்றன. மேலும், இப்புலவரைப் பொற்கொல்லர் என்று கூறுவதை ஏற்றாலும், இத்தொழில் முறையிலான பிரிவின் அடிப்படையிலும் இப்புலவரின் காலத்தை அறிய முற்படலாம். எனவே, தொழில்முறையிலான பெயர்கள் என்பது மேலாய்வுக்குரியதாகும்.

## கிடங்கில் காவிதிப் பெருங்கொற்றனார்

அகழி சூழ்ந்த கோட்டையைக் கிடங்கில் என்று கூறுவதுண்டு. மேலும் கிடங்கில் என்பது மதில்கள் சூழ்ந்துள்ளமையால் உண்டான காரணப்பெயராகவும் கொள்ளலாம். கிடங்கில் என்பது ஊர்ப்பெயராக இருந்தாலும், இதற்கான பொருண்மை என்பது வேறானதாகும். கிடங்கில் என்பது தொடக்க காலங்களில் ஊர்ப் பெயராகவும், பிற்காலங்களில் பொருட்களைச் சேமித்து வைக்கும் இடத்தைக் குறிப்பதாகவும் மாறியிருக்கலாம். காவிதி என்ற பட்டமே புலவருக்கு ஆகி வருவதால் இப்புலவரின் பெருமையை நன்கு விளக்குவதாக அமைகிறது. இத்தகைய கண்ணோட்டத்தில் பின்வரும் கூற்றினைக் கவனிக்கலாம். அம்முறையே “கிடங்கில் என்பது சங்க காலத்தில் தொண்டை நாட்டின் தென்பகுதியான ஓய்மானாட்டுத் தலைநகராய் விளங்கிற்று. (A.R.No.134 of 1925). இப்போது திண்டிவனம் புகைவண்டி நிலையத்திற்கு அண்மையில் அவ்வூர் நகராட்சியில் அடங்கியுளது. “கிடங்கில் கிடங்கிற் கிடந்த கயலைத் தடங்கண் தடங்கண் தளிரியலார் கொல்லார் – கிடங்கில், வளையால் பொலிந்ததோள் வையெயிற்றுச் செவ்வாய், இளையாட்டி கண்ணொக்கும் என்று” என யாப்பருங்கல விருத்தியுரைகாரர் காட்டும் ஆரிடச் செய்யுள் இவ்வூரைச் சிறப்பிப்பது காணலாம். அந்நாளில் அக்கிடங்கிலில் காவிதிப் பட்டம் பெற்றுச் சிறப்புற்றிருந்த சான்றோர்களில் காவிதிப் பெருங்கொற்றனார் ஒருவராவார்”. (மேலது, ப.694). இக்கூற்று கிடங்கில் பற்றிய தெளிவை இலக்கண நூல் வாயிலாகத் தெளிவுபடுத்துகின்றார். சங்க காலக் கிடங்கில் சமகாலத்தில் எங்குள்ளது, என்னவாக மாற்றம் பெற்றுள்ளது என்பது பற்றிய வரலாற்று நீட்சியை இவ்வுரை காட்டுகிறது. மேலும், சங்க கால ஓய்மாநாடே தற்காலத் திண்டிவனம் என்பதையும் அறியமுடிகிறது.

கிடங்கில் பற்றி மேலும் தெளிவடைய இரா.பி. சேதுப்பிள்ளையின் கருத்தை நோக்கலாம். இக்கருத்தில் இருவரும் ஒன்றிப் போவதையும் காண முடிகிறது. பின்வரும் கூற்றின் வாயிலாகப் பொருத்திப் பார்க்கலாம். அம்முறையே “அகழி சூழ்ந்த கோட்டையைக் கிடங்கில் என்றும் கூறுவதுண்டு. முன்னாளில் கிடங்கில் என்னும் பெயருடைய கோட்டையின் தலைவனாகவும், கொடை வள்ளலாகவும் விளங்கிய

நல்லியக் கோடன் என்ற சிற்றரசனது பெருமையைச் சிறுபாணாற்றுப்படை கூறுகின்றது. அவன் காலத்தில் அவ்வூர், கோட்டை மதில்களாலும், அகழிகளாலும் நன்றாக அரண் செய்யப்பட்டிருந்தது. இன்றும் அங்குக் காணப்படும் சிதைந்த சுவர்களும், தூர்ந்த கிடங்குகளும் அதன் பழம் பெருமையை அறிவிக்கின்றன. கிடங்கால் என்னும் பெயர் கொண்டு வழங்கும் அவ்வூருக்கு அண்மையில் திண்டிவனம் இப்பொழுது சிறந்து திகழ்கின்றது". (இரா.பி. சேதுப்பிள்ளை, 2009, ப.60). இக்கூற்று கிடங்கில் என்ற ஊர் அமைந்திருக்கும் முறையினையும் இக்கூற்று தெளிவுப்படுத்துகிறது. கிடங்கில் என்பது திண்டிவனத்திற்கு அருகாமையில் அமைந்துள்ளன என்ற கருத்தில் இருவரும் ஒத்துப் போவதையும் காண முடிகின்றது. இவ்வூர்ப் பெயர் விளக்கம் என்பது அவ்வூரின் அடையாளங்களுடன் விளக்கப்படுகின்றது.

## காவிரிப் பூம்பட்டினத்துச் செங்கண்ணனார்

சங்ககாலத்தில் சாதிமுறைகள் இல்லை என்பது ஆய்வுக்குரியதாகும். சங்க இலக்கியப் பொருண்மைகளில் பெரும்பாலான தகவல்களின் வாயிலாகச் சாதிய அடையாளங்களை இனம் காண நேர்கிறது. பிற்கால உரையாசிரியர்கள் சிலர் சாதிய அடையாளங்களை வெளிக்காட்டக் கூடாது என்ற கண்ணோட்டத்தில் உரை எழுத முயன்றுள்ளனர் என்பதையும் அவதானிக்க முடிகிறது. ஆனால், சங்கப் பனுவல்களில் சாதிய, தொழில் முறையிலான வேர்கள் நிறைந்து கிடப்பதையும் மறுப்பதற்கில்லை என்றே தோன்றுகிறது. இத்தகைய தொழில்முறையிலான பிரிவுகளின் அடிப்படையில் சங்கப் பனுவலை ஆய்தல், புதுவகையான தெளிவை இச்சமூகத்திற்கு ஏற்படுத்தித் தரும் என்பதில் சற்றும் ஐயமில்லை எனலாம். இத்தகைய பின்புலத்தில் பின்வரும் கூற்றினை ஆராய முற்படலாம். அம்முறையே, "காவிரிப் பூம்பட்டினத்தவரான செங்கண்ணனார் இனிய புலமை நலம் வாய்ந்தவர். இவர் காலத்தே அவியன் என்றொரு குறுநிலத் தலைவன் திருமுனைப்பாடி நாட்டில் வாழ்ந்தான்; அவனது ஊர்க்கும் அவியனூர் என்ற பெயரே பிற்காலத்தே வழங்கியது (A.R. 419 of 1921) இடைக்காலச் சோழ, பாண்டியர் காலத்தில் அது அவியனூர் நாட்டுக்குத் தலைமை நகரமாயிற்று. இந்த அவியன் வழி வந்தோர், பாண்டி நாட்டுத் திருப்புத்தூர்ப் பகுதியிலுள்ள சூரைக்குடியில் இருந்து, அவியன் பெரிய நாயனான விசயாலய தேவன் (A.R.119 of 1908) அவியன் மாளவ சக்கரவர்த்தி (A.R.122 of 1908) என விளங்கியிருந்தனர். இச்செங்கண்ணனாரும் மாறோகத்து நப்பசலையாரும் அவியனைப் பாடியிருத்தலால் இருவரும் ஒரு காலத்தவர் எனலாம். இச்செங்கண்ணனாரை வணிகர் மரபினர் எனச் சிலர் கூறுவர். வாணிகம் என்பது ஒரு குறிப்பிட்ட இனத்தவர்க்குத்தான் உரிய தென்பது தவறு. தமிழர் வாழ்வில் யாரும் எத்தொழிலையும் செய்வர்; வாணிகம் செய்வோர் வணிகர் எனப்படுவர்.

இக்காலத்தும் வேளாளர் சிலர் வணிகத் தொழிலை மேற்கொண்டு செட்டிகள் என்ற சிறப்புடையராயிருப்பதும், நாடார் இனத்தவர் பலரும் வாணிகமே புரிவதும் சான்று பகர்கின்றன. நம் செங்கண்ணனார் வாணிகம் செய்திருப்பராயின், கூலவாணிகன் சீத்தலைச் சாத்தன் அறுவை வாணிகன் இளவேட்டன் என்றாற் போல இவரும் குறிக்கப்பட்டிருப்பர். அத்தகைய குறிப்பொன்றும் கிடைக்கவில்லை". (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2011; பக்.787-788). இக்கூற்று பல வரலாற்றுப் பெயர் முறைகளையும் அவற்றின் வரலாற்றுத் தெளிவையும் புலப்படுத்துகிறது. அவியன் என்ற குறுநில மன்னன் ஆண்ட பகுதி, அவன் பெயராலே அவியனூர் என்று அழைக்கப்பட்டதை உணர்த்துகிறது. செங்கண்ணனாரும், நப்பசலையாரும் அவியனைப் பாடியதால் சமகாலத்தவர் என்ற ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கருத்து சிந்தனைக்குரியதாகும். தமிழர் வாழ்வில் யாரும் எத்தொழிலையும் செய்வர் என்ற கருத்து ஆராய்தலுக்குரியதாகும். எத்தொழிலை யார் செய்தாலும், ஒவ்வொரு தொழிலின் பின்னணியில் சாதிய அடையாளம் ஒட்டியிருப்பதை மறுப்பதற்கில்லை. மேல்சாதியர் தொழில்களை வேண்டுமானால் நடுத்தரச் சாதிகள் செய்யலாமே தவிர எந்த நடுச் சாதியும் கீழ்ச்சாதித் தொழிலான பறை அடித்தல், மலம் அள்ளுதல் போன்ற தொழிலைச் செய்வதில்லை என்பதும் சிந்தனைக்குரியாகும். அதேபோன்று தொழில் அனுபவம் அச்சாதியத் தொழில் அடிப்படையில் அடங்கியிருப்பதையும் கவனிக்கலாம். செங்கண்ணனார் என்பவர் எத்தொழிலைச் செய்தார் என்ற தெளிவு இன்மையால், இப்புலவரைத் தொழில் அடையாளத்துடன் பிரிப்பது சாத்தியம் இல்லை.

## முடியனூர் – ஊர் பெயராய்வு

முடியனூர் என்பது முடியன் என்ற வள்ளல் பெயரால் இப்பெயர் பெற்றிருக்கலாம். முடியனூர் என்ற சங்க கால ஊர்ப் பெயர்த் தொடர்ச்சியாகச் சமகாலத்தில் சில ஊர்களை அடையாளம் காணலாம். முடியனூர், முலையனூர், மலையனூர் போன்ற ஊர்களை இப்பெயரின் நீட்சியாகக் கருதலாம். இத்தகைய நோக்கில் பின்வரும் கூற்றினை ஆராயலாம். அம்முறையே "முடியன் என்பான் தென்னார்க்காடு மாவட்டத்துத் திருக்கோவலூர் வட்டத்தின் தென்பகுதியில் வாழ்ந்த ஒரு வள்ளல்; அவன் பெயர் தாங்கிய நல்ல ஊர் ஒன்று இன்றும் உளது. அதனை முடியனூர்க் கல்வெட்டுகள், மலாடான சனநாத வளநாட்டு மகதை மண்டபத்துக் குறுக்கைக் கூற்றத்து முடியனூர் (A.R. No. 403 of 1938) என்று குறிக்கின்றன. இடைக்காலப் பாண்டியர் காலத்தில், இவ்வூர் இரவிகுல மாணிக்கச் சதுர்வேதி மங்கலமாகியது (A.R.No. 388 of 1938). இதனை அடுத்துள்ள திருப்பாலைப்பந்தலில் கோயில் கொண்ட திருநாகீச்சுரமுடையார்மேல் எல்லப்ப நயினார் என்ற புலவர் உலாநூல் ஒன்றைப்

பாடினார் என முடியனூர்க் கல்வெட்டு (A.R. No. 401 of 1938) உரைக்கிறது. இங்குள்ள வேறொரு கல்வெட்டு (A.R.No. 409 of 1938) இம்முடியனூரை, "பெண்ணைத் தென்கரை மகதை மண்டலத்துக் கீழ்துண்ட நாட்டு முடியனூர்" என்று கூறுகிறது. இம்முடியனுக்குரிய மலைகள் கள்ளக்குறிச்சிப் பகுதியில் உள்ளன". (மேலது; ப.794). இக்கூற்று முடியனூர் பற்றிய வரலாற்றுப் புரிதலை ஏற்படுத்துகின்றன. முடியனூர் என்பது சங்க காலம் தொடங்கிச் சமகாலம் வரையிலும் அதே பெயருடன் அழைப்பதும், அதன் சிறப்பின் தொன்மை எனலாம். முடியனூர் பற்றி இலக்கியம் கூறும் தகவலைக் கல்வெட்டுத் தரவுகளும் இப்பெயராய்வில் மாற்றம் நிகழாமல் இருப்பதும் இவ்வூரின் தனிச்சிறப்பெனலாம். இத்துடன் நற்றிணையின் இரண்டாம் பாகம் நிறைவுற்றது.

## ஐங்குறுநூறு வெளிப்படுத்தும் கல்வெட்டுப் பதிவுகள்

சங்க இலக்கியத் தொகை நூல் பட்டியலில் மிகக் குறைந்த அடிகளைக் கொண்டது ஐங்குறுநூறு. அகப் பாடல்கள் வெளிப்படுத்தும் கல்வெட்டுத் தரவுகள் என்பவை தலைவன், தலைவி சார்ந்து அமைவதற்கு வாய்ப்பில்லை எனலாம். எனவே, புலவர் பெயர்களும், புலவர் ஊர்ப் பெயர்களுமே கல்வெட்டுத் தரவுகளுடன் ஆராயப்படலாம். மேலும், நிலம், நீர், மலை என்ற மூன்று பொருண்மைகளில் கல்வெட்டுத் தரவுகள் ஆராயப்படுவதையும் ஐங்குறுநூற்றின் வாயிலாக அறியலாம். செந்தமிழ்க் கருவூலம், தமிழ்மண் பதிப்பகத்தின் பதிப்புகளான ஐங்குறுநூற்றின் இரு தொகுதிகள் எடுத்துக்கொள்ளப்படுகின்றன. தற்பொழுது ஐங்குறுநூற்றின் முதல் தொகுதியை ஆராய முனையலாம்.

இலக்கியச் சான்றுகளைக் கொண்டே காலத்தைக் கணக்கிடலாம். கல்வெட்டுத் தரவினைப் பின்பற்ற வேண்டிய அவசியம் என்ன என்ற வினாக்கள் எழுவதைத் தவிர்ப்பதற்கில்லை. இவ்வினாவின் விடையாக எ.சுப்பராயலுவின் கூற்று நோக்கத்தக்கதாகும். அம்முறையே "இலக்கியச் சொற்களுக்குக் காலம் சார்ந்து ஒரு தோராயமான கணக்குத்தான் சொல்ல முடியும். ஆனால், கல்வெட்டுச் சொற்களுக்குச் சரியான ஒரு காலக்கணக்கு உண்டு என்பதால் வரலாற்று ரீதியான ஒரு அகராதியில் கல்வெட்டுச் சொற்களையும் இணைத்துக் கொள்ள வேண்டும்". (எ.சுப்புராயலு, காலச்சுவடு, நவம்பர், 2004, 19). இக்கூற்று கல்வெட்டுத் தரவுகள், காலத்தைச் சரியாகக் காட்டும் சாதனம் என்பதைப் புலப்படுத்துகின்றன. இலக்கியத் தரவுகள் காலத்தை ஓரளவு சரியாகக் கணித்தாலும், சற்றுப் புனைவுகள் இருப்பதால் ஏற்றுக் கொள்ளத் தயக்கம் ஏற்படுவது உண்மை எனலாம்.

## ஓரம்போகியார்

ஐங்குறுநூற்றில் மருத நிலத்தின் தன்மைகளைப் பாட விழைந்துள்ளார் இப்புலவர். மருதநிலக் கடவுளான இந்திரனையும், இந்திர விழாவினையும் சிறப்பாகப் பாடியுள்ளதை அறியலாம். மருதத் திணையில் நூறு பாடல்களைப் பாடியதாக அறிய முடிகிறது. மேலும், அகப்பாடல்களான அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை போன்ற சங்கப் பனுவல்களிலும் ஓரம்போகியாரின் பாடல்களை இனம் காணலாம். புலவர்களின் சிறப்பால் ஆறுகள் வெட்டப்படுவதும், சில இடங்களுக்கும், சில ஊர்களுக்கும் புலவரின் பெயரை இட்டு வழங்குதலும் வழக்கமாகி இருந்து வந்துள்ளதை அறிய முடிகிறது. இத்தகைய கருத்தாக்கங்களைப் பின்வரும் கூற்றின் வாயிலாக ஆராய்வோம். அம்முறையே, "ஓரம்போகியார் என்பது இவரது இயற்பெயர். இவர் ஆதன் அவினி யென்னும் சேர மன்னன் ஆதரவு பெற்றவர். வடகொங்கு நாட்டில் காணப்படும் அவினியாறு (A.R.No.96 of 1906) இவன் பெயரால் வெட்டப்பட்டது போலத் தோன்றுகிறது" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2008; ப.37). இக்கூற்று ஓரம்போகியாரின் சிறப்பினைப் புலப்படுத்துகிறது. அவினியாறு ஆதன் அவினியின் சிறப்பினைப் போற்றும் விதமாக வெட்டப்பட்டதாகக் கருதலாம். இங்கு, ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை அவினியாறு பற்றிய தெளிவான உறுதியான முடிவைத் தரவில்லை என்பதும் கவனத்திற்குரியதாகும்.

## பொய்கை நாடு

அகப்பாடல்கள் வழியான கல்வெட்டுத் தரவுகள் பயன்பாடு என்பது பாடல்களில் அதிகம் வெளிப்படுவதில்லை எனலாம். புலவர் பெயர், நாட்டுப் பெயர் என்ற பொருண்மைகளிலேயே கல்வெட்டுத் தரவுகள் பெரும்பாலும் பயன்படுத்தப்படுகின்றன. இந்நோக்கில் பின்வரும் கல்வெட்டுத் தரவினை ஆராயலாம். அம்முறையே "ஸ்ரீராஜராஜேசுவரம் உடையார்க்கு ஸ்ரீகாரியஞ் செய்கின்ற பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்த வேளான் (S.I.I. Vol. II. No. 38) என வழக்கினுள் வருமாறு காண்க". (மேலது, ப.138). இத்தகைய கூற்றுகள் பொய்கை நாடு என்பதை உறுதி செய்வதாக அமைகின்றன. இலக்கியம் கூறும் நாட்டுப் பெயரினைக் கல்வெட்டுத் தரவுகள் மேலும் உறுதி செய்கின்றன. பொய்கை நாடு பற்றி இரா.பி. சேதுப்பிள்ளையின் கருத்தும் நோக்கத்தக்கதாகும். அம்முறையே, "கச்சியைச் சூழ்ந்த நாட்டுக்குப் பொய்கை நாடு என்ற பெயர் இருத்தலால், பொய்கையார் என்று அவர் சொல்லப்பட்டார் என்பாரும் உண்டு". (இரா.பி.சேதுப்பிள்ளை; 2009; ப.39). இக்கூற்று பொய்கை நாடு கச்சியைச் சூழ்ந்த பகுதி என்பதைப் புலப்படுத்துகிறது.

## தேனூர் – ஊர்ப்பெயராய்வு

தேனூர் என்பது சங்க இலக்கியப் புலத்தில் எவ்வாறெல்லாம் கையாளப்பட்டுள்ளது என்ற புரிதலை எட்ட பின்வரும் கூற்றினை ஆராய முற்படலாம். பாடல்களுக்கு விளக்கம் சொல்லும் முறையே, இடை இடையே இத்தகைய ஊர்ப்பெயர் விளக்கங்களைத் தருவது வழக்கம். ஆனால், இப்பெயராய்வுக்கு மட்டும் அடிக்கோட்டு பகுதியில் அதாவது தனியான மேற்கோள் விளக்கத்தை இரண்டு பக்க அளவில் விரித்துள்ளதைக் கவனிக்கலாம். எனவே, தேனூர் பற்றியான விவரங்களை ஆராய வேண்டியது அவசியமாகின்றன. அம்முறையே "பண்டை நாளில் தேனூர் என்ற பெயருடைய ஊர்கள் பல இருந்துள்ளன. அவற்றுள் நிலைப்பேறுடைய குறிப்புகள் கொண்டவை பாண்டி நாட்டில் இரண்டும், நடு நாட்டில் ஒன்றும் கல்வெட்டுகளால் அறியப்படுகின்றன. நடுநாட்டினுள்ளது பெண்ணைத் தென்கரை மகதை நாட்டுத் தென்கரைப் பழங்கூர்ப்பற்றுத் தேனூர் (A.R. No. 409 of 1938) எனப்படுகிறது. பாண்டி நாட்டில் முதுகுளத்தூர்ப் பகுதியில் திருமாலுகந்தான் கோட்டையென்பது பண்டை நாளில் தேனூர் என்ற பெயர் கொண்டு விளங்கியிருந்தது. இதனைக் கல்வெட்டுகள், திருமாவுகந்த நல்லூர் என்றும், ஏழூர்ச் செம்பி நாட்டுத் தென்முனைப்பற்றுத் தேனூரான திருமாவுகந்த நல்லூர் (A.R.No. 43 of 1931 - 32) என்றும், அளற்று நாட்டுத் தேனூர் (A.R. No. 56 of 1931 - 32) என்றும் குறிக்கின்றன. தேனூரைச் சார்ந்த ஏழூர் திருநாவுக்கரசரால் (284:5) சிறப்பிக்கப் பெற்றுள்ளது. மற்றொன்று வையக்கரையில் திருவேடகத்துக்கண்மையில் உளது. திருவேடகம் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் திருஞான சம்பந்தர் பரவும் சிறப்பு பெற்றது. அதனை அடுத்திருக்கும் தேனூரைப் பழங்காலக் கல்வெட்டுகள் பாகனூர்க் கூற்றத்துப் பெருந்தேனூர் (A.R.604 of 1926) எனவும், பாகனூர்க் கூற்றத்துத் தேனூர்த் திருவேடகம் எனவும் கூறுகின்றன. கி.பி. பதினொராம் நூற்றாண்டில் எழுந்த கல்வெட்டுகள் இதனைத் தேனூரான விருதராச பயங்கர நல்லூர் (606 of 1926) என்று குறிக்கின்றன". (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2008; பக்.175–176). இக்கூற்று தேனூர் பற்றிய விரிவான வரலாற்றுத் தரவினை முன்வைக்கிறது. தேனூர் பற்றிய குறிப்புகள் அக இலக்கியங்களில் பெரிதும் பயின்று வந்துள்ளதை அறியலாம். தேனூர் என்பது பல இடங்களில் இருந்துள்ளதை அவதானிக்க முடிகிறது. மேலும், தேனூர் பற்றிய பதிவுகள் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் பதிவாக்கம் செய்யப்பட்டிருக்கலாம் என்று கருத வாய்ப்பிருக்கிறது. பிற்காலச் சூழலில் இவ்வூர் நல்லூர் என்ற அடைமொழியைப் பெற்றிருப்பதையும் அறிய முடிகிறது.

ஓரம்போகியார் பாடிய மருதத்திணையின் 100 பாடல்கள் விரிவாக விளக்கப்பட்டுள்ளதை அறிவோம். இதற்குப் பிறகு வரும் நெய்தல் திணைப் பாடல்கள்

குறைந்த விளக்கங்கள் மட்டுமே பெறும் என்பதை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றின் வழியே அறியலாம். அம்முறையே, "இனி, நெய்தல் முதலாக வரும் நானூறு பாட்டுக்கும் இம்மருதப் பகுதியிற் போல உரைப்பின், நூலுரை பெரிதும் விரிவது கருதி உரையின்கண் சில பகுதிகளை விலக்கிச் சுருங்க உரைக்கின்றாம்". (மேலது, ப. 284). இக்கூற்று இந்நூல் சுருக்கத்தின் காரணத்தை முன்வைப்பதாகும். ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரைகள் என்பவை பாடல்களுக்குப் போதுமான உரைத் தெளிவை ஏற்படுத்த வல்லதாகும். அக இலக்கியப் பொருண்மைகளுக்குக் கல்வெட்டுத் தரவினைப் பொருத்திப் பார்ப்பது கடினமான செயலாகும். ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரைகளில் இத்தன்மையைக் காண நேர்கிறது. இத்தகைய உரை வெளிப்பாடே ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை, தனித்திறன் பெற்றவை என்பதற்குச் சான்றாகும். மேலும், நெய்தல், பாடல் உரையில் 129, 130 ஆகிய இரு மூலப்பாடல்கள் கிடைக்கவில்லை என்பதைக் கூறும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரைப் பதிவு மேலும் மூலத் தெளிவை ஏற்படுத்துகிறது. தேனூர் என்பதின் நீட்சியாக மானூர் என்பதையும் கருதலாம்.

### மண்ணூர் – தொண்டி: மறுத்துரைத்தல்

ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றுகள் பெரும்பாலும் இலக்கியத் தரவுகளை ஒட்டிய கல்வெட்டுத் தரவினையே முன்னெடுப்பதைக் காணலாம். ஆனால், இங்குத் தொண்டி என்பதை மறுத்து, கல்வெட்டில் கூறப்பட்ட மன்னூர் என்பதே சரியானது என்ற கருத்தை முன்வைத்துள்ளார். 'தொண்டி' என்பது தவறாக ஏற்படுத்தப்பட்ட பெயர் என்று ஔவை சு.துரைசாமிப்பிள்ளை கூறுகிறார். இக்கருத்து, மேலாய்வுக்குரியதாகும். இங்கு ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றின் மீது பல விவாதங்கள் எழுவதைத் தவிர்ப்பதற்கில்லை. இலக்கியம் கூறும் தரவைக் காட்டிலும் கல்வெட்டுத் தரவினையே முதன்மைப்படுத்துகிறார்.

கல்வெட்டுத் தரவுகள் மட்டும் தவறாக இருக்காதா என்ற வினாவினை இக்கருத்து எழுப்பி விடுகிறது. இத்தகைய கூற்றின் அடிப்படையில் விவாதிக்கத் தொடங்குவோம். அம்முறையே "சேரநாடு, குட்டநாடு, பொறை நாடு, குட நாடு என்று பல உண்ணாடுகளைக் கொண்டிருந்தது. அவற்றுள், தொடக்கத்தில் குடநாடு, குட்டநாடு என்ற இரு பிரிவுகளே இருந்தன. குட்ட நாட்டின் வடகீழ்ப்பகுதி பூழி நாடாகப் பிரிந்தபோது குடநாடு, பாயல்நாடு, பொறை நாடு, ஏறை நாடு எனப் பல நாடுகளாகப் பிரிந்தது. சேர நாட்டின் வடபகுதி குடநாடு எனவும், தென் பகுதி குட்ட நாடு எனவும் விளங்கினமையின், குடநாட்டுக்குத் தொண்டி நகரமும் குட்ட நாட்டுக்கு வஞ்சியும்

சிறப்புற்றன. பின்னர், குடநாட்டுப் பிரிவுகளுள் ஒன்றான பொறை நாட்டுக்கும் தொண்டியே தலைநகரமாயிற்று. இஃது இப்போது குறும்பொறை நாட்டுப் பகுதியில் ஒரு சிற்றூராய்க் காட்சியளிக்கின்றது. சிலர், இப்போது கடலுண்டி என வழங்கும் பகுதியே பண்டைத் தொண்டியாகலாம் எனக் கருதுகின்றனர். இதன் பழம்பெயர் மண்ணூர் என்று அங்குள்ள கல்வெட்டு (S.I.I. Vol. V. No. 782) கூறுவதை அவர் அறியாமையாலும், இவ்வூரையும் அவர்கள் நேரிற் சென்று காணாமையாலும் தொண்டி எனத் தவறாகக் கூறிவிட்டனர் என அறிதல் வேண்டும்". (மேலது, 387 – 388). இக்கூற்று தொண்டி என்ற பெயர் மீதான நம்பிக்கை இன்மையை ஏற்படுத்துகின்றன. எனவே, ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றுப்படி தொண்டி என்பதன் பழம்பெயர் மண்ணூர் என்பது தெளிவாகின்றன. மண்ணூர் என்பது பழம்பெயர் என்றால் தொண்டி என்ற பெயர் எந்த நூற்றாண்டில், எந்த இலக்கியப் பதிவில் மாற்றப்பட்டுள்ளது என்ற தெளிவு தேவையாகின்றது. இப்பின்புலத்தில் இப்பெயராய்வு மேலும் ஆராயப்பட வேண்டியதாகும்.

## கொற்கை ஊர்ப்பெயர்

கொற்கை என்பது பல பெயர்களில் அழைக்கப்பட்ட ஊரெனக் கருதலாம். சங்க இலக்கியக் காலத்திலேயே பாண்டிய நாட்டின் தலைநகர் மதுரையும், கொற்கையும் இருந்ததாகக் கருதுவதற்கு இடமுண்டு. ஆனால், இந்த இரண்டு ஊர்களில் எது பாண்டிய நாட்டின் முதல் தலைநகரமாக இருந்தது. இல்லையெனில், இரண்டும் சமகாலத்தில் அழைக்கப்பட்ட பெயர்களா என்பது மீளாய்வுக்குரியதாகும். இக்கண்ணோட்டத்தில் பின்வரும் கூற்றினைக் கவனிக்கலாம். அம்முறையே "சங்க காலப் பாண்டியர்க்குப் பின் பாண்டி நாடு களப்பிரராட்சியில் சீரழிந்து இடைக்காலப் பாண்டியராட்சியில் தலை தூக்கிற்று. இவருள் முன்னோன் பாண்டியன் கடுங்கோ (E.P.Indi.Vol.XVII.P.191). இவன் குடநாட்டு வேந்தர் குடியில் தோன்றிய கடுங்கோக்களின் வழியினன். அதனால், கொற்கையைச் சூழ்ந்த நாடு குடநாடு என்றும், கடுங்கோ மண்டலம் என்றும் பெயர் பெறுவதாயிற்று. அப்பகுதியிலுள்ள கல்வெட்டுகள் கடுங்கோ மண்டலமான குடநாட்டுக் கொற்கை(Annual report of the madras epigraphy No. 391 of 1929 - 30) என்றும், கிரேக்கர் குறிப்புக்கள் "முத்துப்படு பெறுந்துறை" (K.A.N. Sastri's Foreign Notices of south India p.68) என்றும் கூறுகின்றன. பின்வந்த சோழர் காலக் கல்வெட்டுகள், கொற்கையை இராசராசப் பாண்டி மண்டலத்துக் குடநாட்டுக் கொற்கை (A.R.No.464 of 1929-30)எனவும் உத்தமச் சோழ வளநாட்டுக் குடநாட்டுக் கொற்கையான மதுராந்தக நல்லூர் (A.R.No. 408 of 1929 - 30) என்றும் குறிக்கின்றன. இக்கல்வெட்டுகளால்

கொற்கை நகரமே ஒருகால் மதுராந்தக நல்லூர் என்றும், பிறிதொருகால் மதுரோதய நல்லூர் (A.R.425 of 1929-30) என்றும் பெயர்பெற்றமை தெரிகிறது" (மேலது; பக்.422-423). இக்கூற்று கொற்கை பற்றியான வரலாற்றுத் தெளிவை ஏற்படுத்துகிறது. மேலே குறிப்பிட்ட செய்திகளின் வழியே கொற்கையும், மதுரையும் ஒரே காலத்தில் பாண்டிய நாட்டின் தலைநகரமாக இருந்திருக்கலாமோ என்று எண்ணத் தோன்றுகிறது. மன்னர் ஆட்சி மாற்றங்களுக்கு ஏற்ப பெயர் மாற்றங்களும் நிகழ்வது இயற்கை. சமகாலத்தில் சென்னை, தமிழ்நாடு என்றிருப்பதைப் போல இப்பெயரைப் புரிந்துகொள்ளலாம்.

## முத்துக் குளியல் – சலாபத் தேவை வரி

பழங்காலக் கல்வெட்டுச் செய்திகள் பல வரலாற்றை முன் வைக்கின்றன. முத்துக்குளியல் செய்பவர்கள் வரி செலுத்த வேண்டும் என்ற செய்தியைப் பின்வரும் கல்வெட்டுச் செய்தியின் வாயிலாக உணரலாம். இத்தகைய வரிகள் உள்நாட்டினருக்கு அல்ல. அண்டை நாடுகளுக்கே வரி விதிக்கப்பட்டுள்ளது என்பதையும் அறிய வழிவகை செய்கிறது. இக்கருத்தாக்கங்களைப் பின்வரும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை கூற்றின் வாயிலாகக் கவனிப்போம். அம்முறையே, "இருபது இருபத்து மூன்று நூற்றாண்டுகட்கு முன்னே விளங்கிய முத்துக் குளிக்கும் தொழில் இரண்டு மூன்று நூற்றாண்டுகட்கு முன் நிலவிய நாயக்க மன்னர் ஆட்சிவரையில் சிறந்த அளவில் இருந்திருக்கிறது. இத்தொழிலால் பாண்டிநாட்டரசுக்கு நல்ல வருவாயும் இருந்தது. முத்துக்குளிப்பார்க்கு விதிக்கப்பட்டிருந்த வரி சலாபத் தேவை எனப்படும் என்றும், இதனைக் குடநாட்டுள் வாழ்பவர் செலுத்த வேண்டும் என்றும், அந்நாளைய அரசு ஆணையிட்டுள்ளது (A.R.No.432 of 1929-30) என ஆற்றூர்க் கல்வெட்டு அழகாகக் கூறுகிறது" (மேலது; ப.424). இக்கூற்றின் வழி முத்துக்குளிப்பதற்கு மக்கள் வரி செலுத்தியுள்ளனர் என்ற செய்தியை அறிந்துகொள்ள முடிகிறது. மன்னர் ஆட்சிக் காலத்தில் மக்கள் ஒவ்வொன்றிற்கும் வரி செலுத்தி உள்ளனர் என்பதை அறிய முடிகிறது. இக்கருத்தியலோடு சமகால வாழ்வியலையும் பொருத்திப் பார்க்க நேர்கிறது. மேலும், இச்செய்தி சில வினாக்களையும் எழுப்பி விடுகிறது. குட்டநாடு என்பது இவ்வரி செலுத்திய காலத்தில் பாண்டி நாட்டின் எல்லைக்குள் இருந்ததா இல்லையா என்ற வினாவை முன்வைத்து மேலும் ஆராய முற்படலாம்.

முன்னரே குறிப்பிட்ட செய்திகளின் அடிப்படையில் பார்த்தால் "குடநாட்டுக் கொற்கை" என்பது பாண்டியநாட்டின் எல்லைக்குட்பட்டதென்று தோன்றுகிறது. இப்பின்புலத்தில் நோக்க மதுரைக்கு உட்பட்ட மக்கள் தன்னாட்டிற்கு வரி செலுத்தினர் என்பதை அறியலாம். மேலும், "கொற்கையைச் சூழ்ந்த நாடு குடநாடு" என்ற

அடிப்படையில் பார்த்தால் குடநாடும், கொற்கை நாடும் பிரிந்த பின்னர்க் குடநாட்டு மக்களிடம், அதாவது வேற்றுநாட்டு மக்களிடம் இவ்வரியைப் பெற்றார்களா என்ற அடிப்படையிலான புரிதலும் தேவையாகிறது.

## கொற்கை வேந்தன் – சிறப்புப் பெயராய்வு

பாண்டிய வேந்தர்கள் சிறப்புப் பெயரால் அடையாளப்படுத்தப்பட்டுள்ளனர். சமகாலச் சூழலில் தனிமனிதச் சிறப்பொழுக்கத்திற்குத் தக்க சிறப்புப் பெயர் வைத்து அழைத்தல் முன்னோர் தொடர்ச்சி எனக் கருதலாம். இத்தகைய புரிதல்களோடு பின்வரும் கூற்றினைப் பொருத்த முனைவோம். அம்முறையே, “செம்மை யுடைமையின் சேயிறா என்றார். “தெண்கழிச் சேயிறா” என்புழியும் இதுவே கூறிக்கொள்க. ‘கொற்கைக் கோமான்’ என்றது. பாண்டி வேந்தர்குரிய சிறப்புப்பொருள் ஒன்று. “கொற்கை வேந்தன்” (T.A.S.Vol.I.Part.VI.P.97) என்று பிற்காலக் கல்வெட்டுகளும் பாண்டி வேந்தரைக் கூறுகின்றன” (மேலது; ப.428). இக்கூற்று பாண்டி வேந்தர்களின் சிறப்புப் பெயரைப் புலப்படுத்துகிறது. கால மாற்றங்களுக்கு ஏற்பச் சிறப்புப் பெயர்களும் மாற்றம் காண்பதையும் இக்கூற்று உணர்த்துகிறது. தொடக்கக் காலங்களில் “கொற்கைக் கோமான்” என்றும், பிறகு “கொற்கை வேந்தன்” என்றும் அழைக்கப்பட்டுள்ளதை அறிய முடிகிறது. இத்தகைய இரு சிறப்புப் பெயர்களின் பொருண்மை என்பது ஒன்றாக இருப்பதையும் கவனிக்கலாம். சங்க இலக்கிய ஐங்குறுநூற்றின் முதல் தொகுதியான மருதம், நெய்தல் என்ற இரு திணைகள் ஆராயப்பட்டது. இதற்குப் பின்னர் குறிஞ்சி, முல்லை, பாலை என்ற மூன்று திணைகள் அடங்கிய இரண்டாம் தொகுதி ஆராயப்பட உள்ளன. இவ்விரு தொகுதிகளும் செவ்விலக்கியக் கருவூலம், தமிழ்மண் பதிப்பகத்தின் பதிப்புகளாகும். ஒவ்வொரு நூலுக்கும் ஒரு பதிப்பை அணுகுவது என்பது சங்க இலக்கிய உரை புரிதலோடு, பதிப்பகம் சார்ந்த பதிப்பு அரசியல் சார்ந்த பின்புலத்தை ஆராய்வதே இதன் நோக்கமாகும். இப்பின்புலத்தில் ஒவ்வொரு பதிப்பு சார்ந்த உரை ஆராயப்படுகிறது.

## குறிஞ்சி நில ஊர்ப்பெயர்கள்

குறிஞ்சி நில மக்களின் அடையாளங்களை அடிப்படையாகக் கொண்டு குறிஞ்சி நில ஊர்ப்பெயர்கள் அமைந்திருப்பதைக் கவனிக்கமுடிகிறது. ஊர்ப்பெயர்கள் திணைப்பெயர் சார்ந்தும், அங்குவாழ் மக்கள் சார்ந்தும், குறிஞ்சி மண் சார்ந்தும் அவ்வூர்ப் பெயர்கள் அமைந்திருக்கின்றன. இத்தகைய பின்புலத்தில் பின்வரும் கூற்றினை ஆராயலாம். அம்முறையே, “குறிஞ்சி நிலத்தவர் உறையும் இடங்களில் குறிஞ்சியாழின் இனிய இசை கேட்கப்படும். தொண்டகம், முருகியம் முதலிய பறைகளின் முழுக்கமும்

உடன் நிலவுகிறது. ஊர்கள், குன்றக்குடி, சிறுகுடி யெனவும், கல்லடை குறிஞ்சி(A.R.90 of 1907) வேள்குறிச்சி (A.R.No.124 of 1907) எனவும் பெயர் பெற்றுள்ளன" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2008; ப.2). இக்கூற்று குறிஞ்சித் திணைப் பெயராலே இவ்வூர்ப் பெயர்கள் அமைந்திருப்பதை உணர்த்துகிறது. மேலும், இவ்வூர்ப் பெயர்களை இலக்கியப் பதிவுகளும், கல்வெட்டுப் பதிவுகளும் எந்தவித வேறுபாடும் இன்றிப் பொருந்தி இருப்பதாலும் இவ்வூர்ப் பெயர் உறுதிப்படுகிறது. இருப்பினும், ஊர்ப் பெயர்கள் கால மாற்றங்களுக்கு ஏற்ப மாறுவதும் இயல்பாகவே அமைவதையும் அறிய முடிகிறது.

## கபிலர் வரலாறு கூறும் கல்வெட்டு

கபிலர் நட்பு நிலைப்பாட்டினை இலக்கியப் பதிவுகள் வாயிலாக அனைவரும் அறிந்த ஒன்றாகும். இச்செய்தியை மேலும் உறுதிப்படுத்த ஔவை சு.துரைசாமிப்பிள்ளை கல்வெட்டுத் தரவினைக் கொண்டு உறுதிப்படுத்துகிறார். இக்கருத்தாக்கங்களைப் பின்வரும் கூற்றின் வாயிலாக ஆராயலாம். அம்முறையே, "திருக்கோவலூரில் பாரி மகளிரை மணஞ்செய்து தந்து தமது நட்புக்கடனை ஆற்றி அவ்வூரருகில் ஓடும் பெண்ணையாற்றின் துருத்தியில் வடக்கிருந்து உயிர் நீத்தார். கபிலர் அவ்விடத்தே இப்போது ஒரு பெரிய கற்பாறைதான் உளது. எஞ்சிய மரமும் செடிகளும் மண்ணும் பிறவும் ஆற்றில் கரைந்தொழிந்தன. திருக்கோவலூர் (S.I.I.Vol.VII.No. 863) கல்வெட்டொன்று இச்செய்தியைச் சிறப்பித்துக் கூறுகின்றன" (மேலது; பக்.3-4). இக்கூற்று கபிலரின் நட்புறவினை வெளிப்படுத்துகிறது. சமகாலத்தில் இவ்வூரில் கபிலக்கல்லு என்று அழைக்கப்படுவதை அறியலாம். எனவே, இத்தகைய வரலாறுகள் உண்மை என்பதற்கான சான்றுகளாக இக்கபிலக்கல்லை அடையாளம் காணலாம்.

## வள்ளிமலை – ஊர்ப்பெயராய்வு

வள்ளிமலை என்ற ஊர்ப் பெயரை இலக்கியப் பதிவுகள் வெவ்வேறு விதமாகச் சொல்லப்பட்டுள்ளதை அறியலாம். வள்ளியங்கானம், வாடா வள்ளி என்ற பெயர் மாற்றங்களைத் தாங்கி வந்துள்ளதை அறிய முடிகிறது. ஆனால், இறுதியாகக் கல்வெட்டுத் தரவு தரும் பெயராலே ஊர் பெயர்த் தெளிவு ஏற்படுகிறது. ஆனாலும் இவ்வூர் எவ்வூர் அருகில், எந்த மாவட்டத்தில் உள்ளதென்ற தெளிவை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை கொடுக்கவில்லை. இதனால், மேலும் இவ்வூர் பற்றியான பார்வை விசாலமாகிறது. இக்கண்ணோட்டத்தில் பின்வரும் கூற்றினைக் நோக்கலாம். அம்முறையே, "வள்ளியங்கானம், வள்ளிக்கொடிகள் காடுபோல் படர்ந்துள்ளமை பற்றி

இவ்வாறு கூறப்பட்டது; “வாடா வள்ளியங்காடு படர்ந்தோரே” என்றார் பிறரும். இனி, வள்ளிமலையைச் சார்ந்த காடு என்றுமாம். இப்பகுதி முதல் இராசராசன் காலத்தும் அவற்கு முன்பும் “சயங்கொண்ட சோழ மண்டலத்துப் பெரும்பாணப்பாடி நாட்டுத் துய்யநாட்டு, வள்ளிமலைப் பற்று”(A.R.No. 96 of 1921) என்று கல்வெட்டுகளில் வழங்கி வந்துள்ளது” (மேலது; ப.85). இக்கூற்று வள்ளிமலை என்ற பெயர்த் தெளிவுடன் அவ்வூருக்கான வரலாற்றுத் தேடலையும் ஏற்படுத்துகிறது. இப்பெயர் ஆய்வில் இரண்டு விதமான கருத்தினை முன்வைக்க நேரிடுகிறது. ஒன்று, காடு சார்ந்த பகுதி வள்ளிமலை என்பதனால் கடவுள் முருகன் சார்ந்த வள்ளிமலையாக இருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது. இரண்டாவது, வள்ளிமலை என்பதாலே பாரதி கூற்றின் படியான “வெள்ளிப்பனி மலை மீது உலாவுவோம்” என்ற பாட்டின் அடிப்படையாகக் கொண்டால் இமயமலை போன்ற பனி நிறைந்த மலைப்பகுதியாகவும் இருந்திருக்கலாம் என்றும் எண்ணத்தோன்றுகிறது. எனினும் இவ்வூர் குறிஞ்சி நிலப்பகுதி என்பது தெளிவாகிறது.

## பேயனார்

பேயனார் என்ற பெயராய்வில் பேயனார் என்பவர் சேர மரபைச் சேர்ந்தவராக இருக்கலாம். இப்பேயனார் முல்லைத் திணை பாடுவதில் சிறந்து விளங்கியுள்ளதை அறிய முடிகிறது. எனவே, இப்புலவர் முல்லை நிலத்தைச் சார்ந்தவராக இருக்கலாம். இப்புலவருக்கான ஊர்ப்பெயரை அடையாளம் காண முடியவில்லை என்பதையும், பேயனார் மரபு பற்றியான செய்திகளையும் பின்வரும் கூற்றின் வாயிலாக ஆராய்ந்து அறிவோம். அம்முறையே “பேயனாரது ஊர் இன்னது எனத் தெரிந்திலது. இடைக்காலக் கல்வெட்டுகளில் காணப்படும் மக்களுள் உழான் என்னும் பெயருடையார் தொண்டை நாட்டிலும், மன்றாடி யென்னும் பெயருடையார் கொங்கு நாட்டிலும் பெருகியிருப்பது போல, பேயன் என்ற பெயருடையார் சேரநாட்டில் காணப்படுகின்றனர். திருநெல்வேலியிலுள்ள நெல்லையப்பர் கோயில் கல்வெட்டுகளில் சேந்தப்பிரான் பேயனான யாதவராயன் (S.I.I.Vol.V.No. 416; A.R.No.127 of 1894) என்பான் காணப்படுகின்றான்; அவன் தாழைக்குடி என்னும் ஊரினன். இதனை “மலைமண்டலத்துத் தாலைக்குடி” என்று கல்வெட்டு கூறுகிறது. குறும்பர்நாடு வட்டத்திலுள்ள முட்டுங்கல் கல்வெட்டில் பேயனான கண்டன் நீலன் என்றும் ஏர்நாடு வட்டத்து வண்டூர்க் கற்குகைக் கல்வெட்டில் பேயனான தாமத்தன் என்றும் வருவன மேலே கொண்ட கருத்துக்குச் சான்று பகர்கின்றன. இவற்றால், இம்முல்லை பாட்டுக்களைப் பாடிய ஆசிரியர் பேயனார் சேர நாட்டினர் எனக் கோடற்கு இடமுண்டாகிறது” (மேலது; ப.360). இக்கூற்று பேயனார் பற்றிய பெயர்ப் புரிதலை ஏற்படுத்துகிறது. பேயனான யாதவராயன், பேயனான கண்டன் நீலன், பேயனான தாமத்தன் என்ற பெயர்களைக் கவனிக்கும் பொழுது பேயனார் என்பது இம்மரபுக்கான

பொதுப் பெயராக இருந்திருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது. மேலும், யாதவராயன் என்ற பெயரின் வழி பேயனார் யாதவர் சமூகத்தைச் சார்ந்தவராகவும் இருக்கலாம். முல்லைத் திணையைப் பாடிய பேயனார், முல்லை நில மக்களும் யாதவர் என்பதால், இப்புலவரையும் இச்சமூகத்தினராக இணைத்துப் பார்த்தல் பொருந்தும்.

**கூத்து மரபு**

தொடக்கக் காலங்களில் தமிழ்க் கூத்து, தமிழ்ப் பண் மரபு என எல்லா நிலைகளிலும் தமிழியல் மரபே தழைத்திருந்ததை அறியலாம். பிற்காலச் சூழலில் ஆரியக் கலப்பால் இக்கலைகள் அனைத்தும் ஆரிய மரபாக்கப்பட்டன. பிற்காலச் சூழலில் ஆரியமும், தமிழும் பிரிக்க முடியாத நிலையில், இவை இரண்டினையும் இணைத்தே பார்க்கத் தொடங்கியது இச்சமூகம். தமிழ்ப் பண்ணிசையும், கூத்து மரபுகளும் தனக்கான அடையாளங்களை இழந்து நீர்த்துப்போகும் தன்மை காணப்படுகிறது. இப்பின்புலத்தில் பின்வரும் கூற்றினை ஆராயலாம். அம்முறையே, "தமிழ்க் கூத்தர் ஆரியக்கூத்து ஆடிப்பார்த்தனர். முடிவில் இசையும் கூத்தும் இறந்தொழிந்தன. அவற்றை வாழ்க்கைத் தொழிலாகக் கொண்டு வாழ்ந்த கலைவாணரான பாணரும் கூத்தரும் மறைந்தொழிந்தனர். இடைக்காலப் பல்லவ பாண்டிய சோழர் கல்வெட்டுகளில், பாணரும் கூத்தரும் ஆங்காங்கே மிகச் சிலராய் வாழ்ந்து வந்த குறிப்புகள் காணப்படுகின்றன (A.R.No. 90 of 1931-2). இசை மறைந்த பின்பு, தமிழ்க்கூத்து மாத்திரம், தமிழ்க்கூத்து, ஆரியக்கூத்து எனப் பிரிந்து நின்றுவாழ முயன்ற திறத்தைத் திருவொற்றியூர் முதலிய இடங்களிலுள்ள கல்வெட்டுகள் காட்டுகின்றன" (மேலது: ப.455). இக்கூற்று தமிழ்க்கூத்து மரபு பற்றிய தெளிவை ஏற்படுத்துகிறது. கூத்துக் கலையை மேற்கொண்ட பாணர் இனம் அழிய ஆரியக்கூத்து காரணமாக இருந்திருக்கலாம். தமிழ்ப் பண் இசை மரபு என்பது தமிழ்ச் சமூகத்தில் அறியப்படாமல் போகும் நிலை ஏற்பட்டுள்ளது. கூத்துக்கலையும், கூத்து மரபினரும் ஆரிய வருகையால் தமிழ்க்கலை நீர்த்துப்போயுள்ளது. இத்தகைய கலைகளை மீட்டுருவாக்கம் செய்வது தேவையாகிறது. இக்கலைகள் மீட்டுருவாக்கம் செய்யப்படவில்லையெனில், வருங்காலத் தலைமுறையினருக்கு இக்கலைகள் குறித்த அறிமுக அறிவுகூட இல்லாமல் போகும் நிலை ஏற்பட வாய்ப்பிருக்கிறது.

பாணர்களின் கூத்துக்கலையின் சிறப்பை உணர்ந்த மன்னர்கள் பொன், பொருள், நிலம் கொடுத்துச் சிறப்பித்துள்ளனர் என்பதை அறியலாம். அக்காலச் சமூகத்தில் பாணர் இனத்திற்கான மதிப்பு என்பது அதிகரித்தே இருந்துள்ளதை அறியலாம். பாணர்கள் தங்களின் கலைகளின் வாயிலாக மன்னன், மக்களுக்கு அறநெறிகளைப் போதித்துள்ளனர் என்பதும் புலப்படுகிறது. சமூக நெறிபிறழ் மாற்றங்களை இக்கூத்துக்

கலையின் வாயிலாகப் பாணர்கள் செப்பம் செய்துள்ளனர் என்பதைப் பின்வரும் கூற்றின் வாயிலாக ஆராயலாம். அம்முறையே, "இயல் இசை கூத்துகளில் சிறந்த புலமை பெற்ற பாணர், மன்னர் மதிக்கும் மாண்பும் செல்வமும் பெற்று மேன்மை எய்தினர். ஒரு பாண்டியன் "பொன்னி வளநாடு பாணன் பெறப்புரிந்தான் (P.S.Ins.No.652) என்றும், மாறைநாட்டுத் தலைவனான வாணன், மதுரையைக் கைப்பற்றிப் பாணர்க்குத் தந்தக் குறிப்பை "பாணன் மதுரைப்பதி யாளவைத்த பிரான்" என்றும் பிற்காலக் கல்வெட்டுகள் கூறுவது பாணர்கள் பற்றிய சமூக மதிப்பீட்டை வெளிக்காட்டுகின்றன. பாணர் குடிகள் என்பது பாணர், துடியர், பறையர், முழவர் என்ற பிரிவுகளை உள்ளடக்கியதாகக் கருதலாம். எனவே, பாணர் குடிகளைப் பெருங்குடி என்றும் அழைத்துள்ளனர் என்பதையும் புலப்படுத்துகிறது. இத்துடன் ஐங்குறுநூற்றின் இரண்டாம் பாகம் நிறைவுற்றது.

## செவ்விலக்கியக் கருவூலம், தமிழ் மண் பதிப்பின் குறைகள்

இப்பதிப்பின் குறைகள் குறைந்த அளவே காணப்படுகின்றன. உரை முழுவதும் கல்வெட்டுத் தரவுகளைச் சரியாகவே கொடுத்துள்ளது சிறப்பானதாகும். ஆனால், பழைய பதிப்பின் முன்னுரைகள் எதுவும் கொடுக்கப்படாததே இப்பதிப்பின் பெருங் குறையாகும். பழைய பதிப்பின் முன்னுரைகள் மூலத்திற்கான உரைத் தெளிவை ஏற்படுத்தும் நுழைவாயில் எனலாம். எனவே பழைய பதிப்பின் முன்னுரை என்பது அவசியமாகிறது. ஒரு நூலினை ஒரு பதிப்பிலிருந்து, மற்றொரு பதிப்பாக வெளியிடும் பொழுது இத்தகைய பிழைகள் நேர்கின்றன. காட்டாக ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் முதற் பதிப்பு என்பது கழகத்தாரால் வெளியிடப்பட்டதாகும். எனவே, ஔவை சு.துரைசாமிப்பிள்ளை கழக வெளியீட்டைப் புகழ்ந்து அல்லது பதிப்பகத்தார் என்ற முறையில் அப்பதிப்பைப் பற்றி எழுதுதல் இயல்பு. கழகத்தாரின் முதற் பதிப்பின் முன்னுரைகளைத் தமிழ்மண் பதிப்பகத்தார் தவிர்த்ததற்கான காரணம் இதுவாகவும் இருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது. இத்தகைய முறைகள் பதிப்பில் தவிர்க்கப்பட வேண்டியவை. அப்பொழுதுதான் மூலப்பிரதி சார்ந்த உரை வெளிப்பாடுகள் சார்ந்த பின்புலத்தினை அறியமுடியும்.

## தொகுப்புரை

- சங்ககாலக் ‘கழுமலம்’ சமகாலத்தில் குழுமம் என்று அழைக்கப்படுவதை அறியமுடிகிறது.
- ‘மிளை’ என்பது ஊர்ப் பெயராகக் கொள்ள நேர்ந்தாலும் நல்வேட்டனார், கிழான் என்ற சொல்லாட்சி இவரின் சமூக மதிப்பீட்டை வெளிப்படுத்தும் குறியீடு எனலாம். எனவே நல்வேட்டனார் என்பவர் வேளாள மரபைச் சார்ந்த மேட்டுக்குடிச் சமூகமாகக் கருதலாம்.
- செட்டிமார்களின் சமகாலத் தொழிலே சங்க காலத்திலும் நிலவி இருந்தன என்பதற்கான சான்றாகவே பொன்னின் ஓட்டம் காணும் தொழிலை இனம் காணலாம். தற்காலத்திலும் வண்ணக்கப்பாடி, வண்ணக்கணர் என்ற பெயர்களைக்கொண்ட ஊர்கள் இருப்பதையும் அறிய முடிகிறது. வடக்குப் பகுதியில் இத்தொழில் செய்தமையால் இப்பெயர் பெற்றமை புலனாகிறது.
- மருங்கூர் என்ற பெயர்கொண்ட ஊர்கள் பல இருந்துள்ளன என்பதை அறியமுடிகிறது. கடல்கோளால் பல ஊர்கள் அழிந்து போனதையும் அவ்வூர்ப்பெயர்களையும் தாங்கி நின்ற கல்வெட்டுகளால் அவ்வூர்ப் பெயர்களை அடையாளம் காணமுடிகிறது.
- மலாடு என்பது சேதிநாடு எனவும் மகதை நாடு எனவும் கால மாற்றங்களுக்கு ஏற்ப ஊர்ப்பெயர்களும் மாறி வருவதை இவ்வுரைகளின்வழியான கல்வெட்டுத் தரவுகள் உணர்த்துகின்றன.
- மாறோக்கமே பிற்காலத்தில் மாறமங்கலம், மாறவன்மன் மங்கலம் எனவும் மாறியுள்ளதக் கல்வெட்டுத் தரவுகள் குறிப்பிடுவதை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை மறுக்கிறார்.
- இங்குக் கல்வெட்டுத் தரவுகளின் பிழைகளைச் சுட்டிக்காட்டுகிறார். கல்வெட்டுகள் மாறோக்கமான மாறவன்மன் என்றே குறிப்பிட்டிருக்க வேண்டும் என்ற வாதத்தை முன்வைக்கிறார்.

தமிழியல் வரலாறு காலத்திற்கேற்ப சமய, சமூக, பண்பாட்டு அடிப்படையில் பல பன்முகப் பின்னணிகளைக் கொண்டுள்ளது. தமிழியல் கல்விப்புலம் சார்ந்த வரலாறு சரியாக வரையறுக்கப்படாததால், தமிழிலக்கிய வரலாறு எழுதியல் நம்பகத்தன்மை அற்று இருக்கிறது. கால ஆராய்ச்சியில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு காலத்தை முன்வைக்கின்றனர். சரியான காலப் புரிதல் இல்லாமல் சமூகவியல் பின்புலத்தில் இலக்கியங்களை உள்வாங்குவதில் சிக்கல் ஏற்படுகிறது. இப்பின்புலத்தில், ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரைகளில் மேற்கோள்களாக இடம்பெற்றுள்ள கல்வெட்டுச் சான்றுகள் வரலாற்றைக் கட்டமைக்க எவ்விதம் பயன்படுகின்றன என்பதை அடையாளப்படுத்துவதாய் இந்த ஆய்வு அமைகிறது.

தொல்தமிழர் வரலாற்றை அறிய அக்கால ஆவணங்களாகிய இலக்கியப் பனுவல்களும், கல்வெட்டுகளும், அகழ்வுச் சாசனங்களும், நாணயங்களும் துணைபுரிகின்றன. தமிழியல் ஆய்வுக்கு இலக்கியச் சான்றுகளோடு, பிற ஆவணச் சான்றுகளையும் இணைத்து நோக்கும்பொழுது மொழியின் தொன்மையும், மக்களின் வாழ்க்கைத் தன்மையும் நன்கு புலப்படும். நவீன ஆய்வாளர்கள் இலக்கியச் சான்றுகளை மட்டும் வைத்து நோக்குவதன் நம்பகத்தன்மையைக் கேள்விக்குட்படுத்துபவர்களாக இருக்கின்றனர். அதனால், புறச்சான்றுகள் உள்ள ஒரு இலக்கியக் கூற்றுகளைக் காட்டுவதே இந்த ஆய்வின் நோக்கமாகும். இது வரலாற்று ஆராய்ச்சியே தவிர இலக்கிய நயம் காட்டும் ஆய்வு அல்ல.

## ஆய்வுப் பின்புலமும் – வரலாற்று நெறிமுறையும்

ஆய்வு நெறிமுறைகளில் ஒன்றான வரலாற்று நெறிமுறையினை அடியொற்றியது கல்வெட்டு ஆராய்ச்சியாகும். வரலாற்று நெறிமுறையின் அடிப்படையில் கல்வெட்டாய்வை அணுகுவது சாலச்சிறந்தது. ஒரு இலக்கியப் படைப்பைக் கருத்தாழம், மொழிநடை, இலக்கியச் செழுமை என்று ஒரு பட்சமாகப் பார்க்கும் தன்மைகளே தமிழியல் ஆய்வுலகில் நிலவுகிறது. அதைத் தவிர்த்துப் படைப்பு தோன்றிய காலம், ஆசிரியர் சார்ந்த சமூகப் பின்புலம் இவற்றைப் பற்றிய ஆய்வை நாம் அதிகம் எடுத்துக்கொள்வதாகத் தெரியவில்லை. கால வரையறை என்பது தமிழியல் சூழலில் ஒருவகையான அனுமானத்தின் அடிப்படையிலேயே செயல்படுகிறது. தமிழ் இலக்கியம் தொன்மையுடையது என்று மார்தட்டிக்கொள்கிறோம். ஆனால் நமக்கான வரலாறு இன்னும் சரியான கால வரையைத் தீர்மானிக்கமுடியாத நிலை நிலவுகிறது.

கால வரையறை என்பது இலக்கியங்களை மேலும் வலுவூட்டும் தன்மை உடையதாகும். தமிழக இலக்கிய வரலாறு முறையான வரலாற்று பின்புலத்தைப்

பெறவில்லை என்பது திண்ணம். படைப்பு, படைப்பு சார்ந்த பின்புலம், சமூகப் பின்னணி முதலியவற்றைக் கருத்தில்கொண்டு வரையறை செய்யும் கால முடிவே சரியானதாகும். இதனைத் தவிர்த்துத் தமிழியல் வரலாறு ஒரு சார்புத் தன்மையாகவே பிணைக்கப்பட்டுள்ளது. இதன் காரணமாகவே தமிழ் வரலாறு ஒரு கராரான முடிவை எட்டுவதில்லை. இத்தகைய பின்புலத்தின் காரணமாகவே பல இலக்கியங்கள் சரியான புரிதல்களை ஏற்படுத்துவதில்லை.

## வரலாற்றின் தேவை

நமது தொன்மையை நிலைநாட்ட வரலாறு தேவையாகிறது. சரியான வரலாற்றைக் கட்டமைக்கத் தொல்லியல் சான்றுகளே துணை நிற்கின்றன. ஆனால், நம் சான்றோர்கள் பெரும்பாலும் ஏதோ காரணங்களால் கல்வெட்டாய்வைத் தவிர்த்தே வந்திருக்கின்றனர். அதில் ஒரு சிலர் மட்டுமே கல்வெட்டுச் சான்றின் அடிப்படையில் கால வரையறை செய்ய முயன்றுள்ளனர். கல்வெட்டின் வாயிலாகக் கால வரையறை செய்ய முயன்றவர்களில் குறிப்பிடத்தக்கவர் சதாசிவ பண்டாரத்தார், ச.வையாபுரிப்பிள்ளை, மயிலை சீனி வேங்கடசாமி மற்றும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை அவர்களை முன்வைக்கலாம். உரைகளைத் தெளிவுபடுத்த வந்த ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தவறாது வரலாற்றைக் கட்டமைக்க கல்வெட்டைத் தேர்ந்தெடுத்தார். இதன் காரணமாகவே இவரின் உரை வேறுபட்டு, காலத்தால் நிலைபெற்று நிற்கிறது எனலாம்.

சங்க காலம், நீதி இலக்கியக் காலம் என்று சொல்லிக்கொள்ளும் நாம் சரியான கால வரையறை செய்யத் தவறிவிட்டோம். இதனால், எந்த இலக்கியத்தையும் சரியான கால வரலாற்றுப் புரிதல்களோடு விளங்கிக்கொள்ளச் சிக்கல் ஏற்படுகிறது. இத்தகைய சிக்கல்களே சரியான இலக்கியப் புரிதல்களை உள்வாங்க மருட்டுகிறது. எனவே நமது வரலாறு மீள் கட்டமைப்பு அல்லது மீள் உருவாக்கம் செய்யப்பட வேண்டியது அவசியமாகிறது. எனவே வராற்றுக் கட்டமைப்பு, கல்வெட்டாய்வின் அடிப்படையில் அமைவதே சரியான வரலாற்றைத் தீர்மானிப்பதாகும்.

இலக்கிய வரலாறு என்பது வெறுமனே இலக்கிய நூல்களைப் பற்றிய சில தகவல்களைத் தருவதாக இருத்தல் கூடாது. இவ்வகையான தகவல்கள் எப்படிச் சமூக இலக்கியத்தின் பின்புலத்தை வெளிப்படுத்த முடியும். இத்தன்மைகளை மீறி ஆசிரியர் வரலாறு, ஆதரித்தோர் வரலாறு, சமூகப் பின்புலம், தலங்களின் வரலாறு, மன்னன் மரபின் வரலாறு உள்ளிட்ட அனைத்துத் தரவுகளையும் உள்ளடக்கி உருவாக்கும் வரலாறே தெளிவான முறையான வரலாற்றைக் கட்டமைக்க முடியும். இத்தகைய

வரலாற்றைத் தெளிவுபடுத்த கல்வெட்டு, செப்பேட்டுச் சான்றுகள் துணைநிற்கும். இப்பின்புலத்தின் அடிப்படையில் உருவாகும் வரலாறே காலம் கடந்து நிற்கும்.

## தமிழ் ஆய்வாளரும் கல்வெட்டாய்வும்

ஏன் தமிழ் ஆய்வாளர்கள் பெரும்பாலும் கல்வெட்டாய்வை மேற்கொள்ளவில்லை என்ற வினாவை முன்வைத்து விவாதிக்கத் தொடங்குவோம். தமிழ் ஆய்வாளர்கள் கல்வெட்டாய்வில் பெரும் தேக்கத்தை ஏற்படுத்தியுள்ளனர். கல்வெட்டு, செப்பேடு பற்றிய ஆய்வுகள் தமிழியல் சூழலில் அதிகம் ஆராயப்படவில்லை. சமூகத் தளத்தில் கல்வெட்டாய்வு அங்கொன்றும், இங்கொன்றுமாய் நடந்தேறியுள்ளதே தவிர, முழு அளவில் ஆய்வுத் தாக்கத்தை ஏற்படுத்தவில்லை. இதற்குச் சமூகத் தளத்தில் உள்ள மாற்றாந்தாரர்களான வந்தேறிகளால் திட்டமிட்டுச் செய்யப்பட்ட தடை ஒரு வகையாகும். அதேபோன்று நம் ஆய்வாளர்களும் கல்வெட்டாய்வைக் கவனத்தில்கொள்ளத் தவறிய நிலை இரண்டாம் வகையாகும். தமிழ் இலக்கியவாதிகள் இன்ப நுகர்ச்சி, வீர நெகிழ்ச்சியை அனுபவிக்க முற்பட்டார்களே தவிர, அதன் வரலாற்றுப் பின்புலத்தை ஆராய முற்படவில்லை.

ஒரு சில ஆய்வாளர்கள் கல்வெட்டை ஆராய முற்பட்டனர். அவர்களுள் சதாசிவ பண்டாரத்தார், ச.வையபுரிப்பிள்ளை, மயிலை சீனி வேங்கடசாமி, ஔவை சு.துரைசாமிப்பிள்ளை போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள். தற்காலச் சூழலில் அதன் தொடர்ச்சியாக ஐராவதம் மகாதேவன், இரா. மதிவாணன், நாகசாமி என்று விரல்விட்டு எண்ணும் ஒருசிலரே இருந்துவந்துள்ளனர். இவர்களும் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டனரா என்றால் அதுவும் கேள்வியாகவே தென்படுகிறது. இவ் ஆய்வாளர்கள் தன்னை மற்ற ஆய்வாளர்களிடம் இருந்து வேறுபடுத்திக் காட்டிக்கொள்ளவே சில கல்வெட்டுகளை ஆராய்ந்தார்களோ என்ற எண்ணமே மேலோங்கி நிற்கிறது. இவர்கள் முழுமையான கல்வெட்டாய்வை மேற்கொண்டு செயல்பட்டிருந்தால், நமக்குச் சரியான வரலாறு கிடைத்து இருக்கும் என்ற ஏக்கமே மீதம் மிஞ்சுகிறது.

நமக்கான வரலாறுகளை/பூர்வீகங்களைக் கல்வெட்டுகளே தீர்மானம் செய்ய முடியும். ஒரு வகையில் இலக்கியப் பதிவுகள் இருந்தாலும், அவை சில புனைவுகளைத் தாங்கி உள்ளதால் சரியான வரலாற்றை இலக்கியம் கொண்டு கட்டமைப்பது அபத்தமாகும். அக, புறக் கட்டுமானங்களைக் கொண்டே வரலாறு கட்டமைக்கப்படவேண்டும். கல்வெட்டு, செப்பேடு (புற), இலக்கியம் (அக) இவைகளை இணைத்து உருவாக்கும் வரலாறே தமிழியல் வரலாறாக இருக்கமுடியும்.

## வந்தேறிகளும் - வரலாற்று ஒடுக்கமும்/முடக்கமும்

வந்தேறிகளால் நமக்கான வரலாறு முடக்கப்பட்டுள்ளது. பிற்கால வந்தேறிகளால் - மாற்றாந்தாரர்களால் நமது தொல் மரபு புரிந்துகொள்ள முடியாமல் மறைக்கப்பட்டும் மறுக்கப்பட்டும் இருக்கிறது. நமக்கு நம் வரலாறு மறைக்கப்பட்டது திட்டமிட்டே நடத்தப்பட்டிருக்கிறது. நம் மக்களை வரலாற்றறிவு இல்லாதவர்களாக நிறுத்துவது அவர்களின் எண்ணமாக இருந்திருக்கலாம். அதே போன்று பிற்கால வேதாந்திகளால் முற்காலக் கல்வெட்டுகள் மறைக்கப்பட்டன. பிற்கால மரபான ஒரே கடவுள் ஒருவனே தேவன் என்று சொல்லத் தொடங்கியவர்கள் சிறு தெய்வ வழிபாட்டு முறையைக்கூறும் கல்வெட்டை மறைத்திருக்கலாம். ஏதோ ஒரு வகையான மதச் சார்புத் தன்மையைக் கொண்டவர்கள் மற்ற கடவுள்களை அழிக்க தன் கடவுளையே முதன்மைப்படுத்த சில சிறுதெய்வக் கடவுள்களைப் பற்றிக்கூறும் கல்வெட்டுகளை மறைத்திருக்கக் கூடும். இச்செய்தியை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றின் வாயிலாகக் கவனிப்போம்.

"நாட்டில் வாழ்வோரை வரலாற்றறிவில்லாத இருள் நிலை மாக்களாக நிறுத்துவது, அவர்களை ஆள்வோர் தாம் வேட்டியவாறு ஆட்டிப்படைக்கலாம் எனத் தீது கருதிய செயலாகும். அது சில நாட்டு அரசியல் வாழ்வில் நிலவியதுண்டு. அதன் பொல்லாத வாடை நம் நாட்டிலும் பரந்திருந்தது. அதனால் கல்வெட்டுகளும் செப்பேடுகளும் கண்டு வெளியிடும் செயல் ஊக்கமின்றிக் கிடந்தது வெளிவந்தனவும் பெருவிலை கொண்டு யாவரும் வாங்கிப் படிக்கும் நிலையில் இல்லா தொழிந்தன. அரசியல் உரிமைபெற்ற இந்நாளில் அவை யாவும் யாரும் எதிரெதிர் பயின்று பண்டைய வரலாற்றறிவு பெற்றுச் சமுதாயம் பொருளியல் தொழிலியல் சமயம் முதலிய துறைகளை எதிர்கால இன்ப வாழ்வுக்குத் துணையாகுமாறு சீர் செய்து கொள்ளலாம் என அறிஞர் பலர் ஆர்வத்தோடு எதிர்பார்த்தனர். அஃது இன்றுவரை நிறைவேறவில்லை. அரசுக் கட்டிலில் வீற்றிருக்கும் போலும்' ( ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, 1958; பக்.456-457). ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் இக்கூற்று இன்னும் பல ஆராயப்பெறாத கல்வெட்டுகள் இருப்பதை உணர்த்துகிறது. தற்கால அகழ்வாய்வில் வெளிக்கொணரும் கல்வெட்டுகளை ஆய்வதிலே ஆய்வாளர்கள் கவனம் செலுத்தி வருகின்றனர். ஆனால், ஏற்கனவே, எடுக்கப்பட்டுள்ள கல்வெட்டுகளை மீளாய்வு செய்ய எவரும் முற்படுவதில்லை. எனவே, பழைய கல்வெட்டுகளையும் இணைத்துப் பார்த்து நமது வரலாற்றைக் கட்டமைக்க வேண்டிய தேவை இருக்கிறது.

## உரை ஆளுகையில் கல்வெட்டுத் தாக்கம்

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை நெறியில் கல்வெட்டை இணைத்துப் பார்க்க வேண்டிய அவசியம் என்ன என்ற வினாவை எழுப்பி விவாதிக்கத்

தொடங்குவோம். பல உரைகளை வாசிக்க நேர்ந்த ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, மூல உரைகளின் காலத் தெளிவின்மையைக் கண்டு, நமக்கான உரைமரபைக் கட்டமைக்க முயன்றிருக்கிறார். நமக்கான வரலாற்றைக் கட்டமைக்க அகச்சான்றான இலக்கியங்களின் வாயிலாக, புறச்சான்றாகக் கல்வெட்டாய்வு தேவை என்பதை உணர்ந்திருக்கலாம். வரலாற்றுத் தெளிவைச் சமூகத்தில் விதைக்க, தனது உரைகளில் கல்வெட்டாய்வை நிகழ்த்திக்காட்டியவர் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை. இதற்கான அவரின் கூற்று, "வரலாறு காண்டற்குதவும் கல்வெட்டுகளையும் பிறவற்றையும் கண்டறிந்து வெளியிட்டுப் பொதுமக்கட்கு உணர்த்துவது அவர் தமது தொல் வரவு நேர்ந்து எதிர்கால வாழ்வைச் செம்மையுற அமைத்துக் கோடற்கு உதவும் என்ற கொள்கை மேனாடுகளில் சிறந்த நற்பயன் விளைத்திருக்கிறது" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; சைவ இலக்கிய வரலாறு; 1958, ப.456). இக்கூற்று அவர் கல்வெட்டாய்வின் மீது வைத்திருந்த வரலாற்றுப் புரிதலைக் காட்டுகிறது. இத்தகைய தேடல்களின் வாயிலாகத் தொடர்ந்து பல உரைகளில் கல்வெட்டாய்வை முன்னெடுத்துச் செல்கிறார்.

## பழமை போற்றலும் புதுமை மோகமும்

தமிழினம் தனக்கான தனிக் குணங்களைக் கொண்டுள்ளது. மேலை நாட்டுக் கொள்கைகளை உடனே உள்வாங்கும் தன்மை உடையது. அதேபோன்று, தாங்களே அனைத்திற்கும் முன்னோர்கள் பழமையானவர்கள் என்று சொல்லிக்கொண்டு தங்களது தொல் பழமையை நிலைநாட்டத் துடிப்பவர்கள். "வந்தாரை வாழவைக்கும் பூமி" என்ற சொல்லாட்சி அதன் அடிப்படையில் உருவானவையாகும். தமிழியல் ஆய்வாளர்கள் மேலைநாட்டுக் கோட்பாடுகளை உள்வாங்கி நம் இலக்கியங்களைப் பொருத்திப் பார்ப்பதே சரியானது என்ற கருத்தைக் கொண்டுள்ளார்கள். பெரும்பாலும் தமிழியல் கோட்பாடுகளை தவிர்த்தே வருகின்றனர். மேலைநாட்டுக் கோட்பாடுகளைப் பேசுபவர்களே அறிவுஜீவிகள் என்று கருதும் மனோபாவம் இருக்கிறது.

புதுமை மோகம் என்பது தமிழினத்தின் குணாதிசயங்களில் ஒன்றாகும். தமிழினத்தின் கருத்துகளை உள்வாங்க மறுக்கும் சிலர், மேலைநாட்டுக் கருத்தாக்கங்களை உடனடியாக மேலெடுக்கின்றனர். அம்முறையே, "தமிழகத்துத் தமிழினத்தவர்களுள் பிறவிப் பண்புகளுள் புதுமை காமுறல் என்பது சிறந்த ஒன்றாகும். யாவரேனும் புதியவர் வரக் காணினும் புதுக்கருத்தும் புது மொழியும் எய்தப் பெறினும் அவர்தம் குணம் செயல்களையோ அவற்றின் நலந்தீங்குகளையோ முன்னுற நோக்காது வரவேற்று மேற்கொண்டு தழீஇச் செல்வது அப்புதுமைக் காமத்தின் செயற் சிறப்பாகும்" (இரா. குமரவேலன்; 2010, ப.19). இத்தகைய கூற்றுகள் தமிழரின் புதுமை மோகத்தை

உறுதிப்படுத்துகிறது. வந்தவர்களை வாழவைத்து இவர்கள் வாழவழி இன்றி நிற்கும் போக்கே இன்று நிலவுகிறது. புதுமை மோகத்தால் தமிழர் இழந்தது பல. மேலையக் கோட்பாடு மேலைய நடை, உடை, மொழி மோகம் அனைத்தும் தமிழர்களைக் கவர்ந்து இழுக்கின்றன. நமக்கான இசை, கூத்து மேலை மோகத்தால் தமிழ் மரபை இழந்து நிற்கிறது. அதாவது, "புதுமை இசையும் புதுமைக் கூத்தும் தழுவமுயன்று, அன்னநடை கற்கப்போய் உள்ளநடையும் இழந்தாற் போலத் தமிழர்க்குரிய பண்ணிசையும் தமிழ்க்கூத்தும் இருந்த இடம் தெரியாமல் கெடச்செய்துகொண்டன. தமிழினத்தின் புதுமை மோகவெறி அதனை மீளத் தலைதூக்காத பேரிருட் படுகுழியில் நன்றாகப் புதைத்துவிட்டது" (மேலது; ப.19). இக்கூற்று நாம் இழந்த கலை மரபைக் காட்டுகிறது. அதேபோன்று நமக்கான கலை வடிவங்கள் இன்றளவில் பெரும்பாலும் அந்நியமாக்கப்பட்டிருப்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டி இருக்கிறது. இந்திக்காரன் இந்திக்காரனாக வாழ்கிறான், மலையாளி மலையாளியாக வாழ்கிறான், கன்னடன் கன்னடனாக வாழ்கிறான், தெலுங்கன் தெலுங்கனாக வாழ்கிறான், தமிழர் மட்டும் ஏன் திராவிடர் என அழைக்கப்படுகின்றனர் என்ற வினா எழுகிறது. தமிழர் வாழும் நாடு மட்டும் எப்படித் திராவிட நாடு என்று அழைக்கப்படுகிறது என்பதும் மேலாய்வுக்குரியதாகும்.

## பதிற்றுப்பத்து உரை காட்டும் கல்வெட்டுப் பதிவுகள்

பதிற்றுப்பத்து நூலின் உரையில் கல்வெட்டுச் சான்று நிரம்பிக்கிடக்கிறது. எட்டுத்தொகை நூல்களான பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய இரு புறநூல்களை மட்டும் இவ்வியல் ஆராயமுற்படுகிறது. முதலில் பதிற்றுப்பத்து உரையின் கல்வெட்டுச் சான்றுகள் ஆராயப்படுகின்றன. உரை எழுதத் தொடங்கும் உரையாசிரியர் உரை முடிவில் உரையில் எடுத்தாண்ட நூல் விவரங்களை முன்வைத்துள்ளார். அதேபோன்று அவர் பயன்படுத்திய கல்வெட்டுத் தரவுகளையும் பதிவுசெய்துள்ளார். உரை பயில்வோருக்கு எளிதில் விளங்கும் வண்ணம் சேரநாட்டின் வரைபடத்தையும் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய பல்வகைப் புரிதல்களை வாசகனுக்கு ஏற்படுத்தும் உத்திகள் போற்றுதலுக்குரியதாகும். தெ.பொ.மீ., வெள்ளைவாரணனார், சதாசிவபண்டாரத்தார் போன்றோரின் ஆராய்ச்சி உரைகளும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரைச் சிறப்பை எடுத்தியம்புகின்றன.

## கல்வெட்டு உணர்த்தும் காலம்

பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்தைப் பாடியவர் குமட்டூர் கண்ணன் ஆவார். இரண்டாம் பத்து இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைப் பாடியுள்ளது. இப்பொழுது

குமட்டூர் கண்ணனும், நெடுஞ்சேரலாதனும் சமகாலத்தவரா என்ற வினாவை முன்வைத்து விவாதிக்கத் தொடங்குவோம்.

தமிழியல் இலக்கியச் சூழலில் பாடல்களைத் தொடங்கும் முன்பாகப் பதிகம் பாடும் மரபு இருந்துள்ளது கவனிக்கத்தக்கதாகும். இரண்டாம் பத்தின் பதிகத்தின் (வெள்ளைவாரணர் தரும் விளக்கம்) அடிப்படையில் பார்த்தால் குமட்டூர் கண்ணனும், நெடுஞ்சேரலாதனும் சமகாலத்தவர் என்று பதிவுசெய்துள்ளது அப்பதிகம். பதிகக் கூற்று, "பாடிப் பெற்ற பரிசில் உம்பற்காட்டு ஐஞ்னூறூர் பிரமதாயம் கொடுத்து முப்பத்தெட்டியாண்டு தென்னாட்டுள் வருவதனிற் பாகம் கொடுத்தான் அக் கோ. இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதன் ஐம்பத்தெட்டி யாண்டு வீற்றிருந்தான்" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2007; ப.4). இக்கூற்று இருவரும் சமகாலத்தவர் என்பதைப் புலப்படுத்துகிறது. இவ்வடிகளுக்கு விளக்கம் எழுதும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, சதாசிவ பண்டாரத்தாரின் பதிக விளக்கத்தை முன்வைக்கிறார்.

பதிகங்கள் ஆராய்ச்சிக்குரியது என்று ந.மு. வேங்கடசாமி நாட்டார் கூறியதால், ஔவை சு.துரைசாமிப்பிள்ளை பதிற்றுப்பத்துப் பதிகத்திற்கு உரை எழுதவில்லை. இமயவரம்பனைப் பாடி உம்பற்காடு என்ற பகுதியில் ஐந்நூறு ஊர்களைப் பிரமதாயமாகவும், அவனது தென்னாட்டு வருவாயுள் பாகமும் பெற்றாரென இரண்டாம் பத்தின் பதிகம் கூறுகிறது என்று பதிவு செய்துள்ளது நோக்கத்தக்கது. இத்தகவலைக் கொண்டு இருவரும் சமகாலத்தவர் என்பது தெளிவாகிறது. இத்தகவலின் அடிப்படையில் இருவரும் சமகாலத்தவர் என்று ஏற்றுக்கொண்டாலும் இன்னும் சில சிக்கல்கள் எழுவதைத் தவிர்க்க முடியவில்லை.

பதிகங்கள் என்பவை பாடல்கள் எழுதப்பட்ட காலத்திலே தோன்றியவை அல்ல. பதிகம் என்பவை பிற்காலத்தில் தொகுக்கப்பட்டோரால் அல்லது பழைய உரையாசிரியரால் எழுதப்பட்டிருக்கலாம். ஆனால், பெரும்பாலும் பிற்காலத்தவரால் பதிகம் எழுதப்பட்டதையே நமக்கு வரலாறு சுட்டுகிறது. இதன் அடிப்படையில் பதிகத்திற்கு அடிக்குறிப்பு தரும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றிலிருந்தே விவாதிக்கத் தொடங்கலாம்.

"இப்பதிகமும், ஏனைப் பத்துகளிற் காணப்படும் பதிகங்களும் பதிற்றுப்பத்து மூலம் மட்டில் உள்ள ஏடுகளிற் காணப்படவில்லை, பழைய உரையோடு கூடிய ஏடுகளிற்றான் காணப்படுகிறது" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2007; ப.4). இக்கூற்றை ஆராயத் தொடங்கினால் சில புரிதல்களை ஏற்படுத்த முடியும். மூல நூல்களில் பதிகங்கள் எழுதப்படவில்லை என்பதை இக்கூற்று தீர்மானம் செய்துவிடுகிறது. பழைய உரையோடு கூடிய ஏடுகளில் காணப்படுகிறது என்ற இக்கூற்றைக் கொண்டு பழைய

உரையாசிரியர் பதிகம் எழுதியிருக்கலாம் என்ற முடிவுக்கு வரநேர்கிறது. இருப்பினும் இங்கும் ஒரு சிக்கல் வெளிப்படுவதைக் காணமுடிகிறது. உரையெழுதுவதற்கு முன்பே தொகுத்தோரால் இப்பதிகம் இயற்றப்பட்டு இருக்குமோ என்ற வினாவை எழுப்பிவிடுகிறது. இவ்வகையான பல சிக்கல்களை எழுப்பி, அவற்றிற்குத் தீர்வுக்காணும் மிக முக்கிய சான்றாகக் கல்வெட்டை முன்நிறுத்திப் பேசுவது சாலச் சிறந்தது. இதுபோன்ற சிறப்பம்சங்களால் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரைவேந்தர் என்று பலராலும் போற்றப்பட்டு வருவதை உணரமுடிகிறது. இத்தகைய உரைத் தன்மைகளே ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரையின் தனிச்சிறப்புகளாகும்.

ஒவ்வொரு பாடல்களின் முடிவிலும் துறை, வண்ணம், தூக்கு, பெயர் என்று கொடுக்கப்பட்டுள்ளது. இத்தகைய வகைப்பாட்டைச் செய்தவர்கள் யார் என்ற வினா நம்முன் எழத்தொடங்குகிறது. இவ்வினாவுடன் ஆராயத்தொடங்குவோம். “இப்பதிகங்கள் உரையில்லாத மூலப்பகுதியேயுள்ள ஏடுகளில் இல்லை. மூலமேயுள்ள ஏடுகளில் ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் துறை, வண்ணம், தூக்கு, பெயர் முதலியன குறிக்கப்பெற்றும், ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் பாடினோர் பெயரும் பாடப்பட்டோர் பெயரும், “இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனார் பாடினார். பத்துப்பாட்டு முற்றும்” என்றாற்போலக் குறிக்கப்பெற்றும் உள்ளன. இக்குறிப்புகளை நோக்குமிடத்து, பதிற்றுப்பத்துப் பாட்டுகளைத் தொகுத்தோரால் வண்ணம், தூக்கு, துறை, பெயர் முதலியன வகுக்கப்பெற்றிருக்கலாமென்றும், அவர்க்குப்பின் வந்த சான்றோர் ஒருவரால் பதிகங்கள் பாடிச் சேர்க்கப்பெற்றிருக்கலா மென்றும், உரைகாரர், அவற்றிற்கு உரை வகுத்திருக்கலா மென்றும் கருதுதற்கு இடமுண்டாகிறது. டாக்டர் திரு. ஐயரவர்களும், “ஒவ்வொரு செய்யுளின் பின்னும் அமைந்துள்ள துறை, வண்ணம், தூக்கு, பெயரென்பவைகள் உரையில்லாத மூலப் பிரதிகளிலெல்லாம் இருத்தலின், அவை உரையாசிரியரால் எழுதப்பட்டனவல்லவென்றும், நூலாசிரியர்களாலோ தொகுத்தோராலோ எழுதப்பட்டனவென்றும் பதிகங்கள் உரைப் பிரதிகளில் மட்டும் காணப்படுகின்றமையால் அவற்றை இயற்றினோர் நூலாசிரியரல்ல ரென்றும் தெரிகின்றது” ( ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, முன்னுரை; பக்.10-11). இக்கூற்று நம்மைத் தெளிவடையச் செய்கிறது. துறை, வண்ணம், தூக்கு, பெயர் என்பவை நூலாசிரியர்களாலோ, தொகுப்பாசிரியர்களாலோ எழுதப்பட்டிருக்கலாம் என்றும், பதிகம் தொகுப்பாசிரியர்களாலோ உரையாசிரியர்களாலோ எழுதப்பட்டிருக்கலாம் என்ற முடிவுக்கு வர நேர்கிறது. இருப்பினும் தொகுப்பாசிரியர்களே இத்தகைய பதிவுகளைச் செய்திருக்க அதிக வாய்ப்பு உள்ளதாகத் தெரிகிறது. அதே போன்று ஔவை

சு.துரைசாமிப்பிள்ளை பதிகங்களுக்கு உரையெழுதி இருந்தால் இன்னும் பல சிக்கல்களும், அதற்கான தீர்வுகளும் தமிழ்ச் சமூகம் பெற்றிருக்கும்.

“ந.மு.வேங்கடசாமி நாட்டாரவர்கள் இதன் பதிகங்கள் ஆராய்ச்சிக்கு இடமாகவுள்ளனவாதலால், அவற்றிற்கு உரை வேண்டாவெனப் பணித்தமையின், இந்நூற்கண் பதிகங்கட்கு உரை யெழுதப்படவில்லை” (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, முன்னுரை; ப.12). இக்கூற்றின் வாயிலாகப் பதிகங்களுக்கு ஔவை சு.துரைசாமிப்பிள்ளை ஏன் உரைவிளக்கம் அளிக்கவில்லை என்பதை உய்த்துணர முடிகிறது. பதிற்றுப்பத்தின் பத்துச் சேர வேந்தர்கள் பாடுபொருளாக அமைந்துள்ளனர். பத்து வேந்தர்களைப் பத்துப் புலவர்கள் பாடியுள்ளனர். இவர்கள் அனைவரும் ஒரே காலத்தவர் என்பது அபத்தத்தை விளைவிப்பதாகும். எனவே, இவர்கள் வெவ்வேறு காலத்தைச் சார்ந்தவர்கள் என்பதே எதார்த்த வெளியை முன்னெடுப்பதாகும்.

இத்தகவலை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்று உறுதிப்படுத்துகிறது. “இதன் ஒவ்வொரு பத்தும் ஒவ்வொரு சேரவேந்தனைப் பற்றி வேறு வேறு ஆசிரியன்மார்களால் பாடப்பட்டுளது. இந்த ஆசிரியன்மார்களும் சேரவேந்தர்களும் ஒரு காலத்தவராகவும் வேறு வேறு காலத்தவராகவும் கருதப்படுகின்றனர்” (பதிற்றுப்பத்து; முன்னுரை; ப.9). இக்கூற்று வேந்தனையும், புலவனையும் சமகாலத்திலும், வேறு காலத்திலும் முன்னிறுத்துவதை உணர முடிகிறது. சங்கப் பாக்கள் தோன்றிய காலம் வேறு, அது தொடங்கப்பட்டட காலம் வேறு, உரையெழுந்த காலம் வேறு. எனவே மூலப்பிரதி, தொகுப்புப் பிரதி, உரைப்பிரதி இவைகள் உருவான கால இடைவெளி வேறானது என்பது அப்பட்டமாகிறது. இவை மூன்றினையும் ஒரு காலத்தைச் சார்ந்தவையாக எண்ணி ஆய்தல் தவறான முடிவை ஏற்படுத்திவிடும் என்பது திண்ணமாகும்.

## காலப் பின்புலம்

இலக்கியப் பதிவுகளை வைத்துக்கொண்டு மட்டும் காலப் பின்புலம் தேடல் என்பது வரலாற்று அபத்தத்தை ஏற்படுத்தும். தொல் சான்றுகளான கல்வெட்டு, செப்பேடு போன்றவைகளின் துணையோடான கால ஆய்வு சாத்தியப்படும். இப்பின்புலத்தில் குமட்டூர்க் கண்ணனையும், சேரலாதனையும் கல்வெட்டுத் தகவல்களுடன் ஆராயத் தொடங்குவோம்.

பாடினோர் வரலாறு என்னும் தலைப்பின் கீழ் குமட்டூர்க் கண்ணனின் காலத்தைத் தீர்மானம் செய்ய இரண்டு கல்வெட்டுத் தரவுகளை முன்னெடுக்கிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை. குண்டூர் கல்வெட்டு ‘குமட்டூரு’ என்றும், சித்தன்னவாசல்

கல்வெட்டு 'குமட்டூர்' என்றும் கூறுகிறது. முழுத் தகவலையும் தேவைகருதி மேற்கோள் கொடுக்கவேண்டியது அவசியமாகிறது. இதனடிப்படையில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்று, "குமட்டூர் என்ற பெயரையுடைய வூர்கள் நம் நாட்டில் இப்போது காணப்படவில்லை. கல்வெட்டுக் காலங்களில் இருந்து பின் மறைந்துபோன வூர்கள் பல உண்டு. ஆதலால், அவற்றை நோக்குமிடத்துக் குமட்டூரெனப் பெயரிய வூர்கள் இரண்டு கல்வெட்டுக்களிற் காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்று, குண்டூர் சில்லாவின் தலைநகரான குண்டூர், அங்குள்ள கல்வெட்டொன்று (A.R.No. 83 of 1971) அதனை, ஓங்கேரு மார்க்கத்திலுள்ள குமட்டூரு என்று குறிக்கிறது. அது சகம் 1080ஆம் ஆண்டில் (கி.பி. 1158) தோன்றியதாகும். மற்றொன்று புதுக்கோட்டையைச் சேர்ந்த சித்தன்னவாசல் என்னுமிடத்திற் காணப்படும் கல்வெட்டு. இச்சித்தன்னவாசல் கல்வெட்டின் காலம் கி.மு. இரண்டாம் நூற்றாண்டாகவோ, மூன்றாம் நூற்றாண்டாகவோ கல்வெட்டாராய்ச்சியாளர் கருதுகின்றனர். (P.S.Ins.No.1) இஃது அசோகபிராமி யெழுத்தாக எண்ணப்படுகிறது. தமிழ்த் தொடரொன்று அசோகபிராமி யெழுத்தில் எழுதப்பட்டுள்ள தெனவும், இவ்வழக்காறு மதுரை, திருநெல்வேலி சில்லாக்களில் வழங்கியதெனவும் எடுத்தோதி, இதனை அரிதின் முயன்று படித்துப் பொருள் உண்மை கண்ட கல்வெட்டுத்துறைத் தலைவர் திரு. K.V. சுப்பிரமணிய ஐயரவர்கள், இக்கல்வெட்டு, "யோமிநாட்டுக் குமட்டூர்" பிறந்தான் காவுதியிதனுக்குச் சித்துப்போச்சில் இளையார் செய்த அதிட்டானம்" என நிற்கிறதெனவும் கூறியுள்ளார். யோமிநாடு என்பது ஓய்மாநாடென்பதன் திரிபெனக் காணப்படவே, இக்கல்வெட்டு "ஓய்மாநாட்டுக் குமட்டூர்ப் பிறந்தான் காவுதி யிதனுக்குச் சித்துப்பேச்சில் இளையார் செய்த அதிட்டானம்" எனப் படிக்கப்படுவதாயிற்று. குண்டூர்க் கல்வெட்டையும் சித்தன்னவாசற் கல்வெட்டையும் நோக்குமிடத்துக் கண்ணனாரது குமட்டூர் ஓய்மாநாட்டுக் குமட்டூராமெனக் கருதுதற்கேற்ற வாய்ப்புடைத்தாகிறது. ஈதனுக்கு என்பது யாதனுக்கு என்பதன் பிராமியெழுத்தாலுண்டாகும் திரிபெனக் கொள்வதாயின், ஓய்மாநாட்டுக் குமட்டூர்ப் பிறந்தானான காவிதியானுக்கு, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கோ, அவன் தந்தை உதியன் சேரலாதனுக்கோ, தானைத் தலைமை வகையிலோ வேறு வகையிலோ தொடர்பிருந்திருக்குமெனக் கோடற்கு இடமுண்டாகிறது. இவ்வகையில் ஓய்மாநாட்டுக் குமட்டூர் இரண்டாயிரமாண்டுகட்கு முன்பே விளங்கியிருந்த தொன்மை நலமுடையதென்று தெளியலாம்" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, பாடினோர் வரலாறு; ப.30). இக்கூற்றின் வாயிலாகக் குமட்டூர் என்ற 'ஊர்' பெயர் ஆராயப்பட்டதை விளங்கிக்கொள்ள முடிகிறது. குண்டூர் கல்வெட்டு குமட்டூரு என்பதையும் சித்தன்னவாசல் கல்வெட்டு குமட்டூர் என்பதையும் கூறுகிறார்.

யோமி நாடு ஓய்மா நாடு என்ற பிராமி எழுத்தின் திரிபையும் எடுத்துரைக்கிறார். இறுதியாக 2ஆம் அல்லது 3ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த ஓய்மா நாட்டுக் குமட்டூர் என்ற முடிவுக்கு வருகிறார். ஒரு ஊர்ப் பெயரை ஆராய பல கல்வெட்டுத் தகவல்களை இணைத்து இலக்கியத்துடன் ஒப்பிட்டுச் சரியான காலத்தைக் கணிப்பது நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது. சித்தன்னவாசல் பற்றியான மேலும் கூடுதல் தெளிவை அடைய ஐ. மகாதேவனின் கூற்று கவனிக்கப்பட வேண்டியதாகும். அம்முறையே "புதுக்கோட்டையிலிருந்து சுமார் 10 கல் தொலைவில் சிற்றண்ணல் வாயில் என்னும் ஊர் உள்ளது. அவ்வூரிலுள்ள மலைக்குகையில் இக்கல்வெட்டு காணப்படுவதால் இதைச் சித்தன்னவாசல் கல்வெட்டு என்று வழங்குவர். எருமையூர் நாட்டைச் சேர்ந்த குமிழ் ஊர் பிறந்த காவடி ஈதேன் என்பவர்க்குச் சிறுபோவில் இளையர் என்பர் செய்த இருக்கை என்று இருக்கிறது. சிறுபோவில் என்பதே இப்போது சித்தன்னவாசல் ஆகியிருக்கும் என ஐ. மகாதேவன் கருதுகிறார். இக்கல்வெட்டு கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும்" (நடன. காசிநாதன், கு. தாமோதரன் (தொ.ஆ); கல்வெட்டு; 2009, ப.29). இக்கூற்று சிறுபோவில் என்பதே தற்காலச் சித்தன்னவாசல் என்ற தெளிவை ஏற்படுத்துகின்றது.

### தற்காலச் சமூகப் பின்னணி

வரலாற்று ஆய்வை மேற்கொண்ட ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, முற்காலம், சமகாலம் என்ற இரண்டு நிலைகளிலும் தன் சான்றாதாரங்களை ஆய்வுக்கு உட்படுத்தியுள்ளார். முற்காலம் தொடங்கித் தற்காலம் வரையிலான வரலாற்றுத் தொடர்ச்சியை முன்வைக்கிறார். ஒரு ஊர்ப் பெயரானது கால மாற்றங்களால் மற்றும் ஆட்சி, மொழித் தாக்கங்களால் பெரும் மாற்றத்தை உள்வாங்குகிறது. இருந்தும் ஏதேனும் ஒரு வகையான வரலாற்றுத் தொடர்ச்சி தொடர்ந்து வருவதைக் காணமுடிகிறது. முற்காலங்களில் அழைக்கப்பட்ட 'ஊர்' பிற்காலங்களில் மாறித் தற்காலச் சூழலில் என்னவாக அழைக்கப்படுகிறது. அவ்வூர் எந்தச் சில்லாவில் இருக்கிறது என்ற முழுமையான தகவலையும் முன்வைக்கிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை.

'ஓய்மா நாடென்பது தென்னார்க்காடு சில்லாவில் திண்டிவனம் தாலுகாவையும் செங்கற்பட்டுச் சில்லாவின் மதுராந்தகந் தாலுகாவின் தென்பகுதியையும் தன்கண் கொண்டு விளங்கிய தொன்மை நாடாகும். இந்த ஓய்மாநாடு இடைக்காலப் பல்லவ சோழப் பாண்டியர் காலத்தேயுமன்றிச் சங்ககாலத்திலும் சிறப்புற்றிருந்ததென்பது, ஓய்மாநாட்டு நல்லியக்கோடனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் சிறுபாணாற்றுப்படை பாடிச் சிறப்பித்ததால் தெளிவாகிறது. இந்நாட்டிற் காணப்படும் ஊர்களுள் குமட்டூர் என்று பெரியதோர் ஊர் காணப்படவில்லை. ஆயினும்

திண்டிவனத்துக்கு மேற்கில் மூட்டூரென்றோர் ஊருளது. பண்டைய குமட்டூரே இப்போது முட்டூரெனச் சிதைந்து வழங்குவதாயிற்றெனக் கொள்ளின், இரண்டாம் பத்தைப் பாடிய குமட்டூர்க் கண்ணனார் தொண்டை நாட்டு ஓய்மா நாட்டைச் சேர்ந்த சான்றோர் என்பது தேற்றம்' (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, பாடினோர் வரலாறு; ப.31). இத்தகவலின் அடிப்படையில் 'குமட்டூர்' என்பது 'முட்டூர்' எனச் சிதைந்துள்ளதை உணரமுடிகிறது. அதேபோன்று இவரின் கல்வெட்டாய்வுகள் பெரும்பாலும் அவர் வாழ்ந்த பகுதிகளை மையமிட்டதாகவே அமைந்திருப்பதும் கவனத்தில் கொள்ளத்தக்கதாகும்.

ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றுப்படி கல்வெட்டுத் தரவுகள் சரியான காலத்தை முன்னெடுக்கின்றன. ஆசிரியரின் தன்னடக்கத்தையும் கவனத்தில் கொள்ளவேண்டியிருக்கிறது. பல்வகையான சான்றுகளைக் காட்டி நிறுவும் இவர், தான் சொல்வதே முடிந்த முடிபாக முடியாது என்பதையும் சொல்லிச் செல்வது அவரின் பெருந்தன்மையைக் காட்டுகிறது. கல்வெட்டுச் சான்றுகள் பற்றி, தான் கூறிய முடிவுகள் வருங்காலத்தில் மாறவும் செய்யலாம் என்பதையும் அவரே சுட்டிக்காட்டியிருப்பது அவரின் ஆய்வு நேர்மையைப் புலப்படுத்துகிறது. அதாவது, "இவ்வுரைக்கண் தெளிவிக்கப்படும் வரலாற்றுக் குறிப்புகள் முடிந்த முடிபாகக் கோடற்கு இடமில்லையென்பது தெளிவாம். வேறு ஆராய்ச்சிகளால் விளக்கமாகுங்காறும், இவற்றை மேற்கோடல் தக்கது" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, முன்னுரை; ப.13). இவ்வகையான கூற்றினை நோக்கும்பொழுது தற்காலப் பின்நவீனத்துவக் கோட்பாடான 'கட்டுடைத்தல்', 'மீளாய்தல்' போன்ற கோட்பாடுகளை அன்றே தன் உரைகளில் கையாண்டுள்ளார் என்று எண்ணத்தோன்றுகிறது.

## சமூகப் பின்புலம்

சமூகப் பின்புலம் என்ற தலைப்பில் இரண்டாம் பத்தைப் பாடிய குமட்டூர்க் கண்ணனையும், இதில் பாடப்பட்ட சேரலாதனையும் இவர்கள் இருவரையும் தனது உரையில் எடுத்தாண்டுள்ள ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சமயம் சார்ந்த சமூகப் பின்புலத்தையும் ஆராய முற்படலாம். இந்தியச் சாதியக் கட்டுமானத்தில் வாழ நேர்ந்துள்ள எந்த மனிதரையும் சாதியச் சார்பு விட்டுவிடுவதில்லை. இப்பின்புலத்தில் குமட்டூர் கண்ணனையும் சமூக, சாதிய ஆய்வுத்தளத்தில் முன்நிறுத்தலாம். குமட்டூர்க் கண்ணன் எச்சமூகத்தைச் சார்ந்தவர் என்ற வினாவை முன்வைத்து ஆராயத்தொடங்குவோம்.

சங்க காலத்தில் கல்வி யாருக்கானது எச்சமூகம் கல்வி கற்றது என்ற கேள்விகளை எழுப்பினால் இந்த ஆய்வு வேறு பரிமாணத்தைச் சென்றடையும். இதனால் குமட்டூர்க் கண்ணன் பற்றிய சாதியப் பின்புலத்தை மட்டும் தேடுவோம். புரவலர்களைப் புகழ்ந்து பாடிய புலவர்களுக்குப் பரிசுகள் வழங்குவது சங்ககால மரபாகும். தற்காலச்

சூழலிலும் இவ்வகையான பரிசுகள் வழங்குதல் என்பது வேறு பரிமாணத்தை எட்டியுள்ளது. குமட்டூர்க் கண்ணனுக்கு ஐஞ்ஞூறு ஊர்கள் பிரமதாயமாகவும், தென்னாட்டு வருவாயுள் பாகமும் கொடுத்தான் என்று பதிகம் வரலாறு கூறுகிறது. குமட்டூர்க் கண்ணன் அரசருடன் நெருங்கி இருந்திருக்கும் இவர் மேட்டிமைச் சமூகத்தைச் சார்ந்தவராக இருந்திருக்க வேண்டும். இத்தகைய புலவர்களுக்கே பிரமதாயம் கொடுப்பது வழக்கம். பிரமதாயம் அந்தணர்களுக்கு மட்டுமே கொடுக்கப்பட்டது. வேறு சமூகத்திற்குப் பரமதாயம் கொடுத்ததாகப் பதிவுகள் இல்லை. எனவே, சங்க காலத்தில் அந்தணருக்கு மட்டுமே கல்வி உரியது என்று அனுமானிக்க முடிகிறது. ஏன் பாணர், பறையர் என்ற பெயரால் ஒரு புலவர் கூட்டம் இருந்ததாகப் பதிவுகள் இல்லையே. இத்தைய கேள்விகளால் அக்காலச் சமூகத்தை எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது. அதாவது, “அந்தணர்க்குக் கொடுக்கப்படும் இறையிலி நிலங்களே பிரமதாயம் என்று சொல்லப்படும். அவை பிரமதேயம் எனவும் பட்ட விருத்தி எனவும் முற்காலத்தில் வழங்கப்பட்டன என்பது பல கல்வெட்டுகளால் அறியக்கிடக்கிறது” (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, பதிகங்கள்; ப.47). இக்கூற்றை T.V. சதாசிவ பண்டாரத்தார் தனது அணிந்துரையில் முன்வைத்துள்ளார். இத்தகைய கூற்றின் வாயிலாக அக்கால அந்தணர் சமூகத்தை அறியமுடிகிறது. அந்தணர்கள் கல்விகற்று, புரவலர்களைப் பாடிப் பிரமதேயம் முதலான பரிசுகளைப் பெற்றுள்ளனர் என்பதை உணர்த்துகின்றன. எனவே சங்க காலச் சமூகம் ஒருசாராருக்கான கல்வியைக் கொடுத்துள்ளதா என்பது மேலாய்வுக்குரியதாகும்.

பரிசில் பெற்ற குமட்டூர்க் கண்ணன் அந்தணர் வகுப்பைச் சார்ந்தவர் என்பது தெளிவாகிறது. இவ்வுண்மையை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றிலிருந்தே நோக்கலாம். “இமயவரம்பன் நல்கிய ஊர்களைப் பிரமதாயமெனப் பதிகம் கூறுதலால், அவற்றைப் பெற்ற கண்ணனார் பார்ப்பனரென்பது விளங்குகிறது” (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, பாடினோர் வரலாறு; ப.31). இக்கூற்று சங்க காலத்தில் மேட்டிமைச் சமூகம் மட்டும் கல்வி கற்றுள்ளதை அனுமானிக்க ஏதுவாகிறது.

## சமயப் பின்புலம்

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த சேரலாதனையும் குமட்டூர்க் கண்ணனைப் பற்றிய சமூக/சாதியப் பின்புலத்தை ஆராய்ந்து தெளிவுபடுத்தியுள்ளார் உரையாசிரியர் பதிற்றுப்பத்தின் பதினொராவது பாடலில் கடம்பனை வென்றவன் சேரலாதன் என்ற கருத்தினை முன்வைக்கிறார். சேரலாதனை சைவக் கடவுளான முருகனுடன் ஒப்பிடும் திறன் கவனிக்கத் தக்கதாகும். இங்கு ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சார்புத் தன்மை வெளிப்படுவதைக் காணமுடிகிறது. சைவப்

பற்றாளர் என்பதால் சேரலாதனை முருகனுடன் ஒப்பிடுகிறார் என்றே அனுமானிக்க முடிகிறது. அதாவது, "கடற்றீவு ஒன்றிலிருந்து போந்து குறும்பு செய்து வாழ்ந்த கடம்பர் என்பவர்களை, நெடுஞ்சேரலாதன் கலஞ் செலுத்திச் சென்று பொருது அவர்களை வென்று மேம்பட்ட நலத்தை முருகன் கடலகம் புகுந்து சூரனை வென்று வாகைசூடி விளங்கிய விளக்கத்தோடு உவமித்துக் கூறுவது, படிப்போர்க்கு மிக்க இன்பம் தருவதாகும் (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை(பாடினோர் வரலாறு); 2007; ப.32). இக்கூற்று உரையாசிரியரான ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சமயச் சார்பை முன்வைப்பதாகும். மேலும் இவரே 'படிப்போர்க்கு மிக்க இன்பம் தருவதாகும்' என்று கூறும் கருத்தும் கவனிக்கத்தக்கதாகும். இவ்வாறு ஒவ்வொருவரின் படைப்பிலும் ஏதேனும் ஒரு வகையில் சார்புத் தன்மைக்கு ஆட்பட்டு விடுவதைத் தவிர்க்க முடிவதில்லை/முடியாததாகிறது. குமட்டூர்க் கண்ணனார், சேரலாதன் இருவரும் இரண்டு கல்வெட்டுத் தரவுகளுடன் ஆராயப்பட்டுள்ளனர். இலக்கியத் தரவுகளுடன், கல்வெட்டுத் தரவுகளை இணைத்துப் பார்ப்பதால் பல உண்மையான வரலாற்றுத் தெளிவை எட்டமுடிகிறது. இதன் அடிப்படையில் மேலும் உள்ள கல்வெட்டுத் தரவுகளைக் கொண்டு ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரைகள் ஆராயப்படுகின்றன.

## காப்பியாற்றுக் காப்பியனார் – பெயராய்வு

பதிற்றுப்பத்தின் நான்காம் பத்தைப் பாடியவர் காப்பியாற்றுக் காப்பியனார் ஆவார். நன்னன் என்ற மன்னனை நான்காம் பத்து பதிவு செய்திருக்கிறது. இங்குப் புலவர் பெயர், ஊர் மற்றும் மன்னன் பெயரும் ஆய்வுக்கு உட்படுத்தப்படுகிறது. புலவனும், புரவலனும் இரண்டு கல்வெட்டுத் தரவுகளுடன் ஆராயப்படுகின்றனர்.

காப்பியனார் என்ற பெயர் சங்க காலத்தில் பெரும் புழக்கத்தில் இருந்துள்ளது. 'காப்பியம்' என்ற தொடர்நிலைச் செய்யுளுக்கும் 'காப்பியனார்' என்ற பெயருக்கும் ஏதேனும் தொடர்பு உண்டா என்பதும் மேலாய்வுக்குரியதாகும். ஊரின் பெயரால் புலவருக்குப் பெயர் வந்ததா அல்லது புலவர் பெயரால் ஊருக்குப் பெயர் அமைந்ததா என்ற வினா எழுவதைத் தவிர்ப்பதற்கில்லை. இவ்வினாவின் அடிப்படையில் சான்றுகளை முன்வைத்துப் பரிசோதிக்க முற்படலாம்.

"இவர் காப்பியாறு என்னும் ஊரினர்; காப்பியன் என்னும் பெயரினர். பண்டைக் காலத்தும் இடைக்காலத்தும் நம் தமிழகத்தில் காப்பியன் என்ற பெயருடையார் பலர் இருந்துள்ளனர். காப்பியஞ் சேந்தனார், தொல்காப்பியனார், எனப் பண்டும், காப்பியன் ஆதித்தன் கண்டத்தடிகள் (S.I.I.Vol.V.No. 660) என இடைக்காலத்தும் காணப்படுவது காண்க. காப்பியன் என்போர் பலர் இருந்தமைபற்றி, அவரின் வேறுபடுத்தவே இவர் ஊரோடு சேர்த்துக் காப்பியாற்றுக் காப்பியனார் எனச் சான்றோர் வழங்கினர்" (ஔவை

சு.துரைசாமிப்பிள்ளை, பாடினோர் வரலாறு; 2007; ப. 34). இக்கூற்று நாம் எழுப்பிய கேள்விக்கான விடைகளைத் தருகிறது. ஊரின் பெயரால் புலவருக்குப் பெயர் அமைந்த விளக்கத்தை முன்வைக்கிறது. எனவே இதனை ஊர்ப் பெயராய்வாகவும், புலவர் பெயராய்வாகவும் கொள்ள ஏதுவாகிறது. இவ்வாறு நமக்குக் கல்வெட்டுத் தரவுகள் ஐயங்களைக் களையும் வரலாற்றுப் பெட்டகமாக விளங்குகிறது. இடைக்காலக் கல்வெட்டு என்பது சோழர்கால கல்வெட்டைக் குறிப்பதாகும் என்னும் கருத்தாக்கத்தை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை முன்வைக்கிறார்.

## காலப் பின்னணி

படைப்பு, படைப்பு சார்ந்த பின்புலத்தை அணுக காலத் தெளிவு என்பது அவசியமான ஒன்று. அவ்வகையில், பெயராய்வுகள் அனைத்திற்கும் கல்வெட்டுத்தரவுகள் கிடைக்காமல் போனது பெரும் ஏமாற்றத்தைத் தரவல்லது. இருப்பினும் இலக்கியத் தரவுகளைக் கொண்டு காலத்தை அவதானிக்கலாம். தொல்காப்பியனார் வாழ்ந்தது ஏறக்குறைய இரண்டாம் நூற்றாண்டு என்றால், அதேபோன்று 'காப்பிய' இலக்கியமான சிலம்பும் இரண்டாம் நூற்றாண்டு என்றே அனுமானிக்கலாம். தொல்காப்பியனாரின் இயற்பெயர் திரணதுமாகினி என்று கூறப்படுகிறது. அவ்வாறு இருப்பின், அவரைத் தொல்காப்பியனார் என்று அடையாளப்படுத்த வேண்டிய அவசியம் என்ன என்ற வினா எழுகிறது. 'காப்பியம்' 'காப்பியனார்' என்ற பெயர் புலவர்களைக் குறிக்கும் பொதுப்பெயராக இருந்திருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறது. 'காப்பியனார்' என்ற பெயர் புழக்கத்தில் இருந்ததால் பெயருக்கு முன்னால் பழமையைச் சேர்க்க 'தொல்' என்பதைச் சேர்ந்திருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது. எனவே, தொல்+காப்பியனார், காப்பியாற்று+காப்பியனார் என்ற சொல்லாட்சி மீளாய்வுக்குரியதாகும்.

## தற்கால வரலாற்றுத் தொடர்ச்சி

பண்டைக் காலங்களில் வழங்கப்பட்ட பெயர்கள் ஏதோ ஒருவகையில் நம்மில் உறவாடி இருப்பதை மறுப்பதற்கில்லை. பல்வேறுபட்ட மொழி, ஆட்சி, சமயத் தாக்கங்களால் பழைய பெயர்கள் மருவி இருப்பதைக் காண முடிகிறது. ஆனாலும், சமீப காலம் வரையிலும் அதன் வரலாற்றுத் தொடர்ச்சி அறுபடவில்லை. இதன் அடிப்படையில் காப்பியனார் என்பது, எவ்வாறு மருவி இருக்கிறது என்பதை ஆராய்ந்து தெளிவோம். அம்முறையே, "இக்காப்பியாறு என்னும் ஊர், இன்ன நாட்டில் உள்ளதெனக் காண முடியவில்லை. காப்பியன் என்னும் பெயருடையார் மழநாட்டைச் சார்ந்த பகுதிகளில் காணப்படுவதால், இக்காப்பியாறென்னும் ஊர், மழ நாட்டிலோ

கொங்கு நாட்டிலோ இருந்திருக்கலாம். தென்னார்க்காடு வட்டத்து விழுப்புரப் பகுதியில் காப்பயாமூர் என்னுமோர் ஊருளது; அஃது இப்போது கப்பியாமூர் என வழங்குகிறது. தஞ்சை வட்டத்து மாயவரப் பகுதியில் காப்பியக்குடி யென்றோர் ஊருளது" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, பாடினோர் வரலாறு; ப.34). இக்கூற்று தற்கால ஊர்களின் வரலாற்றுத் தொடர்ச்சியை முன்வைக்கிறது. ஒரு ஊரின் பெயரையும், அவ்வூர் என்னவாக மருவி இருக்கிறது என்ற தற்காலத் தொடர்பையும் முன்வைப்பது ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரையின் தனிச்சிறப்பாகும்.

## நன்னன் – ஊர்பெயராய்வு

நான்காம் பத்தின் நாயகனாக விளங்குபவர் நன்னன். நன்னன் என்ற மன்னன் வாழ்ந்த பகுதி நன்னனூர் என்று வழங்கப்பட்டது. நன்னனூர் இப்பொழுது ஆனைமலை என்ற பெயரால் வழங்கப்படுவதாகக் கல்வெட்டுத் தரவுகள் கூறுகின்றன. சில ஊர்களின் பெயர்கள் திரிந்து இருப்பதையும் காணமுடிகிறது. ஆனால் இவ்வூர் முழுமையாக மாறி இருப்பதைக் கல்வெட்டு பதிவு செய்திருக்கிறது.

"இந்த நன்னன் வசமிருந்த சேரநாட்டுப் பகுதி இப்போதுள்ள பொள்ளாச்சித் தாலுகாவாகும். இதன்கண் ஆனைமலை யென்னும் ஊர் பண்டை நாளில் நன்னனூர் என்ற பெயர் கொண்டிருந்த தென் ஆனைமலைக் கல்வெட்டு (A.R.No. 214 0f 1927, 28; வீரக் கேரள வளநாட்டு நன்னனூர்) கூறுகிறது. இவனோடு களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் பொருடற்றி வென்றி யெய்திய வாகைப் பெருந்துறை, இப்போது ஈரோட்டுக் கருகிலுள்ள பெருந்துறையாகலாம்" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, 2007; ப.162). இக்கூற்று தற்கால ஆனைமலையே பண்டைக் கால நன்னனூர் என்பதை உய்த்துணர முடிகிறது. அதேபோன்று நன்னன் வசம் இருந்த 'பெருந்துறைப்' பகுதி இப்பொழுதும் அதே பெயரில், ஈரோட்டுக்கு அருகில் 'பெருந்துறை' என்ற பெயராலே அழைக்கப்படுவதை விளங்கிக்கொள்ள முடிகிறது. இத்தகைய பெயர்களே வரலாற்றுத் தொடர்ச்சிகளை உறுதிப்படுத்துகிறது.

## பாலைக் கௌதமனார் வரலாற்றுத் தகவல்

பதிற்றுப்பத்தின் மூன்றாம் பத்து பாடல்களைப் பாடியவர் பாலைக் கௌதமனார். இவரின் பாடல் அடிகள் பெரும் வரலாற்றுத் தகவல்களை வெளிப்படுத்துகின்றன. மன்னனுக்கும் மக்களுக்கும் இடையே உள்ள 'வரி' செலுத்தும் தொடர்பை இவர் பாடல் அடிகளே நமக்கு முன்வைக்கின்றன. 'வரி' செலுத்தும் மரபு சங்க காலம் தொடங்கிச்

சமகாலம் வரை தொடர்வதை அறிய ஏதுவாகிறது. 'வரி' என்ற சொல்லாட்சி சங்க காலத்தில் இருந்ததா என்ற வினாவை முன்வைத்து விவாதிக்கத் தொடங்குவோம்.

இப்பாடல் பாடிய பாலைக் கௌதமனார் பற்றிய பெயராய்வுக்குச் செல்லாமல், இங்குச் சொல்லாய்வுக்குக் கல்வெட்டுச் சான்றை முன்வைக்க முற்படுகிறார் உரையாசிரியர். வரி செலுத்தும் முறை பழங்காலம் தொட்டே இருந்து வந்திருக்கிறது. 'வரி' என்ற சொல் பல பொருள்களைத் தாங்கி நிற்கின்றன. 'வரி' என்பது வரிசை என்ற பொருளிலும், மேலும் 'வரி' என்பது பணம் செலுத்தும் பொருளிலும் பொருள்கொள்ளத் தக்கதாகும். அதே போன்று 'வரி' என்ற சொல்லாட்சி பொதுச் சொல்லாகவும் கொள்ளப்படுகிறது. பொதுவாக மக்கள் செலுத்தும் வரியைக் குறிக்கிறது. 'இன்னவரி' என்ற பல பகுப்புகளை உள்ளடக்கியுள்ளதைக் கவனிக்க முடிகிறது. உரையாசிரியரின் கூற்றின் வாயிலாக அப்பொருளை விளங்கிக்கொள்ள ஏதுவாகும். "பாகுடி யென்பது நாட்டு மக்கள் செலுத்திய வரி வகைகளுள் ஒன்றாக விக்கரம சிங்கபுரக் கல்வெட்டால் (A.R.No. 297-1916) தெரிகிறது" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2007; ப.73). இக்கூற்று வரிவகையுள் 'பாகுடி' என்ற வரி ஒரு வகையைச் சார்ந்தது என்பதை விளங்கிக் கொள்ளமுடிகிறது. எனவே, 'வரி' என்ற சொல்லாட்சி சங்க காலம் தொட்டே இருந்திருக்கலாம் என்பது உறுதிப்படுகிறது. இச்செய்தியின் வாயிலாக மக்கள் மன்னனுக்கு வரி செலுத்தி வந்தனர் என்பதை, இலக்கியப் பதிவின் வாயிலாகக் கல்வெட்டுத் தரவுகள் தீர்மானம் செய்வதைக் காணமுடிகிறது. எனினும், வரி என்ற சொல்லாட்சி சங்க காலத்தில் புழக்கத்தில் இருந்துள்ளதா என்பது மீளாய்வுக்குரியதாகும்.

### பரணர் காட்டும் கொடைச் செய்தி

பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பத்தைப் பாடியவர் பரணர் ஆவார். புரவலர்கள், புலவர்களுக்குக் கொடை வழங்கிய செய்திகள் சங்க இலக்கியங்களில் பரவிக் காணப்படுகின்றன. இலக்கியப் பதிவுகள் பல வரலாற்றுத் தகவல்களை உள்ளடக்கியுள்ளன. இருப்பினும் கல்வெட்டு தரும் செய்திகளைப் பொருத்திப் பார்ப்பது பொருத்தமாகும். இங்கு ஔவை சு.துரைசாமிப்பிள்ளை கூறும் 'கொடை' பற்றிய செய்திக்கூற்று ஆய்வுக்குரியது.

"பாணர் முதலாயினார்க்கு வழங்கும் வழக்குப் பிற்காலத்தும் அரசர்பால் காணப்படுகிறது. பன்னிரண்டாம் நூற்றாண்டிலிருந்த மூன்றாங் குலோத்துங்க சோழன், பெரும் புலவரும் அருங்கவிஞரும் நாப்புறு நல்லிசைப் பாணரும் கோடியரும் குயிலுவரும் நாடு நாடு சென்று இரவலராய் இடும்பை நீங்கிப் புரவலராய்ப் புகழ் படைப்பக்' (S.I.I.Vol. v.No. 645) கொடை வழங்கிய செய்தி கல்வெட்டுகளால் தெரிகிறது" (மேலது;

ப.198). இக்கூற்று பழங்காலத்தில் புரவலர் புலவர்களுக்குக் கொடை வழங்கினார்கள் என்பதைப் புலப்படுத்துகிறது. அதேபோன்று ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை மீதான சில வினாக்களையும் இக்கூற்று எழுப்பி விடுகிறது. மேலும், ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தரும் கல்வெட்டுச் சான்று பொருத்தமானதா என்ற வினாவும் எழுகிறது.

பரணர் வாழ்ந்த வாழ்வியல் கருத்தைக் கூறப் பிற்கால 12-ஆம் நூற்றாண்டின் கல்வெட்டை எடுத்துக் கூறுவது பொருத்தமுடையதாகத் தெரியவில்லை. பரணர் காலம் வேறு, குலோத்துங்கன் காலம் வேறானதாகும். பரணர் காலக் கொடைச் செய்தியைக் கூறக் குலோத்துங்கன் காலக் கல்வெட்டுத் தரவைக் கொடுப்பது ஏற்புடையதாகத் தெரியவில்லை. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கல்வெட்டைப் பொருத்திப் பார்க்கும் தன்மை என்பது சில முரண்பாடுகளையும் ஏற்படுத்துகிறது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளைக்குக் கிடைத்த சில பிற்காலக் கல்வெட்டுத் தரவுகளை வைத்துக்கொண்டு முற்கால வரலாற்றைக் கூற முயலும் பெருவழக்கு நம்மிடையே நிலவுகிறது. இரண்டாம் நூற்றாண்டு வரலாற்றைக் கூற அதே சமகாலக் கல்வெட்டுச் சான்றைப் பொருத்திப் பார்ப்பதே ஏற்றதாக இருக்கமுடியும். கொடை வழங்கிய செய்தியைக் கூறும் கல்வெட்டை, பரணர் கொடை வழங்கியதாகக் கூறும் பாடலுக்கு ஒப்பிட்டுக் காட்டுவது பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. கொடை வழங்குதல் என்ற செய்தியைக் கூறும் இக்கல்வெட்டை ஏற்றுக்கொண்டாலும், பரணர்க்கு இக்கல்வெட்டுச் செய்தியைப் பொருத்திக் காட்டுவது பொருத்தமற்றதாகும். தனக்குக் கிடைத்த கல்வெட்டுத் தரவுகளை எப்படியாவது இலக்கியத்திற்குப் பொருத்திக்காட்டி விடவேண்டும் என்ற முனைப்பைக் காட்டுகிறது. ஆனால், இத்தகைய பதிவுகள் மேலும் வரலாற்றைத் தவறான பாதைக்கு இட்டுச் செல்வதாகிவிடும். எனினும், ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரையில் கல்வெட்டுப் பயன்பாடு பெரும்பாலும் உண்மைத் தரவுகளையே அதிகம் முன்வைப்பதையும் மறுப்பதற்கில்லை.

## கபிலர் காட்டும் வீரர் சூளுரை

பதிற்றுப்பத்தின் ஏழாம் பத்தைப் பாடியவர் கபிலர். அக்காலத்தில் வீரர்கள் உரைத்த சூளுரைச் செய்தியைக் கல்வெட்டுத் தரவால் அறியலாம். மேலும் அக்கல்வெட்டு ஊர்ப்பெயராய்வு போன்றவற்றைத் தெளிவுபடுத்துகிறது. கபிலர் என்ற பெயரில் பல புலவர்கள் இருந்ததாக அறியப்படுகிறது. சங்கத் தொகை நூல்கள் கூறும் கபிலர் ஏழாம் பத்தின் கடுங்கோ வாழியாதனைப் பாடியுள்ளார். அதேபோன்று பரம்புநாட்டுப் பாரியையும் ஒரு கபிலர் பாடியுள்ளார். நீதி இலக்கியக் காலச் சூழலில் ஒரு

கபிலரும் இருந்துள்ளார் என்ற செய்தியை அறியமுடிகிறது. சங்கத் தொகைக் கபிலரும், நீதி இலக்கியகாலக் கபிலரும் ஒருவரா என்பது ஆய்வுக்குரிய களமாகும். இங்குக் கடுங்கோ வாழியாதனைப் பாடிய கபிலரை மட்டும் ஆராய முற்படுவோம்.

கபிலர் பற்றிய இரண்டு கல்வெட்டுத் தரவுகளை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை முன்வைக்கிறார். ஒரு கல்வெட்டு வீரர் சூளுரை பற்றிப் பேசுவதாகும். இரண்டாவது கல்வெட்டு 'கபிலக்கல்லு' என்ற ஊர்ப் பெயராய்வை பற்றிப் பேசுவதாகும். இவ்விரு கல்வெட்டுச் செய்திகளையும் ஔவை சு.துரைசாமியின் கூற்று ஆய்வுக்குரியதாக்குகிறது. "தம் நினைவு சொல் செயல்களைத் தலைமகன் அறியாமைப் பொருட்டுச் சூளுறவு முதலியன செய்தமை தோன்ற, "நீ கண்டனையேம் என்றனர்" என அவர் கூற்றைக் கொண்டெடுத்துங் கூறினார். நீ கண்டனையேம் என்றது "யான் கண்டனைய ரென்னிளை யரும்"(புறம், 191) என்றாற் போல வந்தது. இடைக்காலத்தில் இவ்வாறே வீரர்கள் சூளுறவு செய்த செயல்களைத் திருக்கோயிலூர் வட்டத்து எலவானாசூர் முதலிய இடங்களிற் காணப்படும் கல்வெட்டுகள் (A.R.No 500 of 1937,38) கூறுகின்றன' (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, 2007; ப.30). இக்கூற்று வீரர்கள் சூளுரை செய்த நிகழ்வை வெளிக்காட்டுகிறது. தலைமகன் வெற்றிக்காகச் சொல், செயல்களை ஒருமுகப்படுத்திய நிலையில் தலைவனின் வெற்றி ஒன்றிற்காய் வீரர்கள் சூளுரை உரைத்துத் திறத்துடன் செயல்பட்டுள்ளதை உய்த்துணர முடிகிறது.

கபிலர் பற்றிக் கூறும் இரண்டாவது கல்வெட்டு பாரியுடன் இருந்த உறவையும் கபிலக்கல்லு என்ற ஊர் பற்றிய செய்திகளையும் கூறுவதாகும். சங்கத் தொகைப் பாடல்களில் பெரும்பாலானவற்றில் இப்புலவரின் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அதேபோன்று திருக்கோயிலூர்க் கல்வெட்டு கபிலரின் பிறப்பு பற்றிச் சொல்கிறது. கபிலர் அவ்வூரில் வாழ்ந்ததால் அவ்வூருக்குக் கபிலர் பெயர் வந்திருக்கலாம். ஔவை சு.துரைசாமியின் கூற்று வாயிலாகக் கபிலக்கல்லு பற்றிய செய்திகளை அறியலாம். "திருக்கோவலூர்க் கல்வெட்டொன்று, "மொய்வைத்தியலு முத்தமிழ் நான்மைத், தெய்வக் கவிதை செஞ்சொற் கபிலன், மூரிவண்டடக்கைப் பாரிதன் னடைக்கலப், பெண்ணை மலையர்க் குதவிப் பெண்ணைன, அலைபுன லழுவத் தந்தரி கூஞ்செல, மினல்புகு விசும்பின் வீடு பேறெண்ணிக், கனல் புகுங் கபிலர்க்கல்லது" (S.I.I.Vol.VII.No. 863) என்று கூறுகிறது' (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, பதிற்றுப்பத்து; பாடினோர் வரலாறு; ப.38). இக்கூற்று கபிலர், பாரி மகளிருக்குச் செய்த நலனையும், அவர் வாழ்ந்த பகுதி கபிலர்கல்லு என்று அழைக்கப்படுவதையும் உணர்த்துகிறது. இவ்வாறு இலக்கியப் பதிவுகள் கூறும் வரலாற்றைக் கல்வெட்டு தரும் செய்திகளும் ஒப்புமையாக இருப்பதை

உணர முடிகிறது. இவ்வாறான சமகால வரலாற்றுப் பதிவுகளே இலக்கியப் புரிதல்களை மேலும் வலுவூட்டம் செய்கிறது.

## கபிலர் மரபு: சாதியம்

சங்க காலக் கல்வி என்பது ஒரு சாராருக்கு மட்டுமே வாய்த்திருக்கலாம். கபிலர் உயர்குடி மரபைச் சார்ந்தவராகவே வரலாறு முன்வைக்கிறது. 'உள்ளும் காலை உயர்ந்தோர் மற்றே' என்ற அடிகள் உயர்ந்தோர் என்பவர்கள் கல்வி கற்று, அறிவின் உயர்ந்தவர்களையே தொல்காப்பியமும் சுட்டுகிறது. சங்கப் பனுவல்கள் வர்க்கப் பாகுபாட்டையோ, சாதியப் படிநிலையையோ காட்டவில்லை என்பது மரபுவாதிகளின் கருத்தாகும். அறிவின் உயர்ந்தவர்கள் யார் கல்வி கற்றவர்கள். சங்க காலக் கல்வி யாருக்கானது என்றால் மேட்டிமைச் சமூகத்திற்கானது எனலாம். எனவே கல்வி கற்றவர்கள் மேட்டிமைச் சமூகத்தைச் சார்ந்தவர்கள் என்பது வெளிப்படையாகும். ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றின் வாயிலாகக் கபிலரின் சாதியத்தை இனம் காண முடிகிறது.

கபிலரின் கூற்றும் தன்னை அந்தணர் மரபைச் சார்ந்தவர் என்பதை மேலும் வலுப்படுத்துகிறது. "யானே பரிசிலன் மன்னும் அந்தணர்" எனத் தாமே தம்மை அந்தணனென்று கூறுவதும், மாறோக்கத்து நப்பசலையார் "புலனழுக்கற்ற அந்தணாளன்" என்பதும் நோக்குவார், இவர் அந்தணரில் தலையாய அந்தணரென விழைவர்" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, பதிற்றுப்பத்து; பாடினோர் வரலாறு; ப. 33). இக்கூற்று கபிலர் உயர்குடியான அந்தணர் மரபைச் சார்ந்தவர் என்பது கபிலரின் கூற்றாலே புலப்படுத்துவது, ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் ஆய்வு நேர்மையைக் காட்டுகிறது. அதேபோன்று அந்தணர் மரபிலும் ஏற்றத்தாழ்வு இருந்துள்ளமையும் விளங்கிக்கொள்ள முடிகிறது. கபிலர் அந்தணர் குடியிலும் மிக உயர்ந்த புலனழுக்கற்ற, தலையாய அந்தணர் குடியைச் சார்ந்தவர் என்பது பட்டவர்த்தமாகிறது. எனவே உயர்குடிகளுக்குச் சொந்தமானதாகக் கல்வி இருந்திருப்பதை அனுமானிக்க முடிகிறது. "யானே பரிசிலன் மன்னும் அந்தணன்" என்னும் அடியை எங்கிருந்து எடுத்து மேற்கோள் கொடுத்துள்ளார் என்ற தகவலை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை கொடுக்கவில்லை. இத்தகைய மேற்கோள் இன்மை மீளாய்வுக்குரிய களமாகும். இருப்பினும் இவர் உரைகள் தனி ஒரு புலவர் பற்றியான நீண்ட ஆய்வுரைகளைத் தருவதும் குறிப்பிடத்தக்கதாகும்.

## அரிசில் கிழார்- ஊர்ப்பெயராய்வு

பதிற்றுப்பத்தின் எட்டாம் பத்தினைப் பாடியவர் அரிசில்கிழாரின் இயற்பெயர் இன்னதெனத் தெரிந்தில. இவர் தனது ஊர்ப்பெயராலே அழைக்கப்படுவதாக ஔவை

சு.துரைசாமிப்பிள்ளை கூறுகிறார். அரிசில் என்பது ஊர்ப்பெயராகவே எடுத்துக்கொள்வோம். சங்ககாலப் புலவர்கள் பலர் ஊர்ப்பெயராலே அழைக்கப்படுவது அனைவரும் அறிந்த ஒன்றாகும். ஆனால் 'கிழார்' என்பது பெயரைக் குறிக்குமா என்பதே இங்கு எழுப்பப்படும் வினாவாகும். 'கிழார்' என்பது ஒருவகையான இனக்குழுச் சமூகத்தைக் குறிப்பதாகவே அவதானிக்க முடிகிறது. 'கிழார்' என்ற சொல்லாட்சி மேட்டுக்குடிச் சமூகத்தைக் குறிப்பதாகவும் இருக்கலாம். எனவே, பிற்காலத்தில் உள்ள 'நிலக்கிழாருக்கும்', 'கிழார்' என்ற சொல்லுக்கும் இடையே உள்ள உறவுநிலைகள் மேலாய்வுக்குரியதாகும்.

அரிசில்கிழார் பெயர் குறித்த ஔவை துரைசாமியின் கூற்று, "அரிசில் என்பது சோழநாட்டு ஊர்களுள் ஒன்று. இவ்வூரருகே காவிரியினின்றும் பிரிந்து சென்ற ஒரு கிளை அரிசிலாறு என வழங்குவதாயிற்று. இச்சான்றோர் இவ்வூர்க்கு உரியராய்க் கிழார் என்ற சிறப்புப்பெற்று வாழ்ந்ததோடு நல்லிசைப் புலமை சிறந்து விளங்கினார். ஆயினும், சான்றோர் இவர் இயற்பெயரை விடுத்து அரிசில்கிழார் என்ற சிறப்புப்பெயரையே பெரிதெடுத்து வழங்கினமையின், நாளடைவில் இயற்பெயர் மறைந்து போயிற்று. இப்போது அரிசில் என்ற ஊரும் மறைந்து போயிற்று. போகவே, இச்சான்றோரது அரிசிலூரை, திருச்சி மாவட்டத்து அரியிலூராகவும், மைசூர் நாட்டு அரிசிக்கரையாகவும் கொள்ளலாமோ என ஆராயச்சியாளர் மயங்கலுற்றனர். பூஞ்சாற்றூர் என்பது சோழ நாட்டிற் சங்க காலத்திருந்ததோரூர்; அஃது இடைக்காலச் சோழர் காலத்தும் இருந்தமை கல்வெட்டுகளால் (A.R.256 of 1926) தெரிகிறது. இப்போது அது மறைந்துவிட்டது. இவ்வாறே அரிசில்கிழாரது அசிரிலூரும் மறைந்ததெனக் கோடல் வேண்டும்" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, பாடினோர் வரலாறு; பக்.39-40). இக்கூற்று அரிசில் என்ற ஊர் மறைந்துள்ளதைத் தெளிவுபடுத்துகிறது. அதேபோன்று தற்கால அரியலூராகவும் அரிசிக்கரையாகவும் இருக்கலாம் என்றும் அவதானிக்க முடிகிறது. ஆனாலும், ஔவை சு.துரைசாமிப்பிள்ளை அரிசில் கிழார் பற்றிய தெளிவான முடிவை எட்டவில்லை.

கொச்சி நாட்டை இரு பிரிவுகளாகப் பிரித்துக்காட்டுவதாகக் கல்வெட்டுச் சான்றை முன்வைக்கிறார். இதனை விளக்கும் கூற்றாக "கொச்சி நாட்டுப் பகுதிகளை இடைக்காலக் கல்வெட்டுகள் நெடும் பொறை நாடென்றும் குறும்பொறை நாடென்றும் (A.R.No. 321 of 1924) கூறுகின்றன" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2007; ப.357) இக்கூற்று கொச்சி நாட்டின் இரு பிரிவுகளை வெளிப்படுத்துகிறது. இலக்கியப் பதிவுகளின் வாயிலாகக் கிடைத்த ஊர்களைத் தொல்லியல் சான்றான கல்வெட்டுத் தரவுகளுடன் இணைத்துப் பார்ப்பது இலக்கியத்தை வலுவூட்டுவதாக அமைகிறது.

புலவர் பெயரையும், ஊர்ப்பெயரையும் தக்க தரவுகளுடன் நிறுவும் திறன் போற்றுதலுக்குரியதாகும்.

## கிழார் சொல்லாட்சி

“கிழார்’ என்ற சொல்லாட்சி ஒரு இனக்குழு சமூகத்தை அடையாளப்படுத்துவதாகும். புலவர் மரபில் கிழாரின் பங்கும் தவிர்க்க முடியாதவை. கிழார் என்ற சொல் நில உடைமையாளர்களைக் குறிக்கும் சொல்லாகும். எனவே கிழார் புலவர்களை ஆராயப்பட வேண்டியது அவசியமாகிறது. அதேபோன்று கிழார் புலவர்களைப் பற்றிய தனி ஆய்வு நிகழ்த்த வேண்டிய தேவையும் ஏற்படுகிறது.

கிழார் சமூகம் பற்றிப் பழனிவேலு தரும் கருத்து ஏற்புடையதாகிறது. “கிழார் என்ற பெயரில் புலவர்கள் பலர் இருந்ததனைச் சங்கப் புலவர் பட்டியல் உணர்த்துகிறது. 35 புலவர்கள் கிழார் புலவர்களாக அறியப்படுகின்றனர். உரிமையுடையவன் என்ற பொருளுடைய கிழார் எனும் சொல், நிலத்துக்கு உரிமையுடையவர்களையே குறித்துள்ளது. குறிப்பாக மருத நிலத்துக் கழனிகளை உடையவர்களாகக் கிழார் இருந்துள்ளனர்” (கே. பழனிவேலு; 2010; ப.64). இக்கூற்று கிழார் சமூகத்தின் நிலவுடைமையை வெளிக்காட்டுகிறது. சமூகத் தளத்தில் உயர்குடிகளாகக் கிழார் சமூகம் வாழ்ந்துள்ளதை அறிய முடிகிறது. தொகைப் பாடல்களில் 35 புலவர்களின் எண்ணிக்கை என்பது அச்சமூகக் கல்வி அறிவைப் புலப்படுத்துவதாகும். எனவே கிழார் சமூகம் கல்வி அறிவும், நிலவுடைமையாளராகவும் வாழ்ந்துள்ளதைத் தெளிபடுத்துகிறது. இக்கருத்தாக்கத்தின் வாயிலாகக் கிழார் சமூகம் மேட்டுக்குடிச் சமூகம் என்பதைத் தீர்மானிக்க முடிகிறது.

கிழார் புலவர்கள் பணக்காரப் பாடகர் என்றே கோ. கேசவன் ‘மண்ணும் மனித உறவுகளும்’ என்னும் பனுவலில் பதிவு செய்துள்ளார். கிழார் புலவர்கள் வேந்தர்களுக்கும் மிகவும் நெருக்கமாகவும் இருந்துள்ளனர். கிழார் பாடல்கள் பெரும்பாலும் வேந்தர்களுக்குச் சார்பாகவும், எதிர்ப்பை வெளிப்படுத்தாமலும் இருப்பதைக் காண முடிவதாகப் பழனிவேலு பதிவு செய்துள்ளார். அதேபோன்று கிழார் புலவர்களில் தமது வறுமை நிலையைச் சுட்டும் தன்மை மிகுதியாகக் காணப்படவில்லை என்பதையும் பதிவு செய்துள்ளார். ஆற்றுப்படை அமைப்பில் வரும் கிழார் புலவர்கள் வறுமையை வெளிப்படுத்துவதையும் சுட்டுகிறார்.

“அரிசில் கிழார் தமது இனக்குழுச் சார்புடைய ஏழு பாடல்களில் இனக்குழு எதிர்ப்பு (304) வேந்தர்க்கு உதவும் இனக்குழுத் தலைவர் (281) வேந்தர் உயர்வு (285)

பற்றிய கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளார். இதனால் கிழார் புலவர்கள் பெரும்பான்மை வேந்தர் சார்பாக இருந்தமையை அறியமுடிகிறது” (மேலது; ப.67) இக்கூற்று வேந்தர்களின் நெருங்கிய உறவுகளாகவே கிழார் புலவர்களை அனுமானிக்க வாய்க்கிறது.

இனக்குழு வாழ்வைக் கடந்து நிலவுடைமைச் சமூகமாக மாறிய தருணமே மருதநில வளர்ச்சியாகும். மருதநில வளர்ச்சி புதிய அறிவு மரபின் வளர்ச்சிக்கு அடித்தளமானது. இம்மாற்றத்தால் வேந்தனைச் சார்ந்து இருந்த கிழார்கள் நிலக்கிழார்களாகப் பெரும் மாற்றம் பெற்றிருக்கலாம். நிலத்தைக் கைப்பற்றி வாழ்ந்த மருதநில வாழ்வில் சில கிழார்கள் புலவர்களாக இருந்திருக்கலாம். வேறு கிழார்கள் நிலக்கிழார்களாக வாழ்ந்திருக்கலாம். இருப்பினும் இவர்கள் பழைய பரிசிலர் மரபைப் பின்பற்றியே பாடல் புனைந்திருக்கலாம். புலவர்கள் என்றாலே வறுமை வயப்பட்டவர்களாக வெளிக்காட்டும் மரபைக் கிழார் புலவர்கள் பின்பற்றி உள்ளதாகத் தென்படுகிறது. வறுமையை வெளிப்படுத்தும் பாடல்களே பரிசில்களைப் பெற்றுத் தரும் என்ற எண்ணம் மேலோங்கி இருந்திருக்கலாம்.

நில உடைமையாளராக இருந்த கிழார்கள் உற்பத்தியில் ஈடுபடுதல் புலமையோர் செயல் அல்ல என்றும் உழைக்காமல் இருந்திருக்கலாம். பொதுவாகச் சங்கப் புலவர்கள் வறுமையைப் பாடுவதையே பெருமையாகப் பொருள் ஈட்டும் சாதனமாகக் கருதியிருக்கலாம். புலவர் மரபில் சமூகத்தகுதி ஒன்றாக இருந்தாலும் கிழார் புலவர்கள் நிலவுடைமையாளராக வாழ்ந்துள்ளனர் என்பது திண்ணம். எனவே கிழார்கள் மேட்டிமைச் சமூகத்தின் வெளிப்பாடு என்பது தெளிவாகிறது. சங்க காலத்தை இனக்குழுக்கள் அழிந்து அரசு உருவான காலமாகவே கருத இடமுண்டு.

## புறநானூறு உரைகள் வெளிப்படுத்தும் கல்வெட்டுத் தரவுகள்

சங்க கால இறுதியில் வேந்தர்களும் சான்றோர்களும் சங்கப் புலவர்களும் அவ்வப்போது பாடிய பாட்டுகளைத் தொகுத்து வகைப்படுத்தியுள்ளனர் என்பதை நாம் அனைவரும் அறிவோம். இத்தகைய தொகை நூல்களில் புறநானூறும், பதிற்றுப்பத்தும் வரலாற்று ஆவணமாகத் திகழ்வதை மறுப்பதற்கில்லை. இத்தகைய நூல்களின் அடிப்படையிலே நாம் இன்று வரலாற்றுத் தெளிவை எட்ட முடிகிறது. வரலாற்றுக் குறிப்புகள் செறிந்து காணப்படும் நூல்களில் புறநானூறு தவிர்க்க முடியாத இடத்தைப் பெற்றுள்ளது. இப்பின்புலத்தின் அடிப்படையில் புறநானூற்று உரைகளின் வாயிலான கல்வெட்டுத் தரவுகளை ஆராய முனைகிறது இந்த ஆய்வு.

புறநானூறு இரண்டு தொகுதிகளாகத் தமிழ்மண் பதிப்பகத்தால் வெளியிடப்பட்டுள்ளன. இதில் புறநானூறு முதல் தொகுதியில் இரண்டு கல்வெட்டுத்

தரவுகள் மட்டும் கொடுக்கப்பட்டுள்ளன. முதல் தொகுதியில் அதிகக் கல்வெட்டுத் தரவுகள் இல்லாதது கவனிக்கப்பட வேண்டியுள்ளன. ஆனால், இரண்டாம் தொகுதியில் அதிகக் கல்வெட்டுத் தரவுகள் கொடுக்கப்பட்டுள்ளன. வரலாற்றுத் தெளிவை எட்ட கல்வெட்டுத் தரவுகள் மிகவும் துணைபுரிகின்றன.

புறநானூற்றின் 151ஆம் பக்கத்தில் ஒரே கல்வெட்டுத் தரவு மட்டும் கொடுக்கப்பட்டுள்ளது. 51 வது பக்கத்தில் 43வது பாடலில் சோழன் மாவளத்தன் என்ற தலைப்பில் ஓர் கல்வெட்டுச் செய்தி கூறப்பட்டுள்ளது.

## தாமற்பல்கண்ணனார் ஊர்ப்பெயராய்வு

சங்கத் தொகை நூல்களில் பெரும்பாலான புலவர்கள் ஊர்ப்பெயர்களாலே அடையாளப்படுத்தப்படுகின்றனர். தாமற்பல், தாம்பல் என்ற பாடவேறுபாடு இருப்பதையும் முன்வைக்கிறார். அதேபோன்று இந்த வேறுபாடுகளைக் களைய கோயில் கல்வெட்டை அணுகி ‘தாமல்’ என்ற ஊர்ப் பெயரைத் தெளிவாக்கும் திறன் போற்றுதலுக்குரியது. அதேபோன்று புலவர்களின் சாதிய அடையாளங்களை வெளிப்படுத்த கவனம் செலுத்தி வருவதையும் கவனிக்க முடிகிறது. ஊர்ப் பெயரால் புலவர் அடையாளப்படுத்தப்படுவதை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றின் வாயிலாகக் கவனிப்போம். அம்முறையே, “தாமற்பல்கண்ணனார் என்பார் பார்ப்பனர்; கூர்த்த புலமை நலஞ் சிறந்தவர்; தாம் செய்த தவறை விரைந்துணரும் நல்லறிஞர். தாமப்பல் கண்ணனார் என்றும் பாடமுண்டு. இவர் தாமல் என்னும் ஊரினர். தாமல், காஞ்சிபுரத்துக்கு மேற்கில் உள்ளதோர் நல்லவூர். இடைக்காலச் சோழவேந்தர் காலத்தில் இவ்வூர் மிக்க சிறப்புற்று விளங்கிய தென்பதை இவ்வூரிலுள்ள கோயிற் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இக்கல்வெட்டுகள் இவ்வூரைத் தாமர் (S.I.Vol.1004. A.R.139 of 1896) என்று கூறுதலின், இவர் பெயர் தாமர்ப்பல் கண்ணனாரென இருக்க வேண்டுமென்று துணியலாம். ஏடெழுதியோர் தாமற்பல் கண்ணனாரென எழுதிவிட்டனர்; இவ்வூர் இப்போதும் தாமல் என்று வழங்குவது நோக்கி, இவ்வாறு கொள்ளப்பட்ட தென்று கொள்க. பல்கண்ணன் என்பது இந்திரனையும் குறிக்கும் பெயராதலின், பார்ப்பனராகிய இவர் இவ்வாறு பெயர் பெற்றனர் என்றறியலாம். இதன்கண் “பார்ப்பார் நோவன செய்யார்” என்று இவர் கூறுவதே இவர் பார்ப்பனரென்பதை வற்புறுத்துகிறது” (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2008, ப.151). இக்கூற்று ‘தாமல்’ என்ற ஊர்ப் பெயரின் தெளிவை எட்ட வகைசெய்கிறது. தாமற் என்ற ஊர் தற்காலத்தில் ‘தாமல்’ என்று அழைக்கப்படுவதையும், அது காஞ்சிபுரத்திற்கு அருகில் உள்ளது என்பதைக் கல்வெட்டுத் தரவு கொண்டு ஆராயும் திறன் இவரின் உரையின் தனிச்சிறப்பெனலாம். அதேபோன்று

புலவரின் பாடல் அடிகளில் இருந்தே அவர் பார்ப்பனர் என்பதைத் தெளிவுபடுத்துவதும் கவனிக்கத்தக்கதாகும்.

புறநானூற்று முதல் தொகுதியில் ஏன் அதிகக் கல்வெட்டுத் தரவை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை முன்வைத்து ஆராயவில்லை என்று ஆராயத்தொடங்கினால் நமக்கு மிஞ்சுவது ஒரு தகவல் மட்டுமேயாகும். அது உ.வே.சா. முன்னரே குறிப்பு வடிவில் முதல் தொகுதிக்கு எழுதி வைத்து விளக்கம் செய்யும் எண்ணம் மட்டுமே இருந்திடும் எண்ணத்தினாலோ அல்லது மூத்தோரின் உரைக்கு மறுப்பு அல்லது மரபை ஏற்றல் என்ற எண்ணத்தினாலே ஔவை சு.துரைசாமிப்பிள்ளை மேலும் விளக்க முற்படவில்லையோ என்றே எண்ணத் தோன்றுகிறது. புறநானூறு முதல் தொகுதியின் கல்வெட்டுத் தரவு இத்துடன் முடிவுற்றது. இனி, புறநானூற்றின் இரண்டாம் தொகுதியில் கொடுக்கப்பட்டுள்ள கல்வெட்டுத் தரவுகள் ஆராயப்பட உள்ளன.

தமிழர்களின் வரலாற்றைக் காக்கும் நூல்களாகப் பதிற்றுப்பத்தும் புறநானூறும் அடையாளப்படுத்தப்படுகின்றன. இத்தகைய செய்தியினைத் தி.வை.சதாசிவபண்டாரத்தார் கூற்றின் வாயிலாக நோக்குவோம். இதன் முறையே, “சங்கத்துச் சான்றோர் இயற்றியுள்ள தொகை நூல்களுள் பதிற்றுப்பத்தும் புறநானூறும் தனிச் சிறப்புடையனவாகும். அவை பண்டைக் காலத்தில் நம் தமிழகத்தில் நிலவிய முடியுடைத் தமிழ் வேந்தர், குறுநில மன்னர், பிற தலைவர்கள், புலவர் பெருமக்கள், நல்லிசைப்புலமை நங்கையர் முதலானோரின் அரிய வரலாறுகளையும் தமிழருடைய பழைய நாகரிக நிலையினையும் மற்றும் பல உண்மைகளையும் நம்மனோர்க்கு அறிவுறுத்தும் பெருங்கருவூலங்கள் எனலாம். சுருங்கச் சொல்லுமிடத்து, அவை தமிழ்நாட்டின் பழைய வரலாற்றுக் கருவூலம் என்று கூறுவது எவ்வாற்றானும் பொருந்தும்” (தி.வை. சதாசிவபண்டாத்தார்; 1977, ப.134). இக்கூற்று தமிழ் இலக்கிய வரலாற்றுப் புலத்தில் பதிற்றுப்பத்து, புறநானூற்றின் அவசியத்தை உணர்த்துகிறது. இத்தேவையைக் கருத்தில் கொண்டதன் காரணத்தினாலோ என்னவோ ஔவை சு.துரைசாமிப்பிள்ளை இவ்விரு புறநூல்களுக்கு மட்டும் உரையெழுத முற்பட்டிருக்கலாம். எனவே இவ்விரு நூல்கள் தமிழர்களின் வரலாற்றுக் கருவூலம் என்பது மிகத் தெளிவான கருத்தாகும்.

## கடவுள் வாழ்த்து பாடும் மரபு

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்பவை தனிப்பாடல்களின் தொகுப்பு ஆவணமாகும். எனவே தனித் தனியான பாடல்களுக்குக் கடவுள் வாழ்த்துப்பாடல் பாடும் மரபு இருந்திருக்க வாய்ப்பு இல்லை. எனவே கடவுள் வாழ்த்து பாடும் மரபைப் பிற்காலச் சூழலில், தொகுத்தோரால் ஏற்படுத்தப்பட்டிருக்கலாம். இப்பின்புலத்திற்குத் துணையான கருத்தினைக் க. கைலாசபதியின் கூற்றின் வாயிலாக உய்த்துணரலாம். அம்முறையே

“சான்றோர் செய்யுள்களை ஆராயும்பொழுது, அவற்றைப் பாடிய பாவலர்கள் பாடத் தொடங்குமுன் தெய்வத்தை வழிபட்டனர் என்பதற்குப் பல சான்றுகள் காணலாம். அதாவது அவர்கள் கடவுளைச் செயல்முறையில் வழிபட்டனர். பெரும்பாலும் தனித்தனிச் செய்யுள்களாகப் பாடிய அவர்கள் கடவுள் வாழ்த்தைப் பாட்டாக இயற்ற வேண்டிய தேவை இல்லாதிருந்தது எனலாம். எனினும் பத்துப் பாட்டிலுள்ள நெடும் பாட்டுகளும் கடவுள் வாழ்த்து முன்வர நடவாமையால், அவ்வாறு வருதல் வேண்டுமென்ற இலக்கிய மரபு அவை எழுந்த காலப்பகுதியில் இருக்கவில்லை என்றே எண்ணத்தோன்றுகிறது. தொகை நூல்களான பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்பனவற்றுக்குப் பிற்காலத்திலேயே கடவுள் வாழ்த்து சேர்க்கப்பட்டது. பத்துப் பாட்டை தொகுத்தோர் அத்தொகைக்குக் கடவுள் வாழ்த்தாகத் திருமுருகாற்றுப்படையை அமைத்தனர் என்ற கதை பொருத்தமுடையதாகவே காணப்படுகிறது. எட்டுத்தொகைகளுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, புறநானூறு என்னும் தொகைகட்குப் பிற்காலத்தவரான பெருந்தேவனார் கடவுள் வாழ்த்துச் செய்யுள்களைச் சேர்த்தமைத்தார். ஆகவே, சான்றோர் செய்யுள்களுக்குத் தொடக்கத்தில் கடவுள் வாழ்த்து இருக்கவில்லை என்பது ஒருவாறு உறுதிப்படும். தொல்காப்பியத்திற்கும் கடவுள் வாழ்த்து இல்லை. பதினென்கீழ்க்கணக்கு நூல்கள் தோன்றிய காலப் பகுதியிலிருந்தே நூன்முகத்துக் கடவுள் வணக்கம் கூறும் முறைமை இலக்கிய மரபாயிற்று எனக் கொள்ளலாம்” (க.கைலாசபதி; 2007; பக்.57- 58). இக்கூற்றிலிருந்து கடவுள் வாழ்த்து பாடும் மரபு நீதி இலக்கியக் காலத்தின் தோற்றுவாய் என்பது பொருந்துவதாகும். சமய நெறி தழைத்தோங்கிய காலத்தில் அனைத்துச் செயல்களுக்கும் கடவுளை முதன்மைப்படுத்தும் வழக்கம் தொடங்கிற்று. இக்காலச் சூழலில்தான் கடவுள் வாழ்த்து பாடும் மரபைக் கொண்டுவந்துள்ளனர். இப்பிற்கால மரபைப் பின்பற்றி முற்கால இலக்கியங்களுக்கும் கடவுள் வாழ்த்து பாட முற்பட்டிருக்கலாம். எனவே, கடவுள் வாழ்த்து பாடும் மரபு, பிற்கால, நீதி இலக்கியக் காலத்தின் தொடக்கம் எனலாம்.

புறநானூறு என்னும் வரலாற்றுக் களஞ்சியத்தின் இரண்டாம் பகுதி, பல கல்வெட்டுத் தகவல்களை உள்ளடக்கியதாகும். நமது வரலாற்றை நிலைநாட்டப் புறநானூற்றுத் தரவுகள் மிகவும் பயன்பாடு உடையதாகும். புறநானூற்றின் ஐந்தாம் பத்தில் மொத்தம் மூன்று கல்வெட்டுத் தரவுகளை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை முன்வைத்துள்ளார். அவை, மைசூர் நாட்டில் துவரை நகர் உருவான விதம் மற்றும் ஹொய்சளர்களின் தோற்றம் பற்றியான தகவல்களைப் பின்வரும் கல்வெட்டுகளின் வாயிலாக உறுதிப்படுத்தலாம். அம்முறையை, “தவம் புரிந்து வந்த முனிவனொருவன் புலியைக் கண்டு “சளனே, போய்ப் புலியைக் கொல்க” (அதம் ஹொய்சள) என

வேந்தனைப் பணித்தலும், அவன் உடை வாளையுருவிப் புலியைக் கொன்றான்; முனிவன் அருள் பெற்று மீண்ட சளவேந்தன் அதுமுதல் ஹொய்சளன் எனப்பட்டான்; அவன் வழிவந்தோர் தம்மை ஹோய்சளர் எனக் கூறிக்கொள்வாராயினர் என மைசூர்நாட்டுப் பேலூர் மாவட்டத்துப் பேலவாடியில் உள்ள நரசிம்ம ஹொய்சள தேவர் கல்வெட்டொன்று (EP.car.Vol.I.Bl.171) கூறுகிறது. அந்நாட்டு ஹொன்னாவரத்துக் கேசவப் பெருமாள் கோயில் கல்வெட்டு (Ibid. Hn. 65) இவ்வரலாற்றிற் கண்ட முயலைப் பற்றிய செய்தியை நீக்கி எஞ்சியவற்றைக் கூறுகிறது" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2008; பக்.4-5). இக்கூற்று துவரை மாநகரம் பற்றிய காலத் தெளிவை ஏற்படுத்துகிறது. துவரை நகரம் ஏறக்குறையக் கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் முகிழ்த்த நகரம் என்பதைக் கல்வெட்டுகள் நமக்குக் காட்டுகின்றன. ஆனால் இங்குக் நோக்கப்பட வேண்டியது ஹொய்சளரின் ஆட்சிக் காலத்தில் துவரை என்ற பெயர் உருவான பின்புலத்தைப் புலப்படுத்துகிறது. தவிர அந்நகர் இதற்கு முன் வேறு பெயரால் அழைக்கப்பட்டிருந்திருக்கலாம் என்பதையும் உய்த்துணரலாம்.

இப்பின்புலம் கொண்ட கருத்தை மற்றொரு கல்வெட்டு எவ்வாறு வெளிப்படுத்துகிறது என்பதையும் ஆராய முற்படுவோம். அம்முறையை, "காட்டிலிருந்த முனிவன் மந்திர வலிமையுடையனென்று சளன் என்பான் அறிந்து அவன் திருவடியில் வீழ்ந்து வணங்கினனென்றும், அதனால் மகிழ்ச்சியுற்று, அவனுக்குச் சசகபுரத்தைத் தலைமையாகக் கொண்ட பேரரசை வழங்க வேண்டுமென விரும்பிய முனிவன் அதற்கேற்ற மந்திரச் செயல்களைச் செய்தானென்றும் அதனை அழித்தல் வேண்டிச் சசகபுரநகரத் தெய்வமாகிய வாசந்திகை யென்பாள் ஒரு புலியுருக் கொண்டு வந்தாளென்றும், அது கண்டு முனிவன் அப்புலியைக் கொல்லுமாறு பணிப்பான் "ஹொய்சள" என்றானென்றும், அவன் அவ்வண்ணமே செய்து ஹொய்சள வேந்தனானானென்றும் (Ibid.AK.71) அரிசிற்கரையில் உள்ள வீரவல்லாள தேவன் கல்வெட்டொன்று கூறுகிறது" (மேலது; ப.5). இக்கூற்று புராணத் தகவல்களை விளக்குவதாக இருந்தாலும், ஹொய்சளர்களின் வரலாற்றைக் கல்வெட்டுத் தரவைக் கொண்டு உறுதிப்படுத்தும் தன்மை கவனிக்கத்தக்கது. ஒவ்வொரு சாதி, மதத்திற்கான தொன்மக் கதைகளையும் இச்சமூகம் உருவாக்கி உள்ளதையும் கவனத்தில் கொள்வதும் அவசியமாகிறது. சாதியச் சமூகத்திற்கான தொன்மக் கதைகள் என்பவை வரலாற்றை அடியொற்றியே அமைத்துக் கொள்கின்றனர். அதேபோன்று ஒவ்வொரு சாதிகளும் தங்களைத் தொன்மக் குடிகள் என்று அடையாளப்படுத்தவே முயல்கின்றனர் என்பதை வரலாறு நமக்குக் காட்டுகிறது.

## தற்கால வரலாற்றுத் தொடர்ச்சி

மைசூர் நாட்டின் துவரை நகரை மட்டும் எடுத்துக்கொண்டு அதற்குத் தேவையான பல தகவல்களை முன்வைக்கிறார் உரையாசிரியர். துவரை நகரம் கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் இருந்து, அதன் தொடர்ச்சி உள்ளதை உறுதிப்படுத்த முனைந்துள்ளார். இக்கருத்தை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றின் வாயிலாகக் கவனிப்போம். அம்முறையே, "இப்புலிகடிமால் வழிவந்த இருங்கோ வேளிர்களுட் பலர் புதுக்கோட்டைப் பகுதியில் வாழ்ந்திருந்தனரென அப்பகுதியிலுள்ள கல்வெட்டுகள் காட்டுகின்றன. கொடும்பாளூரிலிருந்து வாழ்ந்த வேளிரும் இருங்கோ வேளிரே; பிற்காலத்தே அவர்கள் இருக்குவேளிர் எனத் தம்மைக் கூறிக்கொள்வாராயினர். இவ்வேளிர்கள் வேளகத்தி (Bailgam) லிருந்து கங்கநாடு கொங்கு நாடுகளின் வழியாகத் தென்னாடடைந்தவர். இனி வேளிர்கள் முதற்கண் வாழ்ந்த மலைநாடு பொன்வளம் படைத்தவை யாதலின் "பொன்படு மால்வரை கிழவ" என்றாரென்றுமாம்" (மேலது; ப.6). இக்கூற்று ஒரு சமூகத்தின் இடப்பெயராய்வு என்பது கால மாற்றத்தால் எவ்வாறு நிகழ்கிறது என்பதைப் புலப்படுத்துகின்றன. அதே இன மக்கள் தற்காலச் சூழலில் எவ்வாறு, எப்பெயர் பெற்று விளங்குகின்றனர் என்பதையும் இத்தகைய கூற்றின் வாயிலாக உய்த்துணர முடிகிறது.

## கரிகால் சோழனின் கருங்குளம்: ஊர்ப்பெயராய்வு

கருங்குளம் என்ற ஊரின் பெயரை எடுத்துக்கொண்டு, அதனை அரசனுடனும், ஊர்ப் பெயர் மாற்றத்துடனும் ஆராய முற்பட்டுள்ளார் உரையாசிரியர். சங்கப் பாடல் கூறும் கருங்குளம் எவ்வாறெல்லாம் மாற்றம் பெற்றுள்ளது. அதேபோன்று இரண்டு வார்த்தைகளைக்கொண்டு ஆராய்ந்து, அதில் எது சரி என்பதையும் உறுதிப்படுத்துகிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை. அம்முறையே, "கருங்குளவாதனார் பெயர் கருங்குழலாதனார் என்று அச்சுப்படியிற் காணப்படுகிறது. அது பொருந்தாது. கருங்குளம் என்னும் ஊரினரான ஆதனார் என்பது கருங்குவளவாதனா ரென்பதன் பொருள். இக்கருங்குளம் பாண்டிநாட்டில் இப்போது கோட்டைக் கருங்குளமென வழங்குகிறது. இடைக்காலத்தே, இது "கருங்குள வளநாட்டுக் கரிகால சோழ நல்லூரான கருங்குளம்" (Annual Report on Epigraphy, Madras No. 269 of 1928) எனப்பட்டது. இதனால் இவ்வூர், கரிகாற் சோழனால் ஆதனார்க்குத் தன் பெயரால் தரப்பட்ட தென்பதும் தெளிவாம்" (மேலது; பக்.73-74). இக்கூற்றின் வாயிலாக அச்சுப்படியிற் ஏற்படும் மாற்றங்கள், எவ்வாறு வரலாற்றையே அல்லது பெயர் அடையாளங்களையே மாற்றி விடுகிறது என்பதைப் புலப்படுத்துகின்றன. இத்தகைய பிழைகளைக் களைய,

கல்வெட்டுத் தரவுகளைக் கொண்டு உறுதிப்படுத்துகிறார். அத்துடன் கருங்குளம் என்ற ஊர் எந்த நாட்டில் உள்ளது, தற்பொழுது என்ன மாற்றம் பெற்று விளங்குகிறது, என்ற முக்காலச் செய்திகளையும் இணைத்து ஆராயும் போக்கு இச்செய்தியை மேலும் வலுவடையச் செய்கிறது.

கருங்குளம் என்ற ஊர் கரிகாற் சோழனின் உடைமையாக இருப்பினும், சேரர் குடிக்கும் இவ்வூர் தொடர்புள்ளதையும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உறுதிப்படுத்த முயல்கிறார். சேரர், சோழர், பாண்டியர் என்ற மூவருக்கும் இருந்த உறவினையும் இத்தகைய செய்திகள் உறுதிப்படுத்துகின்றன. அம்முறையே, “பாண்டியன் இராசசிங்கன் காலத்தில் இராசசிம்மேச்சுரம் என்னும் சிவன் கோயில் கட்டப்பட்டுளது. இவ்வூர் பின்பு சீகண்ட நல்லூரெனவும் பெயர் பெற்றது. (A.R.No.277 of 1928) இவ்வூர்க் கோயிலுக்குத் திருவாங்கூர் வேந்தரும் திருப்பணி (A.R.No.287 of 1928) செய்துள்ளனர். இதனால் சேரர் குடிக்கும் இவ்வூர்க்கும் தொடர்புண்மை துணியப்படும்” (மேலது; ப.74). இக்கூற்று மன்னர்கள் நாட்டை ஆளுகின்ற முறையில் பிரிந்து இருந்தாலும், திருப்பணி கோயில் தளங்கள் உருவாக்கும் முறைகளில் பாகுபாட்டைத் தவிர்த்து வாழ்ந்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது. அவ்வூர்ப் பெயர்கள் பிற்காலத்தில் தளங்களின் பெயரால் ஊர்ச் சிறப்பு பெறுவதையும் இக்கருத்து உறுதிப்படுத்துகிறது.

## மரபின் வழியான நம்பிக்கை

தொடக்க காலம் முதலே மனிதன் பலவகையான நம்பிக்கைகளுக்கு ஆட்பட்டுள்ளமை அனைவரும் அறிந்ததேயாகும். இயற்கையின் மீது சடங்குகளையும் மனித இனம் நிகழ்த்தி வருவதையும் இன்று வரை தொடர்வதையும் நாம் கவனத்தில் கொள்ளவேண்டி இருக்கிறது. தொடக்கத்தில் வளமையை வணங்கிய மனிதன், பிற்காலத்தில் கடமையாகக் கருதிப் பின்பற்றுவதையும் நாம் அறிவோம். இப்பின்புலத்தில் பின்வரும் கூற்றினை நாம் ஆராய முற்படுவோம். இதன் முறையே, “பருந்து விழுங்குவதாகச் செய்யப்படுவதைக் கருடசயமெனவும் கூறுவர். சடங்கவிக் குறிச்சி யென்றோர் ஊரும் பாண்டிய நாட்டில் உண்டு. (A.R.453 of 1930) அமர் கடத்தல், கடும்பு புரத்தல், வேள்வி தொழின் முடித்தல் என்ற இவற்றால் ஆகும் இம்மை மறுமைப் பயன்களை நன்கறிந்தவன் கரிகாலன் என்பார்” (மேலது; ப.74). இக்கூற்று சடங்குகளின் பெயர்களாலும் ஊர்ப் பெயர்கள் அடையாளப்படுத்தப்படுவதை விளங்கிக்கொள்ள முடிகிறது. அத்தருணம் சங்ககாலச் சமூகம் இம்மையால் விளையும் பயன்களையும் நன்கறிந்த சமூகமாக வாழ்ந்துள்ளனர் என்பதை இத்தகைய கூற்றுகள் வெளிப்படுத்துகிறது. இத்தகைய செய்திகளைக் கல்வெட்டுத் தரவுகள் கொண்டு உறுதிப்படுத்தும் தன்மை மேலும் இக்கருத்தை வலுவூட்டுகின்றன.

## சோழநாட்டு ஆலத்தூர்-ஊர்ப் பெயராய்வு

ஊர்ப் பெயரின் அடையாளங்களே ஒரு நாட்டின் எல்லையை வரையறை செய்கிறது என்பது திண்ணம். ஊர்ப் பெயர்கள் என்பவை கால மாற்றங்களுக்கு ஏற்ப மருவி வருவதைக் கவனிக்க முடிகிறது. அதேபோன்று பல கல்வெட்டுகளை வைத்து ஒரு ஊர்ப் பெயரை உறுதிப்படுத்த முனைகிறார் உரையாசிரியர். இத்தகைய பின்புலத்தை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றின் வழியே ஆராய முற்படுவோம். அம்முறையே, "ஆலத்தூர் கிழாருடை ஆலத்தூர் சோழநாட்டுக் காவிரி தென்கரையிலுள்ளதோரூர். இதனை இடைக்காலக் கல்வெட்டுகள் "ஆவூர்க் கூற்றத்து விக்கிரமசோழன் பேராலத்தூர்" (A.R.No.481 of 1922) என்றும் "தென்கரை நித்த விநோத வளநாட்டு ஆலத்தூர்" (A.R.No.360 of 1929) என்றும் கூறுகின்றன. திருச்சிவபுரத்துக் கல்வெட்டொன்றில் "நித்தவிநோத வளநாட்டு ஆவூர்க்கூற்றத்து ஆலத்தூர் கிழான்" (A.R.No.273 of 1927) ஒருவன் காணப்படுகின்றான். இக்குறிப்புகளால் இப்பாட்டைப் பாடிய ஆலத்தூர் கிழாரும் இவ்வூரினரேயெனத் துணியலாம்" (மேலது; ப.77). இக்கூற்றினால் ஆலந்தூர்கிழார் பற்றியான தெளிவை உய்த்துணரச் சிரமம் ஏற்படுகிறது. ஆலத்தூர் கிழார் என்ற பெயரை உடைய ஒருவர் இப்பாடலைப் பாடினார் என்பது மேலாய்வுக்குரியதாகும். அதேபோன்று பேராலந்தூர், ஆலத்தூர் என்பதும் வேறானதா இல்லை ஒன்றானதா என்பதையும் தெளிவுபடுத்த முனையவில்லை என்றே எண்ணத் தோன்றுகிறது. ஆனால், ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றால், இப்பாடலைப் பாடியவர் வேறு வேறாக இருந்தாலும் ஒரே ஊரினைச் சார்ந்தவராக இருத்தல் வேண்டும் என்ற கருத்து ஏற்புடையதாகிறது. ஆலந்தூர் என்பது "ஆனந்தூர்" என்று திரிந்து இருக்கவும் வாய்ப்பு இருக்கிறது. ஆனந்தூர் என்பது சமகாலத்தில் புழங்கிவருவதையும் அறியலாம்.

## அதியமான் எழினியின் தகடூர் ஊர்ப்பெயராய்வு

அதியமான் ஆண்ட பகுதி தகடூர் என்பது யாரும் அறிந்ததேயாகும். அவ்வூர் சங்க காலம் தொடங்கித் தற்காலத்தில் என்னவாக மாற்றம் பெற்றுள்ளது என்பதை ஆராய முற்படுவோம். அம்முறையே, "தகடூர் நாட்டில் அதியமான்களின் கோட்டையிருந்தவூர் இந்நாளில் "அதமன் கோட்டை" யென வழங்குகிறது. தகடூரும் இந்நாளில் தருமபுரியென வழங்குகிறது. இந்த எழினியின் வழிவந்தோர் கி.பி. எட்டாம் நூற்றாண்டிலும் தகடூர்ப் பகுதியில் இருந்தனரென்று தகடூர்க்கருகிலுள்ள ஒட்டப்பட்டிக் கல்வெட்டுகள் (A.R.No.211of1910) தெரிவிக்கின்றன" (மேலது; பக்.90-91). இக்கூற்று ஊர்ப் பெயர்களின் மாற்றங்களை நினைவூட்டுகிறது. ஊர்ப் பெயர்கள் கால மாற்றங்களுக்கு

ஏற்ப, மொழி மாற்றம் அடைவதை அடிப்படையாகக் கொண்டு ஊர்ப் பெயர்கள் மாற்றம் அடைவதை உய்த்துணரலாம்.

இலக்கியத் தரவுகளை உறுதி செய்ய கல்வெட்டுத் தரவினை முன்வைப்பது ஒரு வகையில் ஏற்புடையதாகும். இருப்பினும் கல்வெட்டுத் தரவுகள் அனைத்தும் சரியானதா என்ற வினாவை முன்வைத்து விவாதிக்கத் தொடங்குவோம். எப்படி ஓலைச்சுவடிகளில் இருந்து படியெடுக்கும் பொழுது சில மாற்றங்கள் ஏற்படுகின்றதோ, அதே போன்று கல்வெட்டு செதுக்குதலிலும் சில மாற்றங்கள் நிகழ வாய்ப்பிருக்கின்றன. இத்தகைய மாற்றங்களையும் கவனிக்க வேண்டியது அவசியம்.

கல்வெட்டைச் செதுக்கியவர்கள் யார் என்ற வினா எழுவதைத் தவிர்க்க முடிவதில்லை. கல்வெட்டு, ஓலைச் சுவடி இவற்றில் எழுத்தைப் பிரதியாக்கம் செய்வதற்கென்று ஒரு தொழில்முறைக் கலைஞர்கள் இருந்திருக்கலாம். இக்கலைஞர்கள் முழுமையான கல்வியறிவு பெற்றவர்களாக இருந்தார்களா என்ற கேள்வியும் முளைத்துவிடுகிறது. அதேபோன்று இக்கலைஞர்களின் கவனக்குறைவினாலும் தவறுகள் நிகழ்ந்திருக்க வாய்ப்புள்ளதை அனுமானிக்கலாம். இப்பின்புலத்தில் ஆ.விநாயகமூர்த்தியின் கருத்தை இணைத்துப் பார்த்து ஆராய வேண்டியது அவசியமாகிறது. அம்முறையே, “பண்டைய காலத்தில் நூல்களைப் பிரதிசெய்து கொடுப்பதற்கென்று தொழில் முறை எழுத்தாளர்கள் இருந்தனர். அவர்களுடைய கையெழுத்து மிகவும் திருத்தமாகவும் அழகாகவும் இருக்கும். சுவடிகள் பிரதி செய்வதே அவர்கள் தொழில். அதன்மூலமாகக் கிடைக்கும் பொருள் வருவாயில் இருந்தே அவர்கள் வாழ்க்கை நடத்தினர். செல்வர் சிலர் தம் வீட்டு நூலகங்களில் நூல்களைச் சேமித்து வைக்க விரும்பியபோது இந்த எழுத்தர்களுக்குக் கூலி கொடுத்துப் பிரதி செய்யச் சொல்வதுண்டு. பெரியபுராணத்தில் கணநாத நாயனார், திருமுறைகளைப் பிரதி எழுதச் செய்து அவற்றைப் பிறருக்கு வழங்குதலை ஒரு தொண்டாகவே நிகழ்த்திய செய்தி காணப்படுகிறது. கூலிக்காகப் பிரதியெழுதுபவரில் கல்வியறிவு இல்லாத ஒருவர் நூலின் பொருள் தொடர்ச்சியை உணராமல் ஒரு பாடலையோ சில பாடல்களையோ விட்டுவிட்டால் அவர்தம் பிரதி குறையுடையதாகவே நிற்கும்” (ஆ. விநாயகமூர்த்தி; 1994; ப.11). இக்கூற்று பிரதியெடுப்பதில் ஏற்படும் சிக்கல்களையும் அதற்கான காரணங்களையும் உணர்த்துகிறது. இத்தகைய பிரதிகளில் ஏற்படும் பிழைகளைப் போன்று கல்வெட்டு செதுக்கும் முறைமையையும் இணைத்துப் பார்த்தல் அவசியமாகிறது. எனவே கல்வெட்டுப் பதிவுகளிலும் இத்தகைய பிழைகள் ஏற்பட்டிருக்கும் என்றே எண்ணத் தோன்றுகிறது. எனவே, இப்பதிவுகள் இரண்டினையும் சரியான ஆய்தலுக்கு உட்படுத்திப் பயன்படுத்துவதே சாலச் சிறந்ததாகும்.

இப்பின்புலத்தின் அடிப்படையில் கல்வெட்டாய்வையும் ஆராய வேண்டிய தேவை இருக்கிறது. கல்லில் எழுத்தைச் செதுக்கியவர்களும் கூலிக்கு வேலை பார்த்தவர்களாக இருக்கலாம். இத்தகையோரின் எழுத்து எப்படிச் சரியான வரலாற்று ஆவணத்தைத் தரமுடியும் என்பதும் ஆய்வுக்குரியதாகும்.

## பேரெயில் முறுவலார் - புலவர் பெயராய்வு

இலக்கியப் பிரதிகள் காட்டக் கூடிய பெயர்கள் சரியானவையா என்பதை உறுதி செய்ய கல்வெட்டுப் பெயராய்வுகள் துணை புரிகின்றன. இலக்கியப் பிரதி, கல்வெட்டுப் படிகள் இவை இரண்டினையும் இணைத்து ஆராய்ந்து ஒரு முடிவை எட்டும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் பெயர் ஆராயும் முறை அவரின் உரைத்திறனின் புது முயற்சி எனலாம். இப்பின்புலத்தின் அடிப்படையில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரையின் வாயிலாக ஆராய முற்படுவோம். அம்முறையே, “நம்பி யென்னும் பாண்டிநாட்டுக் குறுநிலத் தலைவன் அரிய வினையைச் செய்து முடிவேந்தனாகிய பாண்டியன் நெடுஞ்செழியன் பெயரைத் தனக்குப் பட்டமாகப் பெற்றான். அதனால் இவனைச் சான்றோர் நம்பி நெடுஞ்செழியன் என வழங்கினர். இவன் காலத்து முடியுடைப் பெருவேந்தன் பாண்டியன் நெடுஞ்செழியன் எனக் கருதலாம். இப்பாண்டி நாட்டுக் குறுநிலத் தலைவன்பால் இந்நாட்டு வெண்புல நாட்டுப் பேரெயில் (A.R.No.96 of 1894) என்னும் ஊரினரான முறுவலார் என்ற நல்லிசைச் சான்றோர் பேரன்பு கொண்டொழுகினார்” (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2008; ப.112). இத்தகவல் வரலாற்றுத் தொடர்பான வாழ்வியல் தொடர்வாழ்வியலை நினைவூட்டுவதாகக் கொள்ளலாம். தற்காலச் சூழலில் தனக்குப் பிடித்த தலைவர்கள், நடிகர்கள் பெயர்களைத் தன் குழந்தைகளுக்கு வைப்பது தற்கால வழக்கம் எனலாம். இத்தகைய பிற்கால நிகழ்வுகள் முற்காலத்திலேயே பின்பற்றப்பட்டுள்ளன என்பதை இந்நிகழ்வுகள் நினைவூட்டுகின்றன. அதே போன்று குறுநில மன்னர்கள் தனித்தனியாகப் பிரிந்திருந்தாலும் ஒற்றுமை நிலைப்பாட்டையே பேணியுள்ளனர் என்பதையும் விளங்கிக் கொள்ளலாம். ‘முறுவலார்’ என்ற புலவர்கள் எந்நாட்டை, எம் மன்னரைப் பாடியுள்ளனர் என்பதைக் கணிசமாக அறிய கல்வெட்டுத் தரவுகள் மிகவும் துணைபுரிவதை உய்த்துணரலாம்.

## கீரத்தனார், நல்லாதனார் – பெயர்மாற்றம்

பெயர் மாற்றம், வேறுபாடு என்பது எல்லாக் காலத்திற்கும் ஏற்றாற் போன்று மாறிக்கொண்டே வருகின்றது. இவ்வாறு வேறுபாடு நிகழும் பெயர்களை இலக்கியம், கல்வெட்டு இரண்டு தரவுகளில் ஒன்றையாவது எடுத்தியம்பிச் சொல்லும் கருத்தினை உறுதிப்படுத்தும் திறன் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரைத்திறனின்

தனித்திறனாகும். அதிகமான புலவர்களின் பெயர்கள் அவர்கள் வாழ்ந்த ஊரின் பெயர்களாலே அடையாளப்படுத்தப்படுவதைக் காணலாம். இத்தகைய பின்புலத்தில் ஊர்ப் பெயர்களை மையமாக வைத்துப் புலவர் பெயரினைத் தெளிவுபடுத்துவது என்பது ஆராய்ச்சிக்குரியதாகும். இத்தகைய கருத்தில் தெளிவை எட்ட, பின்வரும் கூற்றின் வாயிலாக இதனை ஆராய முற்படுவோம். அம்முறையே, “குடவாயிற் கீரத்தனார் பெயர் குடவாயில் நல்லாதனாரென்றும் ஏடுகளிற் காணப்படுகின்றன. பெயர் வகையில் வேறுபாடுண்டாயினும் ஊர் வகையில் அஃதில்லாமை குறிக்கத்தக்கது. கொங்கு நாட்டிலும் குடவாயில் என்றோர் ஊர் பொங்கலூர்க்கா நாட்டிலுள்ளதெனக் கோயம்புத்தூர் மாவட்டத்திலுள்ள இடிகரைக் கல்வெட்டொன்று (A.R.No.6 of 1923) கூறுகிறது” (மேலது; ப.122). இக்கூற்று ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரையை மேலும் ஆராய்தலுக்கு வழிவகுக்கிறது எனலாம். இங்கு ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தரும் விளக்கம் பொருத்தமானதா என்ற ஐயம் எழுகிறது. குடவாயிற் என்ற ஊர்ப் பெயர் பொதுவாக இருந்தாலும் புலவர் பெயர் முழுமையும் மாறியிருப்பதை ஏற்று ஒன்று என்று கூறுவது மேலாய்வுக்குரியதாகும். ஒரே பெயரில் பல ஊர்கள் இருந்திருக்கவும் வாய்ப்பு உள்ளது. அவ்வூர்களில் வெவ்வேறு பெயர் கொண்ட புலவர்களும் இருந்திருக்கலாம். ஆனால், இரு ஊர்ப் பெயரையும் இணைத்துப் பார்ப்பது போல் புலவர் பெயர்களையும் இணைத்துப் பார்ப்பது பொருத்தம் உடையதா என்பதும் மேலாய்வுக்குரியதாகும்.

## கோட்டம்பலம்: ஊர்ப்பெயராய்வு

கல்வெட்டாய்வுகளில் அதிகம் இடம்பெறுவது ஊர்ப் பெயராய்வாகவே இருக்கின்றது. பிரதிபேதம், கல்வெட்டுப் படி எடுத்தல் முதலியவற்றின் வாயிலாகப் பல ஊர்ப் பெயர்கள் மாற்றம் அடைந்துள்ளதைக் கவனிக்க முடிகிறது. சங்க காலங்களில் இருந்த ஊர்ப் பெயர்கள் பிற்காலங்களில் என்னவாக மாற்றம் அடைந்துள்ளன என்பது வரலாற்றுத் தொடர்புடன் ஆராயும் முறை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை தனிச்சிறப்பை வெளிப்படுத்துவதாகும். இத்தகைய கருத்தாக்கங்களை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றின் வாயிலாக ஆராய முற்படலாம். அம்முறையே, “கோட்டம்பல மென்பது சேர நாட்டூர்களுள் ஒன்று. இக்கோட்டம்பலம், இப்போது அம்பலப்புழை யென்னும் இடமாகும்; கடற்கோட்டில் உள்ள அம்பலமாதலின், இது கோட்டம்பலம் எனப் பண்டை நாளில் பெயர் பெற்று, பிற்காலத்தே அம்பலப் புழையென மாறிற்றாதல் வேண்டும்; இன்றும் இது தொன்மைச் சிறப்புடைய ஊராகவே விளங்குவதும், இப்பகுதியில் மாக்கோதை மங்கலமென ஓர் ஊர் இருப்பதும் இக்கருத்தை வலியுறுத்துகின்றன. இது சில ஏடுகளில் கூத்தம்பலம் எனப்பாடம் வேறுபடுகிறது. சேரநாட்டில் பல கூத்தம்பலங்கள் உள்ளன. கூத்தம்பல மென்பதே பாடமாயின்,

இறைவன் கோயில்களிற் காணப்படும் இக்கூத்தம்பலங்களுள் ஒன்றிலிருந்து இம்மாக்கோதை துஞ்சினான் எனக் கோடல் வேண்டும். திருவாங்கூர் நாட்டு அரிப்பாடு முதலிய இடங்களில் கூத்தம்பலங்கள் இருந்திருக்கின்றன என அந்நாட்டுக் கல்வெட்டறிக்கைகள் (T.A.S.Vol.vi of 1927, p. 35) கூறுகின்றன" (மேலது; ப.127). இத்தகைய இலக்கியத் தரவுகளே ஊர்ப் பெயர்களைக் கல்வெட்டுத் தரவுகள் கொண்டும், இலக்கியத் தரவுகள் கொண்டும் ஆராயும் திறன் இவரின் உரைத்திறனின் வெளிப்பாடாகும். ஒரு ஊரின் தொன்மையைக் கூறி, அது பிற்காலத்தில் இறைவனுக்கு இடமாகி இருப்பதை அறியலாம். கூத்தம்பலம் என்ற ஊர்ப் பெயரின் தொடர்ச்சியை இன்றும் காணமுடிகிறது. இத்தகைய ஆராய்தல் கோட்டம்பலம் என்ற ஊரின் அடையாளத்தைக் கல்வெட்டுத் தரவுகளால் உறுதி செய்யப்படுகிறது.

கோட்டகம் பற்றிய தகவல்களை மேலும் உறுதிப்படுத்தவும், அதனைப்பற்றி மேலும் தகவல் அறியவும் இரா.பி. சேதுப்பிள்ளையை அணுகலாம். கோட்டகம் பற்றிய தகவலை இக்கூற்றின் வாயிலாகக் கவனிப்போம். அம்முறையே, "கோட்டகம் என்பது பெரிய ஏரியின் பெயர். காவிரி நாட்டில் பல கோட்டகங்கள் உண்டு. தஞ்சை நாட்டில் உள்ள புதுக்கோட்டகம், மானங்காத்தான் கோட்டகம் முதலிய ஊர்கள் இதற்குச் சான்றாகும்" (இரா.பி. சேதுப்பிள்ளை; 2009; ப.23). இக்கூற்று கோட்டகம் பற்றியான மற்றொரு பரிமாணத்தைக் காட்டுவதாகக் கொள்ளலாம். கோட்டம்பலம் என்பதற்கும் கோட்டகம் என்பதையும் இணைத்துப் பார்த்தல் அவசியமாகிறது. கோட்டகம் என்பது ஏரியைச் சுற்றியுள்ள பகுதி என்பதும், கோட்டம்பலம் இறைவன் நீர்நிலைகளைச் சுற்றி இருப்பதும் அறிந்த ஒன்றாகும். எனவே இவை இரண்டும் பெயரளவிலும், இடத்தன்மையிலும் ஒத்திருப்பதால் இப்பெயர்கள் பொருந்துவதாகக் கருதலாம்.

## தும்பைச் சொகின்னார் பெயராய்வு

தும்பை என்பதில் மாற்றுக் கருத்து பல தென்படுகின்றது. தும்பை, தும்பி என்னும் சொகினனார், சொகினம் என்றும் பல பாடவேறுபாடுகள் இருப்பதை அறிய முடிகிறது. இத்தகைய வேறுபாடுகள் இருப்பினும், ஔவை சு.துரைசாமிப்பிள்ளை இவற்றினை எவ்வாறு ஆராய்ந்து தெளிகிறார் என்பதைப் பின்வரும் கூற்றின் வாயிலாகக் கவனிப்போம். அம்முறையே, "தும்பை யென்பது இவரது ஊர் எனவும், சொகினன் என்பது இவரது பெயரெனவும் கொள்க. தும்பையூர் "தொண்டை நாட்டுப் பையூரிளங் கோட்டத்துப் பண்டைய நாட்டுத் தும்பையூர்" (Nel.Ins.Sulur.15) என்றும், திருவேங்கடத்துக்கண்மையிலுள்ள திருச்சொகினூர் (திருச்சானூர்) (A.R.No.452 of 1924) சொகின்னூரென்றிருந்து திருச்சொகினூரென மருவியிருக்க வேண்டுமென்றும், இச்சான்றோர் தொண்டை நாட்டுச் சான்றோருள் ஒருவராமென்றும் செந்தமிழ்ச் செல்வி

(23-4,152)யில் ஆராய்ந்து காட்டப்பட்டுள்ளன. சொகினன்-சொகினம் (நிமித்தம்) கூறுபவன்; சொகினம் பிற்காலத்தே சகுனம் என மருவிவிட்டது” (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2008; ப.136). இக்கூற்று சொகினன் என்ற குடி மரபின் நிலைப்பாட்டை உணர்த்துகிறது. சொகினன் (நிமித்தம்) பார்க்கும் தொழில் செய்து இருந்ததால் என்னவோ இவர்கள் இப்பெயர் பெற்றிருப்பார் என்று எண்ணத் தோன்றுகிறது. சொகினம் பார்ப்பவர்கள் மற்றவர்கள் வாழ்வில் நடக்கும், நடக்கவிருக்கும் நிகழ்வுகளை முன்னரே அறிந்து, அவற்றிற்கான நிமித்தங்களைக் கணிக்கின்ற ஒரு சமூகமாகச் சொகினாரை இனம் காணலாம்.

## குளம்பந்தாயனார் – பெயராய்வு

ஊர்ப் பெயர்களாலே அறியப்படும் பெரும்புலவர்களின் மத்தியில் இப்புலவர் மட்டும் தன் தந்தையின் பெயரால் அடையாளப்படுத்தப்படுகின்றார். இத்தகைய அடையாளம் என்பது தற்காலப் பெயர் அடையாள வாழ்வியலை நினைவூட்டுவதாகும். இப்பெயர் அடையாளம் என்பது தந்தையின் பெருமையைக் கருதியும் இப்புலவரின் பெயர் இவ்வாறு அடையாளப்படுத்தப்பட்டு இருக்கலாம். குளம்பன் என்பது தாயனார் என்ற புலவரின் தந்தைப் பெயரைக் குறிக்கலாம். இத்தகைய கருத்தாக்கங்களை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றின் வாயிலாகவே நோக்குவோம். அம்முறையே, “குளம்பன் என்னும் பெயர் இடைக்காலத்தும் குழம்பன் என மக்கட்கு இடப்பட்டுள்ளது; “சிவப்பிராமணன் பாலாசிரியன் சாத்தன் சிவப்பிரியனான குழம்பன் நாயகன்” (S.I.I.Vol.VIII.No.330) என வருதல் காண்க. குளம்பனாரென்றொரு நல்லிசைச் சான்றோர் நற்றிணை பாடிய ஆசிரியர் வரிசையுட் காணப்படுகிறார். அவரின் வேறுபடுத்தற்குக் குளம்பனார் மகனார் தாயனாரென்னாது குளம்பந்தாயனார் என்று சான்றோர் இவர் பெயரைக் குறித்திருக்கின்றனர்” (மேலது; ப.145). இக்கூற்று குளம்பன் என்ற நல்லிசைப் புலவரின் மகன் தாயனார் என்பதைத் தெளிவுபடுத்துகிறது. இப்புலவர் தந்தையின் சிறப்பால் மகன் பெயர் அடையாளப்படுத்தப்படுகிறது என்பதையும் உய்த்துணர முடிகிறது. குளம்பன், குழம்பன் என்ற பெயர் சிக்கலில் இருந்து ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தெளிவை ஏற்படுத்தியுள்ளதை அறியமுடிகிறது. தற்காலச் சூழலில் இத்தகைய பின்புலத்தை நாம் கவனிக்க வேண்டியது அவசியமாகிறது. ஒருவரின் சிறப்பின் பெயரால் அவ்வம்சத்திற்கே அப்பெயர் தொடர்ந்து வருவதையும் இப்புலவரின் பெயராய்வின் வாயிலாக உய்த்துணர முடிகிறது.

## கந்தாரம் – பெயராய்வு

கந்தாரம் என்னும் சொல் ஊர்ப் பெயரைக் குறிக்கும் சொல்லாக இனம் காணலாம். கந்தாரம் என்பது எத்தகைய சொல்லாட்சியின் கீழ் இயங்குகின்றது என்பதை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றின் வாயிலாகவே ஆராய முற்படுவோம். அம்முறையே, "கந்தாரம் என்பது காவிரிக்கரையைச் சார்ந்த ஒர் ஊர். இவ்வூரினைத் தலைமையாகக் கொண்ட சிறு நாடும் இருந்தது; இதனை "நித்தா வினோதவள நாட்டுக் கந்தார நாடு" (M.E.R.1936-37.No.31) எனக் கல்வெட்டு கூறுவது காண்க" (மேலது; ப.159). இக்கூற்று காவிரிக்கரையைச் சார்ந்த ஊர் கந்தார நாடு என்பதை உணர்த்துகிறது. அவ்வூர் அமைந்துள்ள இடத்தை மட்டும் குறித்து, அவ்வூர்ப் பெயருக்கான விளக்கத்தை விளக்கிச் செல்லாதது பெருங் குறையேயாகும்.

குறிப்பிட்ட இனம் சார்ந்த மக்கள் எந்தப் பகுதியில் அதிகம் வாழ்கின்றனர் என்பதைப் பாடல்களின் உரைகளின் வாயிலாக உணர்த்த முயன்றிருக்கிறார் உரையாசிரியர். இக்கருத்தை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றின் வாயிலாகக் நோக்க முற்படுவோம். அம்முறையே, "பெருநற்கிள்ளியின் பெயருடையோர் புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள வூர்களிற் காணப்படுதலால் (A.R.No.297 of 1974) இப்பாட்டு அவ்வூர் நிகழ்ச்சியாகக் கோடற்கு இடனாகிறது" (மேலது; பக்.159-160). இக்கூற்று ஒரு மனித இனத்தைப் பாடல் வரிகள் கொண்டு எவ்வாறெல்லாம் அடையாளம் காண முடியும் என்பதைத் தெளிவாக்குகிறது. குறிப்பிட்ட பகுதியில் இன்ன மக்கள் பெரும்பான்மையாக வாழ்கின்றனர் என்ற புள்ளிவிவரத்தைப் பாடல் உரைகளின் வாயிலாக உய்த்துணரக் கல்வெட்டுத் தரவுகள் துணைபுரிகின்றன.

## நடுகல் உணர்த்தும் வரலாறு

பழங்காலங்களில் நடுகல் வழிபாட்டு முறை இருந்துள்ளது. நடுகல்லில் எழுதும் முறை ஒரு மாவீரனின் வீரத்தைப் போற்ற, அவ்வீரனின் வெற்றியை நினைவூட்ட எழுதப்பட்ட முறையாகும். நடுகல் வழிபாட்டு முறையைக்கொண்டு நம் முன்னோர்களின் வரலாற்றைக் கணிக்கமுடிகிறது. அம்முறையே, "கி.பி. எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டில் கரந்தைப் போரில் நிரை மீட்டுப்பட்டான். ஒருவன் நடுகல்லில் "தஞ்சை கொண்ட கோப்பரகேசரி பன்மர்க்கு யாண்டு 3-வது; கற்பூண்டி நாட்டு அத்தீயூர் கரம்பை, கலிதொடான்" முக்கண் அணியன் தொறுக்கொள(அத்) தொறு மீட்டுப்பட்டான்" (A.R.for 1935-6, ப.72) என வருவது பண்டை நாளில் நடுகல்லிற் பீடுபெற எழுதிய திறத்தை எடுத்துக்காட்டுகிறது" (மேலது; ப.168). இக்கூற்று நிரை மீட்டு வந்த வீரனின் திறத்தைப் பறை சாற்றுவதாக அமைகிறது. கரந்தை வீரனின் போர் மரபை இத்தகைய நடுகல்

வாயிலாக அறியமுடிகிறது. நமக்குக் கிடைக்கும் நடுகல் மூலமாக நாம் இன்று பல வரலாற்றுத் தகவல்களை இனம் காண முடிகிறது. நடுகல்லில் பொறித்த எழுத்துகளே இன்று கல்வெட்டுத் தரவுகளாகக் காலத்தால் அழியாமல் நிலைபெற்று நிற்கின்றன.

## முகையலூர் – செங்கம் ஊர்ப்பெயராய்வு

ஊர்ப் பெயர்கள் கால மாறுதல் காரணமாகவும், மொழி ஆளுகைக் காரணமாகவும் மாற்றம் அடைகின்றன. கல்வெட்டுகளில் பிரதியாக்கம் செய்யும் முறையிலும் சில மாற்றங்கள் ஏற்படுகின்றன. இத்தகைய மாற்றங்களைக் கருத்தில் கொண்டு ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சொல்லாட்சியை ஆராய முற்படுவோம். அம்முறையே, "முகையலூர் என்பது இடைக்காலத்தில் முகலாறு என (M.EP.A.R.No.214 of 1936-7) வழங்கி இப்போது மொகலாரென வழங்குகிறது. இதற்கு முகையலென்றும் பெயருண்மையின் சோணாட்டு முகையலூர் இதுவென்று துணியலாம். பண்டைக் காலத்துச் செங்கைமாவென்பது இடைக்காலத்தில் செங்கமா (S.I.I.Vol.VIII.No.117) என வழங்கி இக்காலத்துப் பொதுமக்களாலும் அரசியல் ஏடுகளாலும் செங்கம் என்று வழங்குவது இதற்குத் தக்கதோர் எடுத்துக்காட்டு" (மேலது; 179-180). இக்கூற்று பிற்கால ஊர்ப் பெயர்கள் முற்காலத்தில் எவ்வாறு வழங்கியுள்ளனர் என்பதைப் புலப்படுத்துகிறது. செங்கம் என்ற ஊர் 'செங்கன்மா' என்ற மன்னன் ஆண்ட பகுதி என்பதாலும் இப்பெயர் பெற்றிருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறது. ஒரு ஊரின் பெயரை வைத்துக்கொண்டு, அந்நாட்டின் வரலாற்றை மன்னன், மக்கள் பற்றிய நிலைப்பாட்டையும் ஓரளவுக்கு உய்த்துணரலாம்.

செங்கம் பற்றிய மேலும் புரிதல்களை அடைய தி.வை.சதாசிவப்பண்டாரத்தாரின் கருத்தினையும் இணைத்துப் பார்த்தல் அவசியமாகிறது. அம்முறையே, "கடைச்சங்க நாளில் வேள் நன்னன் என்ற குறுநில மன்னன் ஒருவன் இருந்தனன் என்பது 151ஆம் புறப்பாட்டால் அறியப்படுகிறது. இவன் பல்குன்றக் கோட்டத்திலுள்ள செங்கைமா (S.I.I.Vol.VII.Nos.11,126)விலிருந்து அரசாண்டவன்; இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் என்ற புலவர் பெருமானால் பாடப்பட்ட மலைபடுகடாம் என்ற நூல்கொண்டு புகழ்கொண்டவன். திருவண்ணாமலைக்கு மேற்றிசையிலுள்ள செங்கைமா என்பது இவன் தலைநகர். இஃது இந்நாளில் செங்கம் எனவும் செங்கமா எனவும் வழங்குகிறது. இந்நகர்க்கு அண்மையில்தான் இவனது நவிரமலை உளது" (தி.வை.சதாசிவபண்டாரத்தார்; 1977; ப.109). இக்கூற்று செங்கம் பற்றியான வரலாற்றுத் தெளிவை ஏற்படுத்துகிறது. மேலும், இவ்வூரின் பெயர் செங்கைமா என்பது கல்வெட்டுகளால் புலப்படுத்துகிறது என்றும் செங்கண்மா என்று

கூறுவது தவறு என்றும், சதாசிவ பண்டாரத்தார் கூறுவது ஔவை சு.துரைசாமிப்பிள்ளையார் உரைக் கூற்றினை மேலும் வலுவூட்டுவதாக அமைகிறது.

## காமக்கண்ணியார் - காமக்காணி வேறுபாட்டாய்வு

காமக்காணியார், காமக்கணி என்பது தனித்தனிப் பெயரெனக் கொள்வதைவிட பாடவேறுபாடு உடையதாகவே கொள்ளலாம். இந்த இரண்டு பெயர்களில் எதனைச் சரி என்று ஔவை சு.துரைசாமிப்பிள்ளை ஆராய்ந்து முடிவு தேர்கிறார் என்பதை அவரின் கூற்றின் வாயிலாகவே ஆராய முற்படுவோம். அம்முறையே, "சங்கச் சான்றோருள் காமக்கண்ணியென்றும் காமக்கணி யென்றும் வழங்கப்படுவோர் உளர்; இப்பெயர் காமக்கணியென வரற்பாலது. இம்மையிற் புகழ் மக்கட்பேறு முதலிய பயன்களையும் மறுமையில் துறக்க வின்பத்தையும் கருதிச் செய்யும் வேள்வி காமியம் எனப்படும். அது காமம் எனவும் வரும்; இவ்வேள்விகளை முடித்துத்தரும் வேதியர்கட்குத் தரப்பெறும் சிறப்பு, காமக்காணி யெனப்படும். இது பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி காலத்தும் நிகழ்ந்ததென்பது வேள்விக்குடிச் செப்பேட்டால் புலனாகிறது. அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீட்டில் (Journal of the annamalai university, Vol. XV) இது விரிவாக ஆராய்ந்து காட்டப்பெற்றுள்ளது. இத்தகைய காமக்காணிகள் இடைக்காலத்திலும் பலர் இருந்திருக்கின்றனர். இக்காமக்காணி யென்பது ஏடெழுதினோரால் காமக்கணி யென்றும் காமக்கண்ணியென்றும் எழுதப்பட்டுவிட்டது" ( ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2008; ப.189). இக்கூற்று காமக்காணி என்ற பெயர்த் தெளிவை உணர்த்துகிறது. காமக்கணி என்ற பெயரைத் தற்காலப் பொருண்மையில் பார்க்க வேண்டிய அவசியம் இல்லை எனத் தோன்றுகிறது. காமக்காணி, காமக்கணி, காமக்கண்ணி என்ற மூன்று பொருண்மையில் இப்பெயர் கையாளப்பட்டுள்ளதை நோக்க முடிகிறது. இதற்கான காரணங்களாகச் சில நிகழ்வுகளை நோக்க முடிகிறது. காமம் என்ற வார்த்தை வேள்வியைக் குறிப்பதாக இருந்தாலும், காணி, கணி, கண்ணி என்ற மூன்று சொற்களும் மீளாய்வுக்குரிய களத்தை ஏற்படுத்துகின்றன. 'கண்ணி' என்ற வார்த்தை பெண் புலவருக்கான அடையாளத்தை உறுதிப்படுத்துகிறது எனலாம். 'காமம்' என்ற சொல்லாட்சி வேள்விகளை முடித்துத்தரும் வேதியர்களை அடையாளப்படுத்துவதாகக் கொண்டால் ஆண் புலவர் என்றும் எண்ணத் தோன்றுகிறது. இத்தகைய பின்புலம் கொண்ட இச்சொல்லாட்சியான காமக்காணி என்பது மேலாய்வுக்குரியதாகும். 'காணி' நிலம் பெறுதல் புலவர்களின் சிறப்பாகும். எனவே காமக்காணி என்ற பெயரினை அடிப்படையாகப் பார்த்தலே பொருந்தும். 'காணி' நிலம் பெற்ற புலவர்கள் என்பது பொருத்தம்.

## எருமைநாடு – மைசூர் நாடு பெயர் மாற்றம்

பழங்காலங்களில் வழங்கிய பெயர்கள் சில காரணங்களால் பெயர் மாற்றம் அடைகின்றன. பெயர் மாற்றம் அடைவதற்கான காரணங்களாக மொழி, காலமாற்றம், பயன்பாட்டு உத்தி இவற்றைக் கருத்தில் கொள்ளலாம். மாற்றங்களைத் தாங்கியுள்ள சொற்களை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை எவ்வாறு அடையாளப்படுத்துகிறது என்பதைக் காண்போம். அம்முறையே, "மைசூர் நாட்டுக்குப் பண்டை நாளில் எருமை நாடு என்றும், மைசூர் எருமையூரென்றும் வழங்கியது. அப்பகுதியிலுள்ள கல்வெட்டுகளுள் கன்னட மொழியிலுள்ளவை எருமைநாடு (Eq.car.Vol.X.cu.20) என்றும் தமிழ்க் கல்வெட்டுகள் எருமை நாடு (A.R.for 1907.para.1) என்றும் கூறுகின்றன. தகடூர் அதியமான்களில் எழினியென்பான் எருவாயில் என்னும் ஊரைக் கைப்பற்றிய போரில் எழினியின் படை மறவன் ஒருவன் போரில் வீழ்ந்து நடுகல் நிறுவப்பட்டான். அவனை எருமைய நக்கன் என்று கல்வெட்டு (A.R.No.211 of 1910) கூறுவதால், இந்நக்கன் எருமைநாட்டு எருமையூரின்னாம்" (மேலது; பக்.193-194). இக்கூற்று சங்க கால எருமை நாடே தற்கால மைசூர் நாடு என்பதைப் புலப்படுத்துகிறது. மைசூர் நாட்டில் கன்னட மொழி பேசப்படுவதையும் மேலே கூறப்பட்ட கருத்து நமக்குத் தெளிவுபடுத்துகிறது. இருப்பினும் இவை அனைத்தும் இணைந்தே இருந்துள்ளது என்பதற்கு இதுவே தக்க சான்றாக அமைகிறது. போர் வீரனின் வீரத்தைப் பதிவு செய்யும் நடுகல்லும், 'எருமைய நக்கன்' என்றே கூறுவதும் மேலும் உறுதிப்படுகிறது எனலாம். எருமை என்பது எந்தப் பொருளில் கையாளப்பட்டது என்பதற்கான விளக்கமும் தரப்படாதது பெரும் குறையுடையதாகும். இருப்பினும் எருமைநாடு என்ற பெயரை வீரத்தின் வெளிப்பாடாகக் கொள்ளவும் வாய்ப்பு இருக்கிறது.

## பூங்கண் உத்திரையார்

ஒரு பெயர் உருவாவதற்குப் பல காரணங்கள் சொல்லப்படுகின்றன. ஆனால் சிலரின் பெயர் மட்டுமே பிறந்த நாளை, நேரத்தைக் கொண்டு அமைந்துவிடுகிறது. இப்பின்புலத்தின் அடிப்படையில் பின்வரும் கூற்றை ஆராயலாம். அம்முறையே, "பூங்கண் என்பது காவிரியின் வடகரையிலுள்ளதோரூர் எனக் கல்வெட்டுகளால் (M.EP.R.No.153 of 1932) அறிகின்றோம். இவரது இயற்பெயர் உத்திரையென்பது. இஃது ஆதிரை யென்றாற் போலப் பிறந்த நாளால் வந்த பெயர்" (மேலது; ப.202). இக்கூற்று பிறிந்த நாளைக் கொண்டும் பெயர்கள் அமைந்திருக்கின்றன என்பதைப் புலப்புடுத்துகிறது. சங்க காலப் பெயர் வைப்பு முறையினை இக்காலச் சூழலில் பின்பற்றி வருவதைக் நோக்க முடிகிறது. இப்பெயர் வைப்பு முறையை நம்பிக்கையின் அடிப்படையில் புரிந்துகொள்ளல் தேவையாகிறது.

## ஒருமை – பன்மை பெயரொட்டுகள்

சங்க காலப் புலவர்களில் பெரும்பாலானோர் பெயர்கள் ‘ஆர்’ விகுதி பெற்று முடிவதைக் காணமுடிகிறது. இது எவ்வாறு நிகழ்ந்தது என்ற வினா எழுவதைத் தவிர்ப்பதற்கில்லை. தொடக்கக் காலங்களில் ஒருமைகளில் எழுதப்பட்ட பெயர்கள், பிற்காலங்களில் பன்மைகளில் மாறியுள்ளது. இம்மாற்றம் நிகழ்வதற்கான காரணங்கள், புலவர்களின் மீது வைத்த மரியாதையே காரணமாக இருக்கலாம். இத்தகைய பின்புலத்தில் சங்கப் புலவர்களின் பெயர்களை ஆராயலாம். அம்முறையே, “சில பிரதிகளில் ஆசிரியர் பெயர் ஒருமையாக விளங்க, மற்றும் சில பிரதிகளில் பன்மை வடிவு பெற்று விளங்குகின்றது. இயல்பின் படியும், இலக்கணத்தின் படியும் ஒருமை வடிவமே முதலில் இருந்திருக்க வேண்டும். பிற்காலத்தில் புலவருடைய பெருமை கருதி ஆர் விகுதி சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டும்” (ஆ. விநாயகமூர்த்தி; 1994; ப.14). இக்கூற்று சங்கப் புலவர்களின் பெயர் பின்னொட்டுகளைத் தெளிவுபடுத்துகிறது. பின்னொட்டுகளை அடிப்படையாகக் கொண்டே அனைத்துப் புலவர்களையும் வரையறுக்க முயல்வது தவறாகும். சில புலவர்களின் பெயர்கள் இயல்பாகவே இவ்வாறு இருந்திருக்கவும் வாய்ப்புள்ளது. ‘ஆர்’ விகுதி பெற்று முற்றுப்பெறும் சில புலவர்களை முன்வைக்கலாம். எ.கா. சிறைக்குடி ஆந்தை(யார்), ஔவை(யார்), மோசிகீரன்(கீரனார்) இத்தகைய பெயர்களை இப்பின்புலத்தில் புரிந்துகொள்வது பொருத்தமாகும்.

## அரிசில்கிழார்

அரிசில்கிழார் பற்றிய விரிவான ஆய்வு பதிற்றுப்பத்து உரை ஆய்வில் முன்னரே விவாதிக்கப்பட்டுள்ளது. பதிற்றுப்பத்தில் வரும் அரிசில்கிழாரும் புறநானூற்றில் வரும் அரிசில்கிழாரும் ஒருவரா என்ற வினாவின் விளக்கங்களை ஆராய முற்படலாம். இருப்பினும் புறநானூற்றில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தரும் அரிசில்கிழார் பற்றிய தெளிவை எட்ட முற்படலாம். அம்முறையே, “முடிவேந்தருள் சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறையையும் குறுநில மன்னருள் வையாவிக் கோப்பெரும் பேகன், அதியமான் எழினி முதலியோரையும் பாடிப் பெருஞ்சிறப்பு பெற்றவர் சான்றோராகிய அரிசில்கிழார். இவரது அரிசில் என்னும் ஊர் சோழ நாட்டுக் குடந்தை நகர்க்கண்மையில் இருந்ததோரூர்; குடந்தையிலுள்ள கல்வெட்டொன்று (A.R.255 of 1911) அரிசிலூரைக் குறிக்கிறது. அஃது இப்போது இருக்குமிடம் தெரிந்திலது” (ஔவை சு. துரைசாமிப் பிள்ளை; 2008; ப.214). இக்கூற்று குடந்தைக்கு அருகில் உள்ள அரிசிக்கரையைச் சார்ந்தவர் கிழார் புலவர் என்பதைத் தெளிவுபடுத்துகிறது. இருப்பினும் இவ்வூர் தற்காலத்தில் எங்கு உள்ளது என்பதற்கான தகவல்கள் எதுவும் கிடைத்தில என்பதை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை வெளிப்படையாகக் கூறிவிடுவது அவரின் ஆய்வு

நேர்மையைக் காட்டுவதாகும். ஆனால், பதிற்றுப்பத்து உரையில் சில விவரங்களை முன்வைத்துள்ளார். இத்தகைய இரண்டு விவரங்களையும் இணைத்துப் பார்க்க வேண்டிய தேவை ஏற்படுகிறது. அரிசிக்கரையாகவும், அரியலூராகவும் இருக்கலாம் என்று அவதானிக்கின்றனரே தவிர உறுதியாக எத்தகவலையும் பதிற்றுப்பத்து உரையிலும் குறிப்பிடவில்லை. எனவே அரிசிலூர் பற்றிய தற்கால நீட்சி இல்லை என்பது தெரியவருகிறது.

## அண்டர் நடுங்கல்லினார்

போர்வீரன் ஒருவனின் வீரத்தை ஆயர் சிறப்பு செய்ய, அதனைக் கண்டு பாடியதால் இப்பெயர் பெற்றார் எனலாம். இப்புலவர் மகட்பாற் காஞ்சியை அதிகமாக விரும்பி பாடியுள்ளதாக ஔவை சு.துரைசாமிப்பிள்ளை பதிவு செய்துள்ளார். இவ்வூர் புதுக்கோட்டைப் பகுதியில் உள்ள ஊராக ஔவை சு.துரைசாமிப்பிள்ளை கருதுகிறார். அவ்வூரினை அடையாளம் காண அவர் எடுத்தாளும் கல்வெட்டுத் தரவினை அவர் கூற்றின் வாயிலாகவே கவனிக்க முற்படுவோம். அம்முறையே, “அழும்பில் என்னும் ஊரையும் கோசரது அவைக்களத்தையும் இப்பாட்டின்கட் குறித்துள்ளார். இது புதுக்கோட்டைப் பகுதியில் உளது; இப்போது அம்புக் கோயில் என வழங்குகிறது; இங்குள்ள கல்வெட்டு “இராஜராஜ வளநாட்டுப் பன்றியூர் நாட்டு அழும்பில்” (P.S.Ins.458) என்று குறிக்கிறது” (மேலது; ப.219). இக்கூற்று அழும்பில் என்பது அம்புக் கோயிலை மையமிட்ட பகுதியாகும் என்பதை உணர்த்துகிறது. தற்காலச் சூழலில் இவ்வூர் புதுக்கோட்டைப் பகுதியில் இருப்பதையும் இத்தகவல் உறுதிசெய்கிறது.

## விரிச்சியூர் நன்னாகனார் பெயராய்வு

‘விரிச்சி’ கூறுதல் என்பது ஒருவகையான தொழிலைக் குறிக்கிறது. எனவே விரிச்சியூர் என்பது விரிச்சி சொல்லி வாழ்ந்தவர்களின் வாழிடம் எனக் கருதலாம். விரிச்சி சொல்லும் மரபில் உள்ள ஒரு புலவனாகவே நன்னாகனாரை இனம் காணலாம். அம்முறையே, “விரிச்சியூர் என்பது பாண்டி நாட்டில் உள்ளதோர் ஊர். வேந்தன் பொருட்டு விரிச்சி நின்று கூறியது, அக்கூறியவாறே வேந்தற்கு வேண்டும் பயனை நல்கிற்றாக, அவ்வேந்தனால் இவ்வூர் விரிச்சி நின்றவளுக்கு வழங்கப்பட்டதாகல் வேண்டும். அதனால் இவ்வூர் விரிச்சியூர் எனப்படுவதாயிற்று. கணியூர், மருத்துவக்குடி, பிரமதேயம் முதலிய ஊர்கள் இவ்விரிச்சியூர் போலப் பெயர் எய்தினவாகும். இவ்வூர் இடைக்காலத்ததே பெரிச்சியூர் என (A.R.No.66 of 1924) மருவி வழங்குவதாயிற்று. நன்னாகனாரென்ற பெயருடனே சான்றோர் வேறே இருத்தலால் அவரிற் பிரித்தறிதற்கு இந்த நன்னாகனார், ஊர்ப்பெயரோடு இணைத்து விரிச்சியூர் நன்னாகனார் என

வழங்கப்பட்டனர்” (மேலது; ப.244). இக்கூற்று விரிச்சியூர் என்பது மன்னனால் பரிசாகக் கொடுக்கப்பட்ட ஊர் என்பதைத் தெளிவுபடுத்துகிறது. விரிச்சி சொல்பவர்களில் சிறந்து விளங்கியவர்களுக்காகப் பரிசாகக் கொடுக்கப்படும் நிலைப்பாட்டை இந்நிகழ்வு உணர்த்துகிறது. புலவர்களுக்குப் பிரமதேயம் வழங்கும் மன்னர்களையும் இலக்கியம் இனம் காட்டுகிறது. இப்பின்புலத்தில் விரிச்சியூர் என்பது மன்னனால் வழங்கப்பட்ட ஊர் என்பதைத் தெளிவாக்குகின்றன. அவ்வூரில் வாழ்ந்த இனம் ‘விரிச்சி’ தொழிலைச் செய்யும் விரிச்சி இன மக்கள் என்பதையும் வெளிப்படுத்துகிறது. பிற்கால மாற்றங்களால் ‘விரிச்சியூர்’ என்பது ‘பெரிச்சியூர்’ என்று மருவி உள்ளதையும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை தெளிவாக்குகிறது.

## அள்ளூர் நன்முல்லையார் ஊர்ப்பெயராய்வு

ஊர்ப் பெயரால் அடையாளப்படுத்தப்படும் புலவர் மரபில் அள்ளூர் நன்முல்லையும் வரிசைப்படுத்தப்படுகின்றார். நன்முல்லை என்ற ஊர்ப் பெயரை நன்மையை விளைவிக்கும் ஒரு பெயராகவே அடையாளம் காணலாம். புலவர்கள் பாடிச்சென்ற கருத்தியலில் இருந்தும் புலவர் மரபை விளங்கிக்கொள்ள முடிகிறது. அம்முறையே, “நல்லிசைப்புலமை மெல்லியலாருள் நன்முல்லையாரும் ஒருவர். இவரது ஊர் அள்ளூர் என்பது தஞ்சை மாநாட்டிலுள்ள திருவாலங் காட்டிற்கும் அள்ளூரென்பது பெயரென அவ்வூர்க் கல்வெட்டு (A.R.No.79 of 1926) கூறுகிறது. திருநெல்வேலிக் கோயில் கல்வெட்டொன்றில் (S.I.I.Vol.v.No.438)அள்ளூர் ஒன்று காணப்படுகிறது. இவரும் “கொற்றச் செழியன் பிண்ட நெல்லில் அள்ளூர்”(அகம், 46) என்று பாண்டியனைக் குறித்துள்ளார். ஆதலால், இவர் பாண்டிநாட்டு அள்ளூரெனத் தெளியலாம்” (மேலது; பக்.279-280). இக்கூற்று பெயரின் வாயிலாகவும் மன்னர் பரம்பரையை இனம் காணமுடியும் என்பதை உணர்த்துகிறது. ஊர்களின் அடையாளங்களையும் புலவர் பெயர்களால் விளங்கிக்கொள்ள ஏதுவாகிறது. சங்க காலப் பிரதிகளின் உண்மை நிகழ்வுகளை, மேலும் நம்பிக்கையூட்டும் விதமாகக் கல்வெட்டுத் தரவினை அடையாளம் காணலாம்.

## பொன்முடியாரின் கடமை விதி

சமூகத்தில் நிலவுகின்ற ஒவ்வொரு தொழிலும் ஒரு வகையான தர்க்கத்திற்கு உட்பட்டே நடைபெறுகிறது. தொழில் முறையிலான பாகுபாட்டை இச்சமூகம் எதிர்கொள்கிறது. முற்காலச் சமூகம் தொழில் முறையிலான, குடித்தொழில் முறையிலான பிரிவு உள்ளதை நாம் அறிந்ததே ஆகும். இப்பின்புலத்தில் ஒரு சமூகத்தின் தொழில் முறையிலான கட்டுப்பாடுகள் என்ன என்பதை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின்

உரைகளின் வாயிலாக விளங்கிக்கொள்ள முயல்வோம். அம்முறையே, "தாய் உடலையும் தந்தை உடலகத்து நிலவும் உயிரறிவையும் ஒம்புங் கடப்பாட்டினராதலால் "புறந்தருதல்" தாய்க்குக் கடனாதலும், சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனாதலும் எடுத்தோதப்பட்டன. அவ்வவ்வூர்களிலிருக்கும் கொல்லர் முதலியோர் அவ்வவ்வூரவர்க்கு வேண்டுவன செய்தல் வேண்டுமென்றும் அயலூர் சென்று பணி செய்வது குற்றமென்றும் முதற்குலோத்துங்க சோழன் காலத்தும் ஒரு கட்டுப்பாடிருந்ததெனத் திருபுவனையிலுள்ள கல்வெட்டொன்று (A.R.No.205 of 1919) கூறுவது பொன்முடியார் இப்பாட்டின்கண் கடனாக வகுக்கும் கொள்கையை வற்புறுத்துகிறது" (மேலது; ப.295). இக்கூற்று கொல்லர் சமூகத்தின் வாழ்வியல் சார்ந்த பின்புலத்தை விளங்கிக்கொள்ள உதவுகிறது. கொல்லர் சமூகத்தை மட்டும் அல்லாமல் குலோத்துங்கன் கால ஆட்சி முறையை விளக்குவதாகவும் அமைகின்றன. குலோத்துங்கன் கால ஆட்சிமுறை ஏற்றத்தாழ்வைப் பின்பற்றி உள்ளது என்பதையும் இப்பாட்டுரையின் வாயிலாக விளங்கிக்கொள்ள முடிகிறது. கொல்லர் ஊர் முற்றம் தாண்டி தொழில் புரியக்கூடாது என்ற கட்டுப்பாட்டையும் இக்கல்வெட்டின் வாயிலாக உணர வைக்கிறது ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை. இக்கருத்து முதற்குலோத்துங்கன் காலத்து வாழ்ந்த பொன்முடியாரின் சமூகக் கட்டுப்பாட்டை உணர்த்தும் இப்பாடல் வாயிலாக அச்சமூகத்தின் பின்புலத்தை அறிய முடிகிறது.

பெரும்பாலான கல்வெட்டுத் தரவுகள் ஊர்ப் பெயர்களை நிலைநாட்டுவதாகவே அமைகின்றன. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரையையும் இக்கண்ணோட்டத்துடன் எதிர்கொள்வது ஒருவகையில் பொருந்தும் எனலாம். அம்முறையே, "தஞ்சை மாநாட்டில் உள்ள திருமங்கலக் குடிக்கருகே வேம்பற்றூரென ஊர் ஒன்றும் உளதெனக் கல்வெட்டு (A.R.No.224 of 1927) கூறுகிறது" (மேலது; ப.307). இக்கூற்று முற்கால ஊர் பற்றிய செய்திகளைத் தற்கால ஊர்ப் பெயருடன் இணைத்து நோக்கும் வாய்ப்பை ஏற்படுத்துகிறது. இத்தகைய கல்வெட்டுத் தரவுகளின் வாயிலாக ஊர்ப் பெயர்களின் மாற்றங்களையும் அறிய முடிகின்றது.

## ஆலத்தூர்கிழார்- ஊர்ப்பெயராய்வு

கிழார் என்ற பெயர் பல புலவர்களின் பின்னொட்டாக இப்பதை நோக்க முடிகிறது. கிழார் என்ற சொல்லாட்சி பல பொருண்மைகளில் வருவதைக் நோக்கமுடிகிறது. கிழார் என்பது ஒரு சமூகத்தை, ஒரு இனக்குழுவைக் குறிக்கும் பொதுச் சொல்லாகவே கருதலாம். ஒரு பெயராக எடுத்துக்கொள்வது பொருந்துமா என்பது பற்றி இதற்கு முன்னரே விவாதித்துள்ளோம். இருப்பினும் இப்பெயரை ஒரு இனத்தின் அடையாளமாகக் கருதலாம். இப்பின்புலத்தில் பின்வரும் கூற்றை நோக்குவோம்.

அம்முறையே, “ஆலத்தூர் என்னும் பெயருடைய ஊர்கள் பல இருப்பினும், இச்சான்றோரது ஊர் சோழநாட்டுக் காவிரி தென்கரை நித்தவினோத வளநாட்டு ஆவூர்க் கூற்றத்து ஆலத்தூ (A.R.No.273 of 1927) ராகலாம். இவர் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனையும், சோழன் சேட் சென்னி நலங்கிள்ளியையும் பாடிச் சிறப்புற்றவர்” (மேலது; பக்.324-325). இக்கூற்று கிழார் சமூகத்தினர் ஆலத்தூர் என்னும் ஊரில் வாழ்ந்துள்ளனர் என்பதைத் தெளிவுபடுத்துகிறது. கிழார் என்ற அடையாளம் நில உடைமையாளர்களையும் குறிக்கலாம். கிழார் பற்றிய ஒரு நீண்ட விவாதத்தை முன்னரே பதிற்றுப்பத்து உரை ஆய்வில் விரிவாக ஆராயப்பட்டுள்ளது. கிழார் பற்றியான பல கருத்தாக்கங்களை மேலும் காணலாம் என்பதே உண்மையாகும்.

## உரையூர் முதுகண்ணன் சாத்தனார்

இப்பெயராய்வு என்பது மூன்று நிலைகளில் ஆராயப்பட வேண்டியவையாகும். உறையூர் என்பது ஊர்ப்பெயர் என்ற பொது நிலையை விளக்குவதாகக் கொள்வோம். முதுகண்ணன் என்பது மூத்தவன், முதிர்ந்தவன் என்ற பொருளை உடையதாகக் கொள்ளலாம். இதில் சாத்தன் என்ற பெயர் தனி நிலையில் ஆராயப்பட வேண்டியதாகும். அதே போன்று சாத்தன் என்பதையே பெயராகவும் கொள்ளலாம். இப்பின்புலத்தின் அடிப்படையில் பின்வரும் கூற்றினைக் நோக்க முற்படுவோம். அம்முறையே, “இளங்கண்ணன் முதுகண்ணன் என்பவை பண்டையோர் மக்கட்கு இட்டு வழங்கிய பெயர்கள். உறையூரில் வாழ்ந்த முதுகண்ணன் என்பவருடைய மகனாதலால், இச்சாத்தனார், உறையூர் முதுகண்ணன் சாத்தனார் எனப்படுவராயினர். ஒருவர் மிக்க இளைஞரொருவர்க்குப் பாதுகாப்பாளராய் இருப்பாராயின் அவரை முதுகண் (Guardian) என்பது பழையநாளை வழக்கு. பன்னிரண்டாம் நூற்றாண்டிலெழுந்த கல்வெட்டொன்று, “வாச்சியன் இரவி கூத்தனை முதுகண்ணனாகவுடைய இவன் பிராமணி தேவன் நீலியும் இவன் மகன் கூத்தன் இரவியும்”(S.I.Ins.Vol.IV.No.227) என்று கூறுகிறது. இது கொண்டு முதுகண்ணன் சாத்தனாரை மிக்க இளையனொருவற்கு முதுகண்ணாயிருந்து சிறந்தவராகக் கருதலாம் உண்டு” (மேலது; ப.328). இக்கூற்று முதுகண்ணன் மகன் சாத்தன் என்பதைத் தெளிவுபடுத்துகிறது. ஊர் பெயர், தந்தை பெயர் இரண்டும் மகனுக்கு அடையாளமாகும் பெயர் உத்தி முறையைக் கவனிக்க முடிகிறது. இத்தகைய பெயர் அமைப்பு முறைகளை வாழ்வியலின் மூலமும், தக்க கல்வெட்டுச் சான்றுகளின் முலமும் உறுதி செய்ய முடிகின்றது. இச்செய்தியையே சதாசிவபண்டாரத்தாரும் முன்மொழிகிறார்.

## தங்காற் பொற்கொல்லனார் – ஊர்ப்பெயரின் அடையாளம்

பொற்கொல்லனார் வாழ்ந்த பகுதியாகத் தங்கா என்று இடத்தை அடையாளப்படுத்தலாம். தன் இனம் சார்ந்த தொழிலை முன்னிலைப்படுத்தும் விதமாக இவ்வூரினை இனம் காணலாம். இப்பின்புலத்தின் அடிப்படையில் பின்வரும் கூற்றினைக் கவனிக்கலாம். அம்முறையே, "தங்காலென்பது விருதுநகருர்க்கு அருகிலுள்ளதோரூர். இளங்கோவடிகள் இதனை "தடம்புனற் கழனி தங்கால்"(சிலப். மதுரைக்; 23:118) என்று சிறப்பிப்பார். இடைக்காலப் பாண்டியர் காலத்திலும் இவ்வூர் சிறப்புற்றிருந்தது. இதனை இராசராச பாண்டிநாட்டு மதுராந்தக வளநாட்டுக் கருநீலக்குடி நாட்டுத் திருத்தங்கால் (A.R.No.564 of 1922) கூறுவதனால் இவ்வூர் கல்விவளம் சிறந்த நல்லூராதலை யறியலாம்"(மேலது; ப.332). இக்கூற்று இவ்வூர் மூன்று காலங்களிலும் சிறப்புற்று இருந்ததைத் தெளிவுபடுத்துகின்றன. அக்காலச் சூழலில் கல்வி சிறப்பால் இவ்வூர் சிறந்து விளங்கிய செய்திகளையும் கல்வெட்டுத் தரவுகளுடன் உறுதி செய்கிறார் உரையாசிரியர். இந்நிகழ்வு தற்காலப் பாரதப் பிரசங்க நிகழ்வை நினைவூட்டுவதாகவும் கொள்ளலாம்.

## உறையூர் முதுகூத்தனார்.

முதுகூத்தன் என்பதை ஒரு தொழில் சார்ந்த கலைப் பெயராக இனம் காணலாம. கூத்து தொழிலில் முதுமை, திறமை உடையவர் எனவும் பொருள் கொள்ளலாம். இப்பெயர் புலப்பாடு என்பது ஊர்ப்பெயரையும், தொழில் பெயரையும் இணைத்துப் பெயராக்கிய உத்திமரபை நினைவூட்டுவதாகும். இப்பின்புலத்தில் பின்வரும் கூற்றினை ஆராய முற்படுவோம். அம்முறையே, "இச்சான்றோர் பெயர் சில ஏடுகளில் முதகூற்றாரெனவும், உறையூர் முதுகூற்றனாரெனவும் முதுகூத்தனாரெனவும் காணப்படுகிறது. இவர் வீரை வேண்மான் வெளியன் தீதித்தன் என்பானைப் புகழ்ந்து பாடுகின்றார். உறையூரில் நடைபெற்ற பங்குனி விழாவை, "விறற்போர்ச் சோழன், இன்கடுங்கள்ளின் உறைந்த யாங்கண், வருபுனல் நெரிதரு மிகுகரைப் பெரியாற்று, உருவ வெண்மணன் முருகுநூறு தண்பொழிற், பங்குனி முயக்கம்" (அகம். 137) என்று சிறப்பித்தும் பாடியுள்ளார். இப்பங்குனி விழாக் காலத்தில் திருவரங்கத்துப் பெருமானை உறையூர்க்குக் கொண்டு சிறப்புச் செய்வதுண்டென ஸ்ரீரங்கத்துக் கோயில் கல்வெட்டுகள் (A.R.No.16 of 1936-7) கூறுகின்றன"(மேலது; ப.345). இக்கூற்று முதுகூத்தன் என்ற பெயராய்வை ஆராய்வதோடு நில்லாமல், பங்குனி விழாத் தொடர்பான வரலாற்று நிகழ்வையும் விளக்குவதாக அமைந்திருக்கிறது. இச்செய்தி பங்குனி விழா சங்க காலத்திலிருந்தே நடைபெற்று வருவதையும், அதன் தொடர்ச்சி

இன்றுவரை தொடர்வதையும் நமக்கு உணர்த்துகிறது. விழாக்களின் முறைமைகள் மாறினாலும், விழா எடுக்கும் கடவுள் நாயகன் மாறவில்லை. இவ்விழாவின் வாயிலாக நமக்கான பழங்கால விழாத் தொடர்ச்சி மரபையும், நமக்கான பண்பாட்டுக் கலை மரபையும் இக்கூற்று தெளிவாக்குகிறது.

விரியூர் என்பது தற்காலத்தில் சேரநாட்டில் உள்ள ஓர் ஊர்ப்பெயராகும் என்கிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை. இப்பொழுது இது மலையாள நாட்டில் ஒரு தாலுக்காவாகவும் மாறியிருக்கிறது. இப்பின்புலத்தின் அடிப்படையில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரைகளை ஆராய முற்படுவோம். அம்முறையே "தென்னார்க்காடு மாவட்டத்தில் கள்ளக்குறிச்சிப் பகுதியில் விரியூரென்னுமோரூர் உளது; ஆயினும் அதன் தொன்மையறிதற்குரிய சான்றொன்றும் கிடைத்திலது. வடபெண்ணைக் கரையிலும் விரியூரொன்றைப் பன்னிரண்டாம் நூற்றாண்டுக் கல்வெட்டொன்று "ஜயங்கொண்ட சோழ மண்டலத்துப் பாக்கை நாட்டு விரியூர்ப் பெண்ணாற்று வடகரையில் ஸ்ரீசங்கமீச்சுரமுடையார்"(Nell.Ins.No.108) எனக்கூறுகிறது"(மேலது; ப.350). இக்கூற்று விரியூர் பற்றிய இரண்டு விதமான தகவலை உணர்த்துகிறது. கேரள நாட்டிலும், தென்னாற்காட்டிலும் உள்ளதெனக் கூறும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, இதற்கான சரியான வரலாற்று தரவுகள் கிடைக்கவில்லை என்பதையும் பதிவு செய்துள்ளார். இத்தகைய வெளிப்பாட்டு உத்தியே ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் ஆய்வு மேம்பாட்டை உயர்த்தியிருக்கலாம். ஒரே ஊர்ப் பெயரைக் கொண்ட ஊர்கள் பல இடங்களில் இருந்திருக்கவும் கூடும். இருப்பினும் இவ்வூர்ப் பெயர் பழமை வாய்ந்தது என்பதை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை தெளிவுபடுத்துகிறது.

உறையூர் பற்றியான மேலும் தெளிவை அடைய இரா.பி. சேதுப்பிள்ளையின் கூற்றினை முன்னெடுக்கலாம். ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்றும் இரா.பி. சேதுப்பிள்ளையின் கூற்றும் இணைத்துப் பார்த்து ஆராய்தல் அவசியமாகிறது. அம்முறையே, "சங்ககாலம் என்று சொல்லப்படுகின்ற பழங்காலத்தில் சோழ நாட்டின் நல்லணியாகச் சிறந்திருந்த நகரம் உறந்தையாகும். காவிரியாற்றங் கரையில் உறந்தை என்னும் உறையூர் அமைந்திருந்தது. 'ஊர் எனப்படுவது உறையூர்' எனப் பண்டைப் புலவர்கள் அதனைப் பாராட்டினார்கள். அந்நாளில் திருச்சிராப்பள்ளி ஒரு சிற்றூராக அதன் அண்மையில் அமைந்திருந்தது. நாளடைவில் உறையூரின் பெருமை குறைந்தது; சிராப்பள்ளியின் சீர் ஓங்கிற்று. இப்பொழுது திருச்சிராப்பள்ளி தமிழ் நாட்டில் ஒரு சிறந்த நகரமாகத் தலையெடுத்து நிற்கிறது. பண்டைப் பெருமை வாய்ந்த உறையூர் அதன் அருகே ஒளி மழுங்கி ஒடுங்கிக் கிடக்கிறது" (இரா.பி.சேதுப்பிள்ளை; 2009; ப.43).

இக்கூற்று உறையூர் பற்றியான மேலும் பல புரிதல்களை ஏற்படுத்துகிறது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கூற்று பெரும்பாலும் பங்குனித் திருவிழாவை ஆராய்வதாய் அமைந்துள்ளது. இரா.பி. சேதுப்பிள்ளையின் உரையே உறையூர் பற்றியான தெளிவை ஏற்படுத்தியுள்ளது.

### மதுரைத் தமிழ்க் கூத்தனார்

தமிழகத்தில் இருவகையான கூத்து மரபு பிற்காலத்தில் இருந்துள்ளதை அறிவோம். இவ்வகையான கூத்து மரபின் வாயிலாகச் சங்கப் புலவர்கள் சிலரை இனம் காணலாம். ஆரியக் கூத்தும், தமிழ்க் கூத்தும் இணைந்துள்ளதாகவே தற்காலக் கூத்து மரபைப் புரிந்துகொள்ள முடிகிறது. இத்தகைய நோக்கில் இக்கூத்து மரபைப் பின்வரும் கூற்றின் வாயிலாக ஆராய முற்படுவோம். அம்முறையே, “முதற் குலோத்துங்கச் சோழன் காலத்தில் கும்பகோண வட்டத்து மானம்பாடியிலுள்ள நாகநாதசாமி கோயிலில் உண்டான கல்வெட்டொன்று, அங்கே விக்கிரமாதித்தன் திருமுதுகுன்றனான விருதராச பயங்கர ஆசாரியன் என்றொரு கூத்தன் இருந்தானென்றும், மிழலை நாட்டு வீரநாராயணபுரத்துக் கயிலாயமுடைய மகாதேவர்க்குரிய சித்திரை விழாவில் ஐந்து முறைத் தமிழ்க் கூத்தாட வேண்டுமென்று, அதற்காக அவனுக்கு நகரத்தாரும் கோயிலார்களும் கூடி நாகன்பாடி (மானம்பாடி)யென்றவூரிற் சில நிலங்களைக் கூத்தாட்டுக் காணியாகக் கொடுத்தனரென்றும் கூறுகிறது. (A.R.No. of 1931-32) பண்டை நாளில் மதுரையிலிருந்து தமிழ்க்கூத்து வகையிற் சிறந்து விளங்கிய சான்றோர் தமிழ்க் கூத்த ரெனப்பட்டார். இச்சிறப்பு மிகுதியால் இச்சான்றோருடைய இயற்பெயர் மறைந்து போக, தமிழ்க்கூத்தர் என்ற பெயரே நிலவுவதாயிற்று” (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2008; பக்.354-355). இக்கூற்று கூத்தர் மரபு சார்ந்த வாழ்வியலை நன்கு புலப்படுத்துகிறது. கூத்தில் சிறந்து விளங்கியவர்களுக்கு நிலங்களைக் காணியாக வழங்கியுள்ளனர் என்பதைக் கல்வெட்டுத் தரவுகளின் வாயிலாக உரையாசிரியர் வெளிப்படுத்துகிறார். புலவர்களின் இயற்பெயர்கள் காலப்போக்கில் மறைந்து அவர்கள் நிகழ்த்திய கலைப் பெயராலே அழைக்கப்பட்டு வந்துள்ளனர் என்பதையும் அறியலாம். கூத்தர்கள் வாழ்ந்த பகுதி முற்காலத்தில் நாகன்பாடி என்றும், அதே ஊர் இப்பொழுது மானம்பாடி என்று மருவி உள்ளதை அறியமுடிகிறது. மதுரைப் பகுதி அக்காலம் தொடங்கி இக்காலம் வரை பல கலைகளை வளர்க்கும் ஒரு கலைக்கூடமாகவே திகழ்ந்து வருகிறது என்பதை உணர முடிகிறது. இப்பின்புலத்தில் மதுரைத் தமிழ்க் கூத்தனார் மரபையும் புரிந்துகொள்ளல் சிறப்பாகும்.

## போந்தை ஊர்ப்பெயராய்வு

ஊர்ப் பெயர்கள் என்பவை ஒரே பெயராகவும், ஆனால் பல இடங்களைக் குறிப்பதாகவும் உள்ளன. கால மாற்றங்களுக்கு ஏற்ப ஊர்ப் பெயர்களும் மொழித் தாக்கத்தால் மாறிக்கொண்டே வருவதை நோக்கலாம். அம்முறையே "போந்தையென்ற பெயருடைய வூர்கள் தமிழ்நாட்டில் பல பகுதிகளும் உள்ளன. இப்போந்தை யென்னும் ஊர் மிறைக் கூற்றத்துப் போந்தை யென்று கல்வெட்டுகளில் (A.R.No.5 of 1920) கூறப்படுகிறது. குறும்பொறை நாட்டிலும் ஓய்மா நாட்டிலும் உள்ளவை பொற்போந்தை (S.I.I.Vol.XII.No.97) யென்றும், அரும்போந்தை (A.R.No.33 of 1919)யென்றும் குறிக்கப்படுகின்றன. மிறைக்கூற்றத்துப் போந்தைக் கண்மையில் ஆதமங்கலம் (A.R.No.193 of 1927-8) என்றோர் ஊர் இருத்தலால், நெடுவேளாதனது போந்தை மிறைக்கூற்றத்துப் போந்தையாதல் வேண்டுமென்று கருதப்படுகிறது" (மேலது; பக்.368-369). இக்கூற்று போந்தை என்பது பல ஊர்களின் பொதுப் பெயராக உள்ளதை உணர்த்துகிறது. தமிழ் நாட்டில் இவ்வூர்ப்பெயர் பல ஊர்களின் முன்னொட்டாகவும், பின்னொட்டாகவும் இருப்பதைக் கவனிக்கலாம். போந்தை, பொற்போந்தை, அரும்போந்தை என்று அழைக்கப்பட்டுள்ளதையும் கல்வெட்டுத் தரவுகள் விளக்குகின்றன. போந்தை என்ற ஊர்ப் பகுதிகளில் சங்க காலங்களில் வேளிர் இன மக்கள் வாழ்ந்திருக்கலாம். இத்தகைய கருத்துகள் மேலாய்வுக்குரிய களங்களாக விளங்குகின்றன. எனவே போந்தைப் பகுதி என்பது வேளிர்களின் வாழிடங்கள் என்று துணியலாம்.

## அகுதை - கூடலூர் - கடலூர்

ஒரு நாட்டின் தலைவன் பெயரை வைத்துக்கொண்டே ஓர் இனத்தின் அடையாளத்தை அறியலாம். நாடோடி வாழ்வைக் கடந்த சமூகம் ஒரு இனக்குழு வாழ்வை எட்டிய தருணமாகவே அகுதைத் தலைவனை இனம் காணலாம். ஏறக்குறைய ஒரு பாணர் மரபை ஆதரித்த ஒரு தலைவனாக அகுதையை விளங்கிக் கொள்ளலாம். அம்முறையே, "அகுதை ஒரு வேளிர் தலைவன்; அவன் கோசர்களைத் தன் படைமறவராகக் கொண்டிருந்தான். அவனது நாடு கடற்கரைப் பகுதியைச் சேர்ந்ததென, "குண்டு நீர் வரைப்பு" என இப்பாட்டினும் "நெய்தலஞ் செறுவின் வளங்கெழு நன்னாடு" (அகம். 113) என்று கல்லாடனார் பாட்டிலும் கூறப்படுவதால் அறிகிறோம். இவ்வகையில் அகுதையின் கூடல், மேற்கா நாட்டுக் கூடல் (A.R.No.62 of 1918) என்றும் கூடன் மங்கலம் (S.I.I.Vol.VII.No.757) என்றும் கூறப்படும் கூடலூராகக் கொள்ளலாம். அஃது இப்போது கடலூர் (Cuddalore O.T) எனப்படும் பேரூராகும்" (மேலது; ப.395).

இக்கூற்று அகுதைத் தலைவனின் நாடு கடல் நகரமாக இருந்திருக்கிறது என்பதை உணர்த்துகிறது. இப்பகுதி கடற்கரையை ஒட்டிய பகுதியாக இருந்துள்ளது என்பதையும் தெளிவுபடுத்துகிறது. கூடல், கூடன்மங்கலம், கூடலூர் என்ற பெயர் மாற்றங்களையும் தாங்கி வருகின்றன. கூடலூரே தற்காலக் கடலூர் என்பதும் பொருந்துவதாக அமைகிறது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் ஆய்வுகள் பெரும்பாலும் ஊர்ப்பெயராய்வுகளாகவே அடையாளம் காண முடிகிறது.

சங்க காலச் சமூகம் என்பது பல மாறுதல்களை உள்ளடக்கியதாகும். அகுதைத் தலைவன் என்ற சொல்லாட்சியில் அடையாளப்படுத்தப்படுவதால் அகுதை ஓர் இனக்குழுச் சமூகத்தின் தலைவன் என்பதைத் தெளிவுபடுத்துகிறது. கோசர்கள் பற்றிய மேலாய்வுக் களங்களை ஏற்படுத்துகிறது. இப்பின்புலத்தின் அடைப்படையில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை பல ஆய்வுக்கு வழித்தடங்களை ஏற்படுத்துவதை மறுப்பதற்கில்லை.

## மதுரை மேலைக்கடைக் கண்ணம்புத்தாராய்த்தனார்

மதுரை நகர் என்பது தமிழ் இலக்கியப் புலத்தில் தவிர்க்க முடியாத ஒன்றாக விளங்குகிறது. மதுரையை மையமிட்டுப் பல கலைகள் வளர்ந்ததற்கான தரவுகள் நீள்கின்றன. முற்காலங்களில் மேலைக் கடை என்பது தற்காலத்தில் மேலை வீதி, கீழை வீதி அல்லது மேலைத் தெரு, கீழைத் தெரு என்று அழைப்பதாகக் கொள்ளலாம். அம்முறையே, "மேலைக்கடைய மென்பது தென்பாண்டி நாட்டிலுள்ளதோரூர். இவ்வூர் நல்லிசைச் சான்றோர் பலர் பிறந்த சிறப்புடையது. கடையம் என்பது குறைந்து கடையெனச் சுருங்கிற்று இப்போதுள்ள மேற்கடையம் கீழ்க்கடையம் என்ற வூர்கள் இடைக்காலத்தே "கோனாட்டு விக்கிரமப் பாண்டிய நல்லூரான கடையம்" (A.R.No.522 of 1916) என்றும் "கோனாட்டுக் கடையம்" (A.R.No.525 of 1916) என்றும் வழங்கியதைக் கல்வெட்டுகளால் அறிகிறோம். மேலைக் கடையத்தார் எனற்பாலது மதுரை யோலைக் கடைத்தார் என ஏடெழுதினோரால் பிழைக்கப்பட்டுள்ளது. இக்கடையத்தைச் சார்ந்த ஒரு குடியினர் மதுரையிற்றங் கிருந்தமையின் அவர் மதுரை மேலைக் கடையத்தாரென வழங்கப்பட்டனர்" (மேலது; ப.400). இக்கூற்று மதுரை கடையம் பற்றிய தெளிவை ஏற்படுத்துகிறது. கடையம் என்பது குறைந்து 'கடை' என்றானது. பிற்காலத்தில் அதுவே பெயராக நிற்பதையும் இக்கூற்று உணர்த்துகிறது. பிரதி எழுதுவோரால் ஏற்படும் பிழைகளைச் சுட்டிக்காட்டி, அதன் உண்மையை அறிய கல்வெட்டுத் தரவுகளை முன்வைத்து உணர்த்துவது, ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரைத்திறனின் வெளிப்பாடாகும். மேலை, கீழை என்ற அடையாளங்கள் இடத்தாழ்வு ஒற்றுமைகளைக் குறிப்பதை மறந்து இன ஏற்றத்தாழ்வுகளைக் குறிப்பதாகக் கொள்கின்றனர். மேல், கீழ்

என்ற அடையாளங்களை இடத்தின் ஏற்ற, இறக்கங்கள் என்ற அடிப்படையில் நோக்குவதே பொருந்தும்.

## கதையங் கண்ணனார்

கதையங் கண்ணனார் என்பது கதைகளை மிகுதியாகக் கூறியதால் இப்பெயர் வந்திருக்குமோ என்ற எண்ணத் தோன்றுகிறது. கதையங் என்பது இயற்பெயரா என்ற வினா எழுவதைத் தவிர்ப்பதற்கில்லை. கதையங் என்பது ஒரு குறியீடாகவே கருத வாய்ப்புள்ளது. அம்முறையே, "இக்கண்ணனார் கதையன் என்பாருடைய மகனாவர். கதையன் என்பவர் பெயரால் கதையன் குடி யென்றோர் ஊரும் பாண்டிய நாட்டில் உண்டு. அதுவே பின்பு கதவங்குடி யென மருவித் திருத்தியூர் முட்டத்துக் கதவங்குடி (A.R.No.183 of 1935-36) எனத் திருப்புத்தூர்க் கல்வெட்டுகளில் வழங்குகிறது. கண்ணனாரென்ற பெயருடைய சான்றோர் பலர் உளராதலின், அவரின் வேறுபடுத்த இவர் கதையங் கண்ணனார் எனப்பட்டார்" (மேலது; ப.415). இக்கூற்று கதையங்குடி கதவங்குடியாக மாறிய பின்புலத்தைத் தெளிவாக்குகிறது. இவ்வூர்ப் பெயரை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை வாயிலாக மேலும் ஆராயலாம். திருப்பத்தூர் கல்வெட்டில் கதவங்குடி என்ற பெயர் இருப்பதை இவர் உரை கூறுகிறது. இவ்வூர்ப் பெயரில் மட்டும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தற்காலத் தொடர்ச்சி வரை ஆராயவில்லையோ என்ற ஏக்கம் ஏற்படுகிறது. இதற்குக் காரணம், திருப்பத்தூர் தாலுக்காவில் சமகாலத்தில் இப்பெயர் இருப்பதை வைத்து இவ்வாறு கூறலாம். இதனை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை ஆராயத் தவறிவிட்டாரோ அல்லது ஔவை சு.துரைசாமிப்பிள்ளை மறைந்த பிறகே இவ்வூர் இப்பெயர் மாற்றம் அடைந்ததோ என்பது மேலாய்வுக்குரியதாகும். திருப்புத்தூர் என்பது திருப்பத்தூர் என்றாகியிருக்கலாம். இவ்வூர் அருகே கதவணி என்ற ஊரையும் பார்க்க முடிகிறது. எனவே, சங்ககாலக் கதவங்குடியே தற்காலக் கதவணி என்று எண்ணத் தோன்றுகிறது.

## பிரமனார்

பிரமனார் என்பது பெயரைக் குறிக்குமா என்பதே சற்று கவனத்திற்குரியதாகும். ஒரு சாதிய அடையாளம் ஒரு புலவன் பெயரை அடையாளப்படுத்துமா அல்லது ஒரு பிராமணச் சாதியைச் சார்ந்த புலவனை இவ்வாறு அடையாளப்படுத்தி இருப்பார்களா என்று இப்பெயர் மீதான பலவித கேள்விகள் எழுகின்றன. இத்தகைய கேள்விகளுக்கான விவாத விடைகளைப் பின்வரும் கூற்றின் வாயிலாக ஆராய முற்படுவோம். அம்முறையே, "இப்பிரமனாரைப் பற்றி ஒன்றும் தெரிந்துகொள்ள முடியவில்லை. பிரமனார் என்ற இவர் பெயர் இடைக்காலத்தும் மக்களுக்கு வழங்கிற்றென்பது திருமழபாடிக் கல்வெட்டொன்று, "செம்பிய தரையகோன் மகன் பிரமன்"

(S.I.Ins.Vol.V.No.648) என்பதனால் விளங்குகின்றது” (மேலது; ப.417). இக்கூற்று பிரமனார் என்ற சொல்லாட்சி ஒரு இனத்தைக் குறிக்கும் சொல்லாட்சியே தவிர, ஒரு புலவனை அடையாளப்படுத்த ஒரு சமூகத்தின் பெயரை வைப்பதாகவே தென்படுகிறது. எனவே இப்பெயராய்வு என்பது மேலாய்வுக்குரியதாகும். இப்பெயர் சங்க காலச் சமூகத்தில் இருந்ததா என்பதும் சிந்தனைக்குரியதாகும்.

## காவிட்டன் - பெயராய்வு

காவிட்டன் என்ற பெயர் பற்றிய பதிவுகள் வேறானதாக உள்ளது என உரையாசிரியர் கருதுகிறார். காவிட்டர்கள் யார் என்ற வினாவை முன்வைத்து விவாதிக்கத் தொடங்குவோம். இப்பின்புலத்தின் அடிப்படையில் பின்வரும் கூற்றினை ஆராய முற்படலாம். அம்முறையே, “ஆசிரியர் காவிட்டனாரைக் கானட்டரென்றும் சில ஏடுகள் குறிக்கின்றன. கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் காவிட்டன் என்ற இப்பெயர் கோயில் பட்டர்களிடையே பயில வழங்கியிருந்த தென்று சோழவந்தானுக் கண்மையிலுள்ள தென்கரைக் கல்வெட்டுகள் கூறுகின்றன. “அதிஜய மங்கலத்துக் காவிட்டன் முத்தசீராம பட்டன்; காவிட்டன் வடுகனாதித்தன்” (S.I.I.Vol.V.No.294) என வருவது காண்க” (மேலது; ப.423). இக்கூற்று காவிட்டர் என்ற பெயர் பற்றிய தெளிவைக் கொடுக்கின்றன. கோயில்களில் இருப்பவர்களைப் பட்டர் என்ற பொதுப் பெயரில் அழைத்துள்ளனர் என்பதை அறியலாம். இத்தகைய பட்டர் மரபில் ஒருவராகவே காவிட்டனாரை இனம் காணலாம். பட்டர் மரபு என்பது ஒரு நீண்ட வரலாற்றுத் தொடர்ச்சி கொண்ட மரபாகும். ஒரு குறிப்பிட்ட சமூகத்தைச் சார்ந்த மக்கள் கோயில் வேலைகளைச் செய்வதையே தனது தொழிலாகக் கொண்டவர்களை இம்மரபில் அடக்கலாம். அப்படி என்றால் பிரமணர்கள், பட்டர்கள் இருவரும் ஒருவரா என்ற வினா எழுகிறது. இக்கேள்வி பெரும் விவாதத்தை ஏற்படுத்தக் கூடியதாகும். இக்கேள்வியினை ஆராய்ந்தால் ஆய்வு வேறு நிலையை அடைய முற்படும் என்ற அச்சத்தால் இவற்றை விடுத்து, சில விளக்கத்துடன் முடிப்பது சாலச் சிறந்ததாகும். பட்டர், பிரமணர் என்பவர் வேறானவர்கள் ஆவார்கள். கடவுளைப் பூசிப்பவர்கள் வைதீக மந்திரம் ஓதுபவர்கள் பிராமணர் எனலாம். கோயில் சுற்றுப்புறப் பராமரிப்பைச் செய்பவர்கள் பட்டர்கள் என்று வரையறுக்கலாம். மேலும், புரிதலுக்காய்ப் பெரு தெய்வ வழிபாட்டைச் செய்பவர்கள் பிராமணர்கள் என்றும், சிறு தெய்வ வழிபாட்டைச் செய்பவர்கள் பட்டர்கள் என்றும் கூறலாம். இம்முடிவு முடிந்தமுடிவாகாது, இவ்விவாதம் மேலாய்வுக்குரியதாகும்.

## ஐயாதிச் சிறுவெண்டேரையார்

புலவர் பெயர்கள், ஊர்ப் பெயர்கள் முதலியவை பிரதி எடுப்போராலும், கால, மொழி, மாறுதல்களாலும் மருவி வருவது நாம் அறிந்த ஒன்றாகும். சில பெயர்கள் மருவியும், சில பெயர்கள் மாறியும் வருவதையும் நோக்க முடிகின்றன. அம்முறையே, "ஐயாதியென்பது இவரதூர். இந்த ஐயாதி யென்பதுவே இடைக்காலத்தே ஐயாறாயிற்றோவென வெண்ணுதற்கும் இடந்தருகின்றது. தொண்டை நாட்டிற் சலவாறு என்று மூர்சலவாதியென வழங்குவது காண்க. தேரையார் என்னும் பெயர் பிற்காலத்தும் வழக்கிலிருந்துளது. தேரையார் என்றொரு சான்றோர் பதார்த்தகுண சிந்தாமணி யென்னும் நூலை யெழுதியுள்ளார். ஆதி யென்னும் பெயரால், ஆதியூர் (A.R.No.778 of 1933) என்றும், ஆதிகுடி (A.R.No.105 of 1920) என்றும் ஊர்கள் பல இருந்திருக்கின்றன" (மேலது; ப.439). இக்கூற்று பெயர் மாற்றம் நிகழ்ந்துள்ளதை விளங்கிக்கொள்ளத் துணைபுரிகிறது. பெயர்கள் வளர்ந்து வருவதும் குறைந்து வருவதும் என்ற இருநிலைப்பாட்டில் புரிந்து கொள்ளலாம். ஆதி, அதியூர், ஆதிகுடி என்ற அமைப்பில் ஊர்ப்பெயர் வளர்வதை அறியலாம். கடையம் என்பது குறுகி 'கடை' என்று வருவதில் குறைவதையும் அறியலாம். இப்பின்புலத்தின் அடிப்படையில் ஊர்ப் பெயர் மாற்றங்களைப் புரிந்துகொள்ளலாம்.

## சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன்

குறுநில மன்னர்களிடையே போர்ப் பகை நீண்டதை வரலாறு நமக்குக் காட்டி நிற்கிறது. இருவர் திறம்படப் போர் புரிந்த இடங்கள் வரலாற்று அடையாளங்களாக அவ்வூர்ப் பெயர் நிலைபெற்றுவிடுகின்றன. போர்ச் சிறப்பால் போர் நடைபெற்ற இடம் அப்போர்ப் பெயராலே அமைவதும் உண்டு. இப்பின்புலத்தில் பின்வரும் கூற்றினை ஆராய முற்படுவோம். அம்முறையே, "சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற் பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் யாது காரணத்தாலோ பெரும் பகை கொண்டு திருப்போர்ப்புறம் என்னுமிடத்தே கடும்போர் உடற்றினர். திருப்போர்ப்புறம் என்பது இப்போது தஞ்சை மாவட்டத்தில் கோவிலடியென வழங்குகிறது. இதனைக் கல்வெட்டுகள் திருப்போர்த் திருப்புறம் (S.I.I.Vol.VII.No.497) என வழங்கும் இவ்விடத்தே சோழன் செங்கணானுக்கும் சேரமான் கணைக்காலிரும்பொறைக்கும் போர் நிகழ்ந்ததும் அதன்கண் சேரமான் பற்றுக்கோட்பட்டதும் (புறம். 74) ஈண்டு நினைவு கூர்தற்குரியன" (மேலது; ப.457). இக்கூற்று போர்ச் சிறப்பால் ஊர்ப் பெயர் அடையாளப்படுத்தப் படுவதை உணர்த்துகிறது. இதன் பின்புலத்தில் 'திருப்போரூர்' என்ற பெயரை இனம் காணலாம். திருப்போர்புறம் என்பது தற்காலத்தில் தஞ்சை மாவட்டத்தில் கோவிலடி என

வழங்குவதையும் வெளிப்படுத்துகிறது. திருப்புறம் என்பது திருப்பூர் எனவும், திருப்போர் என்பது திருப்போரூர் எனவும் மாறியதற்கான வேர்கள் திருப்போர்புறமாக இருக்கலாம். இப்பின்புலத்தில் பழங்காலப் பெயர்த் தொடர்ச்சியைச் சமகால நோக்கில் புரிந்துகொள்ள வாய்ப்பு ஏற்படுகிறது.

பரணர் என்ற இனக்குழு இருந்ததையும், இக்குழுவில் உள்ள புலவனைப் பரணர் என்றே அழைத்துள்ளனர் என்பதைச் சங்கப் பனுவல்கள் நமக்கு உணர்த்துகின்றன. இருப்பினும் பரணர் பெயரால் ஊர், பள்ளி இருப்பதையும் பின்வரும் கூற்றின் வாயிலாக ஆராய முனைவோம். அம்முறையே "ஆசிரியர் பரணர் பெயரால் பரணர் பள்ளியென்றோர் ஊர் கோயமுத்தூர் மாவட்டத்துக் காங்கேயப் பகுதியில் உள்ளது. (A.R.No.560 of 1908) இப்போது இது பரஞ்சேர்வளியென வழங்குகிறது" (மேலும்; ப.466). இக்கூற்று பரணர் பற்றிய தெளிவை ஏற்படுத்துகிறது. பரணர் பள்ளி, பரணர்ச்சேரி, என்பதைப் பரணர் வாழ்ந்த ஊராகவே இனம் காணலாம். ஆனால், தற்காலப் பொருண்மையில் பரணர் பயிலும் பள்ளி இருப்பதையும் உணரலாம். பரணர் பள்ளி என்பது இப்பொழுது என்னவாக மருவி உள்ளது என்பதையும் புலப்படுத்துகிறது. பரணர் பள்ளி, பஞ்சேர்வளி என வழங்குவதையும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை தெளிவாக்குகிறது.

## பாழி பெயராய்வு

பாழி என்ற பெயர், வரலாற்று நிகழ்வைக் கொண்டதாகும். வடுகர் இனம் தங்கியிருந்த இடமே பாழி என அழைக்கப்படுகிறது. வடுகரை விரட்டச் சோழன் மேற்கொண்ட போர் நடைபெற்ற இடமாகப் பாழி விளங்குகிறது. இத்தகைய பின்புலம் கொண்ட பாழி தற்காலத்தில் எங்கு, என்னவாக மருவி உள்ளது என்பதை நோக்குவோம். அம்முறையே, "இப்பாழி யென்பது தொண்டை நாட்டு நெடுங்குன்றத்துக் கல்வெட்டொன்றில் 'பாழி ஒபிளியான திருவாஞ்சேரி'(A.R.No.26 of 1934-5) என்று கூறப்படுகிறது. இது செங்கற்பட்டு தாலுகாவில் உளது. வடுகரைச் சவட்டியது கொண்டு செருப்பாழி தொண்டை நாட்டுப் பாழியாகலாம் என்று கருதப்பட்டது. ஏனை நாடுகளிலும் பாழியெனப் பெயரிய ஊர்கள் பலவுண்டு, சோழ நாட்டுப் பாழி அரதைப் பெரும்பாழி யென்னும் இக்காலத்து அரித்துவார மங்கல மென்றும் வழங்கும்" (மேலது; ப.467). இக்கூற்று பாழி பற்றிய வரலாற்றுத் தெளிவை ஏற்படுத்துகிறது. வடுகரை அழித்த இடம் பாழி எனப் போற்றப்படுவதை உரைகள் உணர்த்துகின்றன. சமகாலத்தில் பாழி என்ற ஊர்கள் பல இடங்களில் இருப்பதை அறிய முடிகிறது. பழங்காலப் பாழி தற்காலத்தில் 'அரித்துவார மங்கலம்' என்று அழைக்கப்படுவதைக் கல்வெட்டுத் தரவுகள்

கொண்டு நிறுவுகிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை. இத்தகைய ஆராய்தலுக்குப் பின் கிடைக்கும் முடிவுகளே ஏற்புடையதாகிறது.

## சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

பிறப்பால் சிறப்பு பெற்ற பல ஊர்ப்பெயர்கள் மத்தியில் இறப்பால் ஊர்ப்பெயர் பெற்றவர் இப்புலவர். குளமுற்றத்தைச் சில ஏடுகளில் குராப்பள்ளி என்றும் பதிவு செய்யப்பட்டுள்ளதை அறிகிறோம். குராப்பள்ளி பற்றிய கல்வெட்டுத் தரவினை ஆராய முற்படுவோம். அம்முறையே, "குராப்பள்ளியென்பது தஞ்சை மாநாட்டிலுள்ள திருவிடைக்கழியென்னும் ஊராகும். இங்குள்ள இறைவனுக்குத் திருக்குராவுடையார் (A.R.No.269 of 1925) என்பது பெயர். இத்திருக்குராவுடைய இறைவனை முருகனாகக் கொண்டே கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த செப்புறைச் சேந்தனார் தமது திருவிசைப் பாவைப் பாடியுள்ளார். இங்கே மிகப் பழையதொரு சிவன் கோயில் சோளேச்சுரம் என்ற பெயருடன் இருப்பதாகவும், அது குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனது பள்ளி படைக்கோயிலாக இருக்கலாம் என்றும் காலஞ்சென்ற சீகாழி சைவத்திரு, முத்துத்தாண்டவராயப் பிள்ளை கூறுவார்" (மேலது; பக்.480-481). இக்கூற்று குராப்பள்ளி என்பது சிவத்தளங்களைக் கொண்ட பகுதி என்பதை உணர்த்துகிறது. குராப்பள்ளி தற்பொழுது தஞ்சையில் 'திருவிடைக்கழி' என்னும் பெயரால் அழைக்கப்படுவதையும் உரைகள் உணர்த்துகின்றன. குமாரப்பள்ளி பெரும் வரலாற்றுத் தொடர்ச்சியைத் தாங்கி நிற்கிறது. சங்க காலத்தில் பெருந்திருமாவின் பள்ளிப்படைக் கோயிலாகவும், இடைக்காலத்தே சிவன் கோயிலாகச் சோளேச்சுரம் என்ற பெயரால் விளங்கியதாகவும், பிற்காலத்தே அது முருகனின் திருக்குரமாகவும் கொள்ளப்படுகிறது. இப்பின்புலத்தில் குராப்பள்ளியின் வரலாற்றுத் தொடர்ச்சியைப் புரிந்துகொள்ளலாம்.

## வஞ்சி – திருவஞ்சிக்களம்

ஊர்ப் பெயர் மாற்றம் என்பது சமூகத்தின் எதிர் வினைகளால் மாற்றம் அடைகின்றன. மொழிப் பயன்பாடு என்பதும் காலமாறுதல்களை உள்ளடக்கியே நிகழ்கிறது. சங்க காலம் தொடங்கிச் சமகாலம் வரையிலான பெயர் மாற்றங்கள் நிகழ்ந்த வண்ணமே இருக்கின்றன. இக்கருத்தினைக் கருத்தில் கொண்டு பின்வரும் கூற்றுகள் ஆராயப்படுகின்றன. அம்முறையே, "குடபுலமென்றும் வஞ்சி யென்றும் கூறியதனால், ஈண்டுக் கூறப்படும் வஞ்சி, கருவூரான வஞ்சிநகர் அன்றென்பதாம். குடபுலத்து வஞ்சிநகர், இடைக்காலத்தே அஞ்சைக்களமென மருவி (S.I.I.Vol.V.No.789) இப்போது திருவஞ்சிக்களமென வழங்குகிறது. சேரமான் கருவூரெறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரல்

இரும்பொறை காலத்தே காவிரிக்கரையிலுள்ள கருவூர்க்கு வஞ்சியென்ற பெயரும், அமராவதி யாற்றுக்கு ஆன்பொருநை யென்ற பெயரும், அதற்கு வடகிழக்கில் காவிரியின் வடகரையிலுள்ள மூதூர்க்கு முசிறியென்ற பெயரும் உண்டாயின. அதனை இவ்வுரைகாரர் எழுதிய "பண்டைநாளைச் சேர மன்னர்கள்" என்ற நூலிற் காண்க. கருவூர்க்கு உண்டான வஞ்சியென்னும் பெயர் இப்போது வழக்கு வீழ்ந்தொழிந்தது. இடைக்காலத்தும் கருவூர் வஞ்சிநகரமென வழங்கினமை "வீரசோழ மண்டலத்து வெங்கால நாட்டுக் கருவூரான வஞ்சி மாநகர்"(A.R.No.335 of 1927-28) என்பதனாலறியப்படும். தாராபுரமும் கொங்குவஞ்சி (A.R.No.146 of 1920) எனப்படுவது கருவூரெறிய ஒள்வாட்கோப்பெருஞ் சேரலுக்கு முன்னொரு காலத்தில் உண்டாகியது"(மேலது; பக்.486-487). இக்கூற்று வஞ்சி மாநகர் பற்றிய வரலாற்றுத் தெளிவை ஏற்படுத்துகிறது. வஞ்சி நகர் இடைக்காலத்தில் அஞ்சைக் களமென்றும், சமகாலத்தில் திருவஞ்சிக் களமென மாறியதன் வரலாற்றுத் தொடர்ச்சியைப் புலப்படுத்துகிறது. ஒவ்வொரு காலத்திற்கும் ஏற்றாற் போன்று ஊர்ப் பெயர்களும் மருவி வருவதைக் கல்வெட்டுத் தரவுகள் கொண்டு உறுதிப்படுத்தலாம்.

வஞ்சி நகர் பற்றி இரா.பி. சேதுப்பிள்ளையின் கருத்து இணைத்துப் பார்க்க வேண்டிய தேவையாகிறது. அம்முறையே, "கொச்சி நாட்டிலுள்ள திரு வஞ்சைக்களமே வஞ்சிமா நகரம் என்பார் சிலர். திருச்சி நாட்டைச் சேர்ந்த கருவூரே வஞ்சி என்பார் வேறு சிலர். இங்ஙனம் அலைகடலிற் பட்ட துரும்புபோல ஆராய்ச்சி யுலகத்தில் அலமரும் நிலை இன்று வஞ்சிமா நகரத்திற்கு வந்துவிட்டது" (இரா.பி. சேதுப்பிள்ளை; 2009; ப.45). இக்கூற்று வஞ்சிநகர் பற்றிய தெளிவின்மையைப் புலப்படுத்துகிறது. எனவே, வஞ்சி நகர் பற்றிய தெளிவான முடிவை இன்னும் ஆய்வுலகம் எட்டவில்லை என்பதே வெளிப்படையாகும்.

### நல்லியக்கோடன்

நல்லியக்கோடன் என்ற பெயர் நற்குணங்களைக் கொண்ட ஒருவனைக் குறிப்பதெனலாம். கோடன் என்ற பெயர் பல மாறுதல்களை அடைந்துள்ளது என்பதைப் பின்வரும் கூற்றின் வாயிலாக விளங்கிக் கொள்ளலாம். அம்முறையே, "நல்லியக்கோடன் என்பது நல்லியனாகிய கோடன் என விரியும். கோடன் என்பது இயற்பெயர், குயக்கோடன் (த.நா.சரிதை.10) எனப் பிற்காலத்தும் இப்பெயர் வழக்கிலிருந்திருக்கிறது. "மேல் வெம்பா நாட்டுக் கோடனூர்" (A.R.No.20 of 1932-33) எனப் பாண்டி நாட்டிலும், கோடன் பாக்கம் எனத் தொண்டை நாட்டிலும் ஊர்கள் பல இருப்பது நோக்கத்தக்கது. இதனைச் சிலர் கோஷனூர் என்பதன் திரிபாகக் கூறுவது பொருந்தாமை காண்க"

(ஔவை சு.துரைசாமிப் பிள்ளை; 2008; பக்.500-501). இக்கூற்று கோடன் என்ற பெயர்த் தெளிவை எட்ட வழிவகை செய்கிறது. கோடன், குயக்கோடன், கோடன்பாக்கம் என்னும் முறையில் பின்னொட்டுகளைத் தாங்கி நிற்பது போல முன்னொட்டான 'நல்லிய' என்பதையும் தாங்கி நிற்பதையும் உணரலாம். எனவே கோடன் என்பதைப் பொதுப் பெயராகக் கொள்ளலாம். கோடன்பாக்கம் என்பது கோடம்பாக்கம் எனவும் மருவி இருக்கலாம். இவை இரண்டினையும் இணைத்துப் பார்க்கும் வாய்ப்பினை ஏற்படுத்துகிறது.

## நாஞ்சில்

நாஞ்சில் என்ற பெயர் ஊர், மலை, மனிதன் என்ற மூன்று நிலைப்பாட்டிலும் இணைத்துப் புரிந்துகொள்ளும் வாய்ப்பை ஏற்படுத்துகிறது. நாஞ்சில் நாடு, நாஞ்சில் வட்டாரம், நாஞ்சில் நாடன் என்ற பெயர் கொண்ட எழுத்தாளர் என்ற பல தன்மைகளை அப்பெயர் பெற்றுள்ளது. ஆனால், சங்க இலக்கியம் நாஞ்சில் என்பதை எவ்வாறு விவரிக்கிறது என்பதைப் பின்வரும் கூற்றின் வாயிலாக ஆராய எத்தனிப்போம். அம்முறையே, "நாஞ்சில் பொதியின் மலைத்தொடர்களுள் ஒன்று; இப்பொழுது இது மருத்துமலை என வழங்குகிறது; முன்னாளில் இது நஞ்சிலாமலை என வழங்கிற்றென்பர். இது நாஞ்சில் நாட்டில் நாகர்கோயிலுக்கும் தென்குமரிக்கும் இடையில் உளது. இம்மலைக்கு வடகிழக்கில் உள்ள வள்ளியூர் இவ்வள்ளுவரது ஊராகலாம் என்பர். அவ்வூரில் பண்டை நாளில் இனிய கோட்டையிருந்ததெனக் கல்வெட்டு (A.R.No.254 of 1927-28) கூறுகிறது. "உயர்சிமைய வழாஅ நாஞ்சில்" (புறம். 139) என்று பிறரும் கூறுதல் காண்க" (மேலது; பக்.518-519). இக்கூற்று நாஞ்சில் மலைபற்றிய தெளிவை ஏற்படுத்துகிறது. எனவே சங்க காலத்தில் நாஞ்சில், நாஞ்சிலாமலை என்றும் இப்போது மருத்துமலை எனவும் அழைக்கப்படுவதை உணர்த்துகிறது. மருத்துமலையே தற்கால மருதமலையாக மருவி இருக்கலாம் என்றும் எண்ணத் தோன்றுகிறது. அப்படி இல்லை என்றாலும் அப்பெயர் மரபையாவது இப்பெயர் உள்வாங்கி இருத்தல் வேண்டும் எனலாம்.

## வள்ளுவர் மரபு

வள்ளுவர் என்ற பெயர் தமிழியல் புலத்தில் ஆதியாகவே இருப்பதாகும். திருக்குறள் எழுதிய வள்ளுவருக்கும் இவ்வள்ளுவருக்கும் என்ன தொடர்பு என்ற வினாவையும் இல்லை இருவரும் ஒருவரா என்ற வினாவையும் முன்வைத்து விவாதிக்கத் தொடங்குவோம். உரையாசிரியர் தரும் வள்ளுவர் பிறப்பு பற்றிய செய்திகளையும் ஆராய முற்படுவோம். அம்முறையே, "திருக்குறளை வழங்கிய திருவள்ளுவரைக் கண்ட

பிற்காலத்தார் இந்நாஞ்சில் வள்ளுவனைக் காணா தொழிந்தனர்; கண்டிருப்பின் திருவள்ளுவரை வள்ளுவர் மரபிற் பிறந்தவரென்றும் ஒரு புலைச்சிக்குப் பிறந்தவரென்றும் பொய்க்கதைகள் புனைந்து பொய் கூறியிருக்க மாட்டார்கள். நாஞ்சில் மலைக்குத் தலைவனாகிய வள்ளுவனும் திருக்குறளாசிரியராகிய திருவள்ளுவனாரும் வள்ளுவன் என்ற சிறப்புப்பெயர் கொண்டு விளங்கியவராவர். இவர்கள் வழிவந்தோர் வள்ளுவர்களாய் இடைக்காலத்தே அரச காரியம் பார்த்து வந்த மேலோராவர். மலையாளச் சில்லாவைச் சேர்ந்த பொன்னானிப் பகுதியிலுள்ள சுகபுரத்துக் கல்வெட்டொன்று, "சொகிரத்துப் பருடையாரும் இராயசேகரராயின வள்ளுவரும் கூடிச் செய்தகச்சமாவது"(S.I.InS.Vol.V.No.772) என வள்ளுவர்களை "இராயசேகரர் என்பது இக்கருத்தை வற்புறுத்தும்" (மேலது; பக்.519-520). இக்கூற்று வள்ளுவர் பற்றிய புரிதலுடன் மேலும் ஆராயத்தூண்டுகிறது. வள்ளுவர் என்ற மரபில் வந்தவர்களையே வள்ளுவர் என்று அழைப்பது மரபாகும். மேலும் வள்ளுவரைப் புலைச்சியர் பிள்ளை என்று கூறுவதை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை வன்மையாகக் கண்டிப்பதாகத் தெரிகிறது. எனவே ஔவை சு.துரைசாமிப்பிள்ளை கூற்றின்படி நாஞ்சில் பகுதியில் வாழ்ந்த வள்ளுவ மரபில் பிறந்தவர் திருவள்ளுவர் என்பவராவார். வள்ளுவர் என்ற மரபினர் அரச காரியம் புரிந்துள்ளனர் என்ற வரலாற்றைக் கூறி, வள்ளுவர் என்பது இராயசேகரர் என்ற பொருளைக் கொடுத்து மேன்மையான குலத்தில் பிறந்தவரே வள்ளுவர் என்ற வாதத்தை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை முன்வைத்துள்ளார். இத்தகைய விவாதங்கள் கதைகளின் வழியான விவாதமாகவே கருதலாம். இருப்பினும் வள்ளுவர் பிறப்பு பற்றிய தரவுகள் என்பவை கிடைக்கப்பெறாத தரவுகளாகவே உள்ளதால் பலரும் பல விதக்கருத்தாக்கங்களை முன்வைக்கின்றனர். எனவே வள்ளுவரின் பிறப்பு பற்றிய விவாதத்தைத் தவிர்த்து, அவரின் குறளுக்கு மட்டுமே மதிப்பளிப்பது அவசியமாகிறது. வள்ளுவர் மரபு, வள்ளுவர் பிறப்பு பற்றிய விவாதங்கள் மேலும் ஆராயப்பட வேண்டியவையாகும்.

### கரும்பனூர்கிழான்

சங்கப் பாடல்களில் இடம்பெற்றுள்ள பெயர்களே கல்வெட்டுகளில் காணப்படுவதால் அப்பெயர்கள் உறுதிப்படுத்தப்படுகின்றன. ஊர்ப் பெயர்களை உறுதி செய்ய உரையாசிரியர் கல்வெட்டுத் தரவினை எடுத்துக்காட்டிப் பொருத்தி ஆராயும் திறன் பொருத்தமானதாகும். இப்பின்புலத்தின் அடிப்படையில் பின்வரும் கூற்றினை ஆராய முற்படுவோம். அம்முறையே, "கரும்பனூர் என்பது தொண்டை நாட்டுத் திருவேங்கடக் கோட்டத்திலுள்ளதோரூர். திருக்கழுக் குன்றத்துக் கல்வெட்டொன்று, "கரும்பனூர் வணிகன் ஆதித்த"(A.R.No.76 of 1932-3) னென்பவனைக் குறிக்கின்றது. இவனை ஒருகால் நன்னாகனா ரென்னும், சான்றோர் கிணைவரும் ஆணருமாகிய

சுற்றத்தாருடன் கரும்பனூர் சென்று கண்டார்" (மேலது; ப.520). இக்கூற்று கரும்பனூர் பற்றிய தெளிவை ஏற்படுத்துகிறது. கரும்பனூர் என்பது செல்வச் செழிப்பு நிறைந்த ஊராகவும் அடையாளப்படுத்தப்படுகிறது. பாணர்களும், பாணர்களின் சுற்றத்தாரும் மன்னனைக் கண்டு மகிழ்ந்துள்ளனர் என்ற கூற்று அவ்வூரின் சிறப்பினையும், அத்தலைவனின் சிறப்பையும் உறுதிப்படுத்துவதாக அமைகிறது. கரும்பனூர் பற்றிக் கல்வெட்டு தரும் தரவுகள் ஊரின் பெயரை உறுதிப்படுத்துவதோடு ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரைத்திறனையும் அறிவுறுத்துகிறது.

## அவியன் - அவியனூர்

மன்னன் பெயரே ஊருக்கு அடையாளமாக அமைந்துள்ளது. அவியன் ஆண்ட பகுதி ஆதலால் அவியனூர் என்றாகியிருக்கலாம். அவியன் என்பவன் ஒரு குறுநில மன்னன் ஆவான். மேலே கூறப்பட்ட கருத்தை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரையின் வாயிலாக ஆராய முற்படுவோம். அம்முறையே, "அவியன் திருமுனைப்பாடி நாட்டில் வாழ்ந்தவன். அவன் பெயரால் அவியனூரென்றோர் ஊர் பண்டைநாளில் இருந்தது. அஃது அவியனூர் நாட்டுக்குத் தலைநகராகவும் இருந்ததெனத் திருவதிகைக் கல்வெட்டொன்று (A.R.No.419 of 1921) கூறுகிறது" (மேலது; ப.530). இக்கூற்று அவியன் பற்றிய வரலாற்றுத் தெளிவை ஏற்படுத்துகிறது. அவியனூர் அவியன் நாட்டுத் தலைநகரமாக விளங்கியது என்பதையும் தெளிவாக்குகிறது. சங்கப் பாடல் வரிகளை மேலும் வலுசேர்க்க கல்வெட்டுத் தரவுகள் துணைபுரிவதை அறியலாம்.

அவியன் பற்றிய வரலாற்றுப் புரிதல் என்பது ஒரு இனக்குழுத் தலைவன் ஒரு பேரரசாக உருவாகப் போராடிய போராட்ட மரபையே நமக்குக் காட்டுகிறது எனலாம். இத்தகைய பெரும் வரலாற்றுப் பின்புலத்தை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை விளக்கத்தின் வாயிலாக ஆராய முற்படுவோம். அம்முறையே, "இந்த அவியன்வழி வந்த வேந்தர் இடைக்காலத்தே வேற்றுப்புல வேந்தர் வரவால் வலியழிந்து பல நூற்றாண்டுகாறும் அரசியலுலகில் தலைமறைவாக இருந்துவந்தனர். பதின்மூன்று, பதினான்காம் நூற்றாண்டுகாறும் அவ்வப்போது தோன்றிய வேந்தருடைய தானைத் தலைவராகவும், தானை மறவராகவும் இருந்துவந்து போதிய வலிபெற்றவுடனே குறுநில மன்னராய் விளங்கலாயினர். இவர்கள் பாண்டி நாட்டுத் திருப்பத்தூர்ப் பகுதியைச் சேர்ந்த சூரைக்குடி யென்னுமூரைத் தலைநகராகக் கொண்டு பிற்காலத்தே விளக்க முற்றிருந்தனர். அவருள் சிலர் விசயாலயதேவ ரென்றும் மாளவ சக்கரவர்த்தியென்றும் தம்மைக் கூறிக்கொள்வாராயினர். ஆயினும் பழைய தம் குடி முதல்வனான அவியன் பெயரையும் மறவாது பேணி வந்தனர். சடாவுன்மன் வீரபாண்டியன் காலத்தில் அவியன்

பெரிய நாயனான விசயாலய தேவன் (A.R.No.119 of 1908) என்பவனுடைய கல்வெட்டொன்றும் அவியன் மாளவ சக்கரவர்த்தி (A.R.No.122 of 1908) என்பவன் கல்வெட்டொன்றும் திருப்பத்தூர் திருத்தளியாண்டார் கோயில் உள்ளன" (மேலது; 530). இக்கூற்று அவியன் குடி வரலாற்று செய்தியைத் தெளிவாக்குகிறது. குறுநில மன்னராக இருந்த அவியன் குடி மரபினர் பேரரசாக உருவாகப் போராடியதை நமக்கு இக்கருத்து வெளிப்படுத்துகிறது. குறுநில மன்னர்கள் தங்களது பெயர்களையும் சக்கரவர்த்திகளாக மாற்றி, சமூகத்தில் உயர் மதிப்பைப் பெற முயன்றுள்ளதை வரலாறு நமக்குக் காட்டுகிறது.

அவியன் போராட்ட மரபைப் பல சமூகங்கள் கையில் எடுத்து இன்று வரை போராடி வருவதையும் இணைத்துப் பார்க்க வேண்டிய தேவை ஏற்படுகிறது. ஒவ்வொரு சமூகமும் தன்னை மேன்மைப்படுத்த, அல்லது தங்களை நிலை நிறுத்திக்கொள்ளப் போராடி வருவதை நம் வரலாறு காட்டுகிறது. ஒரு வரலாற்றுத் தகவலை மட்டும் இங்குப் பொருத்திப் பார்ப்பது பொருத்தம் உடையதாகும். இப்பின்புலத்தின் அடிப்படையில் நாடார் சமூகப் போராட்ட மரபைப் புரிந்துகொள்ளலாம்.

நாடார் சமூகம் தொடக்க காலங்களில் கோயில் நுழைவு, தோள்சீலைப் போராட்டம் முதலியவற்றை நிகழ்த்தியுள்ளதைத் தமிழ்ச்சமூகப் போராட்ட மரபு மறுக்காத ஒன்றாகும். இத்தகைய உரிமைகளைப் போராடிப் பெற்ற பிறகு தங்களை உயர்குடிகளாக அடையாளப்படுத்திக்கொண்டனர். பிறகு, பிரமணர் போலப் பூனூல் அணியவும் தொடங்கினர். நாடார்கள் மேலும் தங்கள் பெயர்களையும் மாற்றி அமைத்துக்கொள்ள முயன்றனர். எனவே, தொடக்க கால அவியன் குடி போராட்ட மரபை நாடார் போராட்ட மரபுடன் இணைத்துப் புரிந்து கொள்ளல் தேவையாகிறது. இக்காலக் கீழ்த்தட்டு மக்களின் போராட்டக் குணங்களை இங்கிருந்தும் உள்வாங்கி இருக்கலாம். இப்பின்புலத்தில் ஒரு சமூகப் போராட்டங்களைப் புரிந்துகொள்ளலாம். அவியன்குடி இனக்குழுச் சமூகமாக இருந்து பேரரசாக உருவான வரலாற்று மரபைப் புரிந்துகொள்ள முடிகிறது.

## அம்பர்கிழான் அருவந்தை

அருவந்தையைத் தலைவனாகக் கொண்டது அம்பர்நாடு. புகழ் மிக்க அருவந்தை வாழ்ந்த இவ்வூர் அம்பர் அருவந்தை என்றே அழைக்கப்பட்டிருப்பதை அறியமுடிகிறது. இத்தகவலை ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரையின் வாயிலாக ஆராயத் தொடங்குவோம். அம்முறையே, "அம்பர் காவிரி பாயும் நாட்டில் உள்ளதோரூரெனவும், அவ்வூர்த் தலைவனான அருவந்தை கல்வி கேள்விகளால் நிறைந்தவன் எனவும், முழுதுணரும் ஒண்புலவனெனவும் கண்ணோட்டமுடைய காவலனெனவும் அறியலாம்.

இவனது அழியாப் புகழ் அவ்வூர்க்கே பேரணியாய் நின்று பிரிவின்றி இயலுவதாயிற்று; ஆகவே, இடைக்காலத்தில் இவ்வூர் அம்பர் அருவந்தையெனவே வழங்குவதாயிற்று; "உய்யக் கொண்டார் வளநாட்டு அம்பர்நாட்டு அம்பர் அருவந்தை"(A.R.No.175 of 1927-8) எனத் திருப்பழனத்துக் கல்வெட்டொன்று கூறுவது காண்க" (மேலது; ப.540). இக்கூற்று அருவந்தையின் திறனை வெளிப்படுத்துகிறது. அருவந்தை என்பவன் கல்வி, கேள்வி, வீரம் என அனைத்துச் செயல்களிலும் சிறந்து விளங்கியதால் அவ்வூர்ப் பெயரே அவனுக்கு அணியாக ஆயிற்று எனலாம். இவ்வூர் காவிரி பாயும் பகுதியில் இருப்பதால் செழிப்பு மிக்கு விளங்கியிருத்தல் வேண்டும். எனவே ஊர்ச் சிறப்பும், மன்னன் சிறப்பும் சேர்ந்து ஒன்றாகி அம்பர் அருவந்தையென அழைக்கப்பட்டிருக்கலாம்.

அருவந்தை என்பது பொதுப் பெயர் எனலாம். அக்குடியில் பலர் இப்பெயருடன் இருந்துள்ளதையும் உணர்த்துகிறது. அருவந்தை என்ற புகழ் மிக்க மன்னனால் அக்குடி அப்பெயரைத் தாங்கி நிற்பதையும் கவனிக்கலாம். அம்முறையே, "இந்த அருவந்தையின் குடிப்பிறந்தவர் பிற்காலத்தே தொண்டை நாட்டில் இருந்திருக்கின்றார். பதின்மூன்றாம் நூற்றாண்டின் பிற்காலத்தே தொண்டை நாட்டில் இருந்திருக்கின்றார். பதின்மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் விளங்கிய கோப்பெருஞ்சிங்கன் காலத்தில் வந்தவாசிக் கண்மையிலுள்ள பொன்னூரில் அருவந்தையொருவன் இருந்துள்ளான் என அவ்வூர்க் கல்வெட்டு கூறுகிறது. அது, "பொன்னூரான அழகிய சோழநல்லூர் அருவந்தை ஆண்டான் திருச்சோற்றுத் துறையுடையான் சொறப்பிள்ளை"(S.I.Ins.Vol.XII.No.220) என வருவது காண்க" (மேலது; ப.540). இக்கூற்று அருவந்தை என்பது ஒரு குடிப்பெயராக விளங்கி வருவதை உணர்த்துகிறது. பழங்காலம் தொடங்கி இன்றுவரையிலும் அப்பெயர்த் தொடர்ச்சி இருப்பதைப் புரிந்துகொள்ளலாம். புலவர் தொண்டை நாட்டைச் சார்ந்தவர் என்பதற்குப் பல தரவுகளை முன்வைக்கிறார். ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தரும் தொடர்ச்சியான விளக்கத்தை நோக்கலாம். அம்முறையே, "தம் பாட்டுக்களில் தொண்டை நாட்டு வேங்கடத்தையும் அதற்குரிய புல்லியென்பானையும் பன்முறை பாடியிருப்பது கொண்டு இவர் தொண்டை நாட்டுக்குரியவரென்பது ஒருவாறு கருதப்படுமாயினும், மீஞ்சூர்ச் சிவன் கோயில் கல்வெட்டு, (A.R.No.133 of 1916) அதனை நன்கு வற்புறுத்துகின்றது" (மேலது; ப.541). இக்கூற்று ஊர்ப் பெயர்களின் தெளிவை ஏற்படுத்த கல்வெட்டுத் தரவுகள் உதவுகின்றன. இதன் அடிப்படையில் பல ஆய்வுக்குரிய இடங்களைக் கல்வெட்டு துணைகொண்டு விளக்கும் விதம் நம்பகத்தன்மையை ஏற்படுத்துகிறது.

வஞ்சி மாநகரில் ஓடும் ஆற்றைச் சங்கப் பாடல்கள் எவ்வாறு குறித்தது என்பதைத் தெளிவுபடுத்த பின்வரும் கூற்றை நோக்குவோம். அம்முறையே, "இது வஞ்சி மாநகர்க்கு

வெளிப்படை வஞ்சி நகர்க்கம்மையிலோடும் பொருநை ஆன்பொருநை யெனப்படும். கருவூர்க் கல்வெட்டும் (A.R.No 166 of 1936-7) அதனை வஞ்சி நகரென்றும், அமராவதியை ஆன்பொருந்த மென்றும் குறிக்கின்றன" (மேலது; ப.553). இக்கூற்று வஞ்சியில் ஓடும்பொருநை ஆண்பொருநை என்பதைத் தெளிவுப்படுத்துகிறது. சங்கப் பாடல்களில் கூறப்படும் செய்திகள் மேலும் கல்வெட்டுத் தரவுகளால் ஆராயப்பட்டு உறுதி செய்யப்படுகின்றன. இத்தகைய உரைப்போக்கே ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை தனித்தன்மையை வெளிப்படுத்தும் கூற்றெனலாம்.

## கள்ளின் - ஊர்ப்பெயராய்வு

சங்கப் பாடல்களை உறுதி செய்ய கல்வெட்டுத் தரவுகளை முன்னெடுக்கும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, சில இடங்களில் கல்வெட்டு செதுக்கும் நபர்களால் ஏற்படும் பிழைகளையும் சுட்டிக் காட்டுகிறார். மேலும் கல்வெட்டுத் தரவுகள் பிழைபடும் இடங்களில் சங்கப் பாடல்களை முன்வைத்துக் கருத்தை உறுதிப்படுத்துகிறார். அதோடு மட்டும் அல்லாமல் பிற்கால சைவப் பாடல்களில் இருந்தும் உதாரணங்களை முன்வைத்துக் கல்வெட்டு, சங்கப்பாடல் கருத்துகளை உரையாசிரியர் உறுதிப்படுத்துகிறார். ஔவை சு.துரைசாமிப்பிள்ளை சைவப் பாடல்களையே பெரும்பாலும் மேற்கோள் காட்டுவதால் இவர் சைவச் சார்புடையவர் என்றும் துணியலாம். அம்முறையே, "ஆத்திரையனாருடைய கள்ளில் என்னுமூரை "தொண்டை நாட்டுப் புழற் கோட்டத்துக் குன்றிகை நாட்டுத் திருக்கள்ளில் (A.R.No.486 of 1926) என்று கல்வெட்டு கூறுகிறது. இவ்வூரிலுள்ள சிவனைத் திருஞான சம்பந்தர் "கள்ளின் மேய அண்ணல்" (119:1) என்று பாடினாராகக் கல்வெட்டு காலத்தவர் தவறாக "கள்ளின" மெனப் பொறிப்பாராயினர். இதற்குக் கள்ளூரென்றும் பெயர் (A.R.No.490 of 1926) உண்டு. இனி ஆசிரியர் கடுவன் மள்ளனார் கூறும் "தொல்புகழ் நிறைந்த பல்பூங் கழனிக் கரும்பமல் படப்பைப் பெரும்பெயர்க் கள்ளூர்" (அகம்.256) இஃதெனக் கருதுவோரும் உண்டு. இதற்கிப்போது மடவிளாகம் என்பது பெயர்" (மேலது; ப.560). இக்கூற்று கள்ளின் கள்ளூர் பற்றிய தெளிவை ஏற்படுத்துகிறது. சங்கப் பாடல்களைப் பிரதி எடுக்கும் பொழுதும், தகவல்களைக் கல்வெட்டுகளில் பொறிக்கும் பொழுதும், கவனக்குறைவாலும் பிழைகள் ஏற்படுவதை மறுப்பதற்கில்லை. ஆனால், இத்தகைய பிழையாக்கங்களை வைத்துக்கொண்டு உண்மைப் பாடத்தை உணர உரை கூறுவது என்பது ஒரு திறனாய்வாளனின் வேலையாகக் கருதலாம். எனவே இவ்வுரை வெளிப்பாட்டில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை ஒரு திறனாய்வாளரின் தகுதிப்பாட்டை வெளிப்படுத்தியுள்ளார் என்பது திண்ணம்.

## நுங்கன் பெயராய்வு

நுங்கன் என்ற பெயர் கொண்டவர்கள் பிற்காலத்தே வாழ்ந்தவர்களின் பெயர்கள் என்பதைக் கல்வெட்டுத் தரவுகள் தெளிவுபடுத்துகின்றன. நுங்கன் என்ற பெயர் கொண்டவர்கள் ஆந்திர மரபைச் சார்ந்தவராகவும் இருக்கலாம். இப்பின்புலத்தில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரைகள் ஆராயப்பட உள்ளன. அம்முறையே, "இங்கே குறிக்கப்படும் ஆதன் நுங்கனைப் போல, நுங்கன் என்று பெயர் தாங்கிய வேந்தர் பிற்காலத்தே ஆந்திர நாட்டில் குடிபுரிந்து அரசு புரிந்துள்ளனர். கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் அன்போதி நாயுடு என்பான் தன் சிறிய தந்தையான பாரி நாயுடுவுக்கும் சிற்றன்னை நுங்கன் சானிக்கும் நன்றுண்டாகக் கல்லூர்க் கங்காதரேசுரர்க்கு எண்ணெயாடும் செக்கு நல்கினான் (Nel.Ins.Darsi.33) பதினான்காம் நூற்றாண்டில் அசனதேவமகாராயர் காலத்தில் உண்டான கல்வெட்டொன்று, அவருடைய தந்தையார் நுங்கதேவ மகாராயரென்றும், அசனதேவர் மகன் பெயரும் நுங்கராயரென்றும் கூறுகிறது. கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டில் குண்டூர் சில்லாவிலுள்ள ஒங்கோல் தாலுகாவைச் சேர்ந்த கணுபார்த்தி பகுதியில் வீரணுங்கன் என்றொரு வேந்தன் இருந்தானென்றும், அவன் மகன் வீர அமலன் (அபலன்) என்பான் பிரமகுண்டிகை யென்றும் ஆறு கடலோடு கலக்குமிடத்திலுள்ள கோசம்பி நகரத்து வேதியர்களுக்கு நிலம் வழங்கினானென அவ்வூர்க் கல்வெட்டொன்று (Nel.Ins.O.55pp. 988-90) கூறுகிறது. கொண்ட வீடுரொட்டி வேந்தருள் அன்னவேமன் என்னும் வேந்தன் தன் உடன் பிறந்தவளும் நல்லன் நுங்கன் என்னும் வேந்தனுடைய பட்டத்தரசியுமான வேமசானி யென்பவட்கு நன்றாக நடுப்பூரான வேமாயுரத்தைப் பிரமதாயமாகச் செப்பேடு நல்கியுள்ளான்(Ep.Ind.Vol.III.பக். 286-92)" (மேலது; ப.563). இக்கூற்று நுங்கன் என்ற பெயரைத் தெலுங்கு மரபுடன் இணைத்து நோக்கும் மரபை உண்டாக்குகிறது. வேதியர்களுக்கு நிலம் வழங்கிய செய்திகளையும் இக்கூற்று தெளிவுபடுத்துகிறது. மேலும், இக்கூற்று பெண்ணுரிமை, பெண் சொத்துரிமை பற்றிய செய்திகள் சங்க இலக்கியத்திலேயே இருந்ததற்கான தரவுகளை முன்வைப்பதாகும். இக்கருத்துகள் மேலாய்வுக்கு இடமளிக்கின்றன.

1956ஆம் ஆண்டு 'இந்து வாரிசு உரிமைச் சட்டம்' காமராசர் ஆட்சிக்காலத்தில் கொண்டுவரப்பட்டதாக நமக்கு வரலாறு காட்டுகிறது. ஆனால், ஏறக்குறைய 2ஆம் நூற்றாண்டான சங்க இலக்கியக் காலத்திலேயே இவ்வுரிமை இருந்துள்ளதை அறியமுடிகிறது. வேம்சானிக்கு அவள் அண்ணன் அன்னவேமன் என்னும் வேந்தன் நடுப்பூராண வேமாயுரத்தைப் பிரமதாயமாக வழங்கினான் என்ற செய்தியை 389ஆம் பாடல் உரைகள் வாயிலாக அறியமுடிகிறது. இச்செய்தி பெண் உரிமையைப் பேணுவதாக, அதாவது பெண்ணுக்குச் சொத்தில் சம உரிமை உண்டு என்பதைச் சங்கக

காலத்திலேயே அங்கீகரிக்கப்பட்டுள்ளது என்பதை உணர்த்துவதாகக் கருதலாம். எனவே, சங்க காலம் பெண்ணுரிமை பேணப்பட்ட காலம் என்பது தெளிவாம்.

## பொறையாற்றுக் கிழான்

பொறையாற்றுக் கிழான் என்ற பெயர் 'பொருநர்' மரபின் வழி வந்தவையாகக் கருதலாம். பொறையாற்றுக் கிழான் என்பது 'பெரியன்' என்ற பொருளை உள்ளடக்கியதாகக் கொள்ளவும் வாய்ப்பிருக்கிறது. பின்வரும் கூற்றினை இக்கண்ணோட்டத்தில் ஆராய முற்படுவோம். அம்முறையே, "பொறையாறு என்பது சோழ நாட்டில் கடற்கரையிலுள்ளதோரூர். இதனைப் புறந்தையென்றும் சங்கச் சான்றோர் மருவி வழங்குப. "விரியினர்ப் புன்னையங் கானற்புறந்தை" (அகம்.100) என வருதல் காண்க. கி.பி. பத்து பதினோராம் நூற்றாண்டில் இப்பொறையாறு, குறும்பூர் நாட்டுத் தேவதானமான திருவிடைக் கழிக்கு (A.R.No.267 of 1925) பிடாகையா (A.R.No.234 of 1925) வழங்கி வந்திருக்கிறது. அப்பகுதியில் இரண்டாம் இராசராசன் காலத்தில் குன்றத்து நாராயணன் என்பவனால் வடமொழி வேதாந்தக் கல்லூரி யொன்று (A.R.No.276 of 1925) நிறுவப் பெற்றிருந்தது. இந்நாளில் அப்பகுதி கல்வி மணம் குன்றாது வளஞ்சிறந்து விளங்குவது ஈண்டுக் குறிக்கத்தக்கது. இப்பொறையாற்று கிழான் பெரியன் எனப்படுவன்" (மேலது; பக்.569-570). இக்கூற்று பொறையாற்றுக் கிழான் பற்றிய வரலாற்றுத் தெளிவை ஏற்படுத்துகிறது. இவ்வூர் பிற்காலத்தில் 'புறந்தை' என்றும் மருவி வருவதாகவும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை வெளிப்படுத்துகிறது. இவ்வூர் கல்வியில் சிறந்து விளங்கியதாக அறியப்படுகிறது.

## அதியமான்-தகடூர்

இன்றைய கேரள, கர்நாடகப் பகுதிகளே அன்றைய தமிழகத்தின் எல்லைக்கு உட்பட்ட பகுதிகளாக இருந்துள்ளது. பிற்காலச் சூழலிலேயே மொழி வாரியான மாநிலங்களாக மாறியது எனலாம். அதியமான் என்ற பெயர் சங்க காலம் தொடங்கி இன்று வரை தொடர்ந்து வருவதையும் கவனிக்கமுடிகிறது. அதியமான் ஆண்ட பகுதி தகடூரான இன்றைய தருமபுரி என்றே வரலாறு காட்டுகிறது. குறுநில மன்னர்களிடையே பல போர்கள் நிகழ்ந்துள்ளதையும் அறியலாம். இப்பின்புலத்தில் பின்வரும் வரலாற்றுக் கூற்றினை ஆராய முற்படுவோம். மேலும், தேவை கருதி இங்கு முழுக் கல்வெட்டுத் தரவினையும் கொடுக்க வேண்டியது அவசியமாகிறது. அம்முறையே, "சேலம் மாநாட்டின் வடபகுதியும் மைசூர் நாட்டின் கோலார் நாட்டுப் பகுதியும் சேர்ந்து ஒரு காலத்திற் கங்கநாடென வழங்கிற்று (Mysore Gazetteer Vol.I.P.3-4). இப்பகுதியை இடைக்காலச் சோழர் கைப்பற்றி இதற்கு 'நிகரிலி சோழ மண்டல' மெனப் பெயரிட்டு வழங்கினர்.

சோழநாட்டின் வடபகுதியை அதியர்கள் (Bom. Gazetteer vol.II.p.495) தகடூரைத் தலைநகராக்கிக் கொண்டு பண்டை நாளில் ஆட்சி செய்து வந்தனர். தகடூருக்கு இப்போது தருமபுரி என்பது பெயர். இடைக்கால அதியமான்கள் சோழர்க்குப் பணிந்து அவர்கீழ் குறுநில மன்னராயிருந்தனர். அக்காலை இவ்வதியமான்கள் கன்னடரை வென்று புகழ் பெற்றிருந்தனர். இவர்களைக் கன்னட நாட்டுக் கல்வெட்டுகள் அதியமா (E.P.Ind.Vol.vi.33) எனக் குறிக்கின்றன. பிற்கால அதியமான்களான எழினி, விடுகாதழகிய பெருமாள் முதலியோர்கள் தம்மைச் சேரர் குடிக்குரிய ரென்றே (E.P.Ind.Vol.vi.p.332) கூறிக்கொள்வாராயினர். கல்வெட்டிலாகாவினர் சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை அதியமானைவென்று அவனது தகடூரைக் கைப்பற்றிக் கொண்டதனால் (பதிற்) அதியமான்கள் சேரர்குடியினராதல் கூடாதென கருதுகின்றனர். (M.E.P.R.for. 906 para.34)" பண்டை நாளைச் சேர, சோழ, பாண்டியர் தனித்தனியே தத்தம் குடியிற் பிறந்து தம் நாட்டின் ஒரு பகுதியிலிருந்து ஆட்சி செய்தோருடனே போர் உடற்றியிருத்தலின், அதனால் அவர் குடி வேறுபட்டவராகக் கருதுவது கிடையாது. ஆதலால் அதியமான்கள் என்றுமே சேரர் குடிக்கு உரியவரென்பது துணிவான செய்தியாகும். இனிப் பாண்டியன் நெடுஞ்சடையனுடைய செப்பேடொன்று (Madras Museum plates of Jatila Varaman). "மாயிரும் பெரும்புனல் காவிரி வடகரை, ஆயிர வேலியயிரூர் தன்னிலும் புகழியூரிலுந் திகழ்வேலதியனை ஓடுபுறங் கண்டவன் ஒலியுடை மணித்தேர், ஆடல்வெம்மா வவையுடன் கவர்ந்ததும், பல்லவனுங் கேரளனுமாங்கவற்குப் பாங்காகிப், பல்படையோடு பார் ஞெளியப் பவ்வமெனப் பரந்தெழுந்து, குடபாலுங் குணபாலு மணுகவந்து விட்டிருப்ப, வெல்படையொடு மேற்சென்றங், கிருவரையு மிருபாலு மிடரெய்தப் படைவிடுத்துக், குடகொங்கத்தடன் மன்னனைக் கொல்களிற்றொடுங் கொண்டுபோந்து, கொடியணி மணி நெடுமாடக் கூடன்மதி லகத்துவைத்தும்" என்று கூறுவதனால், நெடுஞ்சடையன் பராந்தகன் காலத்தில் அதியமான் ஒருவன் பல்லவரையும் கேரளரையும் துணைகொண்டு பாண்டியனோடு பொருது தோற்று, கூடல் நகரில் சிறையுற்றானென்று அறிகிறோம். ஆயினும் இப்போரில் மீகொங்கெனப்படும் மேலை கொங்குநாட்டு வேந்தனும் கலந்திருத்தலின், அதியமான்கள் இக்காலத்தே கொங்குநாடு முற்றும் புகழ்கொண்டு விளங்கினரென்பது தெளிவாகிறது. சேரநாட்டு நாமக்கல்லிலுள்ள அரங்கநாதர் கோயில் கல்வெட்டொன்று (A.R.No.7 of 1906) அதியமான் குடியைக் குறிப்பிட்டு, அங்குள்ள கற்குகையை "அதியேந்திர விஷ்ணுகிரகம்" என்று குறிப்பதால், அதியமான்களின் குடி வரலாறு தமிழகத்தில் பல நூற்றாண்டுகள் தொடர்ந்து வந்திருத்தலைக் காணலாம்" (மேலது; பக்.578-579). இக்கூற்று அதியமான் தகடூர் பற்றிய முழுத் தெளிவை ஏற்படுத்துகிறது. சேர, சோழ, பாண்டியன் என்ற பிரிவைச் சார்ந்த குறுநில மன்னர்கள்,

நில உடைமையாளர்களாக இருந்த சமூகமாக அடையாளம் காணலாம். தமிழர்களிடையே பிரிவுகள் இருந்ததையும், அந்நியர் வருகையால் இவர்கள் ஒன்றிணைய வாய்ப்பு ஏற்பட்டதையும் இக்கருத்துகள் வலியுறுத்துகின்றன. அதியமான்கள் சேரர் குடி மரபைச் சார்ந்தவர்கள் என்ற வரலாற்றுத் தெளிவை எட்ட முடிகிறது. கேரள, கர்நாடகம் இரண்டும் தற்கால மொழி அடிப்படையிலான பிரிவாக, மூவேந்தர் காலத்தில் இல்லை என்பது புலனாகிறது. இருப்பினும் அந்நாடுகள் குறுநில மன்னர்கள் ஆண்ட குறுநிலப் பகுதியாக விளங்கியதைப் புரிந்துகொள்ளலாம். இத்தகைய வரலாற்றுப் பின்புலத்தின் அடிப்படையில் கல்வெட்டுத் தரவுகளின் வாயிலாக அதியமான்களின் வரலாற்றினைப் புரிந்துகொள்ள முடிகிறது. அதியமான் என்ற பெயரை ஒரு தனிநபரின் பெயராகப் புரிந்து கொள்வதை விட, ஒரு சமூகத்தின் பொதுப் பெயராகப் புரிந்துகொள்வதே சாலச் சிறந்ததாகும்.

## திருக்குட்டுவன் – கோனாடு பெயராய்வு

குட்டநாட்டில் வாழ்ந்த சேரர்களைக் குட்டுவர் என்று அழைக்கும் வழக்கம் இருந்துள்ளது. சேரர் மரபுகளைக் குட்டுவன் என்ற பெயருடன் இணைத்துப் புரிந்துகொள்ளுதல் அவசியமாகிறது. குட்டுவன் என்ற பெயர் பிற்காலங்களில் மதிப்பு கருதித் திருக்குட்டுவன் என மாறியிருக்கலாம். அம்முறையே, "வெண்குடை யென்னும் ஊரில் திருக்குட்டுவன் வழிவந்த குடும்பமொன்றுளது. அவர்கள் தங்களைக் குட்டுவன் வீட்டார் என்றே கூறிக்கொள்கின்றனர். கோனாடு என்பது புதுக்கோட்டைப் பகுதியில் ஓடும் வெள்ளாற்றின் கரை சேர்ந்த நாடு. இதன் பரப்பு இருபத்து நாற்காத வட்டகையெனக் கல்வெட்டுகள் (P.S.Ins.285) கூறுகின்றன. இது கல்வெட்டுகளில் கோனாடான இரட்டபாடி கொண்ட சோழவள நாடு (P.S.ins.129) என்றும், கேரளாந்தக வளநாடான கோனா (P.S.I.Ins.86) டென்றும், கடலடையாதிலங்கைக் கொண்ட சோழ வள நாடு (p.S.Ins.167) என்றும் வழங்கும் இக்கோனாடு, வட கோனாடு (P.S.Ins.286) தென் கோனாடு (P.S.Ins.221) கீழ்கோனாடு (P.S.Ins.198) என்றும் மூவகைப்படும். குமரனாருடைய எறிச்சிலூர் கீழ்க்கோனாட்டில் உள்ளது. கீழ்கோனாடு இளங்கோனா (P.S.Ins.728)டென்றும் வழங்கும்; இந்நாடு இப்போது தஞ்சை சில்லாவிலுள்ள அறந்தாங்கித் தாலுக்காவின் மேலைப் பகுதியாக இருக்கிறது. இதன் இயல்புகளை இவ்வுரைகாரர் எழுதிய மதுரை குமரனார் என்ற நூலிற் பரக்கக் காண்க" (மேலது; பக்.585-586). இக்கூற்று குட்டுவன், கோனாடு பற்றிய தெளிவை நமக்குத் தருகின்றன. கோனாடு, கோனா, கீழ்கோனாடு, வடகோனாடு, தென்கோனாடு என்று பல பெயர்களில் வழங்கப்படுவதை உரையாசிரியரின் கூற்று தெளிவுபடுத்துகிறது. கோனாடு

என்பது சமகாலத்தில் தஞ்சை மாவட்டத்தில் உள்ளது என்பதையும் கல்வெட்டுத் துணையுடன் உறுதி செய்யும் திறன் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரையின் தனித்திறனாகும். கோனாடு என்பது சோழ வளநாட்டுடன் தொடர்புடையது என்ற வரலாற்றுத் தெளிவையும் உணரலாம்.

சங்க காலங்களில் புலவர்களுக்கு இறையிலி (பிரமதாயம்) கொடுக்கப்பட்டதைச் சில கல்வெட்டுத் தரவுகள் நமக்கு உணர்த்துகின்றன. இத்தொடர்ச்சி சமகாலச் சூழலிலும் நிலவி வருவதையும் கவனிக்க முடிகிறது. அம்முறையே, “கி.பி.1226ஆம் ஆண்டில் மாறவன்மன் முதற் சுந்தரப் பாண்டியன் காலத்தில் வஞ்சி பாடிய புலவன் திருவரன் குளமுடையான் என்பவனுக்கு மறச்சக்கரவர்த்தி பிள்ளை யென்ற சிறப்புப் பெயர் கொடுத்து, விளைநிலம் பல இறையிலி காணியாகக் கொடுத்த செய்தியைக் கல்வெட்டு (P.S.Ins.278) கூறுவது ஈண்டு நினைத்தற்குரியது” (மேலது; ப.587). இக்கூற்று புலவர்களுக்குச் சிறப்புசெய்து சிறப்புப் பெயர் கொடுத்து, விளைநிலம் கொடுத்துப் பெருமைப்படுத்திய செய்தியைத் தெளிவுபடுத்துகிறது. பெரும்பாலான கல்வெட்டுத் தரவுகள் இத்தகைய இறையிலி (பிரமதாய) செய்திகளை வெளிப்படுத்துவதைக் காணலாம். திறமைகள் என்றைக்கும் மதிக்கப்படுகின்றன என்பதற்கு இத்தகைய வரலாற்றுத் தகவல்களே முக்கியச் சான்றுகள் எனலாம்.

கோனாடு பற்றிய தெளிவை எட்ட தி.வை. சதாசிவபண்டாரத்தாரின் கருத்தை இணைத்துப் பார்த்தல் தேவையாகிறது. இப்பின்புலத்தின் அடிப்படையில் இக்கருத்து மேலும் ஆராயப்படவேண்டியது அவசியமாகிறது. அம்முறையே “இது புறநானூற்றிலுள்ள 54, 61, 167 முதலான பாடல்களைப் பாடிய மாடலன் மதுரை குமரனாரது நாடாகும். இது பாண்டி மண்டலத்திற்கும் சோழ மண்டலத்திற்கும் நடுவில் அமைந்திருந்த சிறுநாடு. ‘இக்கோனாடு இருபத்து நாற்காத வட்டகையும்’ என்று கூறும் கல்வெட்டொன்றால் இந்நாட்டின் சுற்றளவை ஒருவாறு உணர்ந்துகொள்ளலாம். சோழ மன்னர் ஆட்சிக் காலங்களில் இந்நாடு ‘கடலடையாதிலங்கை கொண்ட சோழவளநாடு’ என்று வழங்கி வந்தது என்பது கல்வெட்டுகளால் புலப்படுகின்றது (P.S.Ins.169 and 185) இந்நாட்டில் ஒல்லையூர்க் கூற்றம், அண்ணல்வாயில் கூற்றம், உறத்தூர்க் கூற்றம், கூடலூர் நாடு என்ற உள்நாடுகள் இருந்தன என்று சில கல்வெட்டுகள் உணர்த்துகின்றன (P.S.Ins.301,342,358,382). கொடும்பாளூர் என்பது இந்நாட்டின் தலைநகரமாகும். புதுக்கோட்டை இராச்சியத்திலுள்ள திருமெய்யம் குலத்தூர்த் தாலுக்காக்களில் இக்கோனாடு இருத்தல் அறியத்தக்கது” (தி.வை. சதாசிவபண்டாரத்தார்; 1977; ப.113) இக்கூற்று சோழவளநாட்டிலுள்ள கோனாடு என்பதையும், தற்பொழுது புதுக்கோட்டை அவ்வாறு அழைக்கப்பட்டது என்பதையும் புலப்படுத்துகிறது. ஔவை

சு.துரைசாமிப்பிள்ளையும், தி.வை.சதாசிவ பண்டாரத்தாரும் புதுக்கோட்டை மாவட்டக் கல்வெட்டையே மேற்கோள் காட்டியுள்ளனர். இருப்பினும், ஔவை சு.துரைசாமிப்பிள்ளை இரட்டபாடி என்றும் தி.வை.சதாசிவபண்டாரத்தார் இராச்சிய என்றும் கூறுவது சற்று முரணான கருத்தாகத் தோன்றுகிறது.

## திரு தரும் பொருள்

திரு என்ற சொல் தமிழியல் புலத்தில் பெரும் ஆதிக்கம் செலுத்தி வருகின்றன. ஒவ்வொரு நற்செயலுக்கும் 'திரு' என்ற அடைமொழியைப் போட்டு எழுதுவது என்பது வழக்கமாக உள்ளது. ஊர்ப் பெயர், மனிதர்கள் பெயர் என எல்லா இடங்களிலும் 'திரு' என்ற சொல்லாட்சி புழக்கத்தில் இருந்து வருகிறது. இரா.பி. சேதுப்பிள்ளையின் கூற்றின் வாயிலாக இச்சொல்லாட்சிக்கான களத்தை அடையாளம் காண்போம். அம்முறையே, "தமிழ் நாட்டில் தெய்வ நலம் பெற்ற ஊர்கள் பெரும்பாலும் திரு என்னும் அடைபெற்று வழங்கும். ஆயினும், சில ஊர்ப் பெயர்களில் உள்ள திரு, இப்போது உருக்குலைந்திருக்கின்றது. சோழ நாட்டுத் திருவழுந்தூர் தேரழுந்தூர் ஆயிற்று. தேவாரம் பெற்ற திருத்தினைநகர், தீர்த்த நகரி எனத் திரிந்தது. திருநெய்த்தானம் என்னும் பழம் பதியின் பெயர் தில்லைத் தானம் என வழங்குகின்றது. இங்ஙனம் சிதைவுற்ற திருப்பெயர்கள் பலவாகும்" (இரா.பி. சேதுப்பிள்ளை; 2009; ப.211). இக்கூற்று திரு என்ற பெயர்களைப் பெரும் ஊர்கள் பெரும்பாலும் தெய்வநலம் பெற்ற ஊர்கள் என்பதை அறிவுறுத்துகின்றன. 'திரு' என்ற அடையாளம் கொண்ட பெயர்களும் தற்காலச் சூழலில் மருவி வருவதான திருவழுந்தூர், தேரழுந்தூர் என்று மாறி நிற்பதையும் உணர முடிகிறது. ஆனால், இரா.பி. சேதுப்பிள்ளை தரும் கூற்று ஊர்ப்பெயர்களுக்கு மட்டுமே பொருந்துவதாக உள்ளது. எடுத்துக்காட்டாகத் திருநின்றவூர், திருவெற்றியூர், திருவாதவூர் என்று பல ஊர்ப் பெயர்களை அடையாளப்படுத்தலாம்.

## கிழவன் - கிழான் பொருள் புலப்பாடு

கிழவன் கிழான் என்பது இரண்டு பெயர்களும் ஒன்றானதா என்ற வினாவுடன் விவாதிக்கத் தொடங்குவோம். கிழவன் என்பது தலைவன், உரிமை உடையவன் என்ற பொருளைத் தருவதாகக் கொள்ளலாம். ஆனால், கிழான், கிழார் என்ற பெயர்கள் ஒரு இனத்தை அடையாளப்படுத்துவதாகவே கருதலாம். இருப்பினும் கிழவன், கிழான் என்ற பெயர்கள் ஒரு காலத்தில் ஒரே பொருளைத் தந்ததாகவும் அதுவே பிறகாலச் சூழலில் தனித்துப் பொருள் தருவதையும் அறியமுடிகிறது. அம்முறையே, "கிழவன் என்று உரிமையாக வுடையவன் என்பது பட நின்றது. இக்கிழமை பெற்றவர் கிழான் என்றும் கிழாரென்றும் கூறப்படுவர். இது வேந்தரால் நல்கப்படும் சிறப்பெனவும், இதனைப்

பெறற்கண் அந்தணர் முதல் அனைவரும் உரியரெனவும் உணர்தல் வேண்டும். உப்பூரிகுடி கிழான் உருத்திரசன்மன் (இ.அ.உரை) என வருவதும், இடைக்காலத்தே எட்டி சாத்தன் என்பான் இருஞ்சேர நாட்டுக் கடற்குடி, 'குளத்தூர், துழாயூர், இருப்பைக் குடி, வெளியங்குடி, ஆலங்குடி என்ற வூர்கட்குரியனாய் இருப்பைக்குடி கிழான் என்று வேந்தனால் சிறப்பிக்கப் பெற்றான் (A.R.No.334 of 1929-30 and A.R.for7p. 73-4) என வருவதும் போதிய சான்று பகருகின்றன" (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2008; பக்.589-590). இக்கூற்று கிழான் பற்றிய தெளிவை உணர்த்துகிறது. பல ஊர்கள் 'குடி' என்ற பெயரைக் கொண்டே முடிவதைக் கவனிக்க முடிகிறது. பெயர்களுக்குப் பின்னொட்டாக வரும் இக்குடி என்ற சொல்லாட்சி எதனை உணர்த்துகிறது. 'குடி' என்ற பெயர் எப்பொருண்மையில் இயங்குகிறது. குடி மக்கள் வாழ்ந்த பகுதி என்பதால் இப்பெயர் பெற்றதா இல்லை குடி என்பது ஒரு இனத்தைக் குறிக்கிறதா என்ற வினா நம்முன் எழுவதைத் தவிர்ப்பதற்கில்லை. இத்தகைய வினாக்களை ஆராய ஊர்ப் பெயர்களை முன்னெடுக்கலாம். எடுத்துக்காட்டாகச் சில ஊர்ப் பெயர்களை ஆராய்வோம். இருப்பைக்குடி, வெளியங்குடி, இருப்பைக்குடி கிழார் என்ற பெயர்களைக் கவனித்தால் குடிமக்கள் வாழ்ந்த பகுதி என்பதை உணர்த்துகின்றன. அப்பகுதியில் வாழ்ந்த ஒரு கிழான்/கிழார் என்ற குடிமரபை குறிப்பதாகவே கருதலாம். மக்கள் வாழும் சூழலைத் தருகின்ற இடத்தை அடையாளப்படுத்த இத்தகைய 'குடி' என்ற பெயர்கள் ஊருக்குப் பின்னொட்டாக அமைந்துள்ளன என்பதைக் கணிக்கலாம்.

## பிடவூர் பெயராய்வு

பிடவூர் என்பது ஊர்ப்பெயர் அடையாளமாக மட்டும் கொள்ளாமல் பிடவூரான், பிடவூர்வேள் என்று மனிதர்களையும் இப்பெயர்கள் அடையாளப்படுத்துவதுண்டு. பிடவூர் என்பது இரண்டு பெரும் ஊர்களை அடையாளப்படுத்தி வந்துள்ளது என்பதைப் பின்வரும் கூற்றின் வாயிலாக அறியலாம். அம்முறையே, "பிடவூர் எனப் பெயரியதோரூர் தொண்டை நாட்டிலும் உண்மையின், அதனின் வேறுபடுத்துதற்கு இதனைச் சோழநாட்டுப் பிடவூர் என்று பண்டையோர் குறித்துள்ளனர்." தொண்டைநாட்டுப் பிடவூர், "மணவிற் கோட்டத்துப் புரிசைநாட்டுப் பிடவூர்"(A.R.No.68 of 1923) என்றும் சோழநாட்டுப் பிடவூர், "பிடவூர் நாட்டுப் பிடவூர்" (A.R.No.139 of 1930-31) என்றும் கல்வெட்டுகளிற் காணப்படுகின்றன. இப்பிடவூர்க்குரியராய் வாழ்ந்த வேளாண் மக்களின் குடி முதல்வன் பிடவூர் கிழானாவன். இவனும் இவனைச் சேர்ந்தோரும் அந்நாளில் வேந்தர்க்கு மண்டிலமாக்களும் தண்டத் தலைவருமாய்த் துணைபுரிந்தனர். மூவேந்தர்க்கு மகட்கொடை நேரும் சிறப்பும் இவர்கட்கு உண்டு. இவர்கள்

வேளிரெனப்படுதலுமுண்டு. பிடவூர் வேளிர் குடி வழிவழியாக வந்து இடைக்காலத்தும் சிறந்திருந்தது. கல்வெட்டுகளுள் ”பிடவூர் நாட்டுப்பிடவூர் வேள்” என்பானொருவன் (A.R.No.139 of 1930-31) காணப்படுவதே இதற்குச் சான்று பகருகின்றது” (மேலது; ப.590). இக்கூற்று பிடவூர் என்பது இரண்டு ஊர்ப் பெயர்களைத் தாங்கி இருந்துள்ளது என்பதைத் தெளிவுபடுத்துகிறது. ஆனால், இவ்விரு பிடவூரிலும் வேளாண்தொழில் செய்யும் வேளான் குடி மக்கள் வாழ்ந்துள்ளனர் என்பதையும் உணர்த்துகிறது. வேளான் குடி என்பதாலும் இவர்கள் நிலத்தின் உரிமையாளர்கள் (கிழார்) என்பது அப்பட்டமாகிறது. இவ்வேளான் குடி மக்கள் மன்னனைச் சார்ந்து வாழ்ந்த கிழார்கள் என்பது புலனாகிறது. இவ்விரு ஊர்ப்பெயர்களையும் வேறுபடுத்த இரண்டு கல்வெட்டுத் தரவினை முன்வைத்து, இவ்விரு ஊர்களும் வேறானது என்பதை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உறுதிசெய்கிறார். இலக்கியம் காட்டும் தரவுகளைக் கல்வெட்டுத் தரவுகளுடன் இணைத்து ஆராய்ந்து உறுதிசெய்யும் திறன ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் தனித்திறன்களில் ஒன்றாகும்.

பிடவூர் பற்றி மேலும் சில தகவல்களை அறிய தி.வை.சதாசிவபண்டாரத்தாரின் கருத்தின் வாயிலாக அறியலாம். திருப்பட்டூர் என்பதே அக்காலப் பிடவூர் என்ற கருத்தை ஆராய முற்படலாம். அம்முறையே, “பிடவூர்; புறம்.395) ‘நெடுங்கை வேண்மாள் அருங்கடிப் பிடவூர்’ (புறம்.395) என்று புறப்பாட்டில் குறிப்பிடப்பெற்ற இவ்வூர், சோழநாட்டு வைப்புத் தலங்களுள் ஒன்று. சேரமான் பெருமாள் நாயனார் பாடிய திருக்கயிலாய ஞானஉலா என்னும் நூல் இவ்வூரில் மாசாத்தனாரால் முதலில் வெளியிடப்பட்டது என்பர் சேக்கிழாரடிகள். திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் முசிறி தாலுகாவிலுள்ள திருப்பட்டூர் என்பது முற்காலத்தில் திருப்பிடவூர் என்ற பெயருடையதாயிருந்தது என்பது இவ்வூர்க் கோயிலிலுள்ள ஒரு கல்வெட்டால் புலப்படுகிறது (Ins.No.591 of 1907-08). எனவே இத்திருப்பட்டூர் சங்க காலத்துப் பிடவூராதல் வேண்டும் என்பது நன்கு துணியப்படும்” (தி.வை.சதாசிவபண்டாரத்தார்; 1977; பக்.117-118). இக்கூற்று பிடவூர் பற்றியான முழுத் தெளிவைக் காட்டுகிறது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையைக் காட்டிலும் தி.வை.சதாசிவபண்டாரத்தாரின் கருத்து இங்கு அழுத்தம் பெறுகிறது என்பது தெளிவாம். திருச்சிராப்பள்ளி தாலுகாவில் உள்ள சமகாலத் திருப்பட்டூரே சங்க காலத்துப் பிடவூர் என்பதை உணர்த்துகிறது. ‘திரு’ என்ற பெயர் அடையாளம், கடவுள் திருத்தளமாக இவ்வூர் விளங்கி உள்ளது என்ற தெளிவையும் புலப்படுத்துகிறது.

## வாட்டாறு – பெயராய்வு

வாட்டாறு என்ற ஊர்ப் பெயர், ஆற்றினை மையமாகக் கொண்டு விளங்கிய பகுதியாக இருக்கலாம். சங்க காலம் தொடங்கிச் சமகாலம் வரை இவ்வூர் என்னவாக மாற்றம் பெற்றுள்ளது என்றும் வரலாற்றுத் தொடர்ச்சியையும் பின் வரும் கூற்றின் வாயிலாக ஆராய முற்படுவோம். அம்முறையே “வாட்டாறு என்று பெயர் தாங்கிய ஊர்கள் சோழநாட்டிலும் தென்பாண்டி நாட்டிலும் உள்ளன. ஒன்று சோழநாட்டுத் தஞ்சை சில்லாவில் பட்டுக்கோட்டைத் தாலுக்காவில் உளது. வாட்டாற்றுக் கோட்டை வாட்டாத்திக் கோட்டையென இப்போது மருவி வழங்குகிறது. ஒரு காலத்தில் இது தன்னைத் தலைமை ஆகக்கொண்டு சூழவுள்ள வூர்கட்கு நாடாக விளங்கிற்று. அப்போது இதன்பெயர் வாட்டாற்று நாடென்பதாம். இதன்கண் திருச்சிற்றேமம் என்ற சீரூர் இருந்தது. இங்குள்ள சிவபெருமானைத் திருஞான சம்பந்தர் இனிய திருப்பதிகம் பாடிப் பரவியுள்ளார். திருச்சிற்றேமாகிய திருச்சிற்றம்பலத்துக் கல்வெட்டொன்று, “இராசராச வளநாட்டுப் புன்றில் கூற்றத்து வாட்டாற்று நாட்டுத் திருச்சிற்றேமம்”(A.R.No.180 of 1926) என்று கூறுதல் காண்க. மற்றொன்று தென் பாண்டி நாட்டில் இப்போது திருவாங்கூர் அரசில் மேலைக் கடற்கரையில் கல்குளம் தாலுகாவில் பறளியாற்றின் கரையில் உள்ள திருவாட்டாறு இதுவும் பழமையான நகரமாகும். (K.P.P.Menon’s History of Kerala P.Vol.iigi.59) இப்பகுதி பண்டை நாளில் வேளிர்களின் ஆட்சியில் இருந்திருக்கிறது” (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; 2008; பக்.597-598). இக்கூற்று வாட்டாறு என்பது இரு பிரிவுகளாக இருந்துள்ளது என்பதைத் தெளிவுபடுத்துகிறது. இவ்வூர் கடற்கரையைச் சார்ந்த பகுதியாகவும் இருந்துள்ளதால் இப்பெயர் பெற்றிருக்கலாம் என்ற தெளிவையும் எட்டலாம். வாட்டாற்றுக் கோட்டை என்பது வாட்டத்திக் கோட்டை எனக் காலப் போக்கில் மருவி வந்துள்ளதையும் உணர்த்துகிறது. இத்தகைய பழமையான நகரங்களை ஊர்ப் பெயர் தொடர்ச்சியின் மூலமாகவும் அதே போன்று தற்கால மாறுதல்களுடன் இருப்பதையும் இத்தகைய உரை ஆய்வுகள் மூலம் அறியலாம். ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை மேற்கோள்கள் பெரும்பாலானவை சைவச்சார்பாகவே இருப்பதையும் அறியமுடிகிறது. இத்தகைய உரை வெளிப்பாடுகள் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சுயசார்புத் தன்மையைப் புரிந்துகொள்ளும் வாய்ப்பை ஏற்படுத்துகின்றது.

## எருக்காட்டூர்

எருக்காட்டூர் என்னும் ஊர் சங்க காலம் தொடங்கி இன்றுவரை அதே பெயராலே அழைக்கப்படும் ஊர் என்ற சிறப்பைப் பெற்ற ஊராகும். பல புலவர்கள் இவ்வூரைப் பற்றியும் பாடியுள்ளனர். எருக்காட்டூர் பற்றி ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தரும்

விளக்கங்களை ஆராய எத்தனிப்போம். அம்முறையே, “எருக்காட்டூர் சோழ நாட்டுத் தஞ்சை சில்லாவில் நன்னிலந்தாலுகாவில் உளது. குளிக்கரை புகை வண்டி நிலையத்துக்கு மேற்கில் இவ்வூர் இன்றும் இருந்து வருகிறது. அதனைச் சார இருந்த மணற்குன்று என்னுமூரை எருக்காட்டூர்ச் சேரிக்குப் பிடாகையான எனத் திருக்கடவூர்க் கல்வெட்டுகள் (A.R.No.32 and 38 of 1906) கூறுகின்றன” (மேலது; ப.604). இக்கூற்று எருக்காட்டூர் பற்றியான இருத்தலைத் தெளிவுபடுத்துகிறது. காலமாற்றம், மொழிமாற்றம் இத்தகைய அனைத்துச் சமூக மாற்றங்களையும் கடந்து எருக்காட்டூர் மட்டும் மருவாமல் இருப்பது வரலாற்றுத் தொன்மைகளுக்கான நற்சான்றாகும். இலக்கியத் தரவுகளும், கல்வெட்டுத் தரவுகளும் இவ்வூரை இருப்பதை இருப்பதாகவே காட்டுகின்றன. இத்தகைய உரை வெளிப்பாடுகள் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை ஆளுமையைப் புலப்படுத்துகின்றன.

### சேரமான் வஞ்சன்

சேர வேந்தர்களில் வஞ்சன் என்பவன் ஒருவராவார். பழங்கால ஊர்ப் பெயர்கள், புலவர் பெயர்கள், வேந்தர் பெயர்கள் என எல்லாமே காலச் சூழலால் மருவி வருவதை வரலாறு நமக்குக் காட்டி நிற்கிறது. இருப்பினும் வேந்தன் பெயர் மாற்றத்தால் ஊர், மலைப் பெயர்களிலும் மாற்றம் ஏற்படுவதைப் பின்வரும் கூற்றின்வழி நோக்குவோம். அம்முறையே, “சேரர் குடிக்குரிய முடிவேந்தருள் ஒருவன் சேரமான் வஞ்சன். சேரரது வஞ்சிக்களம் அஞ்சைக் களமென்றானது போலச் சேரமான் வஞ்சன் பெயர் பிற்காலத்தே அஞ்சன் என்றாயிற்று; வஞ்சனது பாயல் நாடு பின்னர் வயனாடென்றாகி இப்போது வைநாடு (Introduction of B.L.R.Pice of Coorg Inscriptions Vol.I.p.3) என வழங்குகிறது. பாயல் மலைப் பகுதியில் வஞ்சனுக்குரிய தாயிருந்த குன்று அஞ்சன் குன்றென்றிருந்து இப்போது அஞ்சுகுன்று என்ற பெயருடன் வைநாடு தாலூகாவில் உளது” (மேலது; ப.610). இக்கூற்று வஞ்சன் பெயர் மாற்றத்தினையும், பாயல்நாட்டு மாற்றத்தினையும் புலப்படுத்துகிறது. வஞ்சன் பெயர் அஞ்சன் என்றானதும், பாயல் நாடு வயனாடானதும், இறுதியாக வைநாடு என்று மருவியதையும் இவ்வுரை நமக்குத் தெளிவுப்படுத்துகிறது. இத்தகைய பெயர் மாற்றத்தினை உரையாசிரியர் கல்வெட்டுத் துணைகொண்டு விளங்குவது பொருத்தமாக உள்ளது. இலக்கணத் தன்மைகளான ப, வ எனத் திரிவதையும் இங்குப் பொருத்திப் பார்ப்பது பொருந்துவதாகவே அமைகிறது.

பிற்காலச் சூழலில் வஞ்சன் என்ற பெயர் அஞ்சன் என்றானது போல, அஞ்சன் வாழ்ந்த மாளிகை அஞ்சனன் மாளிகையைக் குறிப்பதைக் கொள்ளலாம். மேலும், அஞ்சன் என்பது அஞ்சனகிரி என்றாகி, பிறகே அஞ்சனகிரி மாளிகை என்று அடையாளப்படுத்தப்பட்ட வரலாற்றைப் பின்வரும் கூற்றின் வாயிலாக ஆராயத்

தொடங்குவோம். அம்முறையே, "அவன் பெயரே பெற்ற அஞ்சன் குன்று என்னும் நகர் போலும், குடகு நாட்டுக் கல்வெட்டொன்று "அஞ்சனகிரி மாளிகை" (Coorg: Ins.Co.10) என்று ஒன்றைக் குறிக்கின்றது. சென்ற நூற்றாண்டு இறுதிகாறும் பாயல் நாடாகிய வயனாடு (Whynad Taluka) குடகு நாட்டோடே சேர்ந்திருந்ததென அந்நாட்டு வரலாறு கூறுகிறது. (Malabar series – whynad: p.5) இப்போதுள்ள நீலகிரி சில்லாவும் வயனாட்டோடு சேர்ந்திருந்து கி.பி. 1887இல்தான் பிரிந்தது. இது நீலகிரியெனப் படுவதும் இடைக்காலக் கல்வெட்டு அஞ்சனகிரி யென்றும் நோக்கின், இந்நீலகிரி ஒரு காலத்தில் சேரமான் வஞ்சனுக்கு உரியதாயிருந்தது. பெரும்பெயர் மூதூர் எனச் சிறப்பிக்கப்பெற்றமை தெரிகிறது"(மேலது; பக்.614-15). இக்கூற்று அஞ்சனகிரி பற்றிய வரலாற்றுத் தெளிவை ஏற்படுத்துகிறது. மேலும், அதே தருணம் பெரும் வரலாற்று நிகழ்வான நீலகிரி எப்பொழுது பிரிக்கப்பட்டது என்பதையும் இவ்வுரை தெளிவுப்படுத்துகிறது. மேலும், அஞ்சனகிரி என்பதே நீலகிரி என்று மாறியிருக்கலாம் என்பதும் தெளிவாகிறது.

## தொகுப்புரை

- ‘காப்பியம்’, ‘காப்பியனார்’ என்ற பெயர் புலவர்களைக் குறிக்கும் பொதுப்பெயராக இருந்திருக்குமோ என்ற எண்ணத் தோன்றுகிறது. ‘காப்பியனார்’ என்ற பெயர் புழக்கத்தில் இருந்ததால் பெயருக்கு முன்னால் பழமையைச் சேர்க்க ‘தொல்’ என்பதைச் சேர்த்து தொல்காப்பியனார், தொல்காப்பியம் என்று வழங்கியிருக்கலாம்.
- நன்னன் வசம் இருந்த ‘பெருந்துறைப்’ பகுதி இப்பொழுதும் அதே பெயரில் ஈரோட்டுக்கருகில் ‘பெருந்துறை’ என்ற பெயராலேயே அழைக்கப்படுகின்றன.
- புலவர் மரபில் சமூகத்தகுதி ஒன்றாக இருந்தாலும் கிழார் புலவர்கள் நிலவுடைமையாளராக வாழ்ந்துள்ளனர் என்பது திண்ணம்.
- சாதி, மதத்திற்கான தொன்மக் கதைளையும் இச்சமூகம் உருவாக்கிக்கொள்கிறது. சாதிய சமூகத்திற்கான தொன்மக் கதைகள் என்பவை வரலாற்றை அடியொற்றியே அமைத்துக் கொள்கின்றனர். அதேபோன்று ஒவ்வொரு சாதியும் தங்களைத் தொன்மக் குடிகள் என்று அடையாளப்படுத்தவே முயல்கின்றனர் என்பதை வரலாறு நமக்குக் காட்டுகிறது.
- ஆலந்தூர் என்பது ஆனந்தூர் என்று திரிந்து இருக்கவும் வாய்ப்புள்ளன. ஆனந்தூர் என்ற பெயரில் அமைந்த ஊர் கிருஷ்ணகிரி மாவட்டத்தில் சமகாலத்தில் புழங்கி வருவதை அறிய முடிகிறது.
- சங்க காலச் செங்கைமாவே சமகாலத்தில் ‘செங்கம்’ என்று அழைக்கப்படுவதை உணரலாம்.
- சமகாலத்தில் பாழி என்ற ஊர்கள் பல இடங்களில் முன், பின் அடைகளாகவும், தனியாகவும் இருப்பதை அறியமுடிகிறது. பழங்காலப் பாழி தற்காலத்தில் ‘அரித்துவார மங்கலம்’ என்று அழைக்கப்படுவதைக் கல்வெட்டுத் தரவுகள் உறுதி செய்கின்றன.

தமிழ் மொழியில் இலக்கண ஒப்பீடு வளர்ந்துள்ள அளவு இலக்கிய ஒப்பீடு வளராமைக்குக் காரணம் விளங்கவில்லை. ஒப்பீடு என்பது ஒரு படைப்பின் அல்லது ஒரு படைப்பாளனின் தனித்திறனை வெளிப்படுத்துவதாகும். தன்மை, தனித்திறன் போன்றவற்றைக் கண்டறிய இத்தகைய ஒப்பாய்வுத் திறனாய்வு முறையே பயன்படுகிறது.

ஒப்பாய்வு என்பது தமிழியல் மரபுக்குப் புதிது அன்று. தொல்காப்பியர் காலந்தொட்டே இம்மரபு இருந்துள்ளதாகத் தமிழண்ணல் கூறுவது பொருத்தமாகும். அம்முறையே, "தமிழில் ஆங்கிலத்தைப் பின்பற்றி இத்தொடர், வழக்காற்றுக்கு வந்துள்ளது. பன்மொழி அறிஞர் ஞா. தேவநேயப் பாவாணர் முதன்முதலில் 'ஒப்பியன் மொழிநூல்' என்ற ஒப்பீட்டு மொழி நூலை (philology) வெளியிட்டார். டாக்டர் க.கைலாசபதி 'ஒப்பியல் இலக்கியம்' என்ற தலைப்பில் நூல் ஒன்றினை வெளியிட்டு அதன்கண் அடிப்படைக் கோட்பாடுகளை முதன்முதலாகத் தமிழ் உலகிற்கு அறிமுகப்படுத்தியுள்ளார்" (தமிழண்ணல்; 1973; ப.51). இக்கூற்று தமிழில் பிற்காலச் சூழலில் இந்த ஒப்பாய்வு முறை பெரும் துறையாக வளர்ந்துள்ளதை உணர்த்துகிறது. இச்சொல்லாட்சி மட்டும் தமிழுக்குப் புதிதே தவிர, ஒப்பீடு முறையிலான ஆய்வுமுறைகள் தொல்காப்பியர் முதற்கொண்டு உரையாசிரியர்கள் பலர் மேற்கொண்டிருந்தனர் என்பதைத் தமிழண்ணல் கூற்றின் வாயிலாகப் புரிந்துகொள்ள முடிகிறது.

தமிழியல் புலத்தின் ஒப்பீட்டாய்வு முறையில் இலக்கணம் வளர்ந்த அளவு இலக்கியம் வளரவில்லை என்பது திண்ணம். இக்கருத்தைத் தமிழண்ணல் கூற்றின் வாயிலாக நோக்குவோம். அம்முறையே, "திராவிட மொழிக் குடும்பத்தின் உறவு நிலைகளை ஒப்பிட்டுக் காட்ட ஒரு கால்டுவெல் வாய்த்தார். திராவிட மொழிகளின் அடிச்சொல் அகரவரிசை ஒன்றைத் தொகுக்க மொழியறிஞர்கள் எமனோவும் பரோவும் கிடைத்தனர். திராவிட மொழிகளின் 'ஒப்பிலக்கணம்' இங்ஙனம் வளர்ந்தது போல இம்மொழிகளின் 'ஒப்பிலக்கியம்' வளராதது தவக்குறையேயாகும்" (மேலது; ப.35). இக்கூற்று தமிழில் ஒப்பிலக்கிய வளர்ச்சி தேவை என்பதைப் புலப்படுத்துகிறது. இத்தகைய கூற்றிற்கு இணங்க இந்த ஆய்வு இலக்கிய ஒப்பாய்வைக் கவனத்தில் கொள்கிறது. மேலும், ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரையின் தனித்திறன், பொதுத்தன்மை போன்றவற்றையும் இந்த ஆய்வு ஆராய முற்படுகிறது.

ஒப்பிலக்கியம் சார்ந்த ஆய்வுகள் தமிழில் குறைந்து இருந்தாலும், தமிழியல் ஆய்வுப் புலத்தில் ஆய்வாளர்கள் மத்தியில் ஒப்பிலக்கியப் பாடத்தைத் தமிழண்ணலே முதலில் தொடங்கியுள்ளார் என்பதைப் பின்வரும் கூற்றின் வழி அறியலாம். அம்முறையே, "ஒப்பிலக்கியத்துறை வங்காள மாநிலத்தில் கோல்கத்தா அருகே ஒரே ஒரு

பல்கலைக்கழகத்தில் தான் முகிழ்த்திருந்தது. மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம் தோன்றியதும் அதன் முதன்மைத் துணைவேந்தர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், தமிழ்த்துறையில்தான் முதன்முதலில் 'ஒப்பிலக்கியம்' எனும் ஒரு பாடத்தை, முதுகலைப் பாடத்தில் சேர்த்தார். அத்தொடக்கக் காலத்தில் அங்குப் பணி செய்ய அமர்த்தப்பட்ட எனக்கு (தமிழண்ணல்) உட்புகுந்த முதல்நாளே 'ஒப்பிலக்கியப் பாடம்' நடத்துமாறு ஒப்பிவிக்கப்பட்டது" (தமிழண்ணல்; நூன்முகம்; 2007). இக்கூற்று தமிழண்ணல் வழியாகத் தமிழியல் ஆய்வுப்புலம் ஒப்பிலக்கியத்தை அறியத் தொடங்கியது என்பதைப் புலப்படுத்துகிறது. ஒப்பிலக்கியம் என்பது தொடக்கத்தில் ஒரு முறையாகவும் பின்னர் ஒரு துறையாகவும் வளர்ச்சி பெற்றுள்ளதை அறியமுடிகிறது.

இந்த ஆய்வானது ஒரே உரைப் பனுவலை எடுத்து இரண்டு உரையாசிரியர்களின் உரைகளை ஒப்பாய்ந்து தனித்திறன், பொதுத்திறன், வேறுபாடு, சிறப்பு போன்றவற்றை அடையாளம் காணும் முகமாகவே இந்த ஆய்வு நகர முனைகிறது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சங்க இலக்கிய உரைப் பனுவல்களான நற்றிணை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய இலக்கிய உரைகளுக்கு முறையே பின்னத்தூர் நாராயணசாமி, பொ.வே. சோமசுந்தரனார், புலியூர்க் கேசிகன், கு.வெ.பாலசுப்பிரமணியன் போன்றோரின் உரைகள் ஒப்பாராயப்படுகின்றன. நான்கு உரையாசிரியர்களின் உரைகளையும், பதிப்பு நோக்கிலும், சமகால உரைத்தன்மை நோக்கிலும் ஒப்பாராயப்படும். ஆய்வு எல்லை கருதி ஒரு பனுவலுக்கு ஒரு பாடல் வீதம் ஒப்பாராய முனையலாம்.

## நற்றிணை உரை ஒப்பாய்வு

ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் நற்றிணை உரையுடன் சமகால உரையாசிரியரான பின்னத்தூர் நாராயணசாமியின் உரை ஒப்பராயப்படுகின்றன. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரைகள் வெளிப்படுத்தும் கல்வெட்டுத் தரவின் வாயிலாகப் பாடல் உரையே ஒப்பாராய்தல் முன்வைக்கப்படுகிறது. இம்முறையே, நற்றிணையின் கபிலர் பாடிய முதல் பாடல் ஒப்பாராய எடுத்துக்கொள்ளப்படுகிறது.

பின்னத்தூர் நாராயணசாமியின் நற்றிணை உரை ஒரே பாகமாகவும், ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் நற்றிணை உரை இரண்டு பாகமாகவும் பகுக்கப்பட்டுள்ளது. நாராயணசாமியின் நற்றிணை உரை 492 பக்கங்களைக் கொண்டுள்ளது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் நற்றிணை உரை முதற் பாகம் – 928 பக்கங்களையும், இரண்டாம் பாகம் - 874 பக்கங்களையும் கொண்டுள்ளது. நாராயணசாமியின் உரை விளக்கம் போதுமானதாக இல்லை எனலாம். அதே போன்று ஔவை

சு.துரைசாமிப்பிள்ளையின் நீண்ட உரை விளக்கம் சற்று பொருள் தோய்வை ஏற்படுத்துவதாகக் கொள்ளலாம். ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் நற்றிணை உரையைப் பூம்புகார் பதிப்பகமும், பின்னத்தூர் நாராயணசாமி நற்றிணை உரையைக் கழக வெளியீட்டின் பதிப்பும் ஆராய்தலுக்கு எடுத்துக்கொள்ளப்படுகின்றன.

'நின்ற சொல்லர் நீடுதோன் றினியர்' என்ற பாடலுக்கு உரை எழுதும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தன் விளக்கத்தை 9 பக்க அளவில் விளக்குகிறார். ஆனால், பின்னத்தூர் நாராயணசாமி 2 பக்க அளவில் மட்டுமே உரைவிளக்கம் அமைத்துள்ளார்.

பொதுத்திறன்: இரு உரைகளும் தொல்காப்பியம், திருக்குறள், உரையாசிரியர்களின் கருத்துக்களையும் மேற்கோள்களாக எடுத்துக்காட்டுகின்றனர்.

வேறுபாடு : நாராயணசாமியின் உரை பாடிய புலர் பற்றிய தரவுகள் எதுவும் கொடுக்கப்படவில்லை. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை புலவர் வரலாற்றுடன், புலவர் வாழ்ந்த இடத்தையும் விளக்குகிறார்.

சிறப்பு : புலவர் பற்றிய வரலாற்றுப் புரிதலுடன், சங்கப் பாடலை விளக்க முற்படுவது சிறப்பு. மேலும், Ideal man, Ideal woman, Ideal friends என்ற ஆங்கிலக் கருத்தும் கூடுதல் வலுவூட்டுகிறது.

தனித்திறன் : சங்க ஊர்ப் பெயரின் நீட்சியைப் புரிந்துகொள்ள முடிகிறது. ஊர்ப்பெயர்கள் புனைவுகள் அல்ல. சமகாலத்தில் புழக்கத்தில் இருப்பதை வெளிக்காட்டக் கல்வெட்டுத் (A.R.No.30 of 1916) தரவினைப் பயன்படுத்துவது ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரையின் தனிச்சிறப்பாகும்.

சார்பு : ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை திருக்கோவையை மேற்கொள் காட்டுவதின் வாயிலாகச் சைவச் சார்புத் தன்மை வெளிப்படுகிறது.

## ஐங்குறுநூறு உரை – ஒப்பாய்வு

ஓரம்போகியார் பாடிய மருதத்திணைப் பாடலே முதல் திணைப் பாடலாக அமைந்துள்ளது. மருதத்திணை விளக்கம் தொடங்கி, வேட்கைப்பத்து முதற்பாடல் உரைவிளக்கம் முடிய ஆறு பக்க விளக்கத்தைப் பொ.வே. சோமசுந்தரனார் உரை வெளிப்படுத்துகிறது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை மருதத்திணை விளக்கம் தொடங்கி வேட்கைப்பத்து முதற் பாடல் உரை விளக்கம் முடிய எட்டு பக்க விளக்கத்தை

முன்வைக்கிறது. ‘வாழி ஆதன் வாழி அவினி’ என்ற பாடல் உரையே இங்கு ஆராயப்படுகிறது.

பொ.வே. சோமசுந்தரனாரின் உரை கழக வெளியீட்டு பதிப்பாகவும், ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை செவ்விலக்கியக் கருவூலம், தமிழமண் அறக்கட்டளைப் பதிப்புகள் ஒப்பாய்வுக்கு அடிப்படையாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன. கழக வெளியீடு ஐங்குறுநூற்றின் உரைப் பனுவல் 781 பக்கங்களைக் கொண்ட ஒரு தொகுதியாகவும், செவ்விலக்கியக் கருவூலம், தமிழ்மண் அறக்கட்டளைப் பதிப்பு இரு தொகுதிகளாக முதல் தொகுதி 454 பக்கங்களையும், இரண்டாம் தொகுதி 510 பக்கங்களையும் கொண்டுள்ளது.

பொதுத்திறன்: இரு உரைகளும் மருதத் திணை பற்றிய விளக்கம் கூறுகின்றன. ஊர் பெயர் முறையிலும் இரு உரைகளும் ஒத்துப்போகின்றன. இரு உரைகளும் பழைய உரைகளையும் முன்னிலைப்படுத்துகின்றன.

தனித்திறன்: ஆதன், அவினி என்ற ஊர்ப்பெயரால் அவினியாறு வெட்டப்பட்டதைக் கல்வெட்டு (A.R.No.96 of 1906)தரவுடன் இவ்வூர்ப் பெயரை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை உறுதி செய்வது, இவ்வுரையின் தனித்திறனாகும்.

மேற்கோள்: பொ.வே. சோமசுந்தரனார் திருக்குறள், குறிஞ்சிக்கலி, சிலப்பதிகாரம், மணிமேகலை, தொல்பொருள் முதலிய மேற்கோள்களைப் பயன்படுத்தியுள்ளார். ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை தொல் – பொருள், சொல், அகநானூறு, புறநானூறு, சிலப்பதிகாரம், கலித்தொகை, முதலிய மேற்கோள்களை முன்வைத்துள்ளார்.

## பதிற்றுப்பத்து உரை ஒப்பாய்வு

பதிற்றுப்பத்தின் மூன்றாம் பத்தின் ‘அடுநெய் யாவுதி’ என்ற பாடல் உரை ஆராயப்படுகிறது. இப்பாடலைப் பாலைக் கௌதமனார் பாடியுள்ளார். புலியூர்க் கேசிகனாரின் பாரிநிலைய வெளியீடான பதிற்றுப்பத்து 336 பக்கங்களைக் கொண்டுள்ளது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கழக வெளியீடு பதிற்றுப்பத்திற்கு 488 பக்க அளவில் உரை விளக்கம் அமைந்துள்ளது. புலியூர்க்கேசிகனார் உரை இப்பாடலுக்கு ஆறுபக்க அளவில் உரைக்கிறது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் கழக வெளியீட்டில் இப்பாடலுக்குப் பத்துப் பக்க அளவில் உரை அமைந்திருக்கிறது.

பொதுத்திறன்: துறை, வண்ணம், தூக்கு, பெயர் என்னும் முறையே இரு உரைகளும் ஒத்துப்போகின்றன. புலவர் பார்ப்பனர் என்பது இரு உரைகளின் ஒத்த கருத்தாகும்.

வேறுபாடு: 1. பாடல் முழுவதும் ஒரே இடத்தில் கொடுத்து, பின்னர்த் தெளிவுரை என்ற நோக்கில் பொதுவான விளக்கங்களைச் சொல்லிச் செல்கிறது புலியூர்க்கேசிகனார் உரை. பாடல்களைச் சிறிது சிறிதாகப் பிரித்துப்பிரித்துப் பொருள் விளக்கம் ஏற்படுத்துகிறது ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை.

2. புலியூர்க்கேசிகனார் உரை பாடிய புலவர் பெயர் விளக்கங்களைக் குறைந்தளவு உரைகளுக்குப் பின்னர்க் கொடுக்கப்பட்டுள்ளது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை பாடிய புலவர் வரலாற்றை முன்னரே கொடுத்துள்ளார். புலவர் பெயர் புரிதலுடன் பாடல் சார்ந்த பின்புலத்தைப் புரிந்துகொள்வதில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை முன்னிலைப்படுகிறது.

3. புலியூர்க்கேசிகனார் இப்புலவர் பெயரைப் பாலைக் கோதமனார் என்று பதிவு செய்துள்ளார். ஔவை சு.துரைசாமிப்பிள்ளை இப்புலவரை இரா.இராகவையங்காரின்வழி நின்று ஆராய்ந்து பாலைக் கௌதமனார் என்று குறிக்கிறார்.

தனித்திறன்: புலியூர்க் கேசிகனார் உரை 'பாகுடி' என்ற சொல்லுக்கான விளக்கங்களை ஆராய முற்படவில்லை. ஆனால், ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை 'பாகுடி' என்பது மக்கள் செலுத்திய வரி வகை என்பதை விக்கிரமச் சிங்கபுரக் கல்வெட்டால் (A.R.No.297of 1916) உணர்த்துகிறது. இத்தகைய வரலாற்றைத் தெளிவாக ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை கொடுப்பதே இதன் தனிச்சிறப்பாகும்.

மேற்கோள்: புலியூர்க்கேசிகனார் உரை மேற்கோள்கள் எதுவும் கொடுக்கப்படவில்லை. பாடல்களுக்கான விளக்கங்களை மட்டுமே விளக்கிச் செல்கிறது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை கலித்தொகை, திருக்குறள், பதிற்றுப்பத்து, சீவகசிந்தாமணி, நான்மணிக்கடிகை, அகநானூறு, குறுந்தொகை, திருவாசகம், தொல் – பொருள் முதலிய மேற்கோள்களைச் சுட்டி, பாடல்

பொருண்மைகளை வலுவூட்டம் செய்வது ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் தனிச்சிறப்பாகும்.

## புறநானூறு உரை ஒப்பாய்வு

புறநானூற்றின் 'நிலமிசை அலமரல் தீர' என்ற பாடல் உரையே இங்கு ஆராயப்படுகிறது. இப்பாடலைத் தாமற்பல் கண்ணனார் என்ற புலவர் பாடியுள்ளார். ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் 'புறநானூற்றின் உரை', செவ்விலக்கியக் கருவூலம், தமிழ்மண் அறக்கட்டளைப் பதிப்புகள் இரண்டு தொகுதிகளை உள்ளடக்கியுள்ளது. முதல் தொகுதி 568 பக்க அளவிலும், இரண்டாம் தொகுதி 629 பக்கங்களையும் கொண்டுள்ளது. கு.வெ. பாலசுப்பிரமணியன் உரையை நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் வெளியீட்டு உரையே ஆராய்தலுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன. இரு தொகுதிகள் அடங்கிய இப்பனுவல் உரையில், முதல் தொகுதி 487 பக்கங்களையும் இரண்டாம் தொகுதி 927 பக்கங்களையும் கொண்ட உரை பனுவல்களாகத் திகழ்கின்றன.

பொதுத்திறன்: திணை, துறைப் பகுப்பு பொதுவாக இரு உரைகளிலும் அமைந்துள்ளன. இரு உரைகளும் இப்புலவரைப் பார்ப்பனர் எனவே அடையாளப் படுத்துகின்றன. மேலும், இரு உரைகளும் இப்பாடல் விளக்க உரைக்கு மூன்று பக்கங்களை மட்டுமே எடுத்தாண்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

வேறுபாடு: கு.வெ. பாலசுப்பிரமணியனார் உரை இப்புலவரைத் தாமப்பல் கண்ணனார் எனப் பதிவு செய்துள்ளது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை இப்புலவரைத் தாமற்பல் கண்ணார் என்றே உரைக்கிறது.

தனித்திறன்: கு.வெ. பாலசுப்பிரமணியனாரின் உரை இப்புலவரைப்பற்றி எந்தவிதத் தெளிவையும் ஏற்படுத்தவில்லை. ஆனால், ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை ஊர்ப்பெயர் பற்றிய தெளிவைக் கோயில் கல்வெட்டுத் (S.I.I.Vol.V.1004; A.R.139 of 1896) தரவோடு முன்வைக்கிறார். தாமல், தாமர் என்ற ஊர்ப் பெயர்கள் காஞ்சிபுரத்திற்கு மேற்கில் உள்ளதெனச் சமகால ஊர்ப்பெயர் நீட்சியையும் முன்வைக்கிறது. இத்தகைய வரலாற்றுத் தெளிவுகளை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரைகள் காட்டுவதால், இவ்வுரைகள் தனித்திறம் பெற்றவையாக விளங்குகின்றன.

மேற்கோள்கள்: கு.வெ. பாலசுப்பிரமணியனாரின் உரை திருமுருகாற்றுப்படை, புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய பனுவல்களின் மேற்கோள்களை வெளிக்காட்டுகிறது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை தொல்-உரி; திருமுருகாற்றுப்படை ஆகிய பனுவல்களின் மேற்கோள்களை வெளிப்படுத்துகின்றன. மேற்கோள்களின்வழி சங்க இலக்கியத் தரவுகள் மேலும் தெளிவுபெறுகின்றன.

இவ்வாறாக ஒவ்வொரு பனுவலும், ஒவ்வொரு பதிப்பகத்தாரின் வழியாகவும், ஒவ்வொரு பாடல் வீதமாகவும் ஒப்பாராய வழிவகை செய்வதை அறியலாம். இத்தன்மையை அடிப்படையாகக்கொண்டு ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சங்க இலக்கிய உரைப் பனுவல்கள் ஒப்பாராயப்பட்டன.

## உரை ஆளுமையும் தொடரியல் கோட்பாடும்

சொற்றொடர்களின் வாயிலாகத் தொடரியல் ஆய்வைப் பதிற்றுப்பத்துப் பனுவல் ஒன்றிற்கு மட்டும் முன் மாதிரியாகத் தொடரியல் கோட்பாடு அடிப்படையில் ஒப்பாராய முனையலாம்.

உரை மரபு (விளக்கங்கள்) இலக்கண விதிகளுக்கு உட்பட்டதா என்ற வினாவை முன்னிறுத்தியே விடைகளைத்தேட முற்படுவோம். நாவல், சிறுகதை, மரபுக்கவிதை, புதுக்கவிதை, ஏன் நவீனக் கவிதைகள் கூடச் சில விதிமுறைகளைக்கு உட்பட்டே இயங்குகின்றன. ஆனால் உரைகள் விதிகளுக்கு அப்பாற்பட்டது என்ற கருத்தாக்கம் நிலவி வருகிறது. இத்தகைய கருத்தாக்கங்களை உடைத்து, உரைகளும் இலக்கண விதிகளின் அடிப்படையில் இயங்குகிறது என்பதை, இலக்கிய உரைகளின் வாயிலாக வெளிக்காட்டலாம்.

ஒரு பாடலுக்கு உரை எழுதும் இலக்கிய உரையாசிரியர்கள், பாடல் இருக்குமாறே பொருள் விளக்கம் சொல்லிச் செல்லலாம். ஆனால், வரிகளை, சொற்களை ஏன் மாற்றி அமைத்துப் பொருள் கூறுகிறார்கள். உரையாசிரியர்கள் வெறுமனே பொருள் விளக்கம் கூறுவதோடு நில்லாமல், இலக்கண விதிகளைப் பின்பற்றி உரைகளை ஆராய்ந்து எழுதுகின்றனர். இத்தகைய இலக்கிய உரைகளைத் தொடரியல் கோட்பாட்டில் அடக்கலாம்.

## கொள்கை - கோட்பாடு

தமிழ் ஆய்வுப் புலத்தில் கோட்பாடு குறித்தான பலவிதக் கருத்தாக்கங்கள் நிலவி வருகின்றன. இருப்பினும் இங்குக் கா. சிவதம்பியின் கருத்து முன்வைக்கப்படுகிறது.

அம்முறையே, "அறிவு நிலையில் கருத்தாக வைத்திருப்பது 'கொள்கை'. அந்தக் கொள்கையை வரன்முறையான சிந்தனை நெறிக்கமைய வகுத்துக் கொள்ளும் முறையே 'கோட்பாடு'" (கா. சிவதம்பி; 1982; ப.14). இவ்வகையாக அறிவுப் புலம் சார்ந்தும், சிந்தனைப் புலம் சார்ந்தும் கொள்கை, கோட்பாட்டை வரையறை செய்கிறார் ஆசிரியர்.

தமிழியல் சூழலில் இலக்கண, இலக்கியங்களை ஆய்வதைப் போன்றே அவற்றின் உரைகளையும் ஆய்தல் அவசியம். உரைகளைப் பிரதியின் மீது கட்டப்பட்ட மற்றொரு பிரதியாகவே அடையாளம் காணுதல் வேண்டும். இலக்கண, இலக்கியங்களைக் கற்பதில் எளிமை உண்டாக்கும் முகமாகவே உரைகள் எழுந்தன. உரைகளில் கருத்து மாற்றம் நிலவியதால் ஒரு நூலுக்குப் பல உரைகள் தோன்றலாயின.

உரைகள் பற்றிய ஆய்வு தொடக்கக் காலங்களில் மிகக்குறைவாகவே நடந்தேறியுள்ளன. சமீப காலச் சூழலில் வெகுவாக உரைகள் குறித்த ஆய்வுகள் வெளிவரத் தொடங்கியுள்ளன. இருப்பினும் உரைகள் குறித்த பன்முக ஆய்வுகள் நிகழ்த்தப்பெறவில்லை என்பதே உண்மையாகும். உரையாசிரியர்கள் சார்ந்த சமூகப் பின்னணியை ஆய்வதும் தேவையாகிறது.

## உரை ஆளுமையில் இலக்கணப் புலமை

உரைகளை மேம்போக்காக ஆராயும் நிலையே ஆய்வுச் சமூகத்தில் காணக்கிடக்கிறது. உரையாசிரியர் சார்ந்த பின்புலத்தை ஆராய்வது அரிதாக உள்ளது. உரையாசிரியர்களின் காலம், உரையெழுந்த வரலாறு, உரையின் இயல்பு, உரைச் சார்பு, உரைகள் ஒப்பாய்வு இவ்வகையான பின்புலத்தோடு ஆராய்வது உரையை மேலும் வலுவூட்டும். உரையாசிரியர்களின் மொழிநடை, கலைச் சொற்கள், பிறமொழிக் கருத்தின் தாக்கம் போன்றவற்றை ஆராய்வதும் தேவையாகிறது.

இலக்கிய உரையாசிரியர்களைக் குறைத்து மதிப்பிடல் ஆகாது. உரையாசிரியர்கள் இலக்கணப் புலமை பெற்றிருந்தனர் என்பதற்கு அவர்களின் உரைத்தன்மைகளே சான்று பகர்கின்றன. இலக்கிய உரைகளில் பல இலக்கண விதிகளைக் காணமுடிகிறது. அதிலும் நச்சினார்க்கினியர் இலக்கியங்களுக்கு மட்டும் உரை எழுதாமல் தொல்காப்பிய இலக்கணத்திற்கும் உரை எழுதியிருப்பது மிகவும் கவனிக்கத்தக்கதாகும்.

உரையாசிரியர்கள் இலக்கணக் கோட்பாடுகளை உள்வாங்கியே உரை எழுதி உள்ளார்கள். தொல்காப்பிய இலக்கண நூலில் தொடரிலக்கணக் கோட்பாடுகள் கூறப்பட்டுள்ளன. இதனைப் பின்பற்றிப் பல உரையாசிரியர்கள் தொடரிலக்கணக் கோட்பாட்டை அடியொற்றி உரை எழுதியுள்ளனர். இதன் அடிப்படையில் ஔவை

சு.துரைசாமிப்பிள்ளையின் உரைகளிலும் தொடரிலக்கணம் பயின்று வருவதைக் காணமுடிகிறது.

“பாடல் வரிகளை மாட்டுதலும், கொண்டு-கூட்டுதலும், வினையெச்சங்களை அடுக்குதலும், வினைகளை முடித்துக் காட்டுதலும் பிறவும் இவ்வுரையாசிரியர்கள் அனைவருமே கையாண்டுள்ளனர்” (ஆ. தசரதன்; 1983; ப.2). இத்தகைய கோட்பாடுகளின் பின்புலத்தில் உரைகளை உரையாசிரியர்கள் நகர்த்தி உள்ளதை விளங்கிக்கொள்ள முடிகிறது.

பாடல் வரிகளுக்குப் பொருள் விளக்கம் தருவதோடு மட்டும் நில்லாமல் உரையாசிரியர்கள் பொருந்தாத் தொடர்களை மாற்றியமைத்துப் பொருள் முழுமையடையச் செய்துள்ளனர். தொடரியல் கோட்பாட்டின் அடிப்படையிலேயே கொண்டு கூட்டுப் பொருள் கொள்ளுதல், வரிகளை மாற்றிப் பொருள் கொள்ளுதல், சொற்களை மாற்றிப் பொருள் கொள்ளுதல் போன்ற மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன.

தமிழ் மரபைப் பின்பற்றி வந்த உரையாசிரியர்கள், எத்தருணத்திலும் இலக்கண விதிகளை மீறியதாகத் தெரியவில்லை. இலக்கிய உரையாசிரியர்கள் தமிழ் மரபுக்கும், இலக்கண மரபுக்கும் உட்பட்டே உரையெழுதி உள்ளனர். செய்யுள் இலக்கியம் எவ்வகையைச் சார்ந்திருப்பினும், எப்பொருளைப் பேசுவதாயினும், உரையாசிரியர்கள் பொருளையும், முக்கியமாக வடிவத்தையும் விளக்க முற்படுகின்றனர். பொருண்மையைச் சுமந்து நிற்பதாகவே வடிவம் விளங்குகிறது. தெளிவான பொருளைத் தொடர்ச்சியாகக் காட்டுவதற்கே உரையாசிரியர்கள் பாடல் வரிகளை, தொடர்களைப் பிரித்து, வருவித்து, இயைந்து, விரித்து, சுருக்கி முறைப்படுத்துகின்றனர். தொடரியல் கோட்பாடுகளைத் தற்காலக் கவிதைகளுக்கு உட்படுத்துவதைவிட சங்கக் கவிதைகளுக்குப் பொருத்துவதே பொருத்தமாக அமைகிறது.

## தொடரியல் கோட்பாட்டின் வரையறை

1. பொருட்குழப்பம் நீங்க தொடர்களையும் சொற்களையும் கூட்டிப் பொருள் அமைத்தல்
2. கொண்டு கூட்டுதல்
3. எச்சத் தொடர் அமைத்தல்
4. சொல் இயைபு அல்லது சொன்முடிபு
5. முறை மாற்றம்
6. வினை முடிபு காணுதல்

இவ்வகையாகத் தொடரியல் கோட்பாடுகள் பல நிலைகளில் சொல்லப்படுகின்றன. ஆனால், இங்குச் சில கோட்பாடுகள் (3 உத்திகள்) மட்டுமே ஆராயப்பட உள்ளன.

**பாடல் எண் 3: பூத்த நெய்தல்**

தொறுத்தவய / லாரல் பிறழ்நவும்
ஏறுபொருதசெறு / வுழாது வித்துநவும்
கரும்பின் பாத்தி பூத்த நெய்தல்-
இருங்க ணெருமையி னிரைதடுக் குநவும்
கலிகெழு துணங்கை யாடிய மருங்கிந்
வளைதலை மூதா / வாம்ப லார்நவும்
ஒளிதெங்கி / னிமிழ் மருதிற்
புனல்வாயிற் பூம்பொய்கைப்
பாடல் சான்ற பயங்கெழு வைப்பின்
நாடு. கவி னழிய நாமந் தோற்றிக்

(ஔவை சு.துரைசாமிப்பிள்ளை; பதிற்றுப்பத்து; 1950; பக்.16-17).

இப்பாடல் தொடரியல் கோட்பாட்டின் அடிப்படையில் ஆராயப்பட உள்ளது. சொற்கள், தொடர்கள் மற்றும் கொண்டு கூட்டுதல் என்னும் மூன்று உத்திகளின் அடிப்படையில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் இலக்கிய உரை ஆராயப்படுகிறது.

1. **சொல் விளக்கம்**

முதல் உத்தியாகச் சொற்களுக்குப் பொருள் அல்லது விளக்கம் அமைக்கும் விதமாகத் தனிச் சொற்கள் எடுத்தாளப்படுகின்றன. "தொறுத்தவய"- தொறுத்த வயல் – ஆனிரைகள் புல்மேயும் கொல்லைகள் என்று விளக்கம் கூறுகிறார் உரை ஆசிரியர். இது ஒரு சொல்லுக்கான பொருள் விளக்கமாகும்.

2. **தொடர் விளக்கம்**

இரண்டாம் உத்தியாகத் தொடர்களுக்குப் பொருள் அல்லது விளக்கம் அமைக்கும் வகையில் தொடர் ஆராயப்படுகிறது. 'கரும்பின் பாத்தி பூத்த நெய்தல்' – கரும்பு நிற்கும் பாத்திகளிற் பூத்த நெய்தல் என்னும் விளக்கத்தை முன்வைக்கிறார் உரை ஆசிரியர். இவ்விளக்கம் ஒரு தொடருக்கான முழு விளக்கத்தை முன்னமைக்கிறது.

3. **கொண்டு கூட்டுதல்**

மூன்றாம் உத்தியாகக் கொண்டு கூட்டுதல் என்னும் அமைப்பில் பொருள் ஆராயப்படுகிறது. “பாடற் சொற்களைக் கொண்டு கூட்டித் தொடரமைக்கும் போது பொருள் தொடர்ச்சிக்குகந்த சொற்களை மட்டும் எடுத்துக்கொண்டு தொடரமைத்தல்” (ஆ. தசரதன்; 1983; ப.29). இக்கூற்றின் அடிப்படையில் “நாடு” என்ற சொல்லாட்சி (1-10) இவற்றின் முடிவாக வந்துள்ளது. அதேபோன்று (10-19) இவற்றின் தொடக்கமாகவும் எடுத்தாளப்பட்டுள்ளது.

1-10 - தொறுத்தவய..............நாடு

10-19 - நாடு கழனிய...............பாழாயினவே

இச்சங்கத்துப் பாடலின் வாயிலாக ‘நாடு’ என்ற சொல்லாட்சி கொண்டு கூட்டுதல் என்னும் அடிப்படையில் தொடரியல் கோட்பாட்டை விளக்குவதாக அமைதுள்ளது.

இவ்வகையான கோட்பாடுகளின் ரீதியாக அணுகும் பொழுது உரையாசிரியர்களின் இலக்கணப் புலமை பட்டவர்த்தனமாக வெளிப்படுவதைக் காணமுடிகிறது. இவ்வாறு ஒவ்வொரு பாடலின் உரைப் போக்கையும் தொடரியல் கோட்பாட்டின் அடிப்படையில் ஆராய வேண்டியது தேவையாகிறது. இத்தகைய கோட்பாட்டு முறையிலான அணுகுமுறை உரைகளை மேலும் உயிர்ப்புறச் செய்கிறது. அதேபோன்று அனைத்து உரையாசிரியர்களின் உரைகளையும் தொடரியல் ஆய்வுக்கு உட்படுத்தலாம். ஆனால், சில உரைகள் வேறுபட்டிருக்கக்கூடும். ஒரு உரை அனைத்து வகையான உத்திகளையும் பெற்றிருக்க வாய்ப்பு இல்லை. ஆனால், ஏதாவது ஒரு உத்தி முறையைக் கட்டாயம் பெற்றிருக்கும் என்பது திண்ணம். கோட்பாடுகளைத் தவிர்த்து உரைகள் அமைவது சாத்தியமில்லை.

“செய்யுள் இலக்கியம் இன்ன இன்ன முறைகளால் யாத்தல் வேண்டுமென்பது போல் அவ்விலக்கியத்திற்கு உரையும் இன்னின்ன கொள்கைகளைக் கொண்டு எழுதப்பட வேண்டுமென்னும் எண்ணம் இவ்வுரையாசிரியர்களிடையே ஏற்பட்டிருக்கலாம். இவைதாம் உரையாசிரியர்களின் தொடரியல் கோட்பாடுகள் என இங்கே வரையறுக்கப்பட்டுள்ளன. அவ்விலக்கிய வகைக்கேற்ப இக்கோட்பாடுகள் குறைந்தோ நிறைந்தோ உரைகளில் உள்ளன” (மேலது; ப.2-3). இக்கூற்று அனைத்து உரையாசிரியர்களும் ஏதோ ஒரு வகையான கோட்பாடுகளை உள்வாங்கியே தனது உரைகளை நிரப்பி உள்ளனர் என்பதை உணர முடிகிறது. உரையாசிரியர்களிடையே உறுதியான தொடரியற் கொள்கைகள் நிலவியிருக்க வேண்டுமென்பது தெரியவருகிறது.

உரையாசிரியர்கள் மூலபாடத்தை ஒரே விதமாக அணுகுகின்றனர். ஆனால், உரை விளக்கம் சொல்லும் பொழுது ஒவ்வொருவரும் ஒரு விதமாக மாறுபடுகின்றனர். தனது பட்டறிவிற்கு ஏற்றாற் போன்று சொற் பிரிப்பு செய்து விளக்க முற்படுகின்றனர்.

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை : வளைதலை மூதா

உ.வே. சா : மூதா ஆம்பலார் நவும் இவ்வாறு சொற் பிரிப்பில் வேறுபடுகின்றனர்.

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை : வளைதலை மூதா – வளைந்த தலையையுடைய முதிய ஆக்கள் ஆம்பல் ஆர்நவும் – அவுள் தழையுடையினின்றுதிர்ந்த ஆம்பலை மேயும் இடங்களாயினவும்

உ.வே.சா. : மூதா ஆம்பலார் நவும் – மூதா ஆம்புலார் நவுமென்றது புறத்துப் போய் இரை தெவிட்டாத முதிய ஆக்கள்.

(உ.வே.சா.; 1980; ப.8). இவ்வாறு சொற்பிரித்து பொருள் கொள்ளும் முறையில் வேறுபடுகின்றனர். 'மூதா' என்ற சொல்லாட்சியை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை முடிவாகவும், உ.வே.சா. முதலாகவும் பொருள் கொள்கின்றனர். அதேபோன்று கால மாற்றங்களுக்கு ஏற்பப் பொருள் மாற்றமும் நிகழ்ந்த வண்ணம் இருக்கிறது.

## ஒரு சொற்பிரிப்பு

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை: தொறுத்தவய: ஆனிரைகள் புல்மேயும் கொல்லைகள்

கு.வெ.பாலசுப்பிரமணியன் : தொறுத்தவயல்: "ஆநிரைகளுக்கு மேய்புலமாக இருந்த வயல்; ஆடுகளின் எச்சங்கள் வயலுக்கு நல்ல இயற்கை உரமாகும். தொறுத்த என்பது 'தொறு' என்னும் பெயரடியாகப் பிறந்த பெயரெச்சம். தொறு – ஆட்டு நிரை" (கு.வெ.பாலசுப்பிரமணியன்; 2004; ப.12).

இவ்வாறு உரையாசிரியர்களின் கால மாற்றங்களுக்கு ஏற்ப உரை மாற்றம் நிகழ்ந்துள்ளதை உணரமுடிகிறது. கு.வெ.பா உரையில் ஆடுகளின் எச்சம் இயற்கை உரம் என்பதைத் தற்காலப் பயன்பாட்டின் வாயிலாக உணர்த்துகிறார். முற்கால உரைகளில் இயல்பான உரமாக இருந்திருக்கும். அதனால் எடுத்துச் சொல்ல வேண்டிய தேவை இருக்கவில்லை. உ.வே.சா. – 'தொறுத்த' என்பதற்குப் பொருள் விளக்கம் தரவில்லை. உ.வே.சா. வின் உரை பதவுரை எனவே அனைத்திற்கும் பொருள்விளக்கம் காணுதல் என்பது சிக்கலான ஒன்று. எனவே, சமகால உரைநோக்கில் சங்க இலக்கியப்

பொருள்கோடல் என்பது ஒவ்வொரு உரையாளருக்கும் மாற்றம் உடையதாகவே அமைந்துவிடுகிறது. அவ்வகையில், ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரையும் தனித்தன்மையுடையதாக உள்ளது. குறிப்பாக, அவருடைய உரைகளில் தொடரியல் கோட்பாடு என்பது தொடர், சொற்பிரிப்பு ஆகியவற்றை அடிப்படையாகக்கொண்டு அமைந்துள்ளது.

## தொகுப்புரை

- ‘ஓப்பீடு’ என்ற சொல்லாட்சி மட்டும் தமிழுக்குப் புதிதே தவிர ஓப்பீட்டு முறையிலான ஆய்வுமுறைகள் தொல்காப்பிய முதற்கொண்டே உரையாசிரியர்கள் பலர் மேற்கொண்டுள்ளனர் என்பதைத் தமிழண்ணலின் கூற்று உறுதிசெய்கிறது.
- உரைகாரர்கள் வெறுமனே பொருள் விளக்கம் கூறுவதோடு நில்லாமல் இலக்கண விதிகளையும் பின்பற்றி உரைளை ஆராய்ந்து எழுதியுள்ளதை உணர முடிகிறது.
- உரையாசிரியர்கள் இலக்கணகக் கோட்பாடுகளை உள்வாங்கியே உரையெழுதி உள்ளார்கள். தொல்காப்பிய இலக்கண நூலில் தொடர் இலக்கணக் கோட்பாடுகள் கூறப்பட்டுள்ளன. இதனைப் பின்பற்றிப் பல உரையாசிரியர்கள் தொடர் இலக்கணக் கோட்பாட்டை அடியொற்றி உரை எழுதலாயினர். இதன் அடிப்படையில் ஔவை சு. துரைசாமிப்பிள்ளையின் உரைகளிலும் தொடர் இலக்கணக் கோட்பாடுகள் பயின்று வருவதைக் கவனிக்க முடிகிறது.

சங்க இலக்கிய உரைமரபினில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை என்னும் இந்த ஆய்வேட்டில் ஒவ்வொரு இயலிலும் ஆராய்ந்து பெறப்பட்ட முடிவுகள் இவ்வியலில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. மேலும், ஆய்வுக் கருதுகோளானது இம்முடிவுகள் வழி உறுதிசெய்யப்படுகிறது.

- இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் உருவான சமூக அரசியல் இயக்கங்கள் சங்க இலக்கியங்களைப் பல்வேறு நிலைகளில் வாசிக்க முற்பட்டுள்ளன.
- உரையாசிரியர்கள் தங்கள் ஆளுமையை வெளிக்காட்டச் சிறந்த களமாகச் சங்கப்பனுவல்களைத் தேர்ந்தெடுத்துள்ளதை அறியமுடிகிறது.
- சங்கப் பாடல்களின் மொழியை உள்வாங்கும் உரைகாரர்கள் அவர்களின் சமகால மொழிவழி சங்ககாலக் கருத்தை வெளிப்படுத்துகின்றனர். எனினும் சங்ககால மொழியில் எழுதமுடியாமலும் சமகால மொழியை முற்றிலும் பயன்படுத்த முடியாமலும் , இவ்விரு மொழிகளுக்கும் இடையிலான ஒரு நடையினைக் கையாள வேண்டிய கட்டாயத்திற்கு உரையாசிரியர்கள் தள்ளப்பட்டுள்ளனர்.
- இரட்டைப் பிள்ளைகள் என்ற குழப்பத்தின் காரணமாகவே ஔவை சு.துரைசாமிப்பிள்ளை நான்காம் குழந்தை என்று சிலரும் ஐந்தாம் குழந்தை என்று சிலரும் குறிப்பிட்டுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.
- ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் தமிழ்ப்பற்று வகுப்பறையில் நாளும் பாடம் தொடங்கும் முன் தொல்காப்பியர், வள்ளுவர் போன்ற புலவர்களுக்கும், பரிமேலழகர், நச்சினார்க்கினியர் போன்ற உரைகாரர்களுக்கும் பாடல்களோடு வணக்கம் கூறிய பின்பு பாடம் தொடங்கும் மரபைக் கொண்டவராக இருந்துள்ளதை அறியமுடிகிறது.
- பதிற்றுப் பத்து உரை தேடலின் வாயிலாகச் ‘சேர மன்னர் வரலாறு’ என்ற பனுவல் படைக்கப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.
- ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரைகளில் சைவ சமயத் தாக்கம் என்பது தவிர்க்க முடியாத ஒன்றாக உள்ளது.
- உரை, வரலாறு, மொழிபெயர்ப்பு, நாடகம் என அனைத்துத் தளங்களிலும் தன் ஆளுமையை வெளிப்படுத்தி உள்ளதை உணரமுடிகிறது.
- வரலாற்றை உறுதிப்படுத்த இலக்கிய அகவயச் சான்றும், தொல்லியல் புரவயச் சான்றும் அவசியமாகின்றன.

- தொடக்கக் காலங்களில் சமய இருத்தலை நிலைநாட்டப் பதிப்பு மரபு உருவாக்கப்பட்டிருக்கலாம்.
- பண்டைய காலப் பாயிரங்களே இக்காலத்தில் முன்னுரை என வழங்கப்படுவதை உணர முடிகிறது.
- சி.வை.தாமோதரம்பிள்ளையின் தொடக்ககாலப் பதிப்புகளில் 'மூலத்தை அச்சில் ஏற்றிப் பாதுகாக்கவேண்டும்' என்ற அவரது நோக்கம் மேலோங்கி இருத்தலைக் கவனிக்க முடிகிறது.
- பதிப்பாசிரியர்கள் மூலங்களைச் சிதைக்காமல் பதிப்பிப்பது தமது கடமை என எண்ணலாயினர்.
- பதிப்பு முன்னுரைகள் என்பவை மூலப்பிரதியின் வழித்தடங்களாகும். எனவே பதிப்பு முன்னுரைகள் நீக்கப்பட வேண்டிய அவசியமில்லை.
- ஔவை சு.துரைசாமிப்பிள்ளை சங்கப் பனுவல்களை வரலாற்று, இலக்கியக் கண்கொண்டு ஆய்ந்தவர்.
- உரைப்பதிப்புகள் என்பவை காலமாறுதல்களுக்கு ஏற்ப வாசகனின் தேவையைக் கருத்தில் கொண்டு உருவாக்கப்படுகின்றன.
- தற்காலச் சூழலில் இலக்கண வகைமைகள் குறைந்து படைப்பாக்கப் பின்புலத்தில் உரைகளே பேரளவில் ஆதிக்கம் செலுத்தி வருவதைக் காணமுடிகின்றன.
- தமிழ் மொழிப் பயிற்சிக்கும் இலக்கிய வளர்ச்சிக்கும் உரைகளின் பங்களிப்பு தவிர்க்க முடியாத ஒன்றாகும்.
- பதிப்பாசிரியர்கள் சிலர் மூலங்களைச் சரிப்படுத்துதல் என்ற பெயரில் திருத்துதல் செய்யும் பொழுது அவையும்கூடக் குறைகளாகிப் போகும் வாய்ப்புகள் ஏற்படுகின்றன.
- உ.வே.சா., ச. வையாபுரிப்பிள்ளை இவர்கள் விட்டுச் சென்ற பெயர்களைக் கண்டறிந்து ஔவை சு.துரைசாமிப்பிள்ளை பதிப்பித்தது சிறப்புக்குரியது. எனினும், அப்பதிப்பில் அதற்கான ஏட்டுச் சுவடிகளைக் கொடுக்காமல் போனது குறையாகும்.
- ஒரு கருத்தில் சரியென்று உடன்படும் கருத்து வரும் காலத்தில் மறுக்கப்படுகிறது. இதன் காரணமாகவே மறுபதிப்பு/மறு உரை/மறு ஆய்வு நிகழ்த்த வேண்டிய தேவை ஏற்படுகிறது.

- வணிக நோக்கில் வெளிவந்துள்ள சில பதிப்புகள், முன்னைய பதிப்புகளில் உள்ள பாடினோர் வரலாறு, பதிப்பு முறைகள் போன்றவற்றைத் தவிர்த்து வந்திருக்கின்றன.
- ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சங்கப்பனுவல் நான்கனை ஒருவகையான நேர்த்தியுடன் சைவச் சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்டுள்ளதும், அது தற்காலத்தில் தமிழ்மண் பதிப்பகத்தின் வெளியீடாக வரும்போது சில குறைபாடுகளைத் தாங்கி நிற்பதும் கவனத்திற்குரியதாகும்.
- ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சங்க இலக்கிய உரைப்பதிப்பில் ஒவ்வொரு திணைக்குரிய ஆசிரியர் வரலாறு, உலகியல் விஞ்ஞானம், அறிவியல் நோக்கு, தத்துவம் முதலிய கூறுகளோடு விரவிய ஆராய்ச்சியையும் ஆங்காங்கு அறியமுடிகிறது.
- அகநூல்களில் பெரும்பாலும் பாட்டுப் பொருண்மைகளில் கல்வெட்டுத் தரவினைப் பொருத்த முடிவதில்லை என்பது திண்ணம்.
- ‘கிழார்’ என்ற பெயர் அடையாளம் உடையவர்கள் மன்னருக்கு இணையாக அல்லது மேட்டுக்குடி சமூகத்தினர் என்பது பொருந்துவதாகும்.
- பிற்காலச் சூழலில் புலவர்களின் பெயர்களுக்குப் பின்னர் ‘ஆர்’ என்ற விகுதி மதிப்பின் அடையாளமாகச் சேர்க்கப்பட்டிருக்கலாம்.
- ‘ஊர்’ என்ற பெயரைக் கொண்ட ஊர்கள் மருத நிலத்தைச் சார்ந்த பெயர்களாகும்.
- சமகால ஊர்ச்சபை, ஊர்ப் பஞ்சாயத்து என்ற அமைப்பே சங்க காலத்தில் ‘மன்றம்’ என அழைக்கப்பட்டது.
- கோமல், கோடன் என்ற பழங்காலப் பெயர் நீட்சியாகக் கோமல் சுவாமிநாதன் என்ற பெயரையும், கோடன் என்பதைக் கோனனூர் என்ற ஊர்ப்பெயரும் சமகாலத்தில் புழங்கி வருவதைக் காணமுடிகிறது.
- பூதனார் என்ற சங்ககாலப் பெயரே சமகாலத்தில் பூதனூர் என்று ஊர்ப் பெயராக அழைக்கப்படுவதைக் கவனிக்கலாம்.
- சங்க கால மலையமான் என்ற பெயரை இக்கால மேல்மலையனூராகவும், கிளியூர் என்பது தற்காலக் கிளியனூராகவும் கருத இடமளிக்கிறது.
- சிலப்பதிகாரம் எழுதுவதற்கு முன்னரே ‘இளங்கோகுடி’ என்ற குடியினர் இருந்துள்ளனர். இக்குடியினரே இளங்கோவடிகளின் குடியினராக இருக்கலாம்.

- அஞ்சில் என்பது அஞ்சிலூர், அஞ்சியூர் என்று திரிந்து சமகாலத்தில் அஞ்சூர் எனக் கிருஷ்ணகிரி மாவட்டத்தில் அழைக்கப்படுவதை நினைக்கத் தூண்டுகிறது.
- முடத்திருமாறன் என்ற பிழையான பெயரைத் தவறென ஆராய்ந்து முட்டத்திருமாறன் என்பதே சரியெனப் புலப்படுத்தியது ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை.
- அன்னியூர் என்பது பிற்காலச் சூழலில் வன்னியூர் என மாறியது என்பதையும் அதுவே பின்னர் அன்னூர், அன்னனூர் என மருவி வழங்குவதை அறியமுடிகிறது. இதன் நீட்சியாகவே அங்கனூரையும் அடையாளம் காணலாம்.
- காப்பன், காப்பியன் என்பது அச்சுப்பிழைகளால் நேர்ந்தது என்றும் இரு பெயர்களும் ஒன்றே என்றும் கூற வாய்ப்புகள் அதிகம் இருக்கின்றன. இங்கே காப்பன் என்பதைக் காத்தல் என்ற தொழில் முறையில் புரிந்து கொள்ளலாம்.
- இளந்தச்சனார், தச்சக்காணி என்ற பெயர்களைத் தொழில் சார்ந்த சாதிய அடையாளங்களுடன் புரிந்துகொள்ள நேர்கிறது.
- சொகினனார், சொகின்னூர் என்பதை நிமிர்த்தம் அல்லது சோதிடம் பார்ப்பவர்களின் அடையாளமாகப் புரிந்துகொள்ளலாம்.
- மாறோக்கம் என்பதை வீரத்தின் அடிப்படையிலும், வேளாளர் இனக் குறியீட்டின் தன்மையிலும் கருதலாம்.
- தங்கால் என்ற ஊரில் பாரதம், இராமாயணம் முதலியவற்றை ஓதும் இடமாக இருந்ததால், அக்காலக் கல்வி நிலையை அறிய முடிகிறது. தங்கால் என்ற பெயரின் நீட்சியாகத் தக்கல் என்ற ஊரைக் கருதலாம்.
- இலக்கியத் தரவுகள் சரியான காலத்தைக் கணிப்பதில்லை. ஆனால் கல்வெட்டுத் தரவுகள் பெரும்பாலும் சரியான காலக் கணக்கை நிறுவுகின்றன.
- தேனூர் என்பதே பிற்காலச் சூழலில் நல்லூர் என அழைக்கப்பட்டுள்ளது. இதன் நீட்சியாக மானூர் என்பதைக் காணலாம்.
- வள்ளிமலை என்பது வள்ளியங்கானம், வாடா வள்ளி என்ற பெயர் மாற்றங்கள் அடைந்துள்ளதை அறிய முடிகின்றது.
- தமிழ்க்கூத்து மரபையும் தமிழ்ப் பண் இசை மரபையும் பாணர்களே போற்றி வளர்த்துள்ளனர் என்பது புலப்படுகின்றது.

- பதிகங்கள் என்பவை பாடல்கள் எழுதப்பட்ட காலத்திலேயே தோன்றியவை அல்ல. பதிகம் என்பவை பிற்காலங்களில் தொகுக்கப்பட்டோரால் அல்லது பழைய உரையாசிரியர்களால் எழுதப்பட்டிருக்கலாம்.
- பழைய மூலப் பிரதிகளில் பதிகங்கள் காணப்படவில்லை, ஆனால் பழைய உரையோடு கூடிய ஏடுகளில் காணப்படுகின்றன. இத்தகைய கூற்றுகளே பதிகங்கள் பிற்காலத்தில் உருவானவை என்பதை உறுதிப்படுத்துவதாகும்.
- துறை, வண்ணம், தூக்கு, பெயர் என்பவை உரையில்லாத மூலப் பிரதிகளில் இருப்பதால், இப்பிரிவுகள் நூலாசிரியர்களாலோ, தொகுப்பாசிரியர்களாலோ எழுதப்பட்டிருக்கலாம், அல்லது பதிகம் தொகுப்பாசிரியர்களாலோ,உரையாசிரியர்களாலோ எழுதப்பட்டிருக்கலாம்.
- சங்க காலச் சிறுபோவில் என்பதே தற்காலச் சித்தன்னவாசல் என்று அழைக்கப்படுகிறது.
- அந்தணப் புலவர்களுக்குக் கொடுக்கப்படும் நிலங்கள் இறையிலி, பிரமதேயம் என்றும், மற்றவர்களுக்குக் கொடுக்கப்படும் நிலங்கள் 'காணி' என்ற பெயரிலும் அடையாளப்படுத்தப்பட்டுள்ளனர் என்பதை அறிய முடிகிறது.
- சங்க காலம் தொடங்கிச் சமகாலம் வரை 'வரி' செலுத்தும் மரபு தமிழியல் புலத்தில் இருந்து வருகிறது. ஆனால், 'வரி' என்பது பொதுச் சொல்லாகவும், ஒவ்வொரு வரிக்கும் ஒவ்வொரு பெயர் இருந்துள்ளமையையும் அறிய முடிகிறது.
- 'கிழார்' என்ற சொல்லாட்சி பல பெயர்களு பின்னொட்டாக நிற்கிறது. 'கிழார்' என்ற சொல் பெரும்பான்மையாக மேட்டுக்குடிச் சமூகத்தை அடையாளப்படுத்தும் ஒரு குறியீடக்கவே கொள்ளலாம். கிழார் புலவர்கள் மேட்டிமைச் சமூகத்தின் வெளிப்பாடு என்பதே பொருந்தும்.
- அச்சுப் பிரதிகளில் ஏற்படும் தவறுகளைக் களையக் கல்வெட்டுத் தரவுகள் கொண்டு ஆராய்வது வரலாற்றுத் தெளிவை ஏற்படுத்தும்.
- பதிற்றுப்பத்து, புறநானூறு என்னும் இவ்விரு நூல்களும் தமிழ்ச்சமூகத்தின் வரலாற்று ஆவணமாக அறியப்படுகின்றன.
- அச்சுப் பிரதிகளில் பிழைகள் ஏற்படுவது போல் கல்வெட்டுப் பதிவுகளிலும் பிழைகள் ஏற்படலாம்.

- ஊர் பெயர்கள் பெரும்பாலும் கோயில் தளங்களை மையமிட்டதாகவே அமைகின்றன. இத்தளங்களின் பெயர்கள் ‘திரு’ என்ற அடைமொழிகளால் அடையாளப்படுத்தப்படுவதையும் அறியமுடிகிறது.
- சங்கப் பாடல்களுக்கு முதலில் கடவுள் வாழ்த்து பாடும் மரபு இருந்திருக்கவில்லை. பிற்கால மரபுகளை உள்வாங்கிய சங்கப் பாடல்களுக்குக் கடவுள் வாழ்த்து பாட முயன்றுள்ளனர். சங்கப் பாடல்கள் தனிப்பாடல்கள் என்பதற்கு இதுவே தக்க சான்றாகும்.
- கூலிக்காய்ப் பிரதியெழுதுபவர்களில் கல்வியறிவு இல்லாத ஒருவர் நூலின் பொருள் தொடர்ச்சியை உணராமல் ஒரு பாடலையோ, சில பாடல்களையோ விட்டுவிட்டால் அப்பிரதி குறைவுடையதாகிறது. இக்கூற்று ஓலைச்சுவடி, கல்வெட்டு இவை இரண்டிற்கும் பொருந்தும்.
- சங்க கால எருமை நாடே இக்காலத்தில் மைசூர் நாடு என்று வழங்கப்படுகிறது.
- தொடக்கக் காலங்களில் ஒருமையில் அழைக்கப்பட்ட பெயர்கள், பிற்காலங்களில் புலவர் பெருமை கருதி ‘ஆர்’ விகுதி சேர்க்கப்பட்டிருக்கலாம்.
- சமகாலத்தில் கொண்டாடப் பெறும் பங்குனி விழா, சங்க காலத்தில் இருந்தே தொடர்ந்து வருவதை அறிய முடிகிறது.
- கூத்தாடும் கூத்துக் கலைஞர்களுக்கு நிலங்கள் கொடுக்கப்பட்டதைக் ‘காணி’ என்ற சொல்லாட்சியில் அடையாளப்படுத்தப்படுவதை அறிய முடிகிறது.
- கூடல், கூடல் மங்கலம், கூடலூர் என்ற பெயர் பல மாற்றங்கள் அடைந்து வருகின்றன. சங்கக் காலக் கூடலூரே இக்காலத்துக் கடலூர் என்பது மிக்க பொருந்துவதாக அமைகிறது.
- ‘திருப்புத்தூர்’ என்பது ‘திருப்பத்தூர்’ என்றும், ‘கதவங்குடி’ என்பது ‘கதவணி’ என்றும் மருவி இருக்கலாம். வேலூர் மாவட்டத்தில், திருப்பத்தூர் தாலுக்காவில் சமகாலத்தில் இப்பெயர் புழக்கத்தில் இருப்பதால் இப்பெயரை இவ்வாறு புரிந்துகொள்ள நேர்கிறது.
- திருப்புறம் என்பது திருப்பூர் எனவும், திருப்போர் என்பது திருப்போரூர் எனவும் மாறியதற்கான அடிப்படையாகத் திருப்போர்புறத்தை அடையாளம் காணலாம்.
- சமகாலப் பெண்ணுரிமை, சொத்துரிமைச் சட்டத்தைச் சங்கக் காலச் சமூகத்திலேயே காணக்கிடக்கின்றன. எனவே, சங்க காலம் பெண்ணுரிமை பேணப்பட்ட சமூகம் என்பது தெளிவாக்கப்படுகிறது.

- ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் உரை இலக்கிய உரை ஆய்வாளர்களுக்கான இலக்கியப் பதிப்பு உரையாகும்.
- பாடல்களின் பொருள் புலப்பாட்டை ஏற்படுத்த அதிக மேற்கோள் சான்றுகளை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரை வெளிப்படுத்துகிறது.
- புலவர் பெயர், ஊர்ப் பெயர் பற்றிய தெளிவை அடையக் கல்வெட்டுத் தரவினை முன்வைப்பது, ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரையின் தனித்திறனாகும்.
- சங்கப் புலவர்களின் சாதியப் பாகுபாட்டையும் சில புலவர்கள் வழி இவ்வுரை இனம் காட்டுகிறது.
- புலவர் பெயர், ஊர்ப்பெயர்களுக்கான வரலாற்றுடன், சமகாலத்தில் அப்பெயர்களுக்கான நீட்சியையும் அறியமுடிகிறது.
- உரைகளும் இலக்கண விதிகளை ஏற்பதை அறியலாம்.
- உரையாசிரியர்களின் உரை எழுந்த காலத்தின் அடிப்படையில் உரை விளக்கம் அமைவதைப் புரிந்துகொள்ளலாம்.
- சொற்களுக்குக் கால மாற்றங்களுக்கு ஏற்பப் பொருள் விளக்க மாற்றம் அமைவதையும் காணலாம்.
- ஒரே சொல் ஒவ்வொரு உரையாளருக்கும் வெவ்வேறு பொருளைத் தருவதையும் அறிய முடிகின்றது.

**மேலாய்வுக் களங்கள்**

- ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சங்க இலக்கிய உரைகள் – சைவ இலக்கிய மேற்கோள்கள்.
- ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சங்க இலக்கிய உரைகள் – வைணவத் தாக்கம், பௌத்தத் தாக்கம்.
- ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சங்க இலக்கிய உரைகள் – பிற இலக்கிய மேற்கோள்கள்.
- ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சங்க இலக்கிய உரைகள் – தொடரியல் கோட்பாடுகள்.

**செ. மார்கண்டன்,**
முனைவர்பட்ட ஆய்வாளர்,
உயர்தமிழியல் ஆய்வு நிலையம்,
மாநிலக்கல்லூரி,
சென்னை – 600 005.

# ஆய்வாளர் உறுதிமொழி

"**சங்க இலக்கிய உரை மரபினில் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை**"என்னும் தலைப்பில் மாநிலக்கல்லூரித் தமிழ்த்துறை மூலம், சென்னைப் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டத்திற்காக நிகழ்த்தப்பெற்ற இந்த ஆய்வு என்னுடைய சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன்பு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இந்த ஆய்வேடு அளிக்கப்பெறவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

**(செ. மார்கண்டன்)**
**ஆய்வாளர்**

இடம் :

நாள் :

# நன்றியுரை

நன்றிக்கு அப்பாற்பட்டவராய்ச் சிலர், சமூக ஓட்டத்தில் என்னையும் நடைபழக்கி நடக்கவைத்தவர்கள். குழந்தைகளுக்காகத் தம் வாழ்வையே அற்பணிக்கும் மெழுகு விளக்குகளாக, ‘எம் பையன் படிக்குறான், ஆனா, இன்னா படிக்கிறான்னு தெரியல’ என்று சொல்லும் என் பெற்றோர்களை முதலில் குறிப்பிட விரும்புகிறேன்.

அறிவு, பட்டப்படிப்பு-பாடவெளிகளுக்கு அப்பாற்பட்டது என்று உணர்த்தி, விவாத வெளிகளினூடே வாசிக்கச் செய்து, அதனோடும் கேள்விகளை எழுப்பி, என்னை விடை காணச் செய்த சென்னைப் பல்கலைக்கழகப் பேசிரியர்களுக்கு என்றும் என் நன்றிகள் உரியன.

“**சங்க இலக்கிய உரை மரபினில் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை**”என்னும் தலைப்பில் என்னை ஆய்வு மேற்கொள்ளச் செய்த மேற்பார்வையாளர் **ப.தாமரைக்கண்ணன்** அவர்களுக்கு என்றென்றும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

‘மனிதநேயச்செம்மல்’ எனப்போற்றப்பெறும் பேராசிரியர் **ப.மகாலிங்கம்** அவர்கள் மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவராகப் பெற்றது எம் பேறு. அவருக்கு என் நன்றிகள்.

மாநிலக்கல்லூரிப் பேராசிரியர்களின் பட்டியல் நீளமானது. இருந்தும் நினைவுகளில் தங்கியவர்கள் சிலர். வேண்டியதைத் தேவையான தருணத்தில் நல்கும் பண்பாளர்களாகிய அவர்கள் அனைவருக்கும் நன்றிகள் உரியன.

விடுதியே எங்கள் வீடு. விடுதியே எங்கள் சுற்றம். பல தலைமுறைகளைத் தாங்கி நிற்கும், சென்னை முதுகலை மாணவர் இராயபுர விடுதிக்கும், அவ்விடுதியில் தங்கிப் பயிலும் என் அன்பிற்கினிய உடன்பிறவாத தம்பிகளுக்கும் நன்றிகள் பல.

பெயர் குறிப்பிடுவதில் இல்லை நன்றிகள். என்றும் சிலருக்கு மட்டும் சொல்லாமலும் நன்றிகள் உரியதாகின்றன. அந்த வகையில் பல்கலைக்கழகத் தோழர், தோழியர் அனைவருக்கும் என் நன்றிகள் உரித்தானவை.

**செ. மார்கண்டன்**

# பொருளடக்கம்

# குறுக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| ப | - | பக்கம் |
| பக் | - | பக்கங்கள் |
| தொ.ஆ | - | தொகுப்பாசிரியர் |
| மு.ப | - | முதற்பதிப்பு |
| A.R or M.E.R | - | Annual Report on Madras Epigraphy. 1894-1938. |
| C.I | - | Coorg Inscriptions Vol. I |
| EP.Car.Bi | - | Epigraphica carnatica Belur District |
| EP.Car.Hn | - | Epigraphica carnatica Hassan District |
| Imp.Gazet | - | Imperial Gazetteer |
| J.A.U | - | Journal of the Annamalai University |
| Nell.Ins.Sulur | - | Nellore Inscription 1-3 Vol Sulurpet Division |
| P.S.Ins | - | Pudukkottai State Inscriptions. |
| S.I.I.Vol | - | South Indian Inscriptions I-XII Volumes |
| T.A.S | - | Travancore Archaeological Series |

# சங்க இலக்கிய உரை மரபினில் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை

முனைவர் பட்டத்திற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெற்ற ஆய்வேடு


**ஆய்வாளர்**

செ. மார்கண்டன்

**மேற்பார்வையாளர்**

முனைவர் **ப. தாமரைக்கண்ணன்,** எம்.எ., எம்.ஃபில்., பி.எச்.டி.,

இணைப்பேராசிரியர்






உயர்தமிழியல் ஆய்வு நிலையம்

மாநிலக்கல்லூரி.

சென்னை – 600 005

செப்டம்பர் – 2013.